உ

சிவமயம்

# பிரமோத்திரகாண்டம்.

இஃது,

சைவசமயசிரோமணியாகிய

வரதுங்கராம பாண்டியமகாராசன்

அருளிச்செய்தது.

---

இதன்மூலமும்

காஞ்சீபுரம்-பச்சையப்பமுதலியாரவர்கள்

கல்விச்சாலையில் தமிழ்த்தலைமைப்புலமைநடாத்திய

காஞ்சீபுரம்

## சபாபதிமுதலியார்

இயற்றிய பொழிப்புரையும்

---

கோகுலாபுரம்

அருணாசலமுதலியாரால்

பார்வையிடப்பட்டு

இட்டா

குப்புசாமிநாயுடு

கேட்டுக்கொண்டபடி


Printed by

Tiruppathy Ruthna Moodelliar

son of

Tiruppathy Vencatachella Moodelliar's

*Kalaigyana Mutthiratchara Press,*

*No, 6 Moothookristnan Street*

*Black Town.*

*Madras.*

1887 — ௵

உ

கடவுள் துணை.

# புத்தகவிளம்பரம்.

இதனால்சகலமானபேர்களுக்கும் தெரிவிப்பதுயாதெனில் சென்னையைச்சார்ந்த பெத்துநாய்க்கன்பேட்டை மூத்துமாரியம்மன் கோயில்வீதியில் ரு-வது கதவிலக்கமுள்ள கிரகத்தில் ஸ்தாபித்திராநின்ற கலைக்கியானா[illegible] முத்திராட்சரசாலையில், கற்றுணர்ந்த பெரியோர்களால் பிழையறப் பரிசோதித்து அச்சிடப்பட்ட மிகமேலாகிய உபயோகமுள்ள பலவிதவேதாந்தசித்தாந்தகிரந்தங்களும், வயித்தியகிரந்தங்களும், ஜோசியகிரந்தங்களும் மகம்மதுமார்க்கக்கிரந்தங்களும், இன்னும் அனேகவிதமான தமிழ்ப்புத்தகங்களும், விலைசரசமாய்விற்கப்படுமாகையால் வேண்டியவர்கள் மேற்படி அச்சுக்கூடத்தில் விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

இப்படிக்கு

தி-இரத்தினமுதலியார்.

சிவமயம்

# பிரமோத்தரகாண்டத்தின் அத்தியாய அட்டவணை

—(*)—



அத்தியாய அட்டவணை முற்றும்.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பிரமோத்தரகாண்டம்

## கடவுள் வாழ்த்து

### விநாயகர் துதி

ல்லசொற்பொரு ளுளு நடாத்தவும்
ல்லை காணரும் பேரின்ப மெய்தவும்
வல்லு மானை முகத்தினை மேவிவாழ்
ல்லபைக் குரி யானை வழுத்துவாம்

(இ-கன்பொழிப்பு)

லசொல்லையும்பொருளையுமுணாந்துகவிகள்பாடவும்எல்லைகாணு பேரின்பத்தையடையவும்கஜமுகாசுரனைவென்றஆனைமுகத்தையு ராய் வ ழ்கின்றவல்லபையென்னுஞ் சத்திக்குரிய விநாயகமூர்த்தி திசெய்வாம்-எ-று.

### நடேசர் துதி-வேறு

பூமேவுசதுமுகனுந்திருமாலும் போற்றிசெய்யத்
தேமேவுகுழலுமையாள் செழுங்குவளைவிழிகளிப்ப
மாமேவுமிகுநிருத மன்றுதளிப்பமணிமன்றந்
தாமேவுகடம்புரியுந் தனிப்பொருளைவணங்குவாம்

தாமரைப்பூவில்வீற்றிருக்கும் பிரமதேவனும் திருமாலும் போற் வும் இயறகையாகவேவாசனையுள்ள அளகபாரத்தையுடைய சிவ யாருடைய வளமையுள்ள நீலோற்பலமலர்போன்ற திருக்கண்க டையவும் அழகுபொருந்திய கொன்றைப்பூமாலையான ... த்துளிக்கவும் சிற்சபையைவிரும்பி நடனஞ்செய்கின்ற ... ப்பொருளாகிய நடேசமூர்த்தியையாம்வணங்குவாம்-எ-று. க

### சிவகாமித்தாயார் துதி - வேறு.

யத்தனுகரண புவனபோகங்கடமைப்புரக்குமாயா
யைப்பசுபாசமலமகல மெய்ஞ்ஞானக்கண்ணிற்றோன்றும

ஆரணியைப்பரமசிவனானந்த நடத்தினைத்தவருட்கண்ணாலேச்
சீரணிகொள்பொழிற்றில்லைச் சிவகாமசுந்தரியைச்சிந்தைசெய்வாம்

இ-பு எல்லாவுயிர்களிடத்தும் நிறைந்திருப்பவரும் தனுகரண புவன போகங்களை ஆத்தும கோடிகளுக்குத் தந்து முறை தவறாமல் காத்துக் கொண்டிருக்கின்ற மாயைக்கு அதிஷ்டானமாயிருப்பவரும்-பக்குவாத்துமாக்களுடையஆணவமலம்நீங்கினவிடத்துவிளங்குகின்றமெய்ஞ்ஞானப்பார்வைக்குத் தரிசனமாகின்றவேதங்களால் துதிக்கப்பட்டபரமசிவன் திருநடஞ்செய்கின்றஆனந்தநடனத்தை இடைவிடாதுபார்த்துக்கொண்டிருக்குங்கிருபாநோக்கத்தையுடையவருமாகிய சிறப்பினையும்அழகினையும் பொருந்தியசோலைசூழ்ந்த தில்லைவனமென்னுந்திவ்வியக்ஷேத்திரத்தில் வீற்றிருக்குஞ்சிவகாமித்தாயாரையெப்போதும்யாந்தியானிப்போம்-எ-று.

தனு-சரீரம்-கரணம்-தத்துவங்கள்-புவனம்-உஉச-போகம் - போகங்கள்-பசு-ஆன்மா-பாசம்-ஆணவமலமாம்.எனவே- ஆன்மாக்களுக்குச்சரீரத்தைக்கொடுத்துப்புவனங்களிற் பிறப்பித்துப்போகங்களை அனுபவிக்கச் செய்வது மாயையென்றும்அந்தமாயையைத்தொழில்படுத்துவதுபராசத்தியென்றுஞ்சொல்லப்படும்

கணபதிதுதி-வேறு

பிஞ்சுமதிச்சடாமகுடப் பெருமானைப்பிரியா
வஞ்சியிமவான்றவத்தின்வருபேடைமயிலுதவும்
அஞ்சிறைவண்டிரைத்துவீழ் மருவிமதமொழுகுகவுட்
குஞ்சரவெம்புகர்முகத்துக் குரிசிலடியிணைதொழுவாம

இ-பு இளந்திங்களையணிந்த சடாமகுடத்தையுடைய பரமசிவனை விட்டு நீங்காதபூங்கொடிபோன்ற திருமேனியையுடையவரும்மலையரையன் தவத்தினால் அவனுக்குப்புத்திரியாகத்திருவவதாரஞ்செய்தமயிற்பேடைபோன்றவருமாகிய பார்வதியார் அருளும்புத்திரராகிய அழகியசிறகுகளையுடைய வண்டுகள் இசைபாடிக்கொண்டு உண்ணுதற்காக ஒன்றின்மேலொன்று கவிழுகின்றமதநீர்மலையருவிபோலொழுகும்படியானகவுட்குழியையுடையதாய்ப்புகர்நிறந்தங்கிய வெவ்வியயானைமுகத்தையுடையகணபதியின் இரண்டுதிருவடிகளையும்யாம்தொழுவோம்-எ-று

முதலில்விநாயகரைத் துதிசெய்து மறுபடியும் அவரைத்துதிசெய்வதற்குக்காரணமென்னவென்றால் விநாயகர் திருவவதாரமானபொழுது அவரு

ளமையுள்ள ஞானப்பாற்கடலுண்டு பாவமாகியகோடையிருந்துசுட அக்கோடையினால் கருகிப்போம்புல்லைப்போல இவ்வுலகமானது நரகத்தில் விழுந்துகெடாமல்மோட்சத்தையடையும்படி அதிசாந்தமாகியகிருபையினாலே தேவாரமாகிய மழையைப்பொழிந்த மேகமென்று சொல்லத்தக்க சீகாழியிற் றிருவவதாரஞ்செய்தருளிய திருஞானசம்பந்தசுவாமிகளுடைய பொன்னிறமுள்ள திருவடித்தாமரைகளையாம்தொழுவோம்-எ-று

காளிமுகில்என்பதில் காளிஎன்றுமேகத்தைக் குறிக்கும்போது கருமைநிறமுள்ளதாகவும் திருஞானசம்பந்தசுவாமிகளைக்குறிக்கும்போது காளியென்னும்பெயருள்ள தலமாகவும் பொருள் கொள்ளப்படும், காளிதனென்கிற ஒருநாகராசனால்பூசிக்கப்பட்ட தலமாதலால் அதுசீகாளி யெனவோர்பேர்பெற்றுச் சீகாழியெனவழங்கப்படுகின்றது

திருநாவுக்கரசுசுவாமிகள் துதி

ஆரணநன்னிலையறியாச்சாக்கியர்களருங்கற்றூண்
பாரியமருங்கசைத்துப் படுநீரிற்புகவுந்த
வாரணநல் லுரியானை யேத்திமுந்நீர்வடதளிரின்
நாரணன்போலினிதமர்ந்த நாவலன்பொற்றாடொழுவாம்.

இ-பு வேதத்தினுண்மைப்பொருளையறியாதசமணர்கள்சுமப்பதற்கரிய கற்றூணை இவ்வுலகத்தரெல்லாமறியும்படி அரையிற்கட்டிசசமுத்திரத்தினுக்குளாழும்படிபோட யானையினதுதோலை நல்லபோர்வையாகப்போர்த்திருக்கும்பரமசிவனைத்துதிசெய்து அந்தக்கற்றூணைதெப்பமாக மிதக்கும்படி (திருப்பாற்கடலில்ஆலிளந்தளிரிற் பள்ளிகொண்டிருக்கும் விஷ்ணுவைப்போல)மகிழ்ச்சியுடனிருந்து திருப்பாதிரிப்புலியூர்க்கடுத்த கெடிலநதியில்கரையேறிய திருநாவுக்கரசுசுவாமிகளுடைய அழகியதிருவடிகளையாம்தொழுவோம்-எ-று ௬

சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி - வேறு.

தாதுநிறைக்கும்பசுந்துளபத்தாமத்தோனுஞ்சரோருகச்செம்
போதினகத்துச்சகமீன்ற புத்தேளானுமறியானை
மாதினிடத்தின்முனிவொழிய வாரூர்ச்செம்பொன்மணிமறுகிற்
றூதுநடத்துங்கவிராசன் றுணைத்தாட்கமலந்தொழுதிடுவாம்

இ-பு மகரந்தங்களால் நிறையப் பட்டிருக்கும் பசிய துளப மாலையணிந்த திருமாலும் செந்தாமரைப் பூவிலிருந்துகொண்டு உலகங்களைப்

படைக்கும்பிரமதேவனும் அறியக்கூடாதபரமசிவனைப் பரவைநாச்சியார் கொண்டிருந்தவூடல்நீங்கும்படி அவரிடத்திற்குத் திருவாரூரின் செம்பொன்களும் ரத்னங்களும்நிறைந்துள்ள திருவீதியில் தூதுபோம்படி அனுப்பிய சுந்தரமூர்த்திசுவாமிகளுடைய இரண்டுதிருவடித்தாமரைகளையும் யாம்வணங்குவோம்-எ-று, எ

மாணிக்கவாசகசுவாமிகள் துதி - வேறு.

சீதவார்பொழிற்றில்லைப்பரமனுக், கோதுநற்றமிழ்க் கோவைபுனைசெய்த
நாதன்மாணிக்கவாசகனண்மலர்ப், பாதபங்கயமேத்திப்பரவுவாம்

இ-பு குளிர்ச்சிபொருந்தியதாய வானளவுமோங்கிய சோலைசூழ்ந்ததில்லையென்னுந் திவ்வியக்ஷேத்திரத்தில்ஆனந்தநிர்த்தனஞ் செய்கின்றநடேசமூர்த்திக்கு யாவருந்துதிசெய்கின்ற நல்லதமிழினால் திருக்கோவையாருரைசெய்த நாதனாகியமாணிக்கவாசகசுவாமிகளுடைய விடியற்காலத்தில்மலர்ந்ததாமரைமலரையொத்ததிருவடிகளையாந்துதிசெய்துபுகழ்வோம்எ-று

குருவணக்கம்.

வேறு,

தேசானசிவஞானச் செஞ்சுடரான்மும்மலமா
மாசானவிருளகற்றிமன்னுயிரைப் புரங்களித்துத்
தூசானையுரியசைத்தோன் றொல்சமயநிறுத்துநிம்பை
யீசானமாமுனிவனிணையடியை யிறைஞ்சுவாம்,

இ-பு சோதிமயமானசிவஞானமென்னுஞ்செழுமையுள்ளசூரியனால் ஆணவம்-கன்மம்-மாயை-என்கிறமும்மலமாகிய குற்றமுள்ள அஞ்ஞானஇருளைநீக்கி நிலைபெற்ற உயிர்களை ரட்சித்துயானைத்தோலைப் போர்வையாகபோர்த்தருளியபரமசிவனது பழமையாகிய சைவசமயத்தைநிலைநிறுத்திய பெருமைபொருந்திய நிம்பைஈசானமுனிவருடைய இரண்டுதிருவடிகளையும் யாம்பணிவாம்-எ-று,

நிம்பையென்பது-வேப்பத்தூர் - தொல்சமய நிலைநிறுத்துமெனவும் பாடம் சிவம்இத்தன்மையதென்றும் சீவன் இத்தன்மையதென்றும் ஆணவமலம் இத்தன்மையதென்றும் யாவருக்குந்தெரிவித்துசைவப்பற்றுண்டாகச் செய்தலால்சைவசமயத்தை நிலைநிறுத்துகின்றவனெனச் சொல்லப்பட்டது

ஆசையடக்கம்-வேறு,

அஞ்சனமிடற்றினோப்பி னிலைமுற்றுமளவிட்டன்றிச்
செஞ்சொலின்வழுத்தொணாதேல் விதியும்வாய்திறக்கொணாதாம்
விஞ்சையோர்வருந்தத்த மதியினின்விபுலங்காணும்
வஞ்சமற்றுணர்க்காமேலடியனும் வழுத்தலாமால்

இ-பு காளகண்டத்தையுடையபரமசிவனே தேவரீருடைய நல்லநிலை
யை முழுவதையுஞ்சாஸ்திரங்களினால் அளவிட்டறிந்துபாடல்களாற் சொ
ல்லவேண்டுமேயல்லது அளவிட்டறிவதற்குமுன் சொல்லவொண்ணாதே
யென்றால் வேதங்களையெல்லாமோதியுணர்ந்த பிரமனும் தேவரீருடைய
நிலைமுழுவதையுஞ்சொல்லுகிறேனென்றுசங்கற்பித்துநின்றால்வாயை
த்திறக்கவொண்ணாது ஆனால் அப்படிவேண்டுவதில்லைபுலவர்களெல்லாரு
ம் தங்கள்புத்தியின் விசாலமட்டும்வஞ்சகமின்றிச் சொல்லலாமென்றால்
அடியேனுந்தெரிந்தமட்டிற்சொல்லலாம்-எ-று, ௰

இதுவுமது.

தொல்லையமுனிபாற்கேட்டுச் சூதமாமுனிவன்சொன்ன
நல்லமுறைகாதைதன்னை நான்றமிழ்வழிநடாத்தல்
கொல்லுலைவயிரவூசி குருமணிகுழித்தவாயின்
மெல்லியபஞ்சிநூல்போம் விழுக்கதகவுடையதம்மா.

இ-பு பழமையாகியவியாதமுனிவரிடத்திலே கேட்டுப்பெருமைபொருந்
திய சூதமுனிவர் முன்புசொல்லியபழையநல்லசிவசரித்திரத்தைப் பின்பு
நான் தமிழினாற்சொல்லுதல்கொல்லனுலைமுகத்திற் செய்யப்பட்டகூர்மை
யுள்ள ஊசியினால் துவாரஞ்செய்யப்பட்டமேன்மையாகிய ரத்னத்தின்து
வாரவழியில் மிருதுவாகியபஞ்சுநூல் நுழைகின்ற மேன்மையையுடைய
தாயிருக்கின்றது-எ-று, ௰௧

இதுவுமது.

பற்றியவரவம்பாரார் முன்னெண்ணார்பகைகந்தேரார்
பொற்றுணர்க்கைகைதசாந்து பொலிவெண்ணீறலர்கொள்வார்போ
உற்றுணர்வில்லிலேன்செய்தபனுவலுளுருதவோரார் ல்
கற்றுணர்மாந்தர்சொல்வர் கடவுடன்சரிதமென்றே

இ-பு பாம்பிருக்குமென்று எண்ணாதவர்களையும், முன்னுகள்கைகளில்
தைக்குமேயென்று எண்ணாதவர்களையும், சுற்றிலிருக்கின்றதேயென்றுயோ
சியாதவர்களையும், [illegible] [illegible] க்கருதிப் பொன்னிறமுளகொ
த்துகளையுடைய செந்தாமரையினிடத்திற் சென்று அதன்மலரைப் பறிப்ப

வர்போல அறிவில்லாதயான்செய்தபாடலினிடத்துக் குற்றங்களையெண்ணி நீக்கிவிடாமல்கற்றுணர்ந்தமுன்னோர்கள் இதுசிவசரிதமென்றுமனம் பொருந்தி ஏற்றுக்கொள்ளுவார்கள்-எ-று. ௰௨

## சிறப்புப்பாயிரம்.

கறங்குதிரைப்பெருங்கடல்சூழவனிபுரந்திகல்கடிந்துகலியைமாற்றி
மறந்திகழுமிலங்கிலைவேல் வரதுங்கராமனியன்மதுரைச்சங்கத்
சிறந்தவறுகாற்பீடந்தனிற்பிரமோத்தரகாண்டந்தென்சொலாக்கி
யறந்தழைக்குங்கவிஞர்செவிக்காரமுதமாக வரங்கேற்றினனே

இ-ள். ஒலிக்காநின்றஅலையையுடைய பெரியதாகியசமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தைக்காத்துப் பகைவரைப்போர்முகத்தில்வென்று பாவங்களை நீக்கி வீரம்விளங்கப்பிரகாசிக்கும் தகட்டுவடிவாகியவேலேந்திய வரதுங்கராம பாண்டியமகாராசன்பிரமோத்திர காண்டத்தைத் தமிழாற்செய்து இயற்றமிழ்பயின்ற மதுரைச்சங்கத்தில் சிறப்புற்றிருக்கும்அறுகாற் பீடத்திருந்து தருமகுணமிகுந்தபுலவர்கள் காதுகளுக்குக்கிடைப்பதற்கரிய அமுதம்போல மதுரிக்கும்படி அரங்கேற்றினன்-எ-று. ௰௩



## கடவுள்வாழ்த்து - முற்றிற்று.







சிவமயம்

## முதலாவது

# பஞ்சாட்சரமகிமையுரைத்த அத்தியாயம்



வேதபாரகர்முனிவரர் வேள்வியாங்கியற்றப்
போதினான்முகத்தனையுறை சென்னியிற்புனையாச்
சீதவார்பொழினைமிசா ரணியத்தைச்சேர்ந்தாங்
காதிவேள்வியைவிதிமுறை யியற்றுவானமைந்தார்

இ-ள் வேதபாரகராகியமுனிவர்கள் வேள்விசெய்யவிரும்பித் தாமரைப் பூவிலிருக்கும் நான்குமுகங்களையுடைய பிரமதேவனுடைய உத்தாரத்தைச் சிரசிலேற்றுக்கொண்டு நைமிசாரணியமென்னுங்குளிர்ச்சிபொருந்திய மேலுயர்ந்தபொழிலிடத்தைச்சேர்ந்து அவ்விடத்தில வேதவிதியாற் சிவயாகமொன்றுசெய்யத் தொடங்கினார்கள்-எ-று, முதலிலிருக்கும் ஆங்கு அசை. க

ஆயகாலையிற்புராணமீரொன்பதுமறைந்த
தூயமாதவச்சூதமா முனிவரன்றோன்ற
ஏயமாதவர்முனிவனுக் கிருக்கையீந்தெமக்கு
நேயமாகியசிவகதை நிகழ்த்துதியென்றார்

இ-ள் அவர்கள் வேள்விசெய்துகொண்டிருக்கும்போது பதினெண்புராணமுஞ்சொன்ன பரிசுத்தமானபெருமைபொருந்திய சூதமுனிவர்வந்துதோன்ற அவ்விடத்திலிருந்தமுனிவர்கள் அவரைக்கண்டு ஆசனங்கொடுத்து வீற்றிருக்கச்செய்து எங்களுக்கு அன்புதருவதாகிய சிவகதையருளிச்செய்யுஞ் சுவாமியென்றார்கள் எ-று, பதினெண்புராணங்களாவன மச்சியம்-கூர்மம்-வராகம்-வாமனம்-பிரமம்-வைணவம்-பாகவதம்-சைவம்-இலிங்கம்-பௌடிகம்-நாரதீயம்-காருடம்-பிரமகைவர்த்தம்-காந்தம்-மார்க்கண்டேயம்-ஆக்கினேயம்-பிரமாண்டம்-பதுமம்-என்பவைகளாம். உ

நன்றுநன்றுநீமொழிந்தது நானிலத்தவர்போற்
பொன்றலின்றுதவொழிவிலாத் தேவனைப்போற்றல்
அன்றிநாயகன்காதையை விரும்பினீர்தனுள்
ஒன்றுகேட்பிமதன்பய னளவையாருரைப்பார்

இ-பு முனிவர்களேநீங்கள்சொல்லியவார்த்தைமிகவும் நன்று மிகவும்நன்று இவவுலகத்திலிருப்பவர்கள்போல இறப்பதும்பிறப்பதும்ஒழியா தமற்றைத்தேவர்களைப்போற்றுதல்செய்யாமல் ஆதியந்தமில்லாத பாமசிவன்சரித்திரததைக்கேட்க விரும்பினீர்கள் அநதச்சிவசரித்திரம், அநந்தமாம்,அதனுள்ஒருசரித்திரங்கேட்டாலும், அதனால்வரும் பயனிவ்வளவென்றுயார் அளவிட்டுச் சொல்லுவாரகள-எ-று,

ஆசில்சீர்க்கதைபற்பல வறைந்தனமினியாம்
பேசுநற்கதைபிஞ்ஞகன் றிருவுருவான
மாசிலஞ்செழுத்தடைவுசொன் மான்மியமுதலா
ஈசனககதைகேட்பதே யறமென்பதிரு

இ-பு குற்றமில்லாதபுகழையுடைய அநேகமாகியசரித்திரங்களை உங்களுக்குமுன்னஞ்சொன்னோம் இப்பொழுது நாம்உங்களுக்குச்சொல்லும்நல்லசரிததிரமாவது பரமசிவனுடைய திருவுருவமாகியபஞ்சாட்சரத்தின்முறைமையைச் சொல்லுகின்றமான்மியமுதலாகப்பரமசிவனதுநல்லசரித்திரததைக்கேட்பதே அறமென்றுசொல்லுவதிருக கூ-றுகூ

இந்துசேகரன்றனமுஞ் சிவசிசியியல்பும்
பந்தந்தீர்பிரதோடத்தின் பூசையின்பலனும்
வந்தனைக்குறுசோமவா ரத்தினமான்மியமும்
அந்தமாதியிலாதவ னடியவர்திறமும்

இ-பு சந்திரசேகரனாகியபரமசிவன் வீற்றிருக்கும்ஸ்தலமான்மியமும் சிவராத்திரிமான்மியமும பாசபந்தத்தைநீக்குகின்ற சனிப் பிரதோஷபூசையினால்வரும்பலனும், ஆராதனைக்குரியசோமவாரவிரத மான்மியமும ஆதியந்தமில்லாதபரமசிவனுடையஅடியவர்மான்மியமும்-எ-று.

பிரதோஷம்-என்பது- இராத்திரியின்முன்காலம் அது அஸ்தமிப்பதற்குமுன் (மூன்றேமுக்கால்)நாழிகையும் அஸ்தமித்தபின்பு (மூன்றேமுக்கால்)நாழியுமுள்ளகாலமாம ௫

தெரிவருஞ்சிவகவசமும் பூதியின்செயலும்
புரியும்பத்தியினியதிசெய் பூசனைப்பொலிவும்
ஒருவுகற்பினளபதிகற் றுமாமகேச்சுரமும
அரனெனத்ததுமக்கமா மணியினதடைவும்

இ-பு எளிதாகஅறிதற்கரிய சிவகவச மான்மியமும் விபூதிமான்மியமும்விரும்புகின்றபத்தியினால் நீதியாகச்செய்கின்ற சிவபூசைமான்மியமு

ம்கற்புநீங்கியவருடையபழிநீக்கியஉமாமகேசுவரவிரதமான்மியமும் சிவ னென்றேசொல்லத்தக்க பெருமைபொருந்திய ருத்திராட்ச மணியின்மா ன்மியமும்-எ.று, கா

வேதநான்கினும்விளங்குசீ ருருத்திரவீறும்
ஓதுகேனிவைகேண்மின்களெனத்தொகுத்துரையா
ஆதியஞ்செழுத்தனமவருமான்மியமுதலாச்
சூதமாமுனிமுனிவர்முன் வகுத்தனன்சொன்னான்

இ-பு நான்குவேதங்களாலும்சொல்லப்படுகிற சீருருத்திரமான்மிய முஞ்சொல்லுகின்றேன் இந்தச்சரித்திரங்களைக்கேளுங்களென்றுதொகுத் துச்சொல்லிப் பிணபுவாக்குக்கடங்காத சிவசொருபமாகியபஞ்சாட்சர மா ன்மியமுதலாகச்சூதமுனிவரானவர் நைமிசாரணியமுனிவர்களுக்குவகுத் துச்சொன்னார்-எ-று எ

தவங்கள்வேள்விகண் முதலவாந்தருமவேள்விகளில்
அவங்கண்ணீக்குமெய்ஞ் ஞானமாவேள்வியேயதிகம்
பவங்கணீக்குமவ்வேள்வியின் பாற்படுசெபமாஞ்
சிவங்கலப்புறுமந்திர வேள்வியைச்செப்பின்

இ-பு தவங்கள்-வேள்விகள்-முதலாகிய தருமவேள்விகளில்(பிறவிக் குக்காரணமாகிய பயனில்லாதமுயற்சிகளைநீக்கத்தக்கபெருமையுள்ளமெ ஞ்ஞானவேள்விகளே அதிகம்,சநநங்களைநீக்குகின்ற அந்தவேள்விகளையடு த்த ஜபமாகியதனமைபொருந்திய மந்திரவேள்வியைச் சொனனுல்எ-று.

முக்கணாயகனமரருண் முதல்வனுமதுபோற்
றக்கமந்திரமெவற்றினுந் தலைமையைந்தெழுத்தே
தொக்கநான்மறைப் பிரணவமாதியாத்தொடங்கி
யொக்கவோதியேபரகதி யளப்பிலருற்றார்

இ-பு திரிநேத்திரங்களையுடையபரமசிவன் தேவர்களுக்குள் தலைவனு ம்அதுபோல் தகுதியுள்ள எல்லாமந்திரங்களிலும் பஞ்சாட்சரமேமுதன் மையாம்(இந்தப்பஞ்சாட்சரத்தை)வியாசமுனிவரால்நான்காகத்தொகுக்க ப்பட்ட வேதங்களிற்சொல்லப்படுகிற பிரணவமாதியாகத்தொடங்கிச்சே ர்த்தோதி-அநந்தம்பேர்மோட்சமடைந்தார்கள்-எறு, கூ

ஏகாரம்-உ-ம்-தெளிவு

இன்னமந்திரத்தோரெழுத் தின்பயனெல்லை
யன்னலூர்தியுந்திருமறு மார்பனுமறியார்

முன்னைநான்மறைதனித்தனிமொழிவதுமிதுவே
மன்னிவியெங்கணுஞ் சிவன்றிருவுருவமாய்வயங்கும்

இ-பு இதுதன்மையுள்ளபஞ்சாட்சரத்திலொரு அட்சரத்தின்பயனை விளைப் பிரமதேவனுந்திருமாலுமறியார்கள்-பழைமையாகியநான்குவேதங்களுஞ்சொல்வது மிந்தமந்திரத்தையே-இது அண்டபிண்டமெங்கும் நிலைபெற்றுச்சிவன் திருவுருவமாயவிளங்கும்-எ-று. ௰

ஐந்தெழுத்தினுண் மைதெரிவிஞ்ஞானருயிர்சென்று
சிந்தைகாணருஞ்சிவபதஞ் செறிந்திடுஞ்சிறத்தால்
இந்தமந்திரமேப்பரப் பிரமமேயென்பர்
வந்தனைத்தொழிற்சச்சிதா னந்தசின்மயத்தோர்

இ-பு இப்பஞ்சாட்சரத்தினதிசூட்சுமமுறைமையைக்(குருமுன்னிலையில்)விஞ்ஞவம-அழிவில்லாதவுயிரானது சென்றுமனதுக்கெட்டாதசிவபதத்தைச்சேர்ந்திடுந்தன்மையால்-இந்தமந்திரத்தினுண்மைபரப்பிரமமேயாகுமென்று வந்தனைத்தொழிலையுடைய சச்சிதானந்தசின்மயர்களாகியபெரியோர்கள்சொல்லுவார்கள்-எ-று. ௰க

கருப்பயோனியிற் சுழிப்படுபவக்கடல்கடப்பப்
பொருப்பினெம்பிரா னுயிர்க்கெலாம்புணையெனப்புகன்ற
விருப்பஞானவஞ்செழுத்தினை யுளத்திடைவித்திற்
றரும்பைசுட்டிடும்வேள்வியின் றனமேமனறவமேன

இ-பு-கருத்தங்குமெண்பத்துநான்குலட்சயோனிபேதமாகிய இருவினையென்னுஞ்சுழிபொருந்திஜநநசாகரத்தைக்கடக்கத் தெப்பமாகவுயிர்க்கெலாங்கயிலாயகிரியில்வீற்றிருக்குங்கடவுளாகிய பரமசிவனருளிச்செய்த விருப்பமுள்ளஞானமயமானபஞ்சாட்சரமென்னும் வித்தையமனமென்கிற நிலத்தில்விதைத்தால்(மோட்சமாகியபயனைத்தரும்) ஆதலால் தருப்பைபயைச்சுடும்வேள்வியேன் தானமேன் தவமேன் (வேண்டியதில்லை) எ-று

வித்தின் - எனக்கூறினமையால் - விதையுநிலமுங்கூறப்பட்டன விதைத்தலாவது-தியானிகதல் ௰உ

பருதிவந்தெழாவளவுநீ டிருளெனப்பல்முந்
சுருதியஞ்செழுத்துணர்கலா நாளெலாந்தொடருங்
கருதிகாண்மறையந்தமும் வேதத்தின்கண்ணுமா
ஒருதனிப்பெருங் கடவுளஞ்செழுத்தலாதுளதோ

இ-பு சூரியனுதயமாகாதவளவாயில் இருள்நீடித்திருப்பதுபோலவே அத்தநுசொல்லுகிற பஞ்சாட்சரத்தையறியாத நாளெல்லாம் ஜநநமானது

தொடருமெண்ணுமிடத்தில்வேதாந்தமாகிய உபநிடத்திலும்வேதங்களினி டத்தும்-ஒப்பற்றபெருங்கடவுளாகியபரமசிவனதுபஞ்சாட்சரமல்லதுவே றுண்டோ(இல்லை)எ-று ௰௩

முத்திநன்னெறிக்கொருதுணை மோகவாரிதிக்கு
வைத்தசெஞ்சிகைவடவனல் வினைகதிற்குப்
பொத்திநுங்குவெங் கதழெரிபுனைமதிக்கண்ணி
யத்தனைநதையஞ்செழுத்தினை கடைபிடித்தறிவீர்

இ-பு திங்களாகியமாலையைத்தரித்த அத்தனாகியஎம்மையனது பஞ் சாட்சரமானது நல்லமோட்சவழிக்குஒப்பற்றதுணையாம்மோகமாகியசமு த்திரத்துக்குஅமைக்கலைத்த செஞ்சிகையையுடையவடவா முகாக்கினி யாம, இருவினையாகியவனத்திற்குவியாபித்துக்கொண்டு மிகுந்தவேகமாக எரிக்கின்ற வெப்பமுள்ள தீயாம்இதனைத்தெளிவாகக்கொண்டறிவீர்கள் எ-று.

வடவாமுகாக்கினியானது-பெட்டைக்குதிரையின்முகம்போல் உரு வமுள்ளதாகச்சமுத்திரத்தினிடத்திலிருந்துகொண்டு அதில்நீர் அதிகரிக்கா தவண்ணம் சுவறச்செய்வதாகிய அக்கினியாம் ௰௪

ஊன்நீக்கியசிவமுன்னா நம்வினையுரைக்கின்
ஞானமெய்திடும்மனைவர்க்கு நம்பனாலயக்குந்
தானமேபதிநற்குரவராற் பெற்றவர்தங்கட்
கானசித்தியுமுத்தியு மக்கணத்தாமால்

இ-பு மும்மலங்களையும்நீக்கிய-சிவ என்பதன்முன் நமவென்பதைச் சேர்த்துச்ஜபித்தால் அவர்களுக்கெல்லாம் ஞானபதங்கிடைக்கும-பரமசி வன்விரும்பித்திருக்கோவில்கொண்டுவீற்றிராநின்ற ஆலயத்திற்சென்று நலகுருவினால் உபதேசஞ்செய்துகொள்ளப்பெற்றவர்களுக்கு விரும்பிய வைகளையெல்லாங்கொடுக்கத்தக்கதான அஷ்டமாசித்திகளும மோட்சமும் அப்பொழுதேகிடைக்கும்-எ-று-ஆல்-அசை ௰௫

வேறு

தாதவிழ்கடுக்கையஞ் சடிலநாயகன்
ஆதியினவின்றநல்லஞ்செழுத்தையு
மேதகுகுரவனாலுணர்ந்தொர் வேந்தன்முன்
றீதறுதயந்தமை செப்புவாமரோ

இ-பு மகரந்தத்தோடு மலர்ந்த கொன்றைப் பூமாலையணிந்த சடாம குடத்தையுடைய பரமசிவன் - ஆதியில் அருளிச்செய்த நல்ல அஞ்செ ழுத்தையும் மேன்மை பொருந்திய குருவினாலறிந்து ஒரு ராசனுடைய

ன் பாவங்களைநீக்கிக்கடைத்தேறிய சரித்திரத்தை-யாம்சொல்லுகிறோமெ
ன்றுசூதமுனிவர்சொல்லுகின்றார் -எ-று, அரோ-அசை. ௰௬

தேங்குபேராழியுந்திகிரிக் குன்றுமொத் -
தோங்குநீரகழியொடுயருமூதெயில்
பாங்கர்சூழ்மதுரையம பதிக்குமன்னவன்
வாங்குவில்லெதுகுலமரபிற்றோன்றினான்

இ-பு நிறைந்துள்ள பெரும்புறக்கடலையும்-சக்கிரவாளகிரியையுமொத்துமிகுந்தநீரையுடைய அகழியுடன்-உயர்ந்தபழமையாகிய மதிலானதுபுறத்தில் சூழ்ந்திருக்கும்படியாகிய-அழகியமதுராநகரத்துக்கிறைவன்-போர்முகத்தில்வளைக்கும்வில்லையுடைய எதுகுலமரபிற் பிறந்தவன்-எ-று, ௰௭

வடுவிலாப்பெரும்புகழ் வயங்கவையகத்
திடுபெயர்த்தசாருகனென்னுமாண்பினான்
றொடுகழற்றாளினான்புல்வச்சோரிவேல்
அடுகடற்றானையானாளிமொய்ம்பினான்

இ-பு குற்றமில்லாதபெரிய புகழானது உலகமெங்கும் விளங்கத்-தசாருகனென்று சொல்லப்பட்டபெயர்கொண்ட மாட்சிமையுடையவன்-வீரகண்டையணிந்தகாலையுடையவ பகைவருடலின்உதிரத்தில் தோயத்தக்க வேலால் எதிர்த்தவரைக்கொல்லுகிற சமுத்திரம்போன்றசேனையையுடையவன் சிங்கத்தையொத்தபலமுள்ளவன்-எ-று. ௰௮

நாளினின்மனுமுறைநடாத்து மணையான்
வாளினிற்றெவ்வர்தம் வலியைமாற்றினான்
றோளினில்வரைகளைத் துளக்குமாற்றலான்
வேளினின்வனப்பினான் றவத்தின்மேன்மையான்

இ-பு தன்காலத்தில்மனுமுறைதவறாதபடி நீதிசெலுத்திய ஆக்கினையுள்ளவன் தன்கைவாளினால் பகைவருடையபலங்களை மாற்றினவன், தன்தோள்களால் மலைகளையசைக்கத்தக்கபராக்கிரமத்தையுடையவன் மன்மதனையொத்த அழகுள்ளவன் தவத்திலுமேன்மைபொருந்தியவன்-எ-று. ()

இத்தகைமன்னவ னிளநிலாநகை
முத்தணிமுகிழ்முலை முளரிவாண்முகக்
கொத்தலர்நறுங்குழற் கோதைவேல்விழி
மெய்த்தவக்கொடியினை விதியின்வேட்டனன்

இ-பு இப்படிப்பட்டபெருமையுள்ள அரசனானவன்சிலவினதுஇளங் கதிரைப பரப்புகின்றஒளிபொருந்தியமுத்துமாலையணிந்த தாமரையரும் பையொத்ததன்கலையும், செந்தாமரைமலர்போன்ற ஒளிபொருந்தியமு கத்தையும் கொத்துகளாகியமலர்களையணிந்த நறியகூளகத்தையும், வெற் றிமாலையணிந்தவேல்போன்ற கண்களையுமுடையஉமையாகியதவத்தினால் பிறந்தஒருகன்னிகையை வேதவிதிப்படி விவாசஞ்செய்து கொண்டநாளி ல்.எ-று. உ௰

நல்கியதூமமு நானத்தீபமு
மல்கியமணவறை மலர்பெய்பாயலிற்
பல்கியவிருப்பினன் வளைக்கைபற்றலும்
ஒல்கியகொடியினிலொதுங்கிக் கூறுவாள்

இ-பு தாதிகளாலூட்டப்பட்ட அகிற்புகையும்கஸ்தூரிசேர்த்த தீபமும் நிறைந்துள்ளமணவறையுள்மலர்கள் பரப்பியசயனத்தி லிருந்துகொண்டு மிகுந்தவிருப்பமுள்ளவனாகி வளையணிந்தகையைப்பற்றவும் அவள்அசை கின்ற பூங்கொடிபோலப்பின்னொதுங்கிச் சொல்லுகின்றாள்-எ-று, உக

நின்னெடுந்தோள்வரை நெருமுங்கப்புல்லுதற் குன்னருங்காதலென் னுளத்தின்றாதலான்
மன்னவகேளொருதலைக் காமமன்னினர்க்
கின்னலேயன்றிமற் றின்பமில்லையே

இ-பு உன்னுடையமலையொத்தபுயங்களை அழுந்தப்புல்லுதற்கு நினைத் தற் கருமையாகியஆசையானதுஎன்மனதிலில்லை ஆகையினால்மன்னவனே கேள்-ஒருதலைக்காமத்தைப்பொருந்தினவர்களுக்குத்துன்பமுண்டாகுமே யன்றி இன்பமுண்டாவதில்லை-எ-று மற்று-அசைநிலை-ஏ-ஈற்றசை.

ஒருதலைக்காமம்-என்பது-ஒருவரிடத்துண்டான ஆசை-ஈண்டு அர சனிடத்துமாத்திரமுண்டானமையால் ஒருதலைக்காமமென்னப்பட்டது()

சிந்தைவேறாயினர் பிணியிற்றேம்பினர்
புந்தியின்விரும்பிலார் விரதம்பூண்டுளார்
உந்தியிற்கருவின ரொருவபூப்பினர்
முந்துறுவலியினும் முயங்கற்பாலரோ

இ-பு மனதுவேறாகியமாதர்களும் வியாதியினால்வருந்திய மாதர்களும் உள்ளத்தில்விருப்பமில்லாத மாதர்களும், விரதங்கொண்டிருக்கு மாதர்க

ளும், வயிற்றிற்கருப்பமுள்ளமாதர்களும் சூதகநீங்கியமாதர்களும், முந்து இன்ற பலாத்காரத்தினுல்அணையுந்தன்மையை உடையவர்களல்லர்-எ-று

கயங்கெழுநறுமலர் கயங்குறுவகை
பயங்கெழுதேனுகர் சுரும்பின்பான்மைபோல்
வயங்கிழைமகளிரை மனந்திருத்தியே
முயங்கினர்க்கன்றிமற் றின்பமுற்றுமே

இ-பு தடாகங்களிற்பொருந்திய வாசனையுள்ளமலர்கள் கசங்காமல்வண்டுகள் தங்களுக்குப்பிரயோசனமாயுள்ள தேனைக்காலமறிந்துண்ணுந் தன்மைபோல்-விளங்குகின்றஆபரணங்களையணிந்த தங்கட்குரிய மனைவிகளுடைய மனதைத்திருத்திப் புணர்ந்தவர்க்கல்லது- இன்பமுண்டாகுமோஉண்டாகாது-எ-று. மற்று-அசைநிலை. ௨௪

என்றவள்கூறலுமெழுந்த காமநோய்
தன்றலைமீக்கொளத தாங்கலாதவன்
குன்றெனவீங்கியகுலவுத் தோளினுற்
பொன்றிகழ்வனமுலை வலிதிற்புல்லினுன்

இ-பு என்றவள்சொல்லவும், தன்மனத்துண்டாகியகாமநோயானது தலைமட்டுமேறுதலால் அந்தக்காமத்தைச்சகிக்கமாட்டாதவனுய் அவ்வரசனுனவன் மலைபோலஉயர்ந்ததிரண்ட தன்தோள்களால்அவளுடையபொன்னிறமுள்ளதாய்விளங்குகின்றஅழகியதனங்களைவலுவில்புல்லினுன்-எ-று

புல்லியகாலையிற் பொருறுமாதவ
மெல்லியல்குளிர் தளிர்மேனிவெம்பியே
கொல்லுலையழல்புகக் கொளுந்திரும்புபோல்
வல்லழலிறைத்ததுமகிணன் மேனிமேல்

இ-பு அப்படிபுல்லியகாலத்தில்பொறுமல்மாதவத்தையுடைய அகதமாதின்குளிர்ந்த தளிர்போன்றமேனியானது வெதும்பிக்கருமான் உலைக்களத்திற்சேர்ந்ததினுல்அக்கினிமயமாய்ச் சுடுகின்றஇரும்புபோல்கணவன்மேனிமேல் மிகுந்தவெப்பமுள்ள தீயையிரைத்தது-எ-று ௨௬

சாந்தமும்பொரிந்தது தாமந்தீந்தது
தோய்க்தொளிசாரமுஞ் சுண்ணமானதால்
ஏந்தலுமவெருவிமெய் யிறுகப்புல்லிய
நாந்தகத்தடக்கைக ளடுக்கிவாங்கினுன்

இ-பு அந்தவெப்பத்தினால் அரசன்மார்பிலணிந்திருந்த சந்தனக்குழம்பும் பொரிந்துதிரிந்தது பூமாலையுங்கருகியது அணியப்பட்டொளிர்கின்ற முத்துமாலையும் நீராகிய து இவைகளெல்லாமிப்படியானதினால் அந்த வரசன்பயந்து தன்மனைவிமேனியை யிறுகப்புல்லியவாள்பிடிக்கும் நீண்டகைகள் நலிந்துவாங்கிக்கொண்டான்-எ-று, உஎ

வாங்கியமன்னவன் மாதைநோக்கிநின்
தேங்கமழ்தளிர்புரை செய்யமேனியின்
ஓங்கழல்வெதுப்பவென் னுடலம்வெந்ததால்
ஈங்கிதனிமித்தம்யா தெனவினவினன்

இ-பு கைகளைவாங்கிக்கொண்ட மன்னவனானவன் தன்மனைவியைப்பார்த்து வாசனைகமழ்கின்றசெந்தளிரையொத்த உன்னுடைய செவ்விதாகிய மேனியிலிருந்துண்டாகிய மிகுந்ததீயான துசுட என்னுடல்வெந்தது இதனுடையகாரணமென்னென்று வினவினன்-எ-று. ஆல்-அசை உஅ

ஆயிழைமுறுவலித் தரசகேள்பவ
மாயிருடெழுந்துரு வாசரீசனுர்
நேயவஞ்செழுத்தினை நிகழ்த்தலால்வினை
போய்தென்னுடலமும புனிதமாயதே

இ-பு அழகுள்ளதாகச்செய்யப்பட்ட ஆபரணங்களணிந்த அந்தமாதுநகைத்து ராசாவேகேளும்பிறவிக்கேதுவாகிய பெருமையுள்ள ஆணவமலத்தினைக்கொடுத்ததுருவாசமுனிவரானவர் பரமசிவன்அன்புறத்தக்க பஞ்சாட்சரத்தை எனக்குபதேசித்ததினால்இருவினையும நீங்கியது- என்னுடலும் பரிசுத்தமாகியது-எ-று, ஏ- அசை. உகூ

புண்ணியம்பாவத்தைப் பொருந்தலின்மிது
திண்ணமிப்புனிதமாஞ் செய்யமேனியை
யண்ணலஞ்செழுத்தினை யறியலாதனின்
தண்ணியமேனியாற் றழுவற்பாலையோ

இ-பு புண்ணியமானது பாவத்தைச்சேராது இதுநிச்சயம் ஆதலால் புனிதமாகியஇந்தநல்லவுடலைப் பரமசிவனுடைய பஞ்சாட்சரத்தை யறியாதவும்முடையகுளிர்ச்சிபொருந்தியமேனியால்நீர்தழுவத்தக்கவரோ-எ-று

இந்நிலைவினாந்துநீ யிறைவன்மந்திர
நின்னுடைச்செவிப்புல நிறைந்துத்தூய்மையாய்ப்
பின்னரொன்மெய்ந்நலம் பெறுகியென்றனள
அன்னமந்திரமெனக் கருளென்றோதினன்

இ-பு நீர்இப்பொழுதேவிரைவாகப் பரமசிவனுடைய பஞ்சாட்சரத்தைஉம்முடைய சாதிஎிடத்தில்உபதேசஞ்செய்யப்பெற்றுக்கொண்டு பரிசுத்தமாகி அதன்பின்புஎன்மெய்யின்பத்தைப் பெற்றுக்கொள்ளுமென்று சொன்னாள் அப்படியானால் அந்தமந்திரத்தைநீயெனக்குபதேசஞ் செய்யென்றுசொன்னான்-எ-று ௫௯

மாதர்பான்மெய்ம்மொழி மகிழ்நர்கேட்பது
நீதியன்றரனருணிறைந்ததேசிகன்
மேதகுகர்க்கர்பால் விழைவினும்பெறப்
போதுகவென்றனள் பொருந்தினனரோ

இ-பு கணவர்கள்தங்கள் மனைவியரிடத்தில்உண்மையானமந்திரோபதேசம்பெற்றுக்கொள்வதுநீதியல்லசிவனதுகிருபையைப்பூரணமாகப்பெற்றுள்ளகுருவாகிய மேன்மைபொருந்தியகர்க்கமுனிவரிடத்தில்விருப்பமுடன்பெற்றுக்கொள்ளநீர்என்னுடன்வாருமென்றாள் (அவ்வரசன்) அதற்குசம்மதித்தான்-எ-று. அரோ-அசை ௬௰

குரவுவார்குழலொடுங் கொழுநனக்கணந்
திரைபுணர்யமுனையந்தீர மெய்தியே
வரமுனிகர்க்கத்தாள் வணங்கிவந்தவா
றுரைசெய்துபின்னுமோ ருரைவிளம்பினான்

இ-பு குரவம்பூவணிந்தநீட்சியாகிய அளககதைபுடைய நன்மனைவியோடும்கணவனானவன அப்போதே அலைகள்மோதுகின்றஅழகியயமுனைநதியின்கரையிலடைந்து சிரேஷ்டம்பொருந்தியகர்க்கமுனிவருடைய பாதங்களைப்பணிந்துதான்வந்தகாரியத்தைச்சொல்லிப்பின்னுமொருவார்த்தைசொல்லுகின்றான்-எ-று. ௬௧

மருளுறுபவக்கட ருழூர்வஞ்சனை
யருடருமஞ்செழுத் தமயியர்கநீ
தெருடருதேசிக முத்திரத்தீமேல்
இருளறவேற்றுகி யென்னவேத்தினாள்

இ-பு தெளிவைத்தருகின்றகுருவே நீவிர் யாவரும்மயக்கத்தைத்தருகிற ஜநநசாகரத்தில் மூழ்கிகிடக்கின்றபாவியாகிய அடியேனை அருளைத்தருகின்றபஞ்சாக்ஷரமான துதெப்பமாகும்வண்ணம் உபதேசித்துமயக்கத்தினும் படிமோட்சமாகிய கரையிமேலேற்றுமென்று துதிசெய்தான்-எ-று ௬௨

அம்முனிதிருபன்மே லருளுநோக்குடன்
எம்மையாளிறைவனை யுளத்திருத்தியே

செம்மலர்ச்சிவகரஞ் சென்னிசேர்த்துமே
மெய்ம்மையுஞ்செழுத்தையும் விதியிற்கூறினான்

இ-பு அந்தமுனிவரானவர் அரசனிடத்தில்கிருபைசெய்யும்நோக்கத்துடன்நம்மைபாட்கொள்ளும்பரமசிவனையிருதயத்தில் தியானித்துச் செந்தாமரைமலர்போன்றதாமுடையகல்லவனை அவன்சிரசில்வைத்து உண்மையாகிய ஐந்தெழுத்தையும்விதிப்படி உபதேசித்தார்-எ-று ௧௫

வேறு

ஓதைபுரிதேசிக னுரைத்தபொருள்கொண்ட
வாதைவடிவேலிறை மயிர்க்குழிகளின்றும்
வேகவினையாவையும் விரைந்துசதகோடிக
காகவுருவாய்மிசை பறந்தனகரிந்த

இ-பு சந்தோஷத்தைச்செய்கின்ற தேசிகராகிய கர்க்கமுனிவருபதேசித்த பஞ்சாட்சரத்தைப்பெற்றுக்கொண்ட வெற்றிபொருந்தியவடிவேலையுடைய அந்தஅரசனுடையரோமத்துவாரங்களினின்றும்கடுமையுள்ளவினைகளெல்லாம்நூறுகோடிக்காக்கைரூபமாய்மேலெழுந்துபறந்துகரிந்தன எ-று, ௧௬

மேனியிலெழுங்கொடிகள் வெந்துவிழல்கண்ட
மானவடிவேலரசர் மன்னவன்வணங்கி
யூனுடலினின்கொடிக ளுற்றெறழலெனிறாய்ப்
போனதெவனென்னமுனி புங்கவனுரைத்தான்

இ-பு தன்னுடலினின்றுமேலெழுந்தகாக்கைகள் வெந்துவிழுவதைக்கண்டபெருமைபொருந்திய வடித்தவேலையுடைய அரசர்க்கரசனானவன் வணங்கி அடியேனுடையஎன்சம்பந்தமாகிய சரீரத்தினின்றும்இந்தக்காக்கைகள்உண்டாகி மேலெழுந்தகாரணமென்ன அவைகள் நீறாய்ப்போனகாரணமென்னவென்றுவினவ முனிசிரேஷ்டராகியகர்க்கர்சொல்லுகின்றார் எ-று, ௧௭

நல்வினையுழந்துபல நல்லுருவெடுத்தும்
அல்வினையுழந்துபல வல்லலுருவுற்றுந்
தொல்வினைதொடர்ந்துதரு சூழ்பிறவியென்னும்
வல்வினையொழித்தனை யிம்மந்திரவலத்தால்

இ-பு நல்வினையைச்செய்துபலவாகியநல்ல உருவமெடுத்தும் தீவினையைச்செய்து துன்பமனுபவிக்கத்தக்க பலதீயவுருவமெடுத்தும் பழையவி

னையாகியசஞ்சிதகன்மதொடர்ச்சி தருவதால்சுழலுகின்ற பிறப்பாகியவலியவி
னையை இந்தப்பஞ்சாக்ஷரத்தினன்மையால்ஒழித்தாய் ௩௮

ஒழிந்தவினைகாகவ லூருக்கொடனின்றும்
எழுந்தனவருந்தொடர் பிலாதவைகணீறாய்
விழுந்தனவருந்தலுளம் வென்றிபுனைவேலோய்
செழுந்திருவெழுத்தினிலை செப்பவெளிதன்றே

இ-பு வெற்றிகொண்டவேலாயுதத்தையுடைய அரசனே ஒழிந்தவினை
கள் உன்னுடலினின்றும் வலியகாகருப்க்கொண்டெழுந்து இனித்தொடரு
நதொடர்ச்சியில்லாமையினால் வெந்துநீறாய்விழுந்தன நீமனம்வருந்தாதே
மேன்மையுள்ளபஞ்சாக்ஷரத்தினிலைமைசொல்லவெளிதல்ல - எ - று.ஏ
அசை ௩௯

கண்டனைவிளைந்தபடி காமர்ககிரிப்போய்
ஒண்டொடியுமியுகல னுண்டுடலொழிந்தால்
அண்டர்பதமியாவையு மடைந்தவைதுறந்து
தெண்டிரைவிடத்தை நுகர்செம்மலடிசேர்வீர்

இ-பு அரசனே நடந்தகாரியங்களையெல்லாங் கண்டனையல்லவா இ
னிநீயுமுன்மனைவியும் அழகியநகரத்திற்போய் இன்ப மனுபவித்துக்கொ
ண்டிருந்து இந்தச்சரீரமொழிந்தால்பின்புமுறையேதேவர்பதவிகளையடை
ந்து (அவைகளிலுள்ள இன்பங்களையுமனுபவித்து) அவைகளையும்நீக்கித்
தெளிவான அலைகளையுடையசமுத்திரத்திலுண்டாகிய விஷத்தையுண்டப
ரமசிவனுடையதிருவடிகளைச்சேர்வீர்கள்-எ-று ௪௰

என்றவனியம்பலுமெழுந்தடிவேலோன்
குன்றனையமாடமலி கோநகரமெய்தித்
தன்றுணைவியினால் நுகர்ந்துட றணைப்ப
மன்றன்மனையோகிமரன் வாழ்பதமடைந்தான்

இ-பு. இப்படியாகக் கர்க்கமுனிவர் சொன்னமாத்திரத்தில் வடித்த
வேலையுடைய அவ்வரசனானவன்எழுந்து மகமேருவையொத்த வீடுகளுள்
ள அழகியசிறப்புப்பொருந்திய நகரத்திற்சேர்ந்து தன்மனைவியிடத்தில் இ
னிதாகிய இன்பமனுபவித்து உடல்நீங்க வியாகந்துசெய்துகொண்ட அம்ம
னைவியுடனே பரமசிவன்கிருபையினால் சிவலோகஞ்சேர்ந்தான்-எ-று ௪௧

வேறு.

மன்னவிக்கதிராமேசன் வடிவெனுநாஞ்செழுத்தின்
தன்மையோர்ந்தவாறு சாற்றினமினிக்குறிகின்ற

பின்னரோதலத்தின்வீறுஞ் சிவநிசிப்பிறந்துசொல்வேன்
தொன்னெறிமுனிவர்கேண்மி னென்றனன் சூதன்சொன்னான்

இ-பு நிலைபெற்ற உயிர்க்குயிராகிய பரமசிவனுடைய சொரூபமான பஞ்சாட்சரத்தினிலைமையையானறிந்தமட்டிற் சாங்கமே சொன்று சொல் லினர் அப்படிசொன்னவுடனே சிவதலமான்மியமும் சிவராத்திரி மான் மியமும், சொல்லுகிறேன் பழமையாகியநன்னெறிக்குவருத முனிவர்களே கேளுங்களென்று சூதமுனிவர் சொன்னார்-எ-று. சஉ

முதலாவது-பஞ்சாட்சர அத்தியாயம்

முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ருரு

உ

சிவமயம்

இரண்டாவது

# சிவதானமகிமையுரைத்த அத்தியாயம்

சூரியகுலதனிற்றோன்றதொன்னகரயோத்திவேந்தன்
வாரணிபெறுமென்கொங்கை மதயந்திவிரும்புதோளான
வேரியற்றொடையன்மார்பன் மித்திரசகநாமத்தோன்
ஆரணியத்தின்வேட்டை யாடுவான்விரும்பிபுக்கான்

இ-பு சூரியகுலத்தரசனும்பழமையாகிய அயோத்தி நகரத்துவேந்த னும் கச்சினையும்ஆபரணங்களையும்பொருந்திய மிருதுவாகிய தனங்களை யுடைய மதயந்தியென்னும்பெயர்கொண்ட மனைவியினால்விரும்பப்பட்ட புயங்களையுடையவனும தேனிறைந்த அழகிய பூமாலையணிந்த மார்பையு டையவனும் மித்திரசகன்என்னும்பெயரையுடை யவனுமாகிய அரசனானவன் அரசாட்சிசெய்துகொண்டிருக்கும் நாளிலொருநாள் வேட்டையாட விருப்பங்கொண்டு ஆரணியத்திறசென்றான்—எ-று. க

பூட்டுவெஞ்சிலையிற்காலும் பொங்கழற்பகழிதூர்த்துக்
காட்டினுளவல்விலங்கின் கணமெலாநதொலைக்குங்காலை
வேட்டஞ்செய்விருப்பினன்முன் னிருவரோர்வயிற்றின்மேய
வாட்டிறலரக்கரங்கி வனையெனவந்தெதிர்த்தார்

இ-பு நாண்பூட்டிய கொடியவில்லையில்வைத்து வெப்பமிகுந்ததீயைக் கக்கும்படியானபாணங்களைப்பிரயோகஞ்செய்து காட்டினிடத்திருக்குமிருகக்கூட்டங்களையெல்லாம் அழிக்கும்போதுவேட்டையாடும் விருப்பமுள்ள அவ்வரசன்முன் ஒருதாய்வயிற்றிற் பிறந்தவர்களாய்ப்போரில்வல்லவராகிய இரண்டுராட்சதர்கள் அக்கினிமலைபோலவந்தெதிர்த்தார்கள்-எ-று

முன்புறவெதிர்ந்துபோர்செய் முன்னவன்றன்னைவாளாற்
றுன்புறமாய்த்தான்முன்னோன் றொலைவுகண்டிளையநீசன்
வென்புறங்காட்டியேகிமீண்டு வஞ்சனையால்வெல்வான்
அன்புடைமனிதனாய்வந்தரசன் றடியிற்றாழ்ந்தான்

இ-பு தன்னெதிரில் முனைந்துபோர்செய்கின்ற மூத்தவனை அந்தஅரசனானவன் வாளாயுதத்தினால்துன்பமடையக்கொன்றான் அண்ணனிறந்ததைக்கண்டு தம்பியாகியநீசனானவன்முதுகுகாட்டி யோடிப்போய் வஞ்சனையால்வெல்ல எண்ணங்கொண்டு அன்புள்ள மனிதவுருவங்கொண்டுவந்து அந்தமன்னவன்பாதத்தில் வணங்கினான்-எ-று, ௫

அரசனுன்வரவேதென்னவரக்கனுமண்ணலேயுன்
றனாகழற்கேவல்செய்யுங் கொள்கையினடைந்தேனென்றே
னிருபனுக்குவந்தவஞ்சனிலையினைச் சிறிதுந்தேரான்
வருகையினடிசிலாக்குமடைத்தொழி லவனுக்கீந்தான்

இ-பு அரசனானவனைக்கண்டு நீவந்தகாரணமென்னவென்றுவினவ அந்தராக்ஷதன் மகாராசாவேஉமதுடைய சத்தியாகின்ற வீரகண்டையணிந்த பாதங்களுக்குக்குற்றேவல்செய்யவெண்ணத்துடன் வந்தேனென்றான் அதைக்கேட்டராசன் சந்தோஷித்து அவன்மோசநினைப்பைக் கொஞ்சமுமறியாமல் கிரமமாகச்சோறாக்குமடைத்தொழிலை அவனுக்குக்கொடுத்தான் -எ-று. மடை-சோறு, ௬

வெருக்கொளவிலங்குமாய்க்கும் வேட்டையக்கானநீங்கி
யரக்கனுமுடன்வந்தெய்த வயோத்தியினடைந்துவேந்தன்
மருக்கமழ்குமுதச்செவ்வாய்மதயந்தி யோடும்வாழ்நாள்
உருக்களின்கன்றிறந்தோர்க் கூட்டுநாளிற்றதன்றே

இ-பு பயங்கொள்ளும்படிமிருகங்களைக்கொல்லும வேட்டையாடுகின்ற அழகியகாட்டினைவிட்டுநீங்கி அந்தராட்சதனுங்கூடவரும்படி ராசனானவன் அயோத்தியிற்போய்ச் சேர்ந்துவாசனைகமழுகின்ற செவ்வல்லி மலரையொத்த வாயையுடையமதயந்தியுடன்வாழ்கின்றநாளில்உடலைவிட்டிறந்த

பிதிர்களுக்குச் சிராத்தஞ்செய்யுநாள்வந்தது -எ-று. அன்று-ஏ- இவ்விர
ண்டுமசை, ரு

தென்புலவாணர்க்கோகை செய்யுநாளிதுகாளென்ன
மன்பதைபுரக்கும்வேந்தன் வசிட்டனைவரித்துப்பூசித்
தன்பினுணவினைசகவென்று னரக்கன்றனெண்ணந்தீர்ப்பா
னன்கலகதமுதத்தோடு நரருடையூனிட்டானே

இ-பு தெற்குத்திசையில்வாழ்கின்றவர்களாகிய பிதிர்களுக்குச்சந்தோஷ
த்தையுண்டாகும் நாளாகியசிராத்தநாள் இக்காலென்றுபுரோகிதன்சொ
ல்ல மனிதர்களைககாக்கும்ராசனானவன் வசிஷ்டமுனிவரை அழைப்பித்து
அன்புடன் ஆராதனைசெய்து அமுதுகொள்ளவேண்டுமென்றான் வஞ்சித்
துவந்திருக்கின்ற அந்தராட்சதனானவன் தன்னெண்ணத்தைநிறைவேற்றிக்
கொள்ள வசிஷ்டமுனிவருக்குப் பொற்பாத்திரத்தில்நல்லஅமுதத்துடன்
நரமாமிசத்தைப்படைத்தான்-எ-று, ஏ-அசை, சு

உய்த்தலுமனிதருனென் றுள்ளத்தினோர்ந்துதூய
மெய்த்தவன்கனன்றுசீறி வெய்யவலவஞ்சமோரான்
மைந்துறுசினத்தானந்தமன்னனை யிதுநீசெய்காய்
அத்தலைநாளுன்றின்னு மரக்கனேயாதியென்றான்

இ-பு படைத்தமாமிசம் நரமாமிசமென்று தம்முள்ளத்திலறிந்துபரிசு
த்தமுள்ளமெய்யான தவத்தையுடைய வசிஷ்டமுனிவர் அந்தஅரக்கன்செ
ய்த வஞ்சகத்தையறியாதவராய்மனங்கொதித்துச்சீறிப்பொருந்திய கோப
த்தினையுடையவராய் அந்தமன்னவனைப்பார்த்து சிராத்தகாலத்தில்அஜ
மாமிசம்படைக்கவேண்டுவது வேதவிதியாயிருக்கஅதைவிட்டு இப்படிய
க்கிரமமான காரியம்நீசெய்ததினாலேகாட்டிடத்தில் சஞ்சரித்துநரமாமி
சத்தை உண்ணும்அரக்கனாகக்கடவையென்று சபித்தார்-எ-று, எ

சாபத்தைநவின்ற மேலோன்றன்னுளந்தன்னின்மேய
கோபத்தினின்றுநீங்கிக் கொடியவலரக்கன்செய்த
ஆபத்தென்றறிந்துவேந்தேயறிகிலேன் சபித்தவிந்தப்
பாபத்தின்றகைமைதீர்ப்பாய் பன்னிருபருவத்தென்றான்

இ-பு சாபமிட்டவசிஷ்டரானவர் தம்முள்ளத்திலுண்டாகியகோபத்தி
னின்றுநீங்கிக் கொடுந்தொழில்செய்கின்றவலிய அரக்கன்செய்த ஆபத்
தென்றறிந்து அரசனேஉன்றுமேல் கோபித்த தவறென்றுணராமல் நான்
ஜபித்த இந்தப்பாபத்தின் தகைமையைப்பன்னிரண்டாண்டுகளும் தீர்ப்பா
யென்று சொன்னான்-எ-று. அ

வரிசிலையுழவன்றானுமறைமுனி தன்னைநோக்கிப்
பெருங்கியசினத்தனாகிப் பிழைபுரியாதேன்றன்னை
நிருதனாகென்னச்சொன்ன நின்னையும்வெய்யசாபம்
புரிகுவனென்றுசாபப் புனலினைக்கையிற்கொண்டான்

இ-பு நீண்டவில்லின்தொழில் பழகினவனாகிய அவ்வரசன் வேதமுணர்ந்த வசிஷ்டமுனிவரைநோக்கி மிகுந்த கோபமுடையவனாய்க் குற்றஞ்செய்யாத என்னை அரக்கனாகக்கடவையென்று சபித்தவுனக்கும் நான்கொடியசபமிடுகிறேனென்று சாபநீரைக்கையில் ஏற்றுக்கொண்டான்-எ-று. கூ

கண்டனள்கலங்கித்தேவி மதயந்திகாவல்வேந்தே
எண்டருமன்னர்தம்முட் குரவரைகாய்ந்தாரியாரே
விண்டொடுமுவெகுளிதீர்வாயென்றவள்விளம்பவேலோன்
கொண்டவச்சாபநீர்தன் குரைகழற்றாளிற்பெய்தான்

இ-பு மதயந்தியென்னும் அவன்மனைவியானவள் அதைக்கண்டுமனங்கலங்கி மன்னுயிரைக்காக்கும் காவல்பூண்ட அரசனே யாவருமெண்ணும்படியான பெருமையுள்ளமன்னவர்களுக்குள் ஆசாரியரைக் கோபித்தவர்கள் யாருமில்லையே ஆதலால் அதிகரித்தெழுகின்ற கோபத்தைத் தணிப்பாயாகவென்று அவள்சொல்லவே வேலேந்தும் அவ்வரசன் தன்கையிலேற்றுக்கொண்ட சாபநீரைச்சத்தியாநின்ற வீரகண்டையணிந்த தன்காலில்விட்டுக்கொண்டான்-எ-று. ய

தீக்குறுசாபநீராற்செம்மலர்தீதோய்ந்தென்னப்
பூக்கழற்கால்களாங்கே பொன்னெனக்கறுத்தலோடும்
பார்க்குளோர்காணமன்னன் கன்மாடபாதனாகி
யார்க்கருங்குருசாபத்தா லரக்கனாய்வனத்திற்புக்கான்

இ-பு தீயையுள்ளசாபநீரால் செந்தாமரைமலர் தீயில்படிந்தது போல் பொலிவுள்ளதாய வீரகண்டையணிந்தகால்கள் அப்பொழுதே கறுத்தமாத்திரத்தில் பக்கத்திலிருப்பவர்களெல்லாங்காண அம்மன்னவன்கன்மாடபாதனாகி நீக்குதற்கரிய குருவின்சாபத்தால் நாட்சதரூபங்கொண்டு ஆரணியத்திற்போய்ச் சேர்ந்தான்-எ-று, கன்மாஷம்என்பது-கறுப்பு யக

வேறு,

நெடிமுழங்கிச்செவிடுபடும் பேரடவியிடத்தேறுநெடுவேய்தேய்ந்த
பொறிகன்றிற்றிசையணவச்சுறுகாறு மயிர்க்கவிகள்பதறிப்பாயப்.

புடைகலந்ததேம்பிணங்களபகன்மதியையிருளென்னப்புகுந்துமொய்க்கும்
குடுமியனா யிடந்தோறும்பலவிலங்கின் குலமனைத்துங்கொலைசெய்துண் [டான்

இ-பு.

காட்டுத்தீ சடசடவென்றொலிக்கக் கேட்போர்காதுகள் செவிடுபடும்படியான பெரியகாடுகடோறும் கீச்சிடையபுடைய மூங்கில்களொன்றோடொன்றுதேய்ந்து உண்டாகாநின்றதீயின்சிகைபொருந்தச் சுடுநாறும்படியானரோமங்களுள்ள வானரங்கள் பழமரங்களிற்பாயவும் அம்மரங்களினிடத்திலிருக்கும் வண்டுக்கூட்டங்கள்பகலிலேதேன்றுஞ் சந்திரனைத்தேன்கூடென்றுகருதி யதனிடத்திற்சென்று மொய்க்கவுமாகவிராநின்ற சிகரங்களையுடைய மலையிடங்கள்தோறுஞ் சஞ்சரித்துக்கொண்டிராநின்ற பலவகையாகிய மிருகக்கூட்டத்தையெல்லாங் கொன்றுபுசித்தான்-எ-று, ௰௨

மாயிருஞாலப்பரப்பின்மன்னுமுடலனைத்தினுக்குமயானமென்னக்
காயுமிரும்பசியுதரக்கனற்குழியை நிறைந்தூர்த்துக்கழிக்குநாளில்
தூயவொருமுனிபுதல்வன்புதுவதுவைபுரிந்தளிநற்கோதையோடுந்
தீயதிறல்வாளரக்கன்வரவறியா னவ்வனத்திற்சென்றான்மன்னோ

இ-பு மிகுந்தபெருமையையுடைய இவ்வுலகத்தின் அகன்ற இடமெங்கும் பொருந்தியசரீரங்களுக்கெல்லாஞ் சுடுகாடென்று சொல்லும்படி சுடுகின்ற மிகுந்தபசியுள்ளவயிறாகிய தீக்குழியைமாமிசங்களால் நிறைத்துக் காலங்கழிக்குநாளில் பரிசுத்தமுள்ள ஒருரிஷிகுமாரன் நவமாக விவாகஞ் செய்துகொண்ட இளமைப்பருவமுடைய தன்மனைவியுடன் கொடியவலியுள்ள கொலைத்தொழிலைசெய்யும் அந்தராட்சதன்வருவதையறியாமல் அந்தக்காட்டிற்போனான்-எ-று மன்-ஓ-இவ்விரண்டுமசை. ௰௩

வந்தவனைக்கண்டரக்கனவாளெயிறும் பிலவாயும்வயங்கக்காந்
தந்தியுறுபசிதணிக்கவந்தானென் றுணனிதோறுமுவகைபொங்கக்
கொந்தலமலர்ச்சிறுகுயிலனைமுனிவனகாளைதனைக்கருதிவேட்டு
முந்துசினம்புலிசேதாவிளங்கன்றைக் கவர்ந்ததெனமுனிந்துபற்று

இ-பு வந்தஅந்தரிஷிபுத்திரனைக்கண்டு ராட்சதனானவன வாளபோன்ற கோரப்பல்லும்பிலத்துவாரம்போன்ற வாயும்பிரகாசிக்கும்படி நகைத்து அப்போது தனவயிற்றில் மிகுந்திருக்கின்ற பசியைத்தணிக்க வந்தானென்று நினைக்குந்தோறும சந்தோஷம் தனக்குள்ளேபொங்க உதிரத்தைக் குடிக்கவிரும்பி முன்னதாக உண்டாகின்ற கோபத்தையுடைய புலியானது ஒருபசுவி னிளங்கன்றைப் பிடித்துக்கொண்டது போலக

கொத்தாகியபூமாலையணிந்த சிறுகுடுமியையுடையவேதமுணர்ந்த அந்த
ரிஷிபுத்திரனைக்கோபங்கொண்டுபிடித்து-எ-று ௰௪

கொலைபுரிவானுறுகாலையதுகண்டுவெருவிமலர்க்கொம்பரன்னாள்
நிலைதளர்ந்துகைநெரித்துநெடுங்கண்ணீர்முலைமுன்றினிறைப்பச்சோர்ந்து
தொலைவில்புகழ்ப்பரிதிகுலத்தோர்வேந்தேமதயந்திதோயுஞ்செம்பொன்
மலைபொருவுமணிமார்பா வென்றேத்தி யினைந்தினையமாற்றஞ்சொன்னாள்

இ-பு கொலைசெய்யத்தொடங்கும்போது அதைக்கண்டு ரிஷிபுத்திரனுடையமனைவியாகியபூங்கொம்பையொத்த அழகுள்ளவள்பயந்து நிலைதளர்ந்துகைகளைநெரித்துக்கொண்டு நெடியகண்ணீரானது முலையினிடத்தைநிறைக்கும்படியாகச்சேர்ந்துபழமையாகிய சூரியகுலமன்னவனே மதயந்தி அணையும்பொன்மலையையொத்தஅழகியமார்பனேஎன்றுதுதிசெய்துமெலிந்து இந்தவசனங்களைச்சொன்னாள்—எ-று. ௰௫

வல்வினையாலிவ்வுருவம்வாய்ந்தனைநீநிருதர்குலவழியானல்லை
கொல்வதுனக்கடாதுபிறருயிர்க்குதவிபுரிவதுங்கள்கொள்கையாமால்
வெல்கதிர்வேற்படைவேந்தேயிவனிறக்கில் யானுமுயிர்விடுவேனென்னு
மல்குவிழிப்புனல்பாயத் தொழுதிரந்தோருயிர்ப்பலிநீ வழங்கென்றாள்

இ-பு யாவராலும்விலக்கக்கூடாதவலியையுடையவினையினால் இந்த உருவம்பெற்றனை நீராட்சதகுலச்சந்ததியிற் பிறந்தவனல்லை ஆதலால்கொல்வதுனக்குத்தகுதியல்ல பிறருயிருக்குஉதவிசெய்தல்உங்கள் குணமாம் பகைவரைவெல்லுகின்றவொளிதங்கியவேலாயுதமேந்தும்அரசனே இவனிறந்தால்நானுமுயிர்விட்டுவிடுவேனென்றுநிறைந்தகண்ணீர் பாயும்படித்தொழுதிரந்துஒப்பற்றதாகிய உயிர்ப்பிச்சைநீதாவென்றாள்-எ-று. ௰௬

மனமருகுற்றிவ்வாறுகவன்றுரைக்கு முனைநிருதன் மனக்கொள்ளானுப்
புனைமலர்த்தார்வேதியனையுயிர்செகுத்துத்தசைசுவைத்துப்புண்ணீர் மாந்
திக், கனைநிணங்கண்மூளைகுடர்மென்றருந்தியென்பனைக்கூங் கழித்துவா
யால்,இனவனையான்முன்னுமிழ்ந்தானென்செய்வாளுமிழ்ந்தவெவ்வமெய்தி
தனுக்கொண்டாள்.

இ-பு மனமருக்கங்கொண்டிருப்படியாகவருந்திச் சொல்லுகின்றவார்த்தையை அந்தராட்சதன்மனதிலேற்றுக்கொள்ளாதவனாய்ப்பூமாலையணிந்திருக்கும்ரிஷிபுத்திரனுடைய உயிரைக்கொன்றுமாமிசத்தையுண்டு உதிரத்தைக்குடித்துக் கொழுத்திருக்கும்நிணங்களையும்மூளைகளையுங் குடல்க

ளையுமென்றுதின்றுஎளும்புகளையெல்லாங்கழித்துவாயினல்ரிஷிபுத்திரன் மனைவியெதிரில்துப்பிவிட்டான் (அதைக்கண்டுஎதிர்செய்யும்வலி தனக்கி ல்லாமையினுல்)என்னசெய்வாள் அவன்துப்பிவிட்டதையெல்லாம் எடுத் துககொண்டாள்—எ-று ௰எ

எழுந்துபடர்கதழெரியினவ்வெலும்பையிட்டிறைஞ்சியின்னசெய்தோன்
செழும்பதியிற்புகுந்துரிமைமதயந்திமுதலாய்தேவிமாரைத் தழும்பொழு
திலாருயிர்மாண்டொழிகவெனக்கொடுஞ்சாபஞ்சாற்றித்தானுங்
கொழுந்தெரியிற்புக்கவிந்தாளாண்டகையுமவ்வனத்திற்குலவுநாளில்

இ-பு சிகைவிட்டெழுந்துசுவாலைவீசுகின்றமிகுந்தகாட்டுத்தீயில்அந் தஎலும்பையெல்லாம்போட்டு அகநினிதேவனைவணங்கி இப்படிக்கொத் த(பாவமானகாரியத்தைச்)செய்தஇந்தப்பாதகனுனவன் (சாபந்தீர்ந்து) வ ளப்பமுள்ளதன்பதியிற்சேர்ந்து தனக்குரியமதயந்திமுதலானதேவிமார்க ளைத்தழுவும்போது பெறுதற்கரியஉயிர்மாண்டுபோகக்கடவனென்றுகொ டியசாபஞ்சொல்லித்தானும்சிகைபடர்கெரிகின்ற அநததீயில்விழுந்திற ந்துபோனுள்அதன்பின்புராட்சதனுகிய அரசன் அந்தவனத்திற்சஞ்சரித்து க்கொண்டிருக்கும்போது-எ-று-பெறுதற்கரியஉயிரென்றது,உயிர்களுக்கு மானிடசரீரம்கிடைத்தலரிதென்பதுகருத்து ௰அ

வேதமுனிசாபந்தீர்ந்தரக்கவுருவகலவிறல்வேந்தன்வேளாங்
காதலுறுமுருவெய்திமுன்புபோலயோத்திநகர் கடிதிலெய்திச்
சீதமதிவாண்முகத்துமதயந்தி கலவிநலத்தேறலுண்பான்
போதகமொன்றதன்பிடியின்சேவகம்புக்கெனக்கோயில் புக்கான்மன்னே

இ-பு வேதமுணர்ந்தவதிஷ்டருடைய சாபநீங்கிராட்சதரூபமாறவே வெற்றியுள்ளராசனுனவன்முன்போலமன்மதனும் ஆசைகொள்ளத்தக்கத ன்பழையவுருவத்தைஅடைந்து விரைவாகஅயோத்திநகரிற்சேர்ந்துகுளிர் ச்சிதங்கியசந்திரனையொத்தஒளிபொருந்தியமுகத்தையுடைய மதயந்தியெ ன்னும்தன்மனைவியிடத்தில் மதுரமுள்ளதேன்போல இனிமையைத்தரு கின்றகலவியின்பம்அநுபவிக்கஒருஆண்யானையானதுகிரீடையை விரும் பித்தன்பெட்டையானைநித்திரை செய்யுமிடத்திற் சென்றதுபோல் தன்ம னையிற்போனுன்-எ-று.மன்-ஓ-அசை. ௰௯

வேறு

கோயில்புக்குநற் குருமணிநெடுமுடிக்குரிசில்
வேயின்மிக்கநல்லுருவமைவெள்வளைத்தோளி

யர்யமைக்கணான் மதயந்தியணிமுலையலாவில்
தோயவுற்றனன்மறுத்தன ளிவையிவைசொன்னாள்

இ-பு தன்மனையிற்சேர்ந்தநல்லநிறமுள்ள ரத்தினங்கள் பதிக்கப்பட்டநெடியமகுடத்தையணிந்திருக்கும் அரசனானவன் பசிய மூங்கிலினழகைப்பார்க்கிலுமிகுந்தநல்லஅழகமைந்த சங்குவளையணிந்த தோளையுடையவளாகிய மையிட்டகண்களையுடைய மதயந்தியின் ஆபரணங்களணிந்ததனத்தை ஆசையுடன் அணையப்போனான் அவள் தடுத்துச்சிலவசனங்களை வகுத்துச்சொன்னாள் உ௰

உற்றவாறொன்றுமுணர்ந்திலைபோலுநீயுயர்கான்
முற்றுநாடிவல்லரக்கனாய் முனிவரன்சேயைப்
பற்றிநுங்கினைக்கண்டவன் பார்ப்பனிசீறிச்
சொற்றவாசகக்கேளென விளைந்தவைசொல்வாள்

இ-பு உனக்குச்சம்பவித்த முறைமையை நீசிறிதும் அறிந்திலையோ (அதுஎன்னவெனில்) நீராட்சதனாய் உயர்ந்த காடுகளெங்கும் ஆகாரத்தை விரும்பித்திரியும்போது அவ்விடத்தில்நேரிட்ட ஒருரிஷிபுத்திரனைப்பற்றிக்கொண்டு கொன்றுதின்றாய் அப்போது அதைக்கண்டு அவன்மனைவியானவள்கோபித்துச்சாபங்கூறியதைக்கேளெனச்சம்பவித்தகாரியங்களைச்சொல்லுகின்றாள்-எ-று. போலுமென்பது-முன்னிலையசை உக

இணையிலாதவென்கொழுநனை யின்னுயிருண்ட
பணைநெடும்புயமன்னவ பதியினிற்புகுந்துன
துணைவிமார்கடந்துணைமுலைச்சுவடுமார்பிறுக
அணையுநாளுயிரிறத்தியென்றழல்புகுந்தவிந்தாள்

இ-பு ஒப்பில்லாதவென்கணவனுடைய இனியஉயிரைநீக்கிய பருத்து நீண்டபுயங்களையுடைய மன்னவனே அயோத்திநகரிற்சேர்ந்து உன்மனைவியருடைய இரண்டுதனங்களின்தழும்புகள்மார்பிலழுந்தும்படி அணையுநாளில்உயிரிறந்துபோகக்கடவையென்றுதீயில்விழுந்திறந்தாள்-எ-று. கொழுநனென்பது-உருபுமயக்கம் உஉ

அன்னகாலெலமையணைவதற் கடாதுனக்கென்றனை
மன்னர்மன்னனும்பசியினால் வருந்தியவொருவன்
பொன்னினங்கலசு தழுதுபெற்றுணப்பொதியிலான்போல்
இன்னலெய்தினக்காமவேள் கணையினாலிடைந்தான்

இ-பு அப்படிக்கொத்தசாபம்நேரிட்டிருக்கிறபடியினாலேஎங்களையணைவதற்குஉனக்குத்தகாதென்றுசொன்னாள் அதைக்கேட்ட மன்னர்மன்னனாகிய(கன்மாடபாதராசனானவன்)பசியினால் வருந்தியஒருவன் பொன்

னாலாகிய நல்லபாத்திரத்தில் அன்னமிடப்பெற்றும் உண்ணுதற்குபோகமான உறுப்புகளில்லாதவனும்போல் மன்மதபாணத்தினால் துன்பமடைந்து இடைந்துமின்றான்-எ-று. உங

பெண்ணலத்தினைப்பெறாதவர் மகவினைப்பெறாதார்
பெண்ணலத்தினைப்பெற்றவ ரேமகப்பெறுவார்
பெண்ணலத்தினன்மகவுபெற் றிருமையும்பெறுவார்
பெண்ணலத்தினுலனதியோர் பெறும்பொருளின்றே

இ-ள் பெண்ணின்பத்தை அனுபவிக்கப்பெறாதவர்கள் புத்திரர்களைப்பெறாதவர்களாவார்கள் பெண்ணின்பத்தை அனுபவிக்கப் பெற்றவர்களே புத்திரர்களைப்பெற்றவர்களாவார்கள் பெண்ணின்பத்தை அனுபவிப்பதினால் புத்திரர்களைப்பெற்று இம்மைப்பயனையும் மறுமைப்பயனையும் அடைவார்கள் பெண்ணின்பத்தினலனதிப் பெறும்பொருள்யாதொன்றுமில்லை-எ-று. ஏ-அசை உச

உந்துநீர்க்கடலுடுத்தபார் முழுவதுமொருங்கே
வந்துதாடொழுமரசியல் வளமெலாம்பெறினும்
இந்திராதியர்பெரும்பதந் திருக்கையெய்திடினு
மைந்தரின்றியேவாழ்வது வாழ்வுமற்றன்றே

இ-ள் அலைவீசுகின்ற நீரையுடையசமுத்திரஞ்சூழ்ந்த பூமியிலுள்ளவல்லாரும் ஒருகூட்டமாகவந்து பாதங்களில் பணியத்தக்க அரசுக்குரியவளங்களெல்லாம் பெற்றிருந்தாலும் (அல்லது தேவேந்திரன்முதலானதேவர்கள் பதங்களிலிருக்கும்பேறுகள்பெற்றாலும்புத்திரரில்லாமல்வாழ்வது வாழ்வதல்ல-எ-று. மற்று-அசைநிலை-அன்று-ஏ-அசை உரு

என்றுபற்பலசிந்தையி லெண்ணிவேலினறவன
குன்றுமாண்புடைத்தரசிய லினியெனாதுங்குறியா
னின்றுமாதவம்புரிவதே கடனெனநினைந்து
சென்றுகானடைந்தருந்தவஞ் செய்தனனிப்பால்

இ-ள் என்றுபலவாகத்தனமனதிலெண்ணிக்கொண்டுவேலாயுதமேந்தும் அரசனானமதுறந்துவிட்டால் இனி அரசியல் குன்றுந் தன்மையையுடையதாகுமேயெனபதையுங்குறியாதவனாய வனத்திற்போயிருந்துகொண்டுபெருமைபொருந்திய தவஞ்செய்வதே நமக்குமுறைமையெனறெண்ணி இல்வாழ்க்கையைத் துறந்துபோய்க்காட்டிற்சேர்ந்து அரியதவத்தைச் செய்தானஇப்பால்நடந்ததென்னவெனில்-எ-று உசா

வேறு

காவலனறனக்குப்பின்னோர் காளமுளையில்லையெனறு
பூவலயத்திலுள்ளோர் புகல்வதும்பொருந்தார்வீறும

யாவையுமுணர்ந்தநீதி வசிஷ்டனுக்கியல்பிறுய்த்து
யாவருந்துயரந்தீர்க்கும் படிநினைந்தினையசெய்தான்

இ-பு நம்முடைய அரசனுக்குப்பின்பு இந்தராச்சியத்தைக் காப்பதற்கு ஒருபுத்திரனுமில்லையேயென்று இவ்வுலகத்திலுள்ளவர்கள் இரக்கமுற்றுச் சொல்லுவதுமபயனைவருடைய வீரப்பாகிய இவைகளையெல்லாம் அப்போது அறிந்தநீதியுள்ளவசிஷ்ட முனிவரானவர் தருமசந்தானமுண்டாக்கலாமென்கிற வாக்கியத்தை ஆராய்ந்துணர்ந்து நேரிட்டிருக்கிறதுயரத்தை நீக்கும்படியெண்ணி யிந்தக்காரியத்தைசசெய்தார்-எ.று, உ௭

அருந்ததியனையகற்பின் மதயந்தியணங்கனுள்பாற்
பொருந்தியின்கலவிதுய்த்தோர் புதல்வனைத்தந்துதீர
இருந்துயருலகந்தீர வியற்றினன் முனிவனின்பாற்
பெருந்தகைதவஞ்செய்வானைப் பேய்மகளொருத்திபற்றி

இ-பு அருந்ததியையொத்த கற்பினையுடையமதயந்தியென்னுந்தெய்வப்பெண்ணை யொத்தவளிடத்திற்சேர்ந்து இனியகலவிசெய்து ஒருபுத்திரன் உற்பத்தியாகும்படிபுரிந்து உலகத்துக்குநேரிட்டிருந்த மிகுந்ததுயரந்தீரும்படி வசிஷ்டர்செய்தார் அங்கப்படியிருக்கக்காட்டில்நடந்தவென்னவெனில் தவஞ்செய்கின்றபெருந்தகையாகிய அரசனை ஒருபேய்மகள்தொடர்ந்து -எ-று. உ௮

☞ அரசனில்லாததேசம் உயிரில்லாதசரீரத்தை யொக்குமாதலால் தருமசந்தானமுண்டாக்குதல் சாஸ்திரவிதியேஇப்படி தருமசந்தானமுண்டாக்குகிற முனிவருக்காவதுஸ்திரீக்காவது தவத்திலும்பதிவிரதாதருமத்திலும்பழுதில்லை அவ்வாறுசெய்யஇசைவில்லாவிட்டால்பட்டத்துயானையைக் கண்கட்டிச்செல்லவிட்டு அதனாலெடுத்துக்கொண்டு வரப்பட்டவனுக்குப் பட்டங்கட்டத்தக்கது,

பிறையெயிறிலங்கக்கண்கள் பிறங்கெரிகதுவச்சீறிக்
கறைவிடமுருத்துவல்லே தொடர்கல்போற் றொடரக்கண்டான்
கறைசமழ்த்துரிசிருணுமலகைமா தொருத்திபற்று
முறைமையேதென்னவேத முனிவரோவினாவினானே

இ-பு பிறைபோல்வளைவாகியதந்தங்கள் பிரகாசிக்கவும்கண்களிலிருந்து மிகுந்ததீப்பொறியானது சிந்தும்படி சீறிக்கரியவிடமானதுங்கோபித்துவிரைவாகத் தொடர்தல்போலத்தன்னைத் தொடரக்கண்டு ஒலிக்கின்றவீரகண்டையணியும் அந்தமன்னவன் ஒருபேய்மகளானவள் என்னைபற்றுதற்குக் காரணமென்னவென்று அங்கிருக்கும் வேதமுணர்ந்தமுனிவர்களை வினவினன்-எ-று, ஏ- அசை. உ௯

கேட்டலுமுனிவரெல்லாங் கிளியெனமிழற்றுமாதர்
மோட்டிளமுலைகளபாயாசது முருகுகொப்பளிக்குந்தாரோய்
காட்டினிலரக்கனாய்முன் காளைவேதியனைக்கொன்
றீட்டியபாவங்கண்டா யலகையாயெய்திற்றென்றார்

இ-பு அவன்சொன்னவார்த்தையைக்கேட்டமாத்திரத்தில் அந்தமுனிவர்களெல்லாரும் அவனைப்பார்த்துக்கிளியைப்போல வசனிக்கின்றமாதர்களுடைய உயர்வாகிச்சாயாததனங்கள்பட்டுத் தேனைக்கொப்பளிக்கும்படியான பக்குவமுள்ள அரும்புகளால்தொடுக்கப்பட்ட பூமாலையணிந்தமன்னவனே, நீமுன்னேராட்சதனாய்க் காட்டில்சஞ்சரிக்கும்போது அங்குநேரிட்டவால்பனாகிய ஒருரிஷிபுத்திரனைக்கொன்று சம்பாதித்துக்கொண்ட பாவங்கண்டாயிப்போதுபேயாகவந்து உன்னைப்பற்றிக்கொண்டதென்றார்கள்-எ-று, ௩௰

மாதவரிசைப்பக்கேட்டே மன்னனுமிதனைநீக்கச்
சேதுவேமுதலாயுள்ள புனிதமாந்தீர்த்தம்யாவுங்
காதலான்மூழ்கிமூழ்கிக் கடவுளாலயங்களேந்திப்
பாதகவினைகடீர்க்கும் பதிபலவணக்கஞ்செய்தான்

இ-பு முனிவர்சொல்லக்கேட்டமன்னவனும் இந்தப்பாவத்தைநீக்கச்சேதுமுதலாயுள்ள புனிதமாகியதீர்த்தங்களிலெல்லாம் ஆசையுடன் தனித்தனியே மூழ்கியும் சிவாலயங்களிற்போய்ப் பரமசிவனைத்துதிசெய்தும் இப்படியாகப் பாவவினைகளைத்தீர்க்கத்தக்க அனேகஸ்தலங்களிற்போய்வணங்கினான்-எ-று. ௩௧

ஆங்கண்மாஞாலவட்டத் தாலயந்தலந்தீர்த்தம்
எங்கணுமுழன்றும்பாவந் தீர்கலாதிருத்தலாலே
வெங்கதிர்ப்புரவிமான்றேர் விலங்கெயின்மிதிலைஞாங்கர்
மங்குறோய்பொழிலின்மேவி வருத்தமுற்றிருந்தான்மன்னோ

இ-பு அழகியஇடத்தையுடையபெரியபூமியினிடத்திலுள்ள ஆலயங்கள்ஸ்தலங்கள்தீர்த்தம்எங்குமுழன்றுதிரிந்தும்தனக்குநேரிட்ட பாவந்தீராமலிருப்பதினாலேவெப்பம்பொருந்தியசூரியனுடைய குதிரைகட்டியதேரானது ஒதுங்கிப்போகத்தக்கஉயர்வையுடைய மதில்சூழ்ந்தமிதிலைநகரத்துக்குச் சமீபத்திலிருக்கும்மேகமண்டலத்தையளாவியஒருசோலையிற்சேர்ந்து வருத்தங்கொண்டிருந்தான்-எ-று.

மன்-ஓ-அசை-பாடல்களினிறுதியில்வரும்- மாது-மன்-ஆல்-அரோ-ஓ-அன்று-எ-இவைகள்- அசைகளெனக்கொள்க இவைகளிற் சிலபாடலின் மத்தியில்ஏகதேசமாக வருவதுமுண்டு, ௩௨

ஆண்டகையிருந்தகாலை யருந்தவமுனிவர்சூழ
ஈண்டுசெங்கதிரோன்றோன்றி வருவதேயெய்ப்பவொல்லை
காண்டகுவியப்பினோடு கவுதமன்வந்துதோன்றப்
பூண்டபேருவகைபொங்கப் புரவலன்வணங்கிநின்றான்

இ-பு அரசனப்படியிருந்தபோது அரியதவத்தையுடைய முனிவர்கள் அருகிற்சூழ்ந்துவரச்சூரியன்உதயமாயில்வுலகத்தில்வருவதையொப்பாக யாவருந்தரிசிக்கத்தக்கவியப்புள்ள தவவேடத்துடன் கவுதமரிஷியானவாக வந்துதோன்றக்கண்டுஉண்டாகிய பெரியசந்தோஷம்அதிகரிக்கஅம்மன்னவன் வணங்கிநின்றான்-எ-று ௩௩

நின்றமன்னவனைநோக்கி நீபெருவளங்கண்மேவி
நன்றிருந்தனையோவென்று முனிவரனவிலவன்றேன்
என்றுநின்னருளைச்சேர்ந்தோர்க் கெய்திடாதீமையேனும்
ஒன்றுளதுரைக்கக்கேட்டி யுத்தமவென்றுசொன்னான்

இ-பு வணங்கிநின்றவேந்தனைக்கவுதமரிஷியானவர் பார்த்துராசனே மிகுந்த செல்வத்தைப்பொருந்திச்சுகமாக இருக்கின்றனையோவென்று வினவ அவ்வரசனானவன்சுவாமி உம்முடையகிருபையைப் பெற்றவர்களுக்கு ஒருகாலத்துந்துன்பங்கள்நேரிடா ஆகிலும்ஒன்றுண்டுஅதனைச்சொல்லுகிறேன்உத்தமரே கேளுமென்றுசொன்னான் -எ-று, ௩௪

எங்குலக்குரவன்முன்னா ளியம்பியசாபந்தன்னால்
வெங்கொலையரக்கனாகி வேதியற்கொன்றபாவந்
தங்கியோரலகையாகித் தமியனைத்தொடர்தலாலே
அங்கதுதணிப்பானெண்ணி யளவிலாவேள்விசெய்தேன்

இ-பு எங்கள்குலகுருவாகியவசிஷ்டர் முன்னாள்கூறியசாபத்தினால் வன்கொடிய கொலைத்தொழில்செய்யும் ராட்சதனாகி ஒருபிராமணனைக்கொன்ற பாவமானதுஒருபேயாகி ஆதரவில்லாதஎளியேனைப் பற்றித்தொடர்தலினாலே அந்தப்பாவத்தைத் தீர்க்க எண்ணி அளவில்லாத யாகஞ்செய்தேன்-எ-று. ௩௫

எண்ணிலறங்கள்செய்தே னெண்ணின்மந்திரஞ்செபித்தே
புண்ணியதலங்கடோறுந் தாலயம்பலவும்போனே
னுண்ணியசாகமூல பலங்களைநுகர்ந்திபான்முன்
பண்ணினேன்விரதக்கோடி பாவகமனந்தஞ்செய்தேன்

இ-பு அளவில்லாதநல்லதருமங்கள்செய்தேன் அளவில்லாதமந்திரங்கள் சபித்தேன்அனேகமாகிய ஸ்தலயாத்திரைசெய்தேன் தீர்த்தயாத்திரை செய்தேன் சிவாலயங்களுக்கும்போனேன் அவைகளுமல்லாமல்நுட்பமா

கிய இலிங்கங்களும் பிழைக்குகைகளும் உண்டு நான் முன்னே அநந்தவிரதங்களும் அனுஷ்டித்தேன் அனந்தந்தியானமுஞ் செய்தேன்-எ-று, ௩௬

இவ்வணைமலைப்பிற்காலந் திரிந்துடலிளைத்தேனன்றி
வல்லிய பாவநீங்கப்பெற்றிலேன் மறைக்குமெட்டாத்
திவ்வியமுணர்கோயின்று திருமுகக்கருணைபெற்றேன்
அவ்வியமகன்றேனுய்யா வருளெனவடியில்வீழ்ந்தான்

இ-பு இவ்வாறு அநந்தங்காலந்திரிந்து உடலிளைத்தேனல்லது என்னைப் பற்றிய பாவந்தொலையப்பெற்றிலேன் வேதத்துக்கு மெட்டாத மெய்ஞ்ஞானப் பொருளையுணர்ந்தவரே இன்று தேவரீருடைய திருமுகக்கிருபையைப் பெற்றேன் அதனால்பாவத்தை நீங்கினவனானேன் இனி நான் கடைத்தேறும்படி கிருபைசெய்யுமென்று அவர்பாதத்தில்வணங்கினன்-எ-று. ௩௭

முனிவனுமிரங்கியஞ்சேன் மொய்ம்மலர்த்தாரோய்முக்கட்
டனிமுதலொருவனுண்டத் தகவினோனருளால்யார்க்கு
நனியிருவினைகடீர்ப்பா னயந்தகோகன்னமுண்டென்
றினிதுணர்ந்திலைபோலு மத்தலத்தியல்புகேண்மோ

இ-பு கவுதமருமனமிரங்கி நெருங்கியபூமாலைபணியுமன்னவனே நீ பயப்படாதே திரிநேத்திரங்களுடைய ஒப்பற்றமுதலாகிய பரமசிவனொருவனுண்டு கிருபையுள்ள அந்தக்கடவுளின் அருளால்மிகுந்த இருவினைகளைத் தீர்ப்பதற்குயாவரும்விரும்புகின்றகோகன்னமென்னுமொருதலமுண்டென்று இனிதாகநீயறிந்ததில்லையோ அந்தத்தலத்தின்மகிமையைக்கேள்-எ-று போலும்-மோ-அசைச்சொல். ௩௮

மந்தரகிரியும்வெள்ளி மால்வரையிடமும்போல
எந்தைவாழிடமுமஃதே யிந்திரனயன்மால்விண்ணோர்
சந்திராதித்தர்வேண்டுந் தவம்புரியிடனுமதா
லையந்துபாதகத்தோரானு மடையின்வீடளிக்குமந்தே

இ-பு அரசனே மந்தரகிரியில்வீற்றிருப்பதுபோலவும் பெரியவெள்ளிமலையாகிய கயிலாசகிரியினிடத்தில் வீற்றிருப்பதுபோலவும் நம்மையாளுகிய பரமசிவன்வீற்றிருக்குந்தானமும் அந்தகோகன்னமாம் அந்தத்தலமானது தேவேந்திரன்பிரமன்திருமால்தேவர்கள் சந்திரன்சூரியன்என்னும் இவர்கள்வேண்டுந்தவஞ்செய்யுமிடமுமதாகும் பஞ்சமாபாதகரேயானாலும் தன்னிடத்தில்வந்து சேர்வார்களானால் அவர்களுக்கும் மோட்சத்தைக்கொடுக்கும்-எ-று. ௩௯

எந்தலஞ்சென்றுந்திரா விடும்பைநோய்வினைகளெல்லாம்
அத்தலத்தினைக்குமுன்ன ரகன்றிடுமுடுக்கோனாலுஞ்
சித்திரபானுவாலு மகன்றிடாத் திமிரவீட்டந்
தத்துவாமபுரவிமான்றேர்த் தபனனுலகலுமாபோல்

இ-ள் சந்திரனாலும் அக்கினிதேவனாலும் நீங்காத இருட்கூட்டமானது தாவிச்செல்லுகின்ற பச்சைக்குதிரைகள் கட்டியதேரையுடையசூரியனால் நீங்குமாறுபோல எந்தத்தலத்திற்சென்றாற் றீராததுன்பமுள்ளபிறவிநோயைத்தருகின்ற வினைகளெல்லாம் அந்தத்தலத்தைநினைக்குமுன்னமே நீங்கிவிடும்—எ-று ௪௰

ஒன்றுமுற்றுணராரேனு மொப்பில்சீர்க்கோகன்னத்திற்
சென்றொருநிமிடந்தங்கிற் சிறந்தவேறொருதலத்திற்
கன்றுமைம்புலனுமோம்பிக் கற்பகாலஞ்செந்தீயி
னின்றருந்தவங்கள்செய்யு நெடும்பயன்பெறுவர்கண்டாய்

இ-ள் யாதொன்றையுமாராய்ந்தறியுந் தன்மையில்லாதவர்களாயிருந்தாலும் ஒப்பில்லாதபெருமையையுடைய கோகன்னத்திற்சேர்ந்து ஒருநிமிஷப்பொழுது தங்கியிருந்தால் சிறப்புப்பொருந்திய வேறொருதலத்தில் ஐம்புலன்களையும் அடக்கிக்கற்பகாலம் அக்கினிமத்தியிலிருந்து அருமையாகிய தவங்களைச்செய்தலால் வரத்தக்க அழியாதபயனைப்பெறுவார்கள் (௪௧)

வேறு

அப்பதிதன்னி லலங்கிலைவேலோய்
வைப்பெனவாழ்வருண் மாபலலிங்கம்
ஒப்பிலதாகி யுறைந்துவிளங்கு
மெய்ப்படுகாதை விரித்திடின்முன்னாள்

இ-ள் பிரகாசியாநின்ற தகட்டுவடிவுள்ள வேலாயுதமேந்தும் அரசனே அந்தக்கோகன்னத்தில் புதையலிட்டதனம் கண்டெடுத்தவனுக்குவாழ்வைத்தருவதுபோல் தன்னைத்தரிசித்தவர்களுக்குப் பெருவாழ்வை யருளுகின்ற மகாபலலிங்கமானது ஒப்பில்லாததாய்விளங்கிக்கொண்டிருக்கின்றது அதனுடைய உண்மையானசரித்திரத்தை விவரித்துச்சொல்லில் முன்னாளில்—எ-று ௪௨

இலங்கையின்மன்ன னிராவணன்வெள்ளி
விலங்கலின்மாதவ மெய்துதல்கண்டு
கலங்கெழுமாதா யங்கொரு லிங்கம்
வலங்கொளநல்கி மகிழ்ந்துரைசெய்வான்

இ-பு இலங்கைக்குமன்னவனாகிய இராவணன்வெள்ளிமலையாகிய கயிலாசத்திலேதவஞ்செய்துகொண்டிருந்ததை அருள்மிகுந்தபரமசிவன்கண்டு கிருபைகூர்ந்து உறுதிகொள்ளும்படி ஒருலிங்கங்கொடுத்தருளி மகிழ்ச்சியுடன் திருவாய்மலர்ந்தருளினார்—எ-று. ௪௩

மாணவரக்கநின் வாழ்பதிதன்னுள்
யானுதவுஞ்சிவ லிங்கமிருப்பின்
ஈனமுறாதவ் விலங்கையமர்க்காய்
வானவர்மாலயன் வந்தென்மலைந்தென்

இ-பு பெருமையுள்ளஇராவணனே உன்னுடையவாழ்வுள்ள இலங்கைப்பட்டணத்தினிடத்தில் இப்போது நாமருளிச்செய்த இந்தச் சிவலிங்கமிருந்தால் இந்தஇலங்கைப்பட்டணமானது ஒருகாலத்துமழியாது இதுவுமல்லாமல்தேவேந்திரன்முதலாகியதேவர்களும்·விஷ்ணுவும்பிரமனும்போர்செய்யவந்து எவ்விதப்போர்செய்தால் தானென்ன (அந்தப்பட்டணத்துக்கொருகுறைவும் நேரிடாது)—எ - று. ௪௪

ஊர்தியினேற லொழிந்தனையேகிச்
சீர்பெறுமின்பதி சேர்த்துதிமற்றோர்
பார்மிசைவைத்திடல் பார்மிசைவைத்தால்
ஓதருலிங்கமெடுக்கவொண்ணாதால்

இ-பு தேரின்மேலேறிக்கொண்டு போவதைவிட்டு நடந்துபோய்ச்செல்வமிகுந்துள்ள உன்னூரில்இந்தச்சிவலிங்கத்தை ஸ்தாபனஞ்செய் அவ்விடம்விட்டு மற்றொருபூமியினிடத்தில் வைக்கவே வேறொரு பூமியினிடத்தில்வைத்தால் சொல்லுதற்கரியதாகிய மகிமையுள்ள இந்தச்சிவலிங்கம்-மறுபடியெடுக்கவொண்ணாது—எ-று ௪௫

என்னநிகழ்ச்சி யளிக்கவிலிங்கந்
தனதொடரக்கன் வழிக்கொடுசாரப்
பொன்னகர்வானவர் பொள்ளெனமேவி
மன்னினைங்கர வாரணமுன்னர்

இ-பு இவ்வாறு திருவாய்மலர்ந்துகொடுத்தருளிய சிவலிங்கத்தையேந்திக்கொண்டு இராவணன் வழிநடந்தான் அதையறிந்த பொன்னுலகத்திலுள்ளதேவர்கள் ஐந்துகரங்களையுடைய யானைமுகக்கடவுளாகிய விநாயகரிடத்தில் அதிசீக்கிரமாகப்போய்ச்சேர்ந்தார்கள்—எ-று. ௪௬

கைக்களிறேயிது காலமரக்கன்
அக்கணிலங்கையி லிங்கமமர்த்தின்

மூக்கணனு மழிப்பதுமுற்று
திக்கணமேயிடை யூறிழையென்றார்

இ-பு துதிக்கையையுடையயானைமுகவிநாயகமூர்த்தியே -இராவணனு னவனிப்போது பரமசிவன்கொடுத்தருளியசிவலிங்கத்தைக்கொண்டுபோ ய்-அந்தவிசாலமான இடமுள்ள இலங்கைப்பட்டணத்தில்ஸ்தாபிப்பானே யானல் திரிநேத்திரங்களையுடைய அந்தப்பரமசிவனாலும் அழிப்பதுமுடி யாது (ஆகையால்இலங்கைப்பட்டணத்தில் கொண்டுபோகவொட்டாமல் இப்பொழுதே அதற்கு இடையூறுசெய்தருளென்றார்கள் ௬௭

உம்பர்வருந்தி யுரைப்பதுகேளா
நம்பனளித்தகை யாநநாதனே
பம்புபுனற்கிறை வாபடர்செய்வோன்
வெம்புவயிற்றை நிறைக்கெனமேலோன்

இ-பு தேவர்கள்இப்படியாகவருந்தி விருப்பம் பண்ணிக்கொள்ளுங் குறையைப்பரமசிவ னீன்றளிய மூத்தநாயனாராகிய துதிக்கை பொருந்திய யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள் நிறைந்துள்ளநீர்க்கிறைவனாகிய வருணனைப்பார்த்து வருணனே தேவர்களுக்குத்துன்பஞ்செய்யத்தக்கவனாகிய இராவணனுடைய வயிற்றில்நீர்நிறையச்செய்யென்று கட்டளையிட்டருள-அந்தவருணதேவனனவன் — எ-று. ௬௮

ஆமிஃதென்ற வரக்கனகட்டில்
நீர்மிகுவித்தலி னீர்தொடுகிற்பான்
போமவன்முன்ன மெதிர்ந்துபுழைக்கை
மாமுகன்வந்தனன் மாமறையோனாய்

இ-பு அதைக்கேட்ட வருணதேவன் இந்தக்காரியம் அடியேனாலாகுமென்று அந்தஇராவணனுடையவயிற்றில் நீர்அதிகரிக்கும்படி செய்ததினால் நீர்கொட்டுக்கொள்ளுதற்குப் போகாநின்றஇராவணனுக்குமுன்னே துவாரம்பொருந்திய துதிக்கையையுடை யயானைமுக விநாயகரானவர்பெருமை பொருந்திய ஒருபிராமணருபமாகியனௌனதிராகவந்தார் — எ-று. ௬௯

மல்லணிதோளவன் மாமறையோயிவ்
வெல்லையினீரெய்தி யான்வருகாறும்
அல்லமர்கண்டனை யங்கைதரித்தே
நில்லெனவைத்த னெடுந்தகையோனும்

இ-பு பலம்பொருந்திய தோளையுடைய இராவணனானவன் (எதிரிவந்தவனைக்கண்டு) பெருமையுள்ளபிராமணரே நீர்தொட்டுக்கொண்டு இவ்விடத்தில்நான்வருமளவும் கருமைநிறந்தங்கிய கண்டத்தையுடையசிவசொரூபமாகிய சிவலிங்கப்பெருமானை உம்முடைய அழகியகையில்வைத்துக்கொண்டிருமென்றுசொல்லவிருந்தபெருமையுள்ள அந்தப்பிராமணர்சொல்லுகிறார்-எ-று. ௩௰

இச்சிவலிங்க மெடுத்திவணிறபா
னச்சிலைவேலவ நான்வலியில்லேன்
மூச்சொல்விளித்திடு முன்வருகாயேற்
கைச்சிவனைப்புவி காட்டுவனென்றான்

இ-பு- விஷம்போலக்கொடுமையுள்ள தகட்டுவடிவமான வேலேந்தும் இராவணனேநான் இந்தச் சிவலிங்கத்தை யேந்திக்கொண்டிருக்கும்படியான சக்தியில்லாதவன், ஆதலால் மூன்றுசொல் அழைப்பதற்குமுன்நீவராவிட்டால் என்கையிலிருக்குஞ் சிவலிங்கப்பெருமானைப் பூமியில் வைத்துவிடுவேனென்றார்—எ-று. ௩௧

செங்கணரக்க னிசைந்தயல்சென்றான்
வெங்கதவேழ விநாயன்முக்கால்
இங்கணைவாயென வெய்திலனாக
அங்கையிலிங்க மகன்புவிவைத்தான்

இ-பு கோபக்குறிபாகியசெம்மைநிறமுள்ள கண்களையுடைய இராவணன் அதற்குசசம்மதித்து அப்புறம்போனான் வெவ்விய கோபங்கொள்ளும் யானைமுகத்தையுடைய விநாயகமூர்த்தியானவர் இராவணா இங்கேவா இராவணா இங்கேவா இராவணா இங்கேவாவென்றுமூன்றுதரம் அழைத்து அவன்வராமையினாலே தம்முடைய அழகிய கையிலிடத்தில் வைத்துக்கொண்டிருந்தசிவலிங்கத்தை விசாலமாகிய பூமியிலிடத்தில்வைத்துவிட்டார் எ-று. ௩௨

அவ்வழியோடி யடைந்தவரக்கன்
றெவ்வியமண்மிசை சேர்ந்ததுகாணு
வெவ்வமிலாத விலிங்கமெடுத்தான்
வல்லனுறாமையின் மாபலமென்றான்

இ-பு அந்தவிடத்தில் ஆசிக விரைவாகவோடி நீர்தொட்டுக்கொண்டுவந்த இராவணன் சிவலிங்கம்பூமியிலிடத்தில் இருப்பதைக்கண்டு குற்றமில்லாத அந்தச்சிவலிங்கத்தை யெடுத்தான் அதுதன்னுடைய வல்லமைக்குக் கூடாததாயிருந்ததினாலே இதுமகாபலலிங்கமென்றான்—எ-று. ௩௩

காசிலரக்கனுரைத்தது கண்டே
பேசினர்மாபல விசனெனும்பேர்
வீசியவாசைகொடுமீட்டு மெடுத்தா
னேசவிலிங்க நிமிர்ந்ததுளைந்தே

இ-பு சிவநேசத்தில்பற்றில்லாத இராவணனானவன் சொன்னதையறிந்து அந்தச்சிவலிங்கத்துக்குமாபல மென்னும் பெயரிட்டார்கள் இராவணனானவன் மறுபடியும்மீண்டவாசையினால் தன்பலங்கொண்டமட்டுமெடுத்தான் அப்படியெடுத்தபோது அன்பைத்தருகின்ற அந்தச்சிவலிங்கமானது குழைந்து நீண்டது-எ-று. ௫௪

வேறு

ஆவினதுசெவிபோல வவ்விலிங்கநிமிர்வுறலான
மேவினதுகோகர்ண மெனும்பெயரவ்விப்பதிக்குக்
காவனையகைத்திரளாற் கனன்றரக்கன்மனமத்திலேத்
தேவனதுகுடுமிமுடிப் புடைத்தவன்றனசிரமிகவால்

இ-பு அந்தச்சிவலிங்கமானது பசுவின்காதுபோல நீண்டபடியினாலே பெருமையுள்ள அந்தத்தலத்துக்குக் கோகர்ணமென்னும் பெயர்பொருந்தியது இராவணனானவன் மனங்கொதித்துச்சோலையையொத்த இருபதுகைகளாலும் பிராமணப்பிள்ளை வடிவங்கொண்டிருக்கும் விநாயகமூர்த்தியின் சிகையுள்ளசிரசின் தன்கோபமிகுதியினால் குட்டினான்-எ-று. ௫௫

புடைத்தவுடனுருத்தெழுந்து பொழிமதவாரணமுகத்தோன்
அடித்தலமுமணிமுடியு மகலிடமும்விசும்புமுறப்
படைத்தவுருவெனநிமிர்ந்து பனைக்கரத்தாலிராவணனைப்
பிடித்துமணிக்கழங்கென்ன வெற்றெறிந்துபிடித்திடலும்

இ-பு குட்டினவுடன்மதநீரைப் பொழிகின்றயானைமுகத்தையுடையவிநாயகமூர்த்தியானவர்கோபித்தெழுந்து திருவடியும் அழகியதிருமுடியும்விசாலமுள்ள பூமியிடத்தும் ஆகாசத்தினிடத்துமாகப் பொருந்தப்படைத்த சொரூபம்போல ஓங்கிப்பனைபோன்ற துதிக்கையினால் இராவணனைப்பிடித்து அழகியகழற்சிக்காய்போல் பூமியில்விழவொட்டாமல் பலதரமேலெறிந்து பிடித்திடவும்-எ-று- ௫௬

மறையோனென்றுறநினைந்து மடமையினுலிதினமுத்தேன்
இறையோர்க்குமணிமகுடம்பருக்களிதே பிழைசெய்தேன்
இறையோனைபொறுப்பதெனக் கியல்பெனவென்றிரந்தேத்தப்
பொறையோடுமுலமபுதல்வன் புவியிலரக்கனைவிடுத்தான்

இ-பு என்னுடையபேதைமையினாலே பிராமணப்பிள்ளையென்கிறெண்ணி இந்தக்காரியத்தைச்செய்தேன் பிறையணிந்தோங்கியமணிமகுடத்தையுடைய பெரியயானைமுகவிநாயகமூர்த்தியே, அடியேன்பிழை செய்தேன் இறைவனே,பொறுத்துக்கொள்வதுதேவரீர்க்குத் தகுதியென்று பலதரஞ் சொல்லி யிரந்துதுதிசெய்யப்பார்வதிபுத்திரராகிய விநாயகமூர்த்தியானவர் பெருமையுடையவராய் இராவணனைப்பூமியில்விட்டார். எ-று இள

நிருதர்குலத்திகல்வேந்தே நினதுபிழைமுழுதும்பொறுத்தற்
கிருபதுசெங்கரத்தாலு மெழின்மலரோனுனக்களித்த
ஒருபதுமாமுடித்தலையு முறப்புடைத்தியெனவோடுங்
குருதிநிறக்கௌபுடைத்துக் குனித்தாடி யுவப்பித்தான்

இ-பு பலமுள்ளராக்ஷதகுலத்தரசனாகிய இராவணனே, நிசெய்தகுற்றத்தை நாம்பொறுத்துக்கொள்வதற்கு அழகியசெந்தாமரை மலரிலிருக்கும் பிரமன் உனக்குக்கொடுத்தஇருபதுசிவந்த கைகளாலும்பெருமையுள்ளமகுடமணிந்திருக்கும் பத்துகதலைகளிலும் பொருந்தக்குட்டிக்கொள்ளென்று சொன்னவுடன்சிவப்புநிறங் கொள்ளும்படிகுட்டிக்கொண்டு குதித்துக் குதித்துக்கூத்தாடிவிநாயகமூர்த்திக்குச்சந்தோஷம்வரச்செய்தான்- எ-று()

அன்னதுகண்டுவந்தருளி யைங்கரத்தோனின்றுமுதல்
என்னதருணவம்வேண்டி னினைப்போலவிருகரத்தாற்
சென்னியுறப்புடைத்தவர்பாற் சிந்தைமகிழ்ருவனென்று
மின்னின்மறைந்தனனிருதன் வேலையிலங்கையிற்புக்கான்

இ-பு அவன்குட்டிக்கொண்டு கூத்தாடுவதைக்கண்ட ஐந்துகரங்களையுடைய விநாயகமூர்த்தியானவர்சந்தோஷங்கொண்டருளி இன்றுமுதல் எம்முடைய திருவடிபலத்தை விரும்பினால்உன்னைப்போலத்தங்களிரண்டுகைகளாலும் சிரத்திற்பொருந்தக்குட்டிக்கொள்ளுகிறவர்களிடத்தில் நாம்மனமகிழ்ச்சி யடைவோமென்றுசொல்லி மின்னல்மறைவதுபோலமறைத்துவிட்டார் அதன்பின்புராட்சதனாகிய இராவணன்சமுத்திரத்தின்மத்தியிலிருக்கும்இலங்கையிற்போய்ச்சேர்ந்தான்-எ-று. இக

தென்னிலங்கையிராவணன் பாத்திவனுநவத்திறலரக்கன்
பின்னிலங்குமொருமருப்புப பெருந்தகைதன்கைக்கொடுப்பப்
பொன்னிலக்குமுடியோயப் புகாவேழம்புனலாடை
மின்னிலங்கவவ்விலிங்கம் விருப்பத்தாலமைத்ததல்

இ-பு பொன்னாஞ்செய்யப்பட்டுப் பிரகாசிக்குங்கிரீடமணிந்த அரசனே தெற்கிலுள்ள இலங்கைக்கரசனாகிய இராவணனிடத்தில் பரமசிவன்கொடுக்க வெற்றியுள்ள அந்தராட்சதன்பின்பு ஒளிவிளங்காநின்றவொற்றைக்கொம்பையுடைய விநாயகக்கடவுளிடத்திற்கொடுக்கப் பின்புபுகர்நிறந்தங்கிய யானைமுகத்தையுடைய அந்தவிநாயகரானவர் சமுத்திரமாகியவஸ்திரமணிந்த பூமிதேவி விளங்கும்படி அந்தச்சிவலிங்கத்தை விருப்பத்துடன் ஸ்தாபித்தார்-எ-று. ௬௰

கோகன்னவாலயத்திற் குலவுதிசையிருநான்கு
நாகவணைதுயினெடுமா னான்முகனிந்திரன்முதலா
மாகமுறுமமரர்குழா மருத்துவர்விஞ்சையர்முனிவர்
நாகருலகத்தவரெந்நாளுநிறைந் தடிதொழுவார்

இ-பு பிரகாசியாநின்ற அஷ்டதிசையிலுள்ள திக்குப்பாலகர்களும் சர்ப்பசயனத்திற்பள்ளிகொண்டிருக்கும் மகாவிஷ்ணுவும் நான்கு முகங்களையுடைய பிரமதேவனும் தேவேந்திரன்முதலாகிய சுவர்க்கலோகத்தில்வாசஞ்செய்கிற தேவகூட்டமும் மருத்துவர்களும் விஞ்சையர்களும் முனிவர்களும் நாகலோகத்தாரும் எந்நாளும் ஆலயத்தில் நிறைந்து கோகன்னநாதனுடைய திருவடிகளைத்தொழுவார்கள்-எ-று. ௬௧

வேறு.

தும்புருநாரதர்மகதிவிபஞ்சிநரம் புளரவழிசுருதிக்கேறல்
பம்புமொருபால்வீணைத் தந்திரியுமிடறுமொன்றாய்ப்பயின்றகான
நம்புசதிமுறைநிறுக்குங்கின்னரர்தம் பாடலெனநறவாரிதீந்தேன்
கும்பமுலையரம்பையர்நடநவிலு மெய்யிலொன்றிக்குழையுமோர்பால

இ-பு தும்புருநாரதரென்னுமுனிவர்கள் மகதிவிபஞ்சியென்னும் வீணையினரம்பைத் தெறித்துவாசிப் பிற்பொருந்தாநின்ற இசைக்கேற்றநாதமொருபுறத்தில் நிறைந்திருக்கும் ஒருபுறத்தில் வீணைத்தந்திரியினாதமும் கண்டத்தினாதமும் ஒன்றுபடக்கின்னரர்கள்பாடுகின்ற மாறுபடாததாளப்பிரமாணத்தை வகுத்துக்காட்டும் குறைவில்லாதமதுரமுள்ளதேன்போலச் சுவையுள்ள இசைப்பாடலானது பொற்குடம்போன்றதனங்களையுடைய அரம்பைமாதர்களாடுகின்ற கூத்தின்விகற்பத்தைக்காட்டும் அங்கங்களுக்கொத்துப் பேதமில்லாமலிருக்கும்-எ-று. ௬௨

ஆடுமுனிக்கணமொருபாலரன்புகழைக் கானத்திலமையவோதிப்
பாடுமருந்தவரொருபாற்பரமானுபூதியினிற் பழுத்துநெஞ்சங்
கூடுசமாதியரொருபாற்கோகன்னநாயகனைக் கும்பிட்டேத்தி மோ
வீடுபெறுவாரொருபால் வினையொழிப்பாக் கத்தலம்போல் வேறுண்டா

இ-பு ஆனந்தத்தினால்கூத்தாடிமுனிக்கூட்டங்களொருபுறத்திலிருப்பார்கள் பரமசிவன்புகழையிசையிற்பொருந்தும்படி சொல்லிப்பாடும் அரிய முனிவரொருபுறத்திலிருப்பார்கள் சிவசிலையில்மனக்கனிந்து நிஷ்டை கூடியிருப்பவர்கள் ஒருபுறத்திலிருப்பார்கள் கோகன்னக்கடவுளாகியபரமசிவனைக் கும்பிட்டுத்துதிசெய்துமோட்சமடையத்தக்கவர்கள் ஒருபுறத்தி லிருப்பார்கள் ஆகலால்வினைகளையொழிப்பவர்களுக்கு அந்தத்தலத்தைப்போல வேறொருதலமுண்டாமோ இல்லை-எ-று. ௧௩

ஆயிடையிற்சிலையனைத்துஞ் சிவலிங்கம்புனல்யாவுமரியதீர்த்தம்
மேயபலர்யாவோருமபுத்தேளிர் மகளிரெல்லாம்விண்ணின்மாதர்
தூயபசுவினையெல்லாமவான்சுரபி பொழிலெல்லாஞ்சுரர்பூந்தாரு
மாயிருஞாலப்பரப்பிற்கோகன்னஞ் சிவலோகமன்னரோறே

இ-பு பகைகொண்டமன்னவர்களாகிய யானைகளுக்குச்சிங்கம்போ லிருக்கும் வேந்தனே அந்தத்தலத்திலிருக்கும் கற்களெல்லாம்சிவலிங்கம் நீரெல்லாம சிவதீர்த்தம் அவ்விடத்தில்வாசஞ்செய்கின்றமனிதர்களெல்லாரும் தேவர்கள், மாதர்களெல்லாரும் தேவமாதர்கள், பரிசுத்தமுள்ளபசுக்களெல்லாம்காமதேனு, சோலையெல்லாம்கற்பகச்சோலை இத்தகுதியால்பெருமை பொருந்திய பெரியஇவ்வுலகத்தினிடத்தில் கோகன்னமானது சிவலோகமாம்-எ-று. ௧௪

கூறுபலபெருந்தீர்த்தம்யாவுக்குமேலாகுங் கோடிதீர்த்தம்
பேறுதருமிலிங்கங்களனைத்தினுக்கு மதிகமாம்பலலிங்கம்
வீறுதலமனைத்தினுக்குமேலாகுங் கோகன்னமவேந்தர்வேந்தே
தேறுவரோ வேறுமொன்றைவிளக்கிருக்கத் தீத்தேடுந்தெருளிலார்போல்

இ-பு அரசர்க்கரசனாகிய மித்திரசகராசனே, அந்தத்தலத்தி லிருக்குங் கோடிதீர்த்தமானது பலவாகச்சொல்லுகின்ற பெரியஎல்லாத் தீர்த்தங்களுக்கு மேலானதாகும், மாபலலிங்கமானது மோட்சந்தரத்தக்கஎல்லாலிங்கங்களுக்குமேலானதாகும், கோகன்னமானது விளங்குகின்றஎல்லாத்தலங்களுக்கு மேலானதாகும் ஆகையால்விளக்கிருக்க நெருப்புத்தேடும் அறிவில்லாதவர்கள்போல விவேகமுள்ளவர்கள்வேறொருதலத்தைத் தேடுவார்களோ தேடார்கள்-எ-று. ௧௫

இத்தகையநகர்மேவிரகசதூர்த்தசிகார னிரவின்கணைவெ
யத்தமாபலலிங்கநாயகனைவிதிமுறையா மருச்சித்திந்நாள்
வித்தகனுஞ்சனகன்முயல்வேலனிக்கு பிதிபோகமீனுக்காலே
சித்தமுறுமிரும்பூதுகண்டனமித் திரசகனேசெப்பக்கேண்மோ

(இ-ள்.) இப்படிக்கொத்த மகத்துவமுள்ள கோகன்னத் திற்போய் மாசிமாச சதுர்த்தசியாகிய சிவராத்திரியிலிருந்து நம்முடைய அத்தனாகிய மாபலிங்கநாயகனை வேதமுறைப்படி யாம் அருச்சனைசெய்து இன்றையதினம் ஞானவானாகிய சனகராசன்செய்கின்ற யாகத்தைக் குறித்து மிதிலைநகர்க்குவரும்போது ஞாபகத்தில்வைக்கத்தக்க ஒரு அதிசயங்கண்டோம்மித்திரசகனே? அதனைச்சொல்லக்கேட்பாயாக-எ-று மோ-முன்னிலையசை. (௬௬)

இரண்டாவது சிவதானமகிமையுரைத்த

அத்தியாய முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௨௨.



௨

சிவமயம்.

மூன்றாவது.

## சிவராத்திரியில் கன்மாடபாதராசன்

முத்திபெற்ற அத்தியாயம்,

என்றுமுனிகூறிடலு மிகல்வேந்தனகமகிழ்வோ டிறைஞ்சியேத்த
நன்றுபுதிதப்புதுமை யுரைத்தியெனவுரைத்திடலு நவைதீர்வேதத்
தோன்றியநாவினனாய் பெருந்தவனுங்கண்டபரி சுரைப்பேனென்னத்
துன்றுநறுந்தொடைப்புயத்துமன்னவனைமுகநோக்கிச்சொல்லினனே.

(இ-ள்.) கவுதமரிஷியானவர் இப்படியாகச்சொல்லவே வலியுள்ள அரசனானவன் மகிழ்ச்சியுடன்பணிந்து துதிசெய்து மிகவும்புதியதாகிய அவ்வாச்சரியத்தைச் சொல்லுமென்றுசொல்லவும் குற்றமில்லாதவேதங்களிற்பழகிய நாவினையுடையவராகிய மேன்மைபொருந்தியந்த அந்தமுனிவர் தாங்கண்டமுறைமையைச சொல்லுகிறேனென்று நல்ல மணந்தங்கிய பூமாலையணிந்தபுசங்களையுடையஅந்தவேந்தன்முகத்தை நோக்கிச்சொல்லுகின்றார்-எ-று. (௧)

அருங்கானில்வருந்துயரான் மலர்தடத்துணீரருந்தியதன்றீரத்தோர்
மருங்காலநிழலடைந்து சூழ்ந்தவருந்தவரோடும் வதிந்தகாலைக்
கருங்காகம்போனிறமுங் காயமெலாம்புழுநெளியக் கனிந்தபுண்ணுஞ்
சுருங்காதகுட்டமுறற் பலநோயுமுடையானமெய் துளங்குநீரான்.

இ-ள்.) செல்லுதற்கரியவனத்தில் நடந்துவந்தஇளைப்பு நீங்க ஒரு மலர்த்தடாகத்தினிடத்தில் நீருண்டு அதன்கரையிலொருபக்கத்திலிருக்கும் ஆலமரத்தினிழலிற்சேர்ந்து நம்மைச்சூழ்ந்த அரியமுனிவர்களுடன் இருந்தபோது கரியகாகம்போலநிறமும் சரீரமெங்கும் புழுவானதுநெளியும்படி வியாபித்திராநின்றபுண்ணும் குறையாத குஷ்டமுதலாகியவியாதியும் உடையவளாயும் அவைகளால் உடல்நடுங்குந்தன்மையையுடையவளாயும்-எ-று. (உ)

புண்டாரைமுடைநாற வணங்குறுவாள்வெப்பநோய் புகையைச்சூலை
கொண்டாவிவருந்துவாள்கண்ணில்லாளொருபுலைச்சிகொடியமூப்பாள்
கண்டோர்தங்கண்புதைப்ப வழிவருவாளுளைந்தெழுந்தகயநோய்சீற
விண்டோயுமாதவத்தாலெரிகொளுந்துநிலத்தினிடைவீழ்ந்தாண்மன்

(இ-ள்.) புண்களிலிருந்தொழுகாநின்ற இரத்தத்தாரையானது துர்க்கந்தமாகநாற வருத்தமடைகின்றவளாயும்சுரநோய்மேலெழுந்து அனல்வீச அதனுடன்சூலைநோய்கொண்டு உயிர்வருந்துகின்றவளாயும் பார்வையில்லாதவளாயும் கொடியகிழத்தன்மை யுள்ளவளாயும் பார்த்தபேரெல்லாம் (அருவருப்பினால்) தங்கள்கண்களை மூடிக்கொள்ளும்படியாக வழிநடந்துவருகின்ற ஒருநீச்சஸ்திரீயானவள்வருந்தி அதிகரித்த க்ஷயநோவானது துன்பப்படுத்த ஆகாயத்தில்பொருந்திய சூரிய வெப்பத்தினால் அக்கினிமயமாய்ச்சுடுகின்ற பாலைநிலத்தி னிடத்தில் விழுந்தாள்-எ-று. (ஙு)

வீழ்ந்தவுடன்புலைமுதியா ளாவியுடல்விடுமவத்தை விதங்களெல்லாஞ்
சூழ்ந்தவருந்தவரோடுங்கண்டானின்றனமாங்கோர் சோதிவர்னம்,
போழ்ந்தொளிர்பொன்விமானமுட னிழிந்துபலகணநாதர்புவியிற்போதத்
தாழ்ந்தவரையடிவணங்கிவரவென்கொலென்னவவர்சாற்றலுற்றார்.

(இ-ள்) விழுந்தவுடன் அந்தப்புலைச்சியாகியகிழவியின் உயிரானது உடலைவிட்டுநீக்கும்போதுண்டான அவஸ்தையின் வகைகளையெல்லாம் நம்மைச்சூழ்ந்திராநின்ற முனிவர்களும் நாமும்பார்த்துக்கொண்டு அயலிலிருந்தோம் அப்படியிருக்கும்போது அவ்விடத்தில் இருளைநீக்கிப் பிரகாசியாநின்ற சோதியுள்ள ஒருபொன்விமானமுடன் ஆகாயத்தினின்றுமிழிந்து பலகணநாதர்கள் பூமியினிடத்தில்வர நாம்கண்டுதாழ்ந்து அவர்கள்பாதத்தில்பணிந்து நீரிவ்விடத்திற்கு வந்தகாரணமென்னவென்றுவினவ அவர்கள் சொல்லத்தொடங்கினார்கள்-எ-று. (ச)

மலைமகளையொருபாகம் வைத்தபிரானேவமணி மானமீதில்
புலைமகளைக்கொடுபோவானணைந்தனமென்றோன்றபோழ்தின்வானின்

திலகுசுடர்விமானத்தை யிவளடைதன்மறைவேள்வி யியற்றுசாலை
யுலகினிழியுடைக்குரைவாய் ஞமலிபுகுந்தேறுமதை யொக்குமாதோ.

(இ-ள்) மலையரையன்புத்திரியாகிய பார்வதியைஇடப்பாகத்தில்வை த்தருளியபரமசிவன் கட்டளையிட்டனுப்பியதினால் ரத்தினங்கள்பதித்த விமானத்தின்மேல் இந்தநீச்சஸ்திரீயைக் கொண்டுபோகவந்தோமென் றார்கள அவர்களப்படிச்சொன்னபோது விண்ணுலகத்திலிருந்துவந்து பிரகாசியாநின்ற ஒளியுள்ள இந்தவிமானத்தின்மேல் இவளேறுவது உலகத்திலிருக்குஞ் ஜந்துகளுள்) இழிவையுடைய ஒலிக்காநின்ற வா யுள்ளநாயானது வேதவிதிப்படிசெய்கின்ற யாகசாலையிற்சென்று (சுவ ர்க்கலோகத்துக்குப்போக) விமானத்திலேறுவதையொப்பாகும்-எ-று.

எனப்புகன்றேம்பின்னரும்பார்த் திருபிறப்பினுள்கண்களிரண்டு மில்லாள், தினைத்துணையுஞ்சிவனிலையுஞ் சிவனடியார்நிலையுமுளஞ்சிந் தித்தில்லாள், வினைத்திறனன்மிகுபிணியா ளெழுபிறப்பினல்வினையின் விழைவொன்றில்லாள், தனைச்சிவலோகத்திளிடைக் கொடுபோவான் சமைந்ததுவெற்றுகென்ன.

(இ-ள்) என்றுசொல்லிப்பின்னும் அவர்களைப்பார்த்து இழிவாகிய பிறப்பினையுடையவளும் இரண்டுபார்வைகளுமில்லாதவளும் பரமசி வனுடையநிலையினையும் சிவனடியார்கள்நிலையினையும் தினையளவுபொ ழுதாவது தியானியாதவளும் வினைவலியால்மிகுந்தபிணியையுடையவ ளும் எழுவகைப்பிறவியினிடத்தும் புண்ணியத்தில் எவ்வளவேனும் விருப்பமில்லாதவளும் ஆகிய இவளைநீங்கள் சிவலோகத்துக்குக்கொ ண்டுபோகச் சம்மதித்துவந்த காரணமென்ன சொல்லுங்களென்று கேட்க-எ-று. எழுவகைப்பிறப்பாவன தேவர் மனிதர் மிருகம் பக்ஷி ஊருஞ்ஜந்துநீரில் வாழுஞ்ஜந்து தாபரம் என்பவைகளாம் தாபரமா வது மலைமரமுதலான அசையாப்பொருள். (சூ)

இருந்தவத்தின்மாமுனியே யிப்புலைச்சிதிறங்கேட்கி னிறும்பூதே ய்துங், திருந்துபுகழ்க்கேகயநாட் டொருமறையோனளித்தவருஞ் செ ம்பொற்பாவை, சரிந்தமலர்க்கருங்குழலாள் சவுமினியென்னும்பெய ராள் சம்பராரி, வருந்துவனப்பிரதியெனு மணங்கினையுமழகழிக்கும் வனப்பின்மிக்காள்.

(இ-ள்.) பெருமைபொருந்தியதவத்தினால் மகத்தாகியமுனியே இந் தப்புலைச்சியினுடைய செய்திகளைக்கேட்கில் ஆச்சரியமுண்டாகும் (என்னவென்றால்) நல்லபுகழையுடைய கேகயநாட்டிலிருக்கும் ஒரு பிராமணன்பெற்ற கிடைத்தற்கரிய செம்பொன்னினாற்செய்யப்பட்டபிர

தமையொத்தவளும் பூமாலையணியப்பட்டுக் கவுமைநிறமுள்ளதாய்த் தாழ்ந்த அளகபாரத்தையுடையவளும் சவுமினியென்னும், பெயரையுடையவளுமாய் மன்மதன்கண்டு மோகமடைந்து வருந்துதற்கேதுவாக அழகுள்ளதெய்வப்பெண்ணாகிய ரதியினுடைய சவுந்திரியத்தின் பெருமையுங் கெடச்செய்யத்தக்க சுந்தரத்தில்மிகுந்தவள்-எ-று. (எ)

கொங்கைபடிகொண்டிலகிப்பணைத்திறுகியிறுமாந்துகுரும்பையையெய்ப்ப
மங்கையெனுற்பருவமிவளெய்துதலுமிவடாதை மனத்தினோர்ந்து
பங்கையமாமுகத்தானையொருமறையோன்விதியின்விழாப்பண்ணநல்கி
வெங்கயமும்பிடியுமெனக் கலவிநுகர்ந்திருவோரும் விழையுநாளில்.

(இ-ள்) இத்தன்மையான அழகுள்ளவள் இரண்டுதனங்களும் அடிபரந்து இளகலாய்ப்பருத்திறுகிப் பூரித்துத் தென்னங்குரும்பையையொப்பாகும்படியான மங்கைப்பருவத்தையடைந்தமாத்திரத்தில் இவள்தகப்பன் இனி விவாகஞ்செய்விக்கவேண்டுமென்று மனதில் உணர்ந்து செந்தாமரைமலர்போன்ற முகத்தையுடையவளை ஒருபிராமணன் வேதவிதிப்படி விவாகஞ்செய்துகொள்ளக் கன்னிகாதானமாகக்கொடுக்க வெவ்விய ஆண்யானையும் பெண்யானையும் இணைபிரியாமல் கூடிக்கொண்டிருப்பதுபோல இவ்விருவருங்கலவியின்பம் அனுபவித்துக்கொண்டு விருப்பமுற்றிருக்குநாளில். எ-று. பெண்களுக்கும் ஏழு அவைபேதை பெதும்பை மங்கை மடந்தை தெரிவை பேரிளம்பெண் என்பவைகளாம், பேதைப்பருவமானது ஐந்துவயதுமுதல் ஏழுவயதுவரைக்குமுள்ளது, பெதும்பைப்பருவமானது எட்டுவயதுமுதல்பதினொருவயதளவுமுள்ளது, மங்கைப்பருவமானது பன்னிரண்டு வயதுமுதல் பதின்மூன்றுவயதளவுமுள்ளது, மடந்தைப்பருவமானது பதினான்குவயதுமுதல் பத்தொன்பதுவயதளவுமுள்ளது, அரிவைப்பருவமானது இருபதுவயதுமுதல் இருபத்தைந்து வயதளவுமுள்ளது, தெரிவைப்பருவமானது இருபத்தாறுவயதுமுதல் முப்பத்தொருவயதளவுமுள்ளது, பேரிளம்பெண்பருவமானது முப்பத்திரண்டு வயதுமுதல் நாற்பது வயதளவுமுள்ளது. (அ)

தன்னுயிர்போனீங்காத கொழுநனுக்குவினைதுரப்பச் சார்ந்தநோயால், இன்னுயிர்விட்டவனிறப்பத் துணையிழந்தவன்றிலெனவிரங்கிமாழ்கிக், கன்னன்மொழிக்குயிலனையாள் கைம்மையுற்றபின்னரும்வெங்காமநோயான், மன்னும்பெருநிறையொருவிக் காவின்கண்யாவரையுமருவுநாளின்.

(இ-ள்) தன்னுயிர்போல விட்டுப்பிரியாதகணவனுக்கு ஊழ்வினையானது கூட்டநேரிட்டவியாதியினால் இனியவுயிரைவிட்டு அவனிற

ந்துபோகவே துணையாகிய ஆண்அன்றிற்பறவையைப்பிரிந்தபெட்டை அன்றில் (இரங்குவதுபோல) கரும்பையொத்த மதுரமுள்ளசொல்லினால் குயில்போன்றவள் அழுதுசோர்ந்து கைம்பெண்ணானபின்பும் வெவ்விதானகாமநோயினால் நிலைபெற்றபெரியகற்பினைநீங்கிச் சோரத்தனமாக எல்லாரையும் புணர்ந்துகொண்டிருக்கும்நாளில். எ-று. (கூ)

வேறு.

உற்றாரயலா ருரைக்குமுறைகொள்ளாள்
கற்றார்முதியார் கழறுவதுங்கைக்கொள்ளாண்
முற்றாமுகிழ்முலைப்பான் முற்றிமுகங்கருப்பப்
பற்றாநுசுப்பாள் கருப்பம்படைத்தனளே.

(இ-ள்) இவள்விபசரிப்பதையறிந்து சுற்றத்தாரும் அன்னியரும் நீநடக்கும்நடத்தை யோக்கியமானதல்லவென்று சொல்லும் வார்த்தையைக்கேளாதவளாயும் கல்விகற்றவர்களும் முதிர்ந்த வயதுள்ளவர்களும் சொல்லும்வார்த்தையை யேற்றுக்கொள்ளாதவளாயும் தன்னிஷ்டப்படி நடந்து உண்டென்றுநிச்சயித்துக் குறிக்கக்கூடாத நுட்பமாகிய இடையையுடையவள் முதிர்ந்துசாயாமல் குவிந்திருக்குந்தனங்கள் பால்நிறைந்து காம்புகள் கருமைநிறங்கொள்ளும்படி கருப்பம் அடைந்தாள்-எ-று. (ம)

அங்கதுகண்டுற்றா ரயலாரிவர்குழுமி
யெங்குலத்துக்கெல்லா மிருந்துபழியீட்டுமோள்
தங்குதலிவ்வூர்க்குத் தகாதென்றுநீக்குதலுஞ்
செங்கண்புனல்கொழிப்பச் சேயிழையாள்கான்சென்றாள்.

(இ-ள்) இந்தமாதானவள் கருப்பமடைந்ததையறிந்து சுற்றத்தாரும் அயலாருமாயிருப்பவர்கள்கூடி இவளிவ்விடத்திலிருந்து நம்முடையகுலத்துக்கெல்லாம் பழிசம்பாதிப்பவளாயிருக்கிறாள் (ஆதலால்) இவ்வூரிலிருப்பதுதகாதென்று நீக்கிவிடவும் கண்கள்நீர்சொரியும்படி அழுதுகொண்டு காட்டிற்போய்விட்டாள்-எ-று. (மக)

அத்தலையோர்வேளாண் மரபிலடுகாளை
சித்தமயல்கொண்டவடோள் சேர்ந்துமனையிற்செறிப்பப்
புத்தமுதமென்னத் தணியனியணம்புழுக்கல்
துய்த்தங்கவன்மார்பிற் றோய்ந்துநலனுண்டிருந்தாள்.

(இ-ள்) அவ்விடத்தில் வேளாளகுலத்தனாகியதுர்நடத்தையுள்ள ஒரு விடபுருஷன்கண்ட மனதில்காமமயக்கங்கொண்டு அவள்தோளைச்சேர்ந்து தன்வீட்டிற்கொண்டுபோய் வைத்துக்கொள்ள புதியஅமுதம்போ

ல் கள்ளும் இறைச்சியுடன்சோறுமுண்டு அவன்மார்பிற்சேர்ந்து கலவியின்பம் அனுபவித்துககொண்டிருந்தாள்-எ-று. (கஉ)

பண்டைக்குலனொருவி வேளாளன்பன்னியாய்க்
கண்டின்சுவைக்கல்விக் காமபானுதியெல்லாம்
உண்டின்புலுமகப்பே றுற்றுநெடுநாட்கழிப்பத்
திண்டிறலான்வேற்றூர்க் ககறலுமிச்சேயிழையாள்.

(இ-ள்) தான்பிறந்த பிராமணகுலாசாரத்தைநீங்கிச் (சூத்திரகுலத்தானகிய) வேளாளன்மனைவியாய் வெல்லக்கட்டிபோல இனியமதுரத்தைத்தருகின்ற கல்விக்குரிய அதரபானமுதலாகியதுகளை அனுபவித்து இன்புறத்தக்க குழந்தைகளையும்பெற்று நெடுங்காலஞ்செல்லும்படி இருக்கும்போது (ஒருநாள்) மிகுந்தபலமுள்ளஅந்தவேளாளனானவன் அயலூருக்குச்செல்லவும் இந்தப்பெண்பிள்ளையானவள்-எ-று. ()

மற்றொருவரில்லா மனையிற்றமியளாய்
அற்றையிருட்கங்குல்வர வாற்றாதுகாமத்தி
யற்றுமதுவருந்தி யூன்றடிதின்மான்விரும்பிப்
பொற்றொடியாளங்கிலையோர் தொழுத்திடைபுகுந்தாள்.

(இ-ள்.) வேறொருவருமில்லாதவீட்டில் தான்மாத்திரம் தனியளாயிருந்து அன்று இருள்சூழ்ந்த இராப்பொழுதுவரச் சகித்துக்கொள்ளமாட்டாமல் காமாக்கினியைப்பொருந்தி மதுபானஞ்செய்து மாமிசந்தின்னவும் இச்சைகொண்டு அந்தவீட்டின் ஒருபுறத்திலிருக்கும் ஒருதொழுத்திற்சென்றாள்-எ-று. (கச)

வெள்ளாடுஞ்சேதா வெடிவாற்குழக்கன்றும்
உள்ளாளருந்து மதுவாலுணர்வழிந்து
தள்ளாடியான்கன்றைப் பற்றித்தலையரியாப்
புள்ளாடுவேற்கண்ணா ளில்லிற்கொடுபுகுந்தாள்.

(இ-ள்) பருந்து காக்கைமுதலாகிய பக்ஷிகள்கண்டு மேலேவட்டமிட்டுக்கொண்டு பறக்கத்தக்கதாய்ச் (சுத்தவீரன்கையிலிருக்கும்) வேலாயுதம்போல நீட்சியுங்கூர்மையுமுள்ள கண்களையுடையவள் கள்ளுண்டவெறியால் அறிவழிந்து தள்ளாடிக்கொண்டுபோய் வெள்ளாடிதுவென்றும் கட்டைவாலையுடைய பசுவின் இளங்கன்றிதுவென்றும் பகுத்துப்பாராமல் ஒருபசுவின்கன்றைப்பற்றி அதன்தலையைஅரிந்துவீட்டிற்கொண்டுவந்தாள்-எ-று. (கரு)

வெந்ததடிநுகர்வா னெண்ணிவிளக்கொளியின்
முந்துதசையரிய வேண்டிமுயல்போதின்

அந்திப்பிறைநுதலா ளான்கன்றெனவறிந்து
சிந்தித்தயர்ந்து சிவசிவவென்ருேதினுள்.

(இ-ள்) அந்திப்பொழுதில் தோன்றுகின்ற பிறையையொத்தநெற்றியையுடையவள் வெந்தமாமிசத்தைத்தின்னவெண்ணிஒளிவிளங்குந்தீபவெளிச்சத்தில் அந்தப்பசுவின்கன்றை அரியவிரும்பி எத்தனிக்கும்போதுபசுவின்கன்றெனஅறிந்து(தகாதகாரியஞ்செய்தோமேயென்று) நினைத்துச் சோர்வையடைந்து சிவசிவஎன்று சொன்னுள்-எ-று.(கசு)

கைதவமேசெய்யு மதுவின்களியென்று
வெய்துயிர்த்துமுப்புரமும் வேவக்குறுமூரல்
செய்தபெருமானடியை யுள்ளந்தியானிப்ப
எய்துபடராலஙு இருகடிகைப்போதிருந்தாள்.

(இ-ள்) மதுவின்மயக்கமானது துன்பத்தையேசெய்யுமென்று எண்ணி நேரிட்டவருத்தத்தினுல் பெருமூச்சுவிட்டுக்கொண்டுதிரிபுரங்கள் வேகும்படி புன்னகைசெய்த பரமசிவனுடையதிருவடிகளை மனமானதுதியானஞ்செய்யக் கன்றையரியவுட்கார்ந்த இடத்தில் இரண்டுநாழிகைவரைக்கு மிருந்தாள்-எ-று. (கஎ)

ஊனருந்தும்வேட்கைதனை யூழிவலிதுரப்பக்
கானிருந்தகோதையந்தக் கன்றின்றசைமீட்டுந்
தானரிந்துநல்ல கருணைசமைத்தருந்தி
யேனையெலும்புந்தசையும் வீதியினிட்டிசைப்பாள்.

(இ-ள் மாமிசந்தின்னும்இச்சையை விதிவலியானதுஎழுப்ப வாசனைதங்கிய பூமாலையணிந்திருப்பவள் அந்தப்பசுவின் மாமிசத்தைவிட்டுநீக்கிவிடாமல் பின்னும்அரிந்து நல்லபொரிக்கறியாகச்சமைத்து உண்டு உண்பதற்குதவாதஎலும்பையும் மாமிசத்தையும்தெருவிற்கொண்டுவந்துபோட்டு இந்தவார்த்தையைச் சொல்லுகின்ருள்-எ-று. (கஅ)

அந்தோகொடுவினையே னுவினிளங்கன்றுதனை
வந்தோபுழுவை வதைத்துண்டொழிந்ததிது
நந்தோரணமறுகி னம்மினத்தீர்காண்மினென
கொந்தோலமிட்டு நுணுகிடைபோல்வாடினுள்.

(இ-ள்) அய்யோ? கொடியபாவியாகிய என்பசுவினிளங்கன்றை ஒருபுலியானதுவந்துகொன்று உண்டுபோய்விட்டது! இந்தக்கொடுமையை தோரணங்கள்கட்டியிருக்கும் நம்முடையவீதியிலிருக்கும் நம்மினத்தவர்களே பாருங்களென்றுவருந்தி யோலமிட்டுத் தன்னுண்ணியஇடைவாடியிருப்பதுபோல வாடினுள்-எ-று. (கசு)

அவ்வளவிற்கங்குல் கழியவவள்கேள்வன்
செவ்வியிளங்கன்றிறந்த தீவினையைக்கேட்டேங்கி
நவ்விவிழிச்சேயிழைமாட் டெய்திநடுநடுங்கி
வெவ்வினையாளோடு மனையகத்தின்மேவினன்.

(இ-ள்) அப்படி அவள்வாடுங்காலத்தில் இராப்பொழுது நீங்கியது அதுநீங்கினவுடன் அவள்கணவன்வந்து அழகிய இளங்கன்றிறந்து போன பாவத்தைக்கேட்டிரங்கி மான்பார்வைபோன்ற பார்வையையுடையவளிடத்திற்சென்று (அப்பாபத்திற்காக) நடுநடுங்கி அந்தக்கொடியவளோடு வீட்டினிடத்திருந்தான்-எ-று. (உ௰)

ஆங்கணிருவோரு மதனுமணங்குமெனத்
தாங்கரியவின்பந் தணவாதருந்துநாள்
பூங்குழலாளுளிழப்பப் போமாருயிர்பிணித்து
பூங்குபுயத்தூதுவர்போல் வெங்கூற்றின்முன்விடுத்தார்.

(இ-ள்) அவ்விடத்தில் அவ்விருவரும்மன்மதனும்ரதியும்போல (ஒருவரையொருவர் விட்டுப்பிரியாமல்) பிறரொருவருக்குக் கிடைப்பதற்கரிய கல்வியின்பத்தை அனுபவித்துக்கொண்டிருக்கும்நாளில்பூவணிந்த குழலையுடையாளுக்கு வாழ்நாள்முடிவாகிவிட அவள் உடலைவிட்டுப்பிரிகின்ற உயிரைப் (பாசத்தினால்) கட்டிக்கொண்டுபோய் பருத்த தோள்களையுடைய யமதூதர்கள்கொடுமையானதோற்றமுள்ள நமனெதிரில்விடுத்தார்கள்-எ-று. (உக)

கண்டநமன்பேதை முகநோக்கியிக்கயத்தி
பண்டிழைத்தவல்வினைதா னான்முகத்தாற்பார்த்தெண்ணிச்
சண்டநிரயம்புகுத்தத் தக்காய்நீயல்லைநெறி
விண்டபுலைமகளாய் மேதினியிமேவுகென்றான்.

(இ-ள்) தூதுவர்கள்கொண்டுவரக்கண்ட நமன் அவள்முகத்தைப்பார்த்து இந்தக்கீழ்மையுள்ளபுலைச்சி முன்செய்தவலியவினைகளைச் சாஸ்திரத்தின்முன்னிலையில் விசாரித்தெண்ணிநீகொடுமையுள்ளநரகத்தில் விழுத்தத்தக்கவளல்லை ஆகிலும் முறைமைநீங்கிய புலையர்மகளாய்ப் பூலோகத்திற்பொருந்தக் கடவையென்றுசொன்னான்-எ-று. பசுவின் கன்றை யரிந்தபோது சிவசிவவென்று சொன்னதினால் நரகத்தில்விழுந்தத் தக்கவளல்லளென்றது. (உஉ)

அவ்வண்ணந்தண்டத்தான் கூறவதுகேட்டவளு
மைவண்ணமேனியளாய் வாட்கண்ணிலளாகி

இவ்வண்ணம்பாரினெழிலிழந்தாரில்லையெனச்
செவ்வண்ணமின்றிப் புலைமகளாய்ச்சென்றுதித்தாள்

இ-பு யமதருமராசன் அவ்வாறுசொல்ல அதைக்கேட்டவள்கருமைநிற முள்ளவளாயும் ஒளிபொருந்தியபார்வையில்லாதவளாகியும் இப்படி அழ கிழந்தவர்களில்லையென்று-கண்டவர்களெல்லாம்- சொல்லும்படிநலல அழகில்லாமல் நீச்சஸ்திரியாகவந்துபிறந்தாள்—எ-று ௨௩.

அன்னவளையீன்றோர் ஞமலியின்றமிச்சில்
கன்னியிளஞ்சேதாவி னூனொடுங்கள்ளூட்டி
மன்னிவளர்க்கவளர்வதெலாம்வன்பிணியாய்த்
துன்னிவளரமயத் தின்றோருந்துஞ்சினார்

இ-பு அத்தன்மையுடையவளைப் பெற்றவர்கள்நாய்தின்றுமிகுதியானஎ ச்சிலூனும் மிருந்த இளமையாகியபசுவின்கன்றிறைச்சியுங்கள்ளும்லூட்டி ஆசைபொருந்திவளர்க்க வளர்வதெல்லாம்தீராப்பிணியாய்ப்பொருந்தி வ ளருங்காலத்தில் பெற்றவர்களும் இறந்தார்கள்-எ-று ௨௪

அக்காலைநோயா லயர்ந்துமணஞ்செய்யத
தக்காரிலராகவெம்பசிநோய் தாங்கலளா
யெக்காலமும்புலையர் சேரிதொறுமேற்றுண்ணப்
புக்காவிதேய்வாளை மூப்பும்பொருந்திற்றே

இ-பு தாயுந்தகப்பனுமிறந்தபின்பு முன்னமே தனக்குச் சம்பவித்திருக் கிறவியாதினல் சோர்வடைந்து தன்னை விவாகஞ்செய்துகொள்ளதக்கவ ர்களுமில்லாமையாக நேரிட்டகொடியபசியாகிய நோயைத்தாங்கமாட்டாத வளாய் எப்போதும்புலையர்சேரிதோறும்இரந்துண்ணச்சென்றுவுயிர்மெ லிகின்றவளைகிழத்தன்மையும்பொருந்தியது—எ-று ௨௫

அத்தகையநோயாலு மூப்பாலுமல்லலுற்றுத்
சித்தயும்பசிகவற்றக் தேய்ந்தநடையினளாய்
முத்தன்சிவநிசியிற் கோகன்னமுந்துறுவார்
தத்தங்குழூவொடு மங்கநிற்சார்ந்தனளே

இ-பு அப்படிக்கொத்தநோயினலுங் கிழத்தன்மையினலுங் துன்பம் பொருந்திப் பசியானதுமனதைவருத்தப்படுத்தச் சேர்ந்த நடையையுடை யவளாய்ப் பரமசிவனுக்குரிய சிவராத்திரியில்கோகன்னத்துக்குச் செல் லுகின்றகூட்டத்தாருடன் தானும் அந்தக்ஷேத்திரத்துக்குப்போனள்-எ று

தீயபசியாலொரு மறுகைச்சேர்ந்திருந்து
தூயவிழியில்லேற் களித்திடுமின்சோற்றன்னக்

கூயகுரல்கேட் டொருவன்கொழுங்களியன்
ஏயுமவள்கைத்தலத்தின் வில்வமுணவென்றளித்தான்

இ-பு கோகன்னத்திற்போனவள் ஒருவீதியிற்போயிருந்துகொண்டுபரிசுத்தமானகண்களில்லாத எனக்குச்சோறுகொடுங்களென்றுகொடிய பசியினல் கூவியகுரலைக்கேட்டிருந்தஇறுமாப்புள்ளவனுகிய ஒருவன்தன் கையிலிருந்தவில்வத்தைக்கூவிக்கொண்டிருப்பவள் கையினிடத்தில் சோறென்றுகொடுத்தான்—எ-று உள

உண்ணலதையுணவென் றோர்ந்தாளுணவன்மை
எண்ணியயலேயெறிந்ததளைகாளியிட
நண்ணுபழைய சிவலிங்கநாயகன்றன்
வண்ணமுடியின் மரகதம்போல்வாய்ந்ததுவே

இ-பு அவள் அவன்கொடுத்தவில்வத்தைச்சோறென்றுண்ணநினைத்துப்பின்பு சோறல்லவென்றுதெரிந்துகொண்டு பக்கத்திலெறிந்துவிட, வில்வமாகியதளையானது பார்வதிதேவியார்பொருந்தியஇடப்பாகத்தையுடையபழமையாகிய சிவலிங்கப்பெருமானுடைய அழகியதிருமுடியில் மரகதமணிபோலப்பொருந்தியது—எ-று. உஅ

அற்றைமுழுநாளு முணவிலளாயவ்விரவிற்
பற்று துயினீக்குப் பனித்தண்புனறோய்ந்த
பெற்றியளெண்ணுதெறிந்த வில்வமேபினுருகன்றன்
பொற்புசிப்பூசனையே போன்றதிருணீங்கிற்றால்

இ-பு அவளெறிந்தவில்வஞ் சிவலிங்கப்பெருமான்முடியில்தங்கினதுமல்லாமல் அன்றுமுழுநாளும்ஆகாரமில்லாதவளாய் அந்தச்சிவாராத்திரியில் ஒருபோதுநீங்காதநித்திரையைநீங்கிக் குளிர்ச்சிபொருந்தியபனியாகியநீரில்படிந்தமுறைமையையுடையவள இன்னதெனஎண்ணமலெறிந்த வில்வமேபரமசிவனுடையஅழகுள்ளசிவராத்திரிபூசை அருச்சனைபோலாகியது இராப்பொழுதும்நீங்கிறறு—எ-று உகூ

வெய்யபசிமூப்பு நோயிவற்றுன்மெய்வருந்த
உய்யுமுணவிலளரயோர்புலைசிதோள்பற்றிக்
கையிற்றடியூன்றிக் காளரமீள்போழ்தி
னையுங்கருத்தாணடுக்குற் றிவண்வீழ்ந்தாள்

இ-பு இராப்பொழுதுநீங்கினவுடன் கொடியபசி கிழத்தன்மைஎன்னுமிவைகளால் உடலானதுவருத்தத்தைப்பொருந்த பிழைத்திருப்பதற் கேதுவான ஆகாரமில்லாதவளாய் ஒருநீச்சஸ்திரீபின்தோளை ஆதரவாகப்பற்றிக்கொண்டும் ஒருகையில்தடிபிடித்தூன்றிக்கொண்டும் நடக்கையில்நடக்

டாமல் கால்தளரும்படிவரும்போது வருந்துகின்ற மனதையுடையவ
ள்நடுங்கி இவ்விடத்தில்விழுந்தாள் ௫௰

வேதமுனியேயிவளிறக்கும்வேலையினிற்
பாதிமதிவேணிப் பரமனெமைநோக்கிக்
கோதில்குணத்தாளைக் கொணர்வான்விமானமொடும்
போதியெனப்பணிப்ப யாமிங்குப்புக்கேமால்

இ-பு பிர்மரிஷியே இவ்விடத்தில்விழுந்த இவளிறக்குங்காலத்தில்ஒரு
ாகிய சந்திரனையணிந்தசடாமகுடத்தையுடைய கயிலாசபதியானவர்
ளை நோக்கிக் குற்றமில்லாத குணத்தையுடையவளை இவ்விடத்துக்குக்
ண்டுவர ஒருதேவவிமானத்தைக்கொண்டுபோகவென்று கட்டளையிட்ட
ட்டருள நாங்களிங்கேவந்தோம்—எ-று ௫௧

ஈங்கெம்பரமனிடருழந்தார்யாவரையும்
தாங்குங்கருணைத் தலைவனெனுந்தகைமை
பாங்கொன்றறியா திழைத்தவருச்சனையாற்
றீங்கின்புலைச்சிக் கருளத்தெளிந்தோமே

இ-பு என்றுசொல்லிப்பின்னுஞ் சொல்லுகின்றார்கள் இன்றுசிவராத்தி
ன்றும் இதுசிவலிங்கமென்றும் இந்நாளில்ஆகாரம்நித்திரைநீக்கிச்சி
ச்சனைசெய்தால் இன்னபலன்வருமென்றுந் தெரியாமற்செய்த அருச்
யால்பாவத்தினுடைய இந்தப்புலைச்சிக்கிருபைசெய்ததனால் எம்மு
யகடவுளானவர் இவ்வாறுதுன்பம்அனுபவிக்கின்றவர்களை எல்லாம் ர
க்ஷிக்கின்றகிருபையுடைய தலைவனென்னுந்தன்மையைநாங்கள்ஐயமற
தரிந்துகொண்டோம்—எ-று ௫௨

வேறு

இனையளித்துயருற லென்னையென்றியேன்
முனிவரகேளிவள் முற்பிறப்பினில
நினைவினுமடிசிலெட்டுண்டி நேர்ந்திடா
வினையினற்பசிதருதுன்பமேயினள்

இ-பு சிவலோகத்துக்கு அழைப்பித்துக்கொள்ளும்படி பரமசிவன்கிரு
செய்தருளத் தக்கதாகிய இவ்வளவுதன்மையையுடைய இவள் இப்ப
கொத்த துன்பத்தைப் பொருந்துதற்குக்காரணமென்னவென்றுகேட்
யானால் சிரேஷ்டமுள்ளமுனிவனே கேள் இவள் முன்சென்மத்தில நி
ப்பினாலும அன்னப்பிட்சையிட்டுப்பின்பு தான்உணவுகொள்ள என்
தபாபத்தினால் பசியிருந்து(ஆகாரங்கிடையாமல்) அப்பசிகொடுக்கிற
ன்பத்தை அடைந்தாள்—எ-று ௫௩

தீயகள்ளுண்டற னல்லசெய்தலால்
தூயகண்ணிழந்தனள் சுரபிக்கன்றெனை
ஆயிடையறிந்தும் வள்ளூரமருந்தலால்
நாயினுமிழிபவப் புலைமகண்ணினுள்

இ-பு கோடியகள்ளுண்டு பாபமானகாரியங்களைச்செய்தமையால்பரிசுத்தமுள்ள பார்வையையிழந்தாள் தீபவெளிச்சத்தின்முன்கொண்டுவந்து பசுவின்கன்றெஃறுஅறிந்துஅந்தமாட்டிறைச்சியை உண்டதினுலேநாயைப்பார்க்கிலும் இழிவுள்ளசண்டாளப்பிறவியை அடைந்தாள்—எ-று. கள்ளுண்ணுதலால் ஒழுக்கம் அறிவு நாண் புகழ் செல்வம் இவைகள்முதலாகிய நன்மைகள்கெடும்-இகழ்ச்சி-தன்னைமறக்கல்-நல்லவர்கள்அவமதித்தல்இவைகள்முதலாகிய தீமைகள்நேரிடும் என்பதுபற்றிதீயகளென்றார்

கைம்மையிற்பலரொடுங் கலந்ததீமையால்
இம்மையிற்குட்டநோய் முதல்யாவையுந்
வெம்மையினலிதரவேட்டல்வேண்டுவார்
தம்மினத்தொருவருமின்றிச்சாம்பினுள்

இ-பு கைம்பெண்ணானபின்பு பலபேரோடுசேர்ந்த பாபத்தினுல் இப்பிறப்பில்குஷ்டநோய்முதலானபலநோய்கள் வெப்பத்துடன் வருத்தவும் தங்களினத்தில் தன்னைவிவாகஞ்செய்துகொள்ள விரும்புகின்றவர்கள்ஒருவருமில்லாமலும் சேர்ந்தாள்—எ-று. நடு

உரைத்தவிகுறிபல வுற்றுத்தோன்றினுன்
திரைப்புவியிடத்துச்செய் தீமையாளொன்
றிரைதிடுமறையென வெண்ணுந்தூயவர்
விரைத்துணரிதழியாற் கடிமைவேண்டுவார்

இ-பு சொல்லியபலவாகிய இவ்விதக்குறிகளைப் பொருந்திப் பிறந்தவர்கள்அலைகளையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த பூலோகத்தினிடத்து முன்பிறப்பிற்பாவத்தைச் செய்தவர்களென்ன வேதமுறையிடுமென்று அறிந்தபரிசுத்தர்கள் வாசனைபொருந்தியகொத்துகளாக மலர்ந்திருக்குங்கொன்றைப்பூமாலையணிந்த பரமசிவனுக்கு அடிமைத்திறஞ் செய்ய விரும்புவார்கள்.

அன்றியுமறலிதன் னுலயத்திவள்
சென்மநாளும்மையிற் சிவனையுன்னிய
நன்றியரகெரியழு னரகம்புக்கவிந
தொன்றிடுந்தீவினைக் குரியளல்லளால்

இ-பு பரமசிவனுக்குஅடிமைத்திறஞ்செய்யவேண்டுமென்கிற விருப்ப ங்கொண்டவளல்லாம லிருந்தாலும்யமதருமராசன்சபையில் இவள்போ னநாளில் முன்செனமத்தில்பரவசிவனைநினைத்த புண்ணியததினால் எரிகி ன்ற நரகத்தில்விழுந்து அவிந்துகிடக்கும்படியான பாவத்துக்குரியவள ல்லள் என்றுசொல்லி-எ-று- ௩எ

ஆயினுமவளியி னிழிபிறப்படைந்
தோயுமவல்வினைப்பய னுண்டொழிந்தபின்
ஏயுநல்வினை வினு லீசன்பூசனை
மேயமுத்தியுமதான் மேவுளேளென்றான்

இ-பு அப்படிநரகத்துக்குப் போகத்தக்கவளல்லாதவளா யிருநதாலும் பூலோகத்தில் நீச்சப்பிறப்படைந்துஓயும்படியான பாவத்தின்பயனைஅனு பவித் தொழிந்தபின்புபொருந்தியநல்வினையால்சிவபூசையும் அந்தப்பூசை யினால்அழியாத மோட்சத்தையும்அடைவாளென்று சொன்னான்-எ-று-()

இன்னதன்மைய ளிவளொன்றிப்பாவையைப்
பன்னகமவுலியான் பத்திநேற்றுதும்
அன்னதுங்காண்டியென் றவடனுவியை
யுன்னருநதிவ்விய வுருவஞ்சேர்த்தியே

இ-பு இவளித்தன்மையுள்ளவளென்றுசொல்லி முனிவனே இந்தமாதி னைச்சர்ப்பங்கள்அணிந்திருக்கும்சடாமகுடத்தையுடைய பரமசிவன்பாதி மாகியசிவலோகத்துக்குக் கொண்டுபோகிறோம் அதையும்பாரொன்றும்அ வளுயிரைநினைத்ததற்கரிய திவ்விய தேகத்திற்சேர்த்து அதன்பின்பு-எ-று()

விண்ணகம்போழொளி விமானமீக்கொடு
பண்ணிசைவிஞ்சையா பாடநாடகம்
எண்ணருமரமபைய ரியற்ற வேறினர்
அண்ணறன்றூதுவ ரவளைக்கொண்டரோ

இ-பு சிவதூதர்கள் ஆகாயத்திலிடத்திலுள்ள இருளைநீக்குகின்றஒளியை யுடைய விமானத்தின்மேல்அவளை ஏற்றிக்கொண்டு வித்தியாதரர்கள் ப ண்ணுடன்கூடிய இசைபாடிவரவும்இத்தன்மையானதென்று மனதினாலு ம்நினைத்தற்கரிய அழகுமுதலியகுணங்களையுடைய அரம்பைமாதர்கள் நட னஞ்செய்துவரவும் ஆகாயமார்க்கமாகப்போனார்கள்-எ-று. இனி-சக-வது பாடல்முதல்-சுரு-வதுபாடல்வரையில் சிவலோகத்தின் பெருமையைச்சொ ல்லுகின்றது. சுய

முக்குணவழிசெலுமுயற்சித்திமையின்
எக்குணமுங்கடந்தின்பம்வேட்டவர்
தொக்குடனிருப்பதஞ்ஞானத்துன்னிருள்
புக்கவர்யாவரும் பொருந்தொண்ணாத்தே

இ-பு முக்குணங்களின்வழியேசொல்லுகின்றமுயற்சியாகிய பொல்லாங்கினையுடைய எவ்விதகுணங்களையுங்கடந்து பேரின்பத்தைவிரும்பினவர்கள் கூட்டமாகச்சேர்ந்திருக்கத்தக்கது நிலைபெற்றதாகிய அஞ்ஞானஇருளிற்சேர்ந்தவர்களெல்லாரும்பொருந்தக்கூடாதது எ-று. முக்குணமாவன சத்துவம் இராசதம் தாமதம் சுக

பானுவின்மினிமினியொளி கெடுக்கும்பான்மைபோ
லானமுச்சுடர்களு மழுங்கவெங்கணுந்
தானிமிரொளியது சதுர்மறைத்தரு
மேனிமிர்சாகைக்கோர் வித்துமாயதே

இ-பு சூரியதேவன்மினிமினிப்பூச்சியின் ஒளியைக்கெடுக்குந் தன்மைபோல மேன்மைபொருந்தியமுச்சுடர்களும் ஒளிமழுங்கும்படி எவ்விடத்தும்பிரகாசிக்கும்ஒளியையுடையதுமேலுயர்ந்தசாகைகளையுடைய நான்குவேதமாகிய விருட்சத்துக்குஒருவிதையாயிருப்பது-எ-று. சாகையென்பது வேதத்திணுட்பிரிவுக்கும் மரக்கொம்புக்கும் பெயராதலால்இவ்விடத்தில் இரண்டுஅர்த்தமாகும்படிகூறினர்- சுஉ

திருமறுமார்பனுங் கமலச்செல்வனும்
அருமையிற்பெறவின்ப வாழ்வளிப்பதாங்
கிருமையுமிகந்தது மாயையாலெழுங்
கருமமுங்கடந்துமின் றருள்களிப்பதே

இ-பு திருமாலும்பிரமதேவனும் அருமையாகப்பெறுக்கொள்ளப் பேரின் வாழ்வையளிப்பது இவ்வுலகவாழ்வினால் வருஞ்சுகத்துக்கங்களையும்சுவாகமோகத்திலுள்ளவாறுஞ் சுகத்துக்கங்களையும் தன்னிடத்திலில்லாமல்இயல்பாகவே நீங்கியிருப்பதுமாயையினால் உண்டாகிறகருமங்களையும் இயல்பாய் நீங்கி எக்காலத்தும்அழிவின்றித்திருவருள் களிப்படைந்திருக்கின்றது-எ-று ஆறு-அசை. சுந

வேறு.

வித்தியாதரியக்கர்சித்தர் விண்ணவர்முனிவர்முத்தர்
வத்திருண்ணுசுப்பிறதெய்வ மடைந்தையரமுதகாணம்
பத்திசமதியற்றும்வீணை நரதர்முதலோர்பாங்கின்
அஞ்சலித்துவக்கும்வேதத் தந்தமுமகேதையாமால்

இ-பு வித்தியாதரர்களும் யட்சர்களும்சித்தர்களும் தேவர்களும்முனிவர்களும்முத்திபெற்றவர்களும்பூங்கொடிபோல நுண்மையாகியஇடையினையுடைய அரம்பாஸ்திரிகளும் அமுதம்போல மதுரத்தைத்தருகின்ற இசைப்பாடலைப்பஞ்சமம்என்னும்சுதியில்வாசிக்கும்வீணையையுடைய நாரதர்முதலாகியவர்களும்உரிமையுடன்நமஸ்க்கரித்துச சந்தோஷிக்கும்படியானவேதத்தின் முடிவும்அதுவேயாம்-எ-று. சச

எம்மையாளுடையமாது மிளம்பிறையமுதங்காலச்
செம்மையார்பவளவேணிச் செம்மலுமெடுத்ததாளச்
சும்மையானந்தஞான நடனத்தின்சுவைஈனிந்த
திம்மையினெம்மனோராற் புகல்வதோவிசலோகம்

இ-பு என்னை அடிமையாகவுடைய பார்வதிதேவியார்திருக்கரங்களில்மெடுத்துத்தாக்குந்தாளத்திலுண்டாகின்றநாதத்தின மதுரமும்இளத்திங்களானது அமுதகிரணமாகியவெண்ணிலவைப் பொழிந்துக்கொணடிருக்கவும் செம்மைநிறமாருமற்பொருந்திய பவளம்போன்றசடைமுடியினையுடைய பரமசிவன் தாண்டவஞ்செய்கின்ற ஆனந்தநடனமதுரமும்முதிர்ந்திருக்கின்றது ஆதலால் இத்தப்பிறப்பினையுடைய எம்போலவார்களால் புகழ்ந்து சொல்லத்தக்கதோ சிவலோகமானது-எ-று. பார்வதியார்தாளம்போடப்பரமசிவன் தாண்டவஞ்செய்ததுசங்காரதாண்டவமாம். சரு

அன்னதன்மைத்தாயென்று மடைந்தவர்மீள்கலாத
நன்னெறியுடைததாயார்க்கு நணுகருஞ்சிவலோகத்திற்
பன்னகமவுலியானும் பாவையுமுவந்துகாணப்
பொன்னொளிவிமானத்தோடும் பூவையைச்சேர்த்தினரே

இ-பு அப்படிக்கொத்ததன்மையையுடையதாகியுந்தன்னிடத்தில்அடைந்தவர்கள் எக்காலத்தும்நீங்காதநல்லமுறைமையையுடையதாகியும்யாவர்க்கும் பொருந்துதற்கரியதுமாகிய சிவலோகத்தில்பாம்பணிந்த சடாமகுடத்தையுடையகயிலாசபதியும அவ்விடப்பாகத்திலிருக்கும் உமாதேவியாரும் திருவுளத்தில்மகிழ்கூர்ந்துநோக்கும்படிபொன்னொளியையுடைய விமானத்தோடும அம்மாதினைச்சேர்த்தினர்கள்-எ-று சசு

அருந்தவமன்னகேளாஃ யவணிலை யிஃதுநீயும்
வருந்தல்கோகன்னமென்னும் வளநகர்மருவியீசன்
திருந்துபூசனைபுரிந்து சிவசிசித்துயிலைநீக்கி
யிருந்துஙைபந்தளிர்வில்வத்தா லருச்சிகின்னின்னனீக்கும்

இ-பு அருமையாகியதவஞ்செயதமன்னவனேகேள் அந்தப்புலைச்சியினிலைமை யித்தன்மையாயதுநீயும்வருந்த வேண்டுவதில்லைகோகன்ன மென்கி

ற வளப்பம்பொருந்திய தலத்திற்சேர்ந்து நம்மிறைவனுகிய மாபலலிங்கே சன்ஏற்றுக்கொள்ளத்தக்கபூசை சிவராத்திரியிறசெய்து நித்திரை நீங்கியிருந்து பசுமைநிறமுள்ளவில்வத்தளிரினுல் அருச்சனைசெய்தால் உன்னுடையதுன்பம் நீங்கும்-எ-று, சஎ

வேறு.

என்றுவீறுயர்கோகன்ன மான்மியமியம்பிக்
கொன்றைவேணியன் சிவநிசிவிரதமுங்கூறி
வென்றிவேன்மனுவேந்துக்கு விடைகொடுத்தருளிச்
சென்றுகோதமன் மிதிலையங்கடிநகர்சேர்ந்தான்

இ-பு இவ்வாறுஇன்பமிகுந்த கோகன்னமான்மியத்தைச்சொல்லிப் பின்னும் கொன்றைமாலையணிந்த பரமசிவனுடையசிவராத்திரிவிரதமான்மியமுஞ்சொல்லி வெற்றிபொருந்தியவேலாயுதத்தையுடைய மனுச்சக்கரவாத்தியையொத்த அரசனுக்குஉத்தரவுகொடுத்தனுப்பிவிட்டுக் கோதமரானவர் அவ்விடம்விட்டுச்சென்று காவலைக்கொண்ட அழகியமிதிலைப் பட்டணத்துக்குப் போனுர்-எ-று. சஅ

ஓகைவாரிதிபடிந்தக மகிழ்ந்துவேலுரவோன்
பூகவார்பொழிற்கோகன்ன மாநகர்பொருந்தி
மாகமாமதிச்சிவநிசி வரன்முறைநோற்றுச்
சோகமேதருபழவினை முழுவதுங்கொலைத்தான்

இ-பு கவுதமர்போனபின்பு வேலாயுதத்தையுடைய திண்மையுள்ளஅவ்வரசனுனவன் கமுகமரமுதலாகிய விருட்சங்கள்நெருங்கிநீண்டசோலைகள் சூழ்ந்த வளப்பம்பொருந்திய கோகன்னமென்னுந் தலத்திற்போய்ச்சேர்ந்து பெருமைதங்கியமாசிமாதச் சிவராத்திரியிலமுறைமைப்படி விரதமனுஷ்டித்து ரிஷிபுத்திரனைக்கொன்ற பாதகத்தைநீக்கியதுமல்லாமல முன்சனனங்களிற்செய்த சோகத்தையேதருகின்றபழையதீவினைகளையெல்லாம் நீக்கினுன்-எ-று. சகூ

மூன்றுவது-சிவராத்திரியிற்கன்மாடபாதராசன்

முத்திபெற்ற அத்தியாய

முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - கஎக.



உ

சிவமயம்

நான்காவது

# சிவராத்திரியில்விமரிசன்

## முத்திபெற்றஅத்தியாயம்

---

கருமணியனையகண்டன் கதையினையிவ்வாறென்று
தெருளுறச்சூதன்சொன்னான் றெளிந்தனர்கேட்டுப்பின்னும்
இருவினைதொலையவின்னு மீசனருளிதற்கேய்ந்து
வருகதைபுகறியென்ன முனிவரர்வழங்கலோடும்

(இ-பு)நீலரத்தினம் போன்ற கண்டத்தையுடைய மகாபல்லிங்கநாதன் சரித்திரமாகிய சிவராத்திரிமான்மியம் இம்முறைமையையுடையதென்று தெளிவுறும்படி சூதமுனிவர்சொன்னார் அதைநைமிசாரணிய முனிவர்கள்கேட்டுத தெளிந்தவர்களாய் பின்னும முனிவரே எங்களிருவினைகளுநீங்கும்படி பரமசிவனுடைய கிருபையைப் பெறத்தக்கதாக நடந்திருக்குஞ்சரித்திரங்களையின்னமும் நீர்சொல்லுமென்றுசொல்லவும்(மேல்சூத முனிவர்சொல்லததொடங்கினார்) எ-று. க

வேறு

சிவநிசியளவையு மன்பர்செய்கையு
நுவலருந்தகையவா மெனுநுவன்றனம்
புவனியிலரன்றிருப் பூசைகண்டொரு
தவமிலான்பெற்றமை சாற்றுவாமரோ

(இ-பு) சிவராத்திரி மான்மியமும் அந்தவிரதம் அனுஷ்டித்த அடியார்கள் செய்கையுஞ் சொல்லுதற்கரிய பெருமையையுடையதுகளாயிருந்தாலும்(எமக்குத்தெரிந்தமட்டில் சொன்னோம்) இனி இந்தவுலகத்தில்பரமசிவனது சிவராத்திரி பூசையைக்கண்டு தவமில்லாதவனாகிய ஒருவன் அடைந்ததன்மையைசசொல்லுகிறோம்—எ-று. உ

பாரிடைக்கிராதர்தம்பதிக்குநாயகன்
பேரிகல்விமரிசனென்னும் பெற்றியோன்
சோரிவேற்றுனையான் றுரகத்தேரினான்
மாரியினிருநிதி வழங்கும்வண்கையான்

இ-பு இவ்வுலகத்திலிருக்கும் வேடரூர்க்கு நாயகனாயிருப்பவன் மிகுந்தவலியையுடைய விமரிசனென்னும் பெயரையுடையவன் பகைவர் உதி

ரத்திற்படியத்தக்க வேலேந்துஞ் சேனையை உடையவன் குகிகாகட்டிய தேரையுடையவன் இரப்பவர்க்கு மேகம்போல மிகுந்த திரவியங்களைக் கொடுக்கும் வளப்பம்பொருந்திய கையையுடையவன்—எ-று இன்னும் எத்தன்மையுள்ளவனென்றால் ௫

தீதுறுதசைவளா வின்றித்தினம்பதாற்
கோதுறுவேட்டையிற் புரிந்தகொள்கையான்
வேதியர்மகளிரே முதலவெம்புலை
மாதரீறனுதினமருவும்வேட்கையான்

இ-பு குற்றம்பொருந்திய மாமிசங்களை அளவில்லாமல் தின்பதினால் பழுதுபடாத வேட்டையில் விருப்பங்கொண்ட செய்கையையுடையவன் இதுவுமல்லாமல் பிராமணஸ்திரிகள் முதல்கொடிய நீச்சஸ்திரீக ளிறுதியாகச்சொல்லபபட்ட எல்லாவகைச் சாதிஸ்திரீகளையும்) நாளதோறும் புணருகின்ற ஆசையையுடையவன்—எ-று ௬

ஏழிரண்டாங்கிழி யெதிர்ந்தஞான்றெலாஞ்
சூழியங்கடகரி யுரித்ததோன்றலை
வாழியவெனவிசேடித்து மாட்சியாற்
பாழியம்புயத்தவன் பூசைபண்ணுவான்

இ-பு பலம்பொருந்திய அவ்வரசன் மேற்கூறிய கொடிய செய்கையையுடையவனாயிருந்தாலும் சதுர்த்தசிவருகின்ற நாளிலெல்லாம் முகபடாங் கட்டத்தக்கதாகிய கபோலமதத்தையுடைய யானையையுரித்த பரமசிவனை சங்கரவாழ்கசம்புவாழ்கசதாசிவவாழ்க என்று சிவநாமங்களை யெடுத்துத் தோத்திரஞ்செய்துமாட்சிமையுடன்பூசைசெய்வான்—எ-று அம் சாரியை மாட்சிமையுடன் பூசைசெய்தலாவது பூசாத்திரவியமுதலாகிய உபகரணங்களுற குறைவில்லாமற்செயகுதலாம் ௭

பூசனையிறுதியிற் புளகமீக்கொள
ஈசனையேத்துநின்றாடு மேழிசை
மாசறப்பாடும்பின் வணங்குமற்றவ
னேசமித்துணையென நிகழ்த்தறபாலதோ

இ-பு இவ்வாறுசெய்யும் பூசையின் முடிவில் உடலில் புளகமுண்டாகும்படி பரமசிவனைத் தோத்திரஞ் செய்வான் நின்றுக்கொண்டு(பரதசாஸ்திரத்தின்கிரமப்படி) கூத்தாடுவான் சத்தசுரங்களும்வழுவாமல் கீதங்கள்பாடுவான் பின்பு (அஷ்டாங்கபஞ்சாங்கத்துடன்) பணிகுவன் அவனுடையசிவநேசமிவ்வளவென்று அளவிட்டுச்சொல்லும்பான்மையையுடையதல்ல—எ-று. ஏழிசையாவன சட்சமம் ரிஷபம் காந்தாரம் மத்திமம் பஞ்சமம் தைவதம் நிஷாதம் என்பனவைகளாம் ௮

இன்னணம்புரிந்தவ னிறைமைபூண்டுதன்
செந்நெறிச்செய்யகோ றிசைகண்மீச்செல
நன்னெறியாவரு நடப்பநன்கிலாப்
புன்னெறிதுறந்தறம் புரக்குநாளினே

இ-பு இப்படிமுறைமையாகப்பூசைசெய்கின்றவன் அரசாட்சிசெய்யுந்தன்மையினையுடையவனாய்ச் செவ்வையானமுறைமையை நடத்துகின்ற தன் செங்கோலானது திக்குகளெங்குஞ்செல்லவும் எல்லாரும்நன்மார்க்கத்தில் நடக்கவும் நன்மையில்லாத தீயநெறிகளையெல்லாம் நீக்கித்தருமத்தைப் பாதுகாக்குநாளில்—எ-று. செங்கோலென்பது ராஜநீதி அந்தநீதி ஒருபக்ஷத்திலசாயாமல் தராசுகோல்போலச் சமமாயிருக்கதலால் செங்கோலென்றுசொல்லப்பட்டது. ௭

வேறு

ஆண்டகைகுமுதவதியெனுமனைவி யவனடிதொழுதிகல்வேலோய்
காண்டகுவனப்பினீதியிற்றவத்திற் கல்வியினறிவினேரில்லாய்
சேண்டருபிறையான்பூசனைவழாது செய்யுநீதீவினைகிடமாய்ப்
பூண்டவூனருந்திநெறியிலாமடவார் போகமேநுகர்வதுபுகலே

இ-பு இயாதொன்றினுக்கும் அஞ்சாத வீரத்தன்மையையுடைய அவ்வரசன்மனைவியாகிய குமுதவதியென்பவள் (ஒருநாள்) தன்கணவன்பாதத்தைத்தொழுது இயாவரும்வியப்புடன் பார்க்கத்தக்கஅழகிலும்நீதியிலும் தவத்திலும்கல்வியிலும் அறிவிலும்ஒப்பில்லாதவனே தேய்வதும் வளர்வதுமில்லாமல் எக்காலமும்ஒரேதன்மையாயிராநின்ற இளந்திங்களையணிந்திருக்கும் சந்திரசேகரனாகிய பரமசிவனுடையபூசையை ஆகமவிதிப்படி செய்கின்றநீர் பாவத்துக்கிடமாய்ப்பொருந்திய மாமிசங்களைத்தின்று முறைமையில்லாமல் ஸ்திரீகள்போகங்களையே அனுபவிக்கின்றது (என்னகாரணம்)சொல்லும்—எ-று. சேண்டருபிறை ஆகாயத்தில் ஊரும்பிறையெனினும் அமையும் ௮

என்றவளுரைத்தவாசகங்களோ டிறைமகன்குறுநகைகோட்டித்
குன்றெனவுயர்ந்தகுவிமுலைமடவாய் கூறுவல்கேட்டிநீயென்னா
முன்றவப்பயனாலிறந்ததுநிகழ்வு முன்வருங்காலமு முணர்ந்தேன்
அன்றுமுற்பவத்தேசோர்ணமுகலியாய்ப்பம்பையநகரதனின் வந்துதித்தேன்

(இ-பு) இப்படிக்கொத்த பாவகிர்த்தியங்களைச்செய்வதற்குக்காரணமென்ன)சொல்லுமென்று தன்மனைவிசொன்னவார்த்தையைக்கேட்டு அவ்வரசன்புன்னகைசெய்து பொன்மலைபோல்உயர்ந்து குவிந்தஸ்தனங்களையுடையபெண்ணே நான்சொல்லுகிறேன் கேளென்றுபூர்வஞ்செய்ததவப்பயனால் இறந்தகாலமும்நிகழ்காலமும் எதிர்காலமும் அறிவேன்முன்பிறப்

பாகிய அந்தநாளில் (நான்என்னபிறப்பையுடையவனு யிருந்தேனென்றால்)ஒருநாயாய்ப்பிறந்து அழகுள்ளதாகிய பம்பைநகரத்தில் வாசமாயிருந்தேன்——எ-று. ௰

மால்யன்காணுவடிமுடிக்குரிசின் மதியணிபம்பைநாயகன்றன்
ஆலயங்குறுகிப்பலிக்கிடுமடிசி லருந்துவான்புகுந்திடுமளவிற்
காலவன்றூதரிவரெனக்கண்டோர் கல்லினற்கதையினற் றாப்ப
ஓலொடுவெருவியாலயம்வலங்கொண் டோடினே னுயிர் பிழைத்துய்வான்

(இ-பு) பம்பைநகரத்தில்வாசமாயிருக்கும்போது-விஷ்ணுபன்றி உருவங்கொண்டு பாதாளத்தைப் பிளந்துகொண்டுபோய்த் தேடியுங்காணப் படாத திருவடிகளையும் பிரமன்-அன்னமாக-உருவங்கொண்டுபறந்துமேலுலகம்போய்த் தேடியுங்காணாத திருமுடியையுமுடைய இறைவனாகியபம்பையென்னுந்தலத்தில் வீற்றிராநின்ற பரமசிவனது ஆலயத்திற்சேர்ந்து பலிக்காகவைக்கும் அன்னத்தை உண்ணச்சென்றகாலத்தில் யமனுடைய தூதரிவர்களென்று சொல்லும்படி என்னைக்கண்டவர்கள் கல்லினாலும்தடியினாலும் அடித்துத்துரத்த நான்பயந்து குரைத்துக்கொண்டுஉயிதப்பிப் பிழைக்க அந்தஆலயத்தை வலமாகச்சுற்றிக் கொண்டோடினேன்——எ-று

சினகரமொருவிப்போகுவான்வழிக ணேடினேன்கண்டிலேன்றிகைத்தே
மனவலியிளைத்துப்பலிசொரிபீட மருங்குநின் றீசனைநோக்க (ன்
அனகனுக்கன்றுசிவநிசியாகவருஞ்சுடர்த்தீபமோரெடுத்தல் (ன்
வினையறக்கண்டேன்கண்டுழியொருவன் வெஞ்சரந்துரத்தலும் விளிந்தே

(இ-பு) ஓடினநான் அந்தஆலயத்தை நீங்கிப்போவதற்குவழிகள்தேடிக் காணமல் திகைத்து மனவலியும் இளைத்துப் பலிபோடுகின்ற பீடத்தின் அருகில்நின்று சிவலிங்கப்பெருமானைப்பார்த்தேன் அன்றுசிவராத்திரியாதலினால் நிர்மலனாகிய அந்தசிவலிங்கப்பெருமானுக்கு (யாவருந்தரிசனஞ் செய்யக்)கிடைப்பதற்கரிய சுடரினையுடைய தீபாராதனைமுதல் சிலஆராதனைசெய்வதை என்பாவங்களெல்லாம் நீங்கும்படிகண்டேன் அப்படி கண்டவளவில்(ஒருவன்வில்லைவளைத்து) கொடியபாணத்தைப்பூட்டிப் பிரயோகஞ்செய்ய'அது என்மேல்தைத்தவுடன்)நானிறந்தேன்——எ-று. ௰௧

அருஞ்சுடர்த்தீபமெடுத்தபூசனையி னமலனைமாலயம்போது
விரிஞ்சனுங்காணாவணிமுடிகழியேன் விளிந்திடும்வேலைகண்டதனற்
பரஞ்சுடர்கோயில்வலங்கொளப்புகுந்த பண்பினாற்பாரினிற்பகைஞ
ருரஞ்சுடுவெண்டுவேலிறைவனாயுதித்தேன்காலமூன்றினையுமுற்றுணர்ந்தேன்

இ-பு. அப்படியிறக்குஞ்சமயத்தில் பிரதோஷகாலமாகிய அந்திப்பொழுதில் செய்யுஞ்சோடசோபசாரத்திலொன்றாகிய அரியசுடர்த்தீப மேந்தியபூசா காலத்திற்பிரமனுலுக்காணப்படாதபரமசிவனுடையதிருமுடியைத் தமியேனாகியநான் தரிசித்ததினாலும் அந்தப்பரஞ்சுடர்வீற்றிருக்கும் ஆலயத்தைப்பிரதட்சணமாக வந்ததன்மையினாலும் இந்தவுலகத்தில் பகைவருடைய மார்பைச்சுடத்தக்கநெடியவேலாயுதத்தையுடைய அரசனாகப்பிறந்தேன் அவ்வாறுபிறந்ததிலும்திரிகாலங்களையும் அறிந்தவளானேனென-று(

ஆதலானிந்தநல்வினைப்பலத்தை யளித்ததுசிவநிசியென்று
மாதராயின்றும்வருமதிதோறும் வளாபிறைதேய்பிறையிரண்டிற்
போதுமப்பக்கமேழிரண்டெய்தின் பொருந்துமச்சிசிவநிசிபோவ
மேதகுபூசையனுதினந்தன்னின் விசேடமாய்வழிபடுகின்றேன்

இ-பு, ஆதலால்பெண்ணேசிவராத்திரியானதுஉலகத்தில்இழிவுள்ளசெந்துவாகிய நாயாகப்பிறந்திருந்தநமக்கும்இப்படிக்கொத்தராச போகத்தை அனுபவிக்கத்தக்கநல்வினைப்பயனைக் கொடுத்ததென்றுட்கொண்டுஇந்தப் பிறப்பிலும் மாதமாதம்வருகின்றபூர்வபக்ஷம்அபரபட்சம்என்னுமிரண்டு பட்சத்திலும் வருகின்றபதினான்காந்திதியாகிய சதுர்த்தசிதிதியில் மாசிமாதத்தில் பொருந்துகின்றமகாசிவராத்திரியில் பூசைசெய்வதுபோல மேன்மைபொருந்திய சிவபூசனைநாள்தோறுஞ்செய்துவருவதிலும் விசேஷமாகச்செய்து வருகின்றேன்-எ-று ௰௩

இன்னணம்புரியும்பூசையிற்றீமை யகலுமோவெனவினவுதியேன்
மன்னனைக்கயிலைவாதனைவழுத்தின் மலையெனக்குவித்தவித்தனத்தைச்
செந்நிறப்பொறிந்தீநுழைந்துநீறுக்குஞ் செய்கைபோற்பவமெலாந்தீர்க்கும், அன்னதாலீயுமரனடிக்கமலத் தருச்சனைபுரிதியாரணங்கே

இ-பு தெய்வப்பெண்களையொத்தவளே இவ்விதமாகச்செய்யும்பூசையினால் பாபங்கணீங்குமாவென்றுகேட்டபையாகில்சொல்லுகிறேன்கேள்தேவர்களுக்கெல்லாம்இறைவனும் ஸ்ரீகைலாசத்தில்வீற்றிருக்கும தேவசிரேஷ்டனுமாகிய சாம்பசிவமூர்த்தியையொருதரம் தோத்திரஞ்செய்தால் அந்தத்தோத்திரத்தின்பலன் மலைபோலப்பொரிட்ட விறகுகளைச் செம்மைநிறமுடன் பொறிகளையுடையதீயானது அந்தப்பொருக்குள்நுழைந்து சாம்பலாக்கிவிடுந் தன்மைபோல்பாபங்களையெல்லாம் நீக்கிவிடும்.ஆகையால்நீயும்பரமசிவனுடைய திருவடித்தாமரைகளில் அருச்சனைசெய்-எ-று ௰௪

என்றதுகேட்டதுடியிடைமடவா ளினிதிலமுறுவன்முன்றோன்ற
மன்பதையுள்ளாங்காலமூன்றுண ரவல்லையெனக்குமுற்பிறப்பின

வன்புறுதோற்றமுழுதனையென்ன மல்லிகார்ச்சுனவரன்மன்னி
யின்புறுகோயிற்புறவதாயுதித்தாய் கிருந்தநீயின்றகவர்ந்துணபான்

இ-பு இவ்வாறுதன்கணவன்சொன்ன வார்த்தையைக்கேட்ட தமருகம்போன்றஇடையினையுடையஅம்மாதானவள் சந்திரனதுஇளங்கதிர் நிலாப்போல் புன்சிரிப்புவிளங்கநின்மனிதர்கள்நினைக்கும் திரிகாலங்களையும் அறியமாட்டுவீராகுல் எனக்குமுன்பிறப்பில் என்னசென்மம் நேரிட்டிருந்ததோ அந்தச்சென்மத்தையும் அதில்கடந்தசெய்திகள் யாவையும் சொல்லுமென்றுவினவ மல்லிகார்ச்சுனேஸ்வரர்கிருபையுடன்வீற்றிராநின்ற கோயிற்புறவாகப்பிறந்து அவ்விடத்திலிருந்த நீஒருநாள்இரைதேடியுண்ணுவதற்காக-எ-று. ௯௫

செந்நிறத்தசையொன் றெடுத்துநீவாலுஞ்சினவிழியொருவைவந்தணுகி
யனனதுவலிதிற் கவர்வெனன்றுனையழன்று பின்றொடர்தலும்வெருவிப்
பொன்னெடுங்கோயில்வலங்கொடுபறந்துபொருவிடைக் கொடிநெடுங்கம்
துன்னுபுகாந்தங்கொதுங்கிநீயிருப்பத்தொடர்ந்தமக்கங்கமுங்கண்டே. (பந்

இ-பு செம்மைநிறத்தையுடையஒருமாமிசத்துண்டினைநீயெடுத்துக்கொண்டு வரும்போதுகோபம்பொருந்துதலால்சிவந்தகண்களையுடைய ஒருபருந்துவந்துசேர்ந்து அந்தமாமிசத்தைக்கிரகித்துக்கொள்ளுவனென்றுகோபித்து உன்னைப்பின்தொடரவேநீபயந்து பொன்னாற்செய்யப்பட்ட அந்தப்பெரியகோயிலைப் பிரதட்சணமாகப்பறந்துபோய்ப் போர்செய்யத்தக்கரிஷபக்கொடிகட்டும்பெரியகம்பத்தில்தங்கி மறைந்தொருபக்கத்திலிருந்தனை அப்படிமறைந்திருந்தும் உன்னைத்தொடர்ந்துவந்தபருந்துகண்டு (எ-று.()

சூழிமால்கரியின்றோட்டியிற்கூர்ந்ததுவண்டவெம்படையினுற் கொத்தி
வாழியவுன்னையுயிர்செருத்தந்தவன்றசை கழுகுகொண்டேக
வீழுநீயீசன்சன்னிதிப்பட்டு விளிதலான்முன்வலஞ்செயலால்
ஆழிநீருடுத்ததாரபதிமகளாயவதரித்தெமமையுமடைந்தாய்

இ-பு அப்படிகண்டபருந்தானதுமுகபடாங்கட்டியயானையைக்காத்துநிற்கின்றகுசத்தைப்போலக்கூர்மையுள்ள தன்மூக்காகிய வெவ்விய ஆயுதத்தினால்உன்னைக்கொத்திஉயிரைக்கொன்றுநீ கொண்டுவந்தகொழுத்தமாமிசத்தைப்பிடுங்கிக்கொண்டுபோய்விட அதுசமயத்திலிருந்துவிழுகின்றநீசிவசந்நிதிக்கெதிரில் விழுந்துஇறந்ததினாலும்முன்னேபிரதட்சணஞ்செய்தலினாலும் நீர்நிறைந்தசமுத்திரஞ்சூழ்ந்தபூமிக்கிறைவனாகிய ராசன்புத்திரியாகப்பிறந்து அரசனுயிராகின்றஎன்னையும்விவாகஞ்செய்துகொண்டாய் எ-று. வாழியமுன்னிலையசை ௯௭

வேறு

இவ்வாறுகொற்றமுடி மன்னனிறுக்தலேடுஞ்
செவ்வாய்மழலைக்கிளி யன்னவள்செப்பலுற்ருள்
ஒவ்வாதவும்மையுட னின்மையுமுற்றுணர்ந்தேன்
எவ்வாறினிமேலிருவோரு முதிப்பதென்ருள்

இ-பு வெற்றியுள்ளமகுடவர்த்தனனுகியஅரசன்இப்படிசொன்னவுடன் சிவந்தவாயையும்மழலைச்சொல்லையுமுடையகிளியொத்தவள் சொல்லுகின் ருள்ஒவ்வாததாகியமுன்பிறப்பும் இப்பிறப்புநன்ருக அறிந்துகொண்டே ன்இனிமேல்நாமிருவரும்எவ்விதப்பிறப்பாகச்செனிப்போபென்ருள்எ-று மேல்அரசன்சொல்லுகிருன். கஅ

கேளாயிரண்டாம்பவத்தன்மை கிளத்துவனியான்
வாளார்விழியாயபுகழ்ச்சிந்து நன்னுட்டுவந்து
தாளார்கழன்மாமுடிமன்னவர் தாழ்ந்திறைஞ்சுந்
தோளாடல்வேந்தாயரசாள்வ னித்தொல்லைஞாலம்

இ-பு வாளொத்தகண்களையுடைய பெண்ணே இனிவரும்இரண்டாம்பி றப்பின்தன்மையைநான்சொல்லுகிறேன்கேள் புகழ்தங்கியநல்லசிந்துதேச த்தில்பிறந்து வீரகண்டைகட்டியகாலையும்பெரியகிரீடம்அணிந்தசிரசினை யுமுடையஅரசர்கள்தாழ்ந்துவணங்கும்படியான வெற்றிபொருந்திய தோ ள்வலியையுடைய மன்னவனுகிப்பழையதாகியஇந்தப்பூமியானது என்னு க்கினைக்குட்படும்படி அரசாட்சிசெய்வான்-எ.று. கசு

சொல்வார்நறும்பூங் குழற்காமருசெல்விநீயு
மல்லார்புயன்றஞ் சயன்றந்தமடந்தையாகித்
தொல்லாரணத்தின் முறையேதொடைசூட்டியெற்கே
யில்லாகிமுல்லைவட மீனினியைந்துவாழ்வை

இ-பு நீருண்டமேகம்போற்கறுத்து வாசனைதங்கியபூமாலையணிந்தஅள கபாரத்தையுடையஅழகியபெண்ணே, நீயோவென்ருல், பலம்பொருந்தி ய தோளையுடையதஞ்சயனென்னும் அரசன்புத்திரியாகிப்பழையவேத விதிப்படியெனக்கே மணமாலைசூட்டிமனைவியாகி முல்லைப்பூமாலையணிந் த அருந்ததிபோலக் கற்புள்ளவளாய் வாழ்குவை-எ-று-அந்தப்பிறப்பு நீங் கினபின்பு. உ௰

வேறு.

பாசிழைப்பரவையல்குற் பனிமொழியணங்குகேளா
யாசின்மூன்ரும்பவத்தி லணிகவுராட்டிநாட்டில்

வாசவன் றிருவின் மிக்க மன்னனாய்த் தோன்றியந்தக்
காசினிமுழுதும்பானே பொதுவறக்காவல்பூண்பேன்

இ-பு பைம்பொன்னாற்செய்யப்பட்டமேகலாபரணம்அணியும் பரந்த அல்குலையும்குளிர்ச்சிதங்கிய வசனத்தையுமுடையபெண்ணே? இன்னமுஞ்சொல்லுகிறேன்கேள குற்றமில்லாதமூன்றும்பிறப்பில் அழகியசவுராட்டிநாட்டில் தேவேந்திரன்செல்வத்திலுமிகுந்த செல்வமுள்ள மன்னவனாய்ப்பிறந்து அந்தத்தேசமுழுவதும் பொதுவின்றி நானே அரசாட்சிசெய்வேன்-எ-று. ௨௧

சொங்குடைத்தொழுரும்பைந்தார்க் குவிமுலையணங்கேநீயு
மங்குல்கணபடிக்குந்தண்கா வளந்திகழ்கலிங்கநாட்டிற்
செங்கைவேற்கலிங்கர்கோமான் றிருமகளாகத்தோன்றி
யங்கெனக்குரிமையாகி வைகுவையளப்பில்காலம்

இ-பு மூறுக்குடைந்துதேனொழுகா நின்றபசியபூமாலையணிந்த குவிந்த தனங்களையுடையபெண்ணே, நீயும்மேகம்நித்திரைசெய்யும்படி உயர்வதாகிய குளிர்ச்சிபொருந்திய சோலைகள்சூழ்ந்தவளப்பமிகுந்தகலிங்கதேசத்தில் வேலேந்தியசெங்கையையுடைய கலிங்கராசனுடையதிருமகளாய்ப்பிறந்து அந்தசென்மத்திலும்எனக்குரிமையுள்ளமனைவியாகி அளவில்லாதகாலம் வாழ்ந்துகொண்டிருப்பதை-எ-று. மேகம்நித்திரைசெய்தலாவது நீங்கமால்சூழ்ந்துக்கொண்டிருத்தல். ௨௨

குழலினிற்பாகிற்றேனிற் குயிலினிலமிழ்திற்றோய்ந்த
மழலையஞ்சொல்வாய்நாலாம்பவத்தினின்மணிசெய்மாட
நிழலிருள்சீக்குஞ்செல்வி நிறைந்தகாந்தார்நாட்டிற்
கழல்புனைத்துணைத்தாள்வைவேல் விறைவனாயுலகங்காப்பேன்

இ-பு அந்தமூன்றும்பிறப்பு நீங்கினபின்புவேய்ங்குழலினிசையிடத்தும் வெல்லப்பாகினிடத்தும் தேனினிடத்தும்குயிலோசையினிடத்தும் தேவாமிர்தத்தினிடத்தும் தோய்ந்ததுபோலமிகுந்தமதுரம்பொருந்திய மழலைச் சொற்களையுடையவளே நாலாவதுபிறப்பில்ரத்தினங்கள் பதித்திருக்கும் மாளிகைகளின்ஒளியானது இருளைக்கெடுக்கும்படியான அழகுநிறைந்த காந்தாரதேசத்தில் வீரகண்டையணியுங்கால்களையுடைய கூர்மைபொருந்தியவேலாயுதமேந்தும் அரசனாகிப்பூலோகத்தைரட்சிப்பேன்-எ-று. ௨௩

நஞ்சினிலமிழ்திற்றோய்ந்து நலந்திகழ்கெடியவாட்கண்
வஞ்சிநுண்ணிடையாய்நீயு மகதர்கோன்மகளாய்த்தோன்றி
யஞ்சனக்கடல்சூழ்வைய மளிக்குமென்மனைவியாகிப்
பஞ்சின்மெல்லடியாற்போற்றப் பரிவுடன்வாழ்வையாதே

இ-பு விஷத்திலும் அமிர்தத்திலுந்தோய்ந்து அழகுடன்விளங்குகின்ற நெடியவாள்போன்ற கண்களையும்பூங்கொடிபோன்ற இடையினையுமுடையவளே நீயுமமகததேசாதிபதிமகளாய்ப்பிறந்து கருமைநிறமுள்ள கடல்சூழ்ந்த இவ்வுலகத்தைரட்சிக்கும் என்மனைவியாகிப்பஞ்சினைப்போல மிருதுவாகிய பாதங்களையுடைய மாதர்கள்போற்றப் பரிவுடன் வாழ்குவை எ-று பொதுவாகநோக்குமபோது வருத்தத்தையுண்டாக்கிப் பின்புவிருப்பத்துடன் நோக்கினால் அவ்வருத்தத்தைநீக்கிமகிழ்ச்சியைத்தருஞ்செய்கையையுடையதாதலின்நஞ்சினிலமிழ்தினிற்றோய்ந்துநலந்திகழ்கண்ணென்றது

வேறு.

பண்ணியன்மகரவீணையுங்குழலும்பழுத்தமுதளவிபகுதலைப்
பெண்ணணங்கைந்தாம்பிறப்பினிலவந்திப்பெயருடைப்பெரிய நாடளிக்கு
அண்ணலஞ்செங்கோலரசனையாளுவருவனிதசாருஞ்மகளாய்
மண்ணணியவிழவில்மாலையென்புயத்தில்வளைகுவைமணிக்கிளி திருப்போ

இ-பு அந்தநாலாம்பிறப்பு நீங்கினபின்பு இசைபாடுகின்ற இயலையுடையமகரவீணையைப்போலவும் வேய்ங்குழலைப்போலவும்பாலுமொழிந்த தேவாமிர்தத்தைக் கலந்ததுபோலிராநின்றதுகலைச்சொற்களையுடைய பெண்ணங்கே ஐந்தாம்பிறப்பில்அவந்தியென்னும்பெயருள்ள பெரியதேசத்தை அளிக்கும்பெருமைபொருந்திய அழகியசெங்கோல்செலுத்தும்ராசனாகநான்பிறப்பேன் நீகசாருகனென்னும அரசன்மகளாய்ப்பிறந்து அலங்காரம்செய்தகல்யாணமண்டபத்தில் என்புயங்களில்மாலைசூட்டுவை அதற்குமேல்நாமிருவருங்கூடிவாழ்குவோம் எ-று வீணைகளுள்பெரும்பான்மையாகச் சொல்லப்பட்டவீணை ச-அவை- பேரியாழ்-மகரயாழ்- சகோடயாழ்-செங்கோட்டியாழ்-என்பனவைகளாம் உரு

சிறுப்பான்மையானவரும் யாழுமுள

வெண்பா

பேரியாழ்பின்னு மகரஞ்சகோடமுடன்
சீர்பொலியுஞ்செங்கோடுசெப்பினர்தார்பொலிந்து
மன்னுந்திருமார்பா வல்லகூடற்கோமானே
பின்னுமுளவோ பிற

பெரியாழிற்குநரம்பு-உக- மகரயாழிற்கு-கள-சகோட

யாழிற்கு-கசு-செங்கோட்டியாழிற்கு- எ

ஒன்றேறிருப்பதமேழ்மேற்பத்துடனே
நின்றபதினேழுநேடுங்காற்றுன்றுக

நாலுவகையாழிற்குநன்னரம்புசொன்முறைமைய
மேல்வகைநூலோர்விதி

குழலானது-மூங்கில்-சந்தனம்-வெண்கலம் - செங்காலி - கருங்காலி

என்னுமிவைகளில் ஒன்றாற்செய்யப்படுவது

வாங்கியமூங்கிலு மாசந்தம்வெண்கலமும்
பாங்குடைச்செங்காலிகருங்காலிபூங்குழலாய்
கண்ணனுவந்தகழைக் கிவைகளாமென்பார்
பண்ணமைந்தநூல்வல்லோர்பார்த்து

மூங்கிலினாற் செய்வதேஉத்தமம் - இவைசிலப் பதிகாரத்திற்காண்க

வாளென்னத்துளங்கிக்குருதிதோய்வேலின்வரிபரந்தமுதொடுவிடத்தின்
கோளுறப்பிறழுநெடுங்கணையாறாங் குலப்பிறப்பதத்தியானந்த
நீள்பெயர்நாட்டிற்காசனாய்வருவனீயும்போயயாதிகன்னிகையாய்
நாளணிவிழவினல்லணியணிந்தென் னன்மனையாகிவாழ்குவையால்

இ-பு வாளாயுதம்போலவொளிபொருந்தியும் பகைவருதிரந் தோயத்தக்க வேலாயுதம்போல்வலிபொருந்தியும்அமுதம்போலநன்மையைத்தருவதும் விஷம்போலத்தீமையைத்தருவதுமாகப் பிரகாசிக்கும் நெடியகண்களையுடையநாயகியே ஆறாவதாகியமனிதகுலப்பிறப்பில்நான் அஸ்தனாபுரியினுக்கு மன்னவனாய்வருவேன் நீயும்யயாதிராசன்மகளாய்ப்பிறந்து அலங்காரஞ்செய்யும் கலியாணத்தில் நல்லமுகூர்த்தத்தில் மாங்கலியசூத்திரந்தரித்துகொண்டு என்னுடையநல்லமனைவியாய் வாழ்வையென்று சொன்னான் எ-று.(அந்தஆறாம்பிறப்புநீக்கினபின்பு) ௨௬

வம்பைமுனிந்தமுகக்கறுத்த மணிவாரறுத்துமதவேழக்
கொம்பைவெகுண்டதுணைமுலையா யேழாம்பிறப்பிற்கூடற்கோ
னிம்பமணியுங்கமிழ்ப்பாண்டி நிருபன்றனக்குமகனாகி
யம்பைந்தொழிந்தகாமனிவ னென்னவுலகினவதரித்தே

இ-பு கச்சினைமீறியும்முகக்கறுத்தும் அங்கக்கச்சினைச்சேர்ந்து முடியப்பட்டவாரினையறுத்தும் மதமுள்ளயானைக்கொம்பைக்கோபித்த இரண்டாகியதனங்களையுடையநாயகியே ஏழாவதுபிறப்பில் மதுரைக்கிறைவனாகிய வேப்பம்பூமாலையணியும் பாண்டியராசன்புத்திரனாகிப்பஞ்சபாணங்களையுங்கருப்புவில்லையும் ஒழித்துவந்திருக்கு மன்மதனிவனென்று யாவருஞ்சொல்லத்தக்கஅழகுடன் இந்தவுலகத்திற்பிறந்து-எ-று ௨௭

பதுமவருணனெனும்பெயரும்படைத்துப்படைக்குங்கொடைதனக்கு
முதியவெண்ணெண்கலைக்குநிகர் மொழியினிணையில்லைவந்தென்ன
மதியம்வளரும்படியென்பான் வளருநாளின்மாமயினி
நதியம்வளங்கூர்விதேகவள நாட்டிற்கரசன்மகளாக

இ-பு பதுமவண்ணனென்கிற பெயரும்பெற்றுஆயுதப்பயிற்சிலும் தி
யாகத்திலும்பழமையாகிய அறுபத்துநாலுகலைகளிலும்இவனுக்கொப்புச்
சொல்லுவோமானால் வேறொருவருமில்லையென்னும்படி பிறைவளருந் த
ன்மைபோல நாள்வரும்நாளில் பெருமைபொருந்தியமயில்போன்றவளே
நீ ஆற்றின்வெள்ளமிருந்த வளப்பத்தைத்தரத்தக்கவிதேகநாட்டரசன் புத்
திரியாக-எ-று ௨௮

முளரிப்பொகுட்டுவட்டவணைமுருகுநாறு மலர்க்கோயின்
விளரிக்குதலைச்செந்திருவும் விழையுமழகினுடன்பிறந்து
வளருநீயும்வசுமதியென்றொருபேர்புனைந்துவாழுநாள்
தளருமிடைநின்றிருத்தாதையமைச்சருடனேசாற்றுவான்

இ-பு பூங்கொட்டையாகிய வட்டவடிவமுள்ள ஆசனத்தில் வாசனைகம
ழ்கின்றசெந்தாமரைப்பூங்கோயிலில் வீற்றிராநின்ற இராகதத்தையொத்த
குதலைச்சொல்லையுடைய மகாலட்சுமியும்(ஆண்மைத்தன்மைகொள்ளும்ப
டி)விரும்பத்தக்க அழகுடன் பிறந்துவளருகின்றவசுமதியென்கிற ஒப்பற்
றபெயர்பெற்றுவாழும்நாளில்மெலிகின்ற(நுண்ணியதாகிய)இடையினையு
டையஉன்னைப்பெற்றசிறப்புள்ளபிதாவானவன் மந்திரிகளுடன் சொல்லு
வான்-எ-று. ஆடவர்கள்சவுந்தரியமுள்ள மற்றோராடவனைக்கண்டால் தா
ங்கள்ஸ்திரிகளாகப்பிறந்து அந்தஆடவர்களைச்சேரவேண்டுமென்று ஆசை
கொள்வதும்-மாதர்கள் அழகுள்ளமற்றொருமாதினைக்கண்டால் அவ்வாறு
எண்ணுவதும்இயல்பு கம்பராமாயணம்- ஆடவர்பெண்மையையாவுந்தோ
ளினாய் (௨௯)

பாலையனையமொழிக்குமங்கைப்பருவம்வந்ததிதுபோழ்தின்
மாலையணியுஞ்சுயம் வரஞ்செய் மணிமண்டபமுங்கடிதினமைத்
தோலையெழுதித்திசைமன்னர்க்குயமியென்னவாங்கவருங்
காலைமணிமண்டபமியற்றித்துதிரோலை கடிதுய்த்தார்

இ-பு என்னசொல்லுகிறானென்றால் யாழின்மதுரத்தையொத்தமதுர
முள்ளசொல்லையுடைய நம்முடையபுத்திரிக்குஇப்போதுமங்கைப்பருவம்
வந்தது ஆதலால் பூமாலைசூட்டும்சுயம்வரஞ் செய்யும் படியான அழகிய
மண்டபமுமவிரைவாகஏற்படுத்தி கல்யாணஓலையெழுதி ஐம்பத்தாறுதே
சத்துராஜாக்களுக்கும் அனுப்புங்களென்றுசொல்ல(அந்தவார்த்தையைக்

கேட்டமந்திரிகள் அவ்வரசன்நாளுக்குமறுநாள் விடியற்காலமானபோது ரத்தினங்கள்பதித்தகல்யாணமண்டபம்அலங்காரஞ்செய்து விவாகத்தூதர்களுடன் கல்யாணவோலையும் அனுப்பினார்கள் ௩௰

முடங்கற்பொருளையுற்றுணர்ந்துமூரித்தேரின்முடங்குளைய
மடங்கல்வருவதெனத்தமனிகமங்கடபோன்மருங்குலரக்
கடங்கள்கடகதுரகதிகடந்து காடுநாடுங்கழியப்போய்த்
தடங்கொள்விதேககாட்டையுந்தார்வேன்மன்னர்திறம்புகல்லாம்

இ-பு அந்தக்கல்யாணவோலைவந்து சேர்ந்தவுடன் அதிலெழுதியிருக்குஞ்செய்தியை நன்றாகக்கேட்டுணர்ந்து தங்கள்தங்கள்பலம்பொருந்தியதேர்களிலேறிக்கொண்டு வளைந்தகழுத்தின்மயிரினையுடைய சிங்கங்கள்வருதல்போல்தங்களநகரத்திலிருப்பவர்களுக்கூடிக்கடல்போல வரும்படி அருநெறிகடந்தும் கானாறுகள்கடந்தும் காடுகளும்நாடுகளும் பின்னிடப்போய்விசாலமுள்ளவிதேககாட்டில் அடைகின்ற வேலாயுதமேந்துமஅரசர்கள் இன்னாரின்னாரென்றுசொல்லுகிறோம்-எ-று ௩௧

கள்ளக்கருங்கட்கடைச்சியர்வாண் முகம்போற்கமலக்கவின்காட்டி
யள்ளற்பழனந்தோறுமலருமயோத்திநகரமரசாளும்
வெள்ளக்குடைக்கலிச்செங்கோல்வேந்தன்வேந்தர்முடியுழுதாள்
வள்ளற்றன்மையங்குருகுலத்தோர்மருமானரசர்பெருமானே

இ-பு கள்ளத்தன்மையையுடைய கருமையாகியகண்களுள்ளபள்ளஸ்திரிகளின்முகங்களைப்போலசெந்தாமரைமலர்கள் அழகுகாட்டிக் குழைசேற்றினையுடைய வயல்களதோறும்மலருகின்ற அயோத்திநகரத்திலிருந்து அரசாட்சிசெய்கின்ற வெள்ளைக்குடையினையும் தனிமையான செங்கோலையுமுடையஅரசனாகி மறுதேசத்தரசர்களணிந்தமகுடங்கள் படிம்படியான பாதத்தையும் இரப்பவர்முதலானவர்களுக்கு இல்லையென்றுசொல்லாமல் கொடுக்கின்ற பெருமைப்பாட்டினையுமுடையவர்களாகிய கௌரவ குலத்தாருக்கு மருமகனுமாகியமன்னர்மன்னவனும்-எ-று ௩௨

வேறு

வருகுலமகளிர்தங்கண் மனமெனத்திருந்துகோலான்
பெருகுலம்பொருகதிண்டோட்பிறங்கலாவிறங்கோள்வேலான்
முருகுலவாதசெங்கேழ்முண்டகமடந்தைகேள்வன்
குருகுலந்தனழயவந்த குனிசிலைவயப்போர்வேந்தன்

மலைவரம்பாயஞாலவலயத்தில் வரிகொள்வேழச்
சிலைவரங்கொண்டவேளுங் காமுறுஞ்சிந்துவேந்தன்

இ-பு இவ்வளவுபெறுமென்று விலையினளவையறியக்கூடாதவைகளாய் ஒளியினையுடையரத்தினாபரணங்களிருந்து பிரகாசிக்கும்படியான மார்பினையுடையவனும் சாஸ்திரங்களினளவையறிந்த மெய்ம்மையானசித்தத்தையுடையவனும் தருமத்தில்மிகுந்தவனுமாகியசக்கரவாளகிரியை எல்லையாகவுடைய வட்டமாகியஇவ்வுலகத்தில் வண்டுகளாகியநாணிபொருந்திய கரும்புவில்லினால் மேன்மைகொண்டிருக்கும் மன்மதனும பெண்ணுருவங்கொண்டு புணரவேண்டுமென்று விருப்பங்கொள்ளத்தக்க சவுந்தரியமுள்ள சிந்துதேசத்தரசனும்-எ-று- 0 இறைவாநகுகின்றசிந்துதேசத்தரசனை ஒட்டிக்கொள்ளுநகவேளுங்காமுறும்-என்பதனை-ஆடவர் பெண்மையை அவாவுந்தோளினாய் என்பதனாலுமறிக.

கோளுறு மதியநாண்மீன்குழாத்திடைவருவதேய்ப்ப
வாளுறுந் தடக்கைமன்னர்புடைவர வருதிண்டேரான்
வேளுறுவனப்பின்மிக்கான் வரிதிரைவேலைஞாலந்
தோளுறப்பரிக்குமாணைத் துருபதன்சுடர்செய்பூணான்

இ-பு நவக்கிரகங்களி லொன்றாகப்பொருந்திய சந்திரன்நட்சத்திரக்கூட்டத்தினடுவில் வருவதைப்போலவாள்பொருந்தியகையையுடையஅரசர்கள் நாலுபக்கத்திஞ்சூழ்ந்துவரும்படி மத்தியில்வருகின்றபலம்பொருந்திய தேரையுடையவனும்-மன்மதன்பெற்றிருக்கும் அழகினுமிகுந்தஅழகுள்ளவனும் பரவியஅலைகளையுடைய சமுத்திரஞ்சூழ்ந்தபூமிபாரத்தைத் தன்தோளிற்பொருந்தத் தாங்கும்படியான ஆக்கினைசக்கரத்தையுடைய துருபதன்என்னும்பேருள்ளவனுமாகிய பிரகாசியாநின்றஆபரணங்களணிந்திருக்கும் அரசனும்-எ-று. ௩௭

குடைநிழ லிருளைக்காட்ட கனைகழன் மன்னர்செங்கைப்
படைநிழல் வெயிலைக்காட்டச்செல்லும்வாம் பரித்திண்டேரான்
மடைவளர் சங்கமீன்றமணியினைக் கருவென்றன்னம்
அடைகிடந் துலவுநன்னாட்டவந்தியனரசர்கோமான்

இ-பு குடைகளினிழ லிருளைக்காட்டவும்-ஒலிக்காநின்றவீரகண்டையணிந்த காலினையுடைய அரசர்கள்செங்கையிலிருக்கும வாளாயுதமுதலாகிய ஆயுதங்களின்ஒளி அவ்விருள்நீங்கும்படிவெயிலைக்காட்டவும் நால்வகைச்சேனையுடன் செல்லும்படியானதாவுகின்ற குதிரைகட்டியபலம்பொருந்திய தேரையுடையவனும்வயல் மடைகளில் தவழ்கின்றசங்குகளீன்ற முத்துக்களை அன்னங்கள்தங்கள்முட்டைகளென்றெண்ணி அடைகிடந்துசஞ்

சரிக்கும்படியான நல்லஅவந்திதேசத்தையாளுகின்றவனும்மன்னர்மன்னவனுமான ராசனும்-எ-று. ௬அ

கண்ணகன்ஞாலமெல்லாங்கலிகடிந்தருளிற்காத்தோன்
வண்ணநீ ளனத்தினுன்றன்பின்வந்தமழையார்வண்ணத்
தண்ணருளுதித்ததொல்சீ ரொதுகுலமதனிற்றேன்றும்
பண்ணுறுபுலவுவாட்கைப் புரவலனறிவின்மிக்கான்

இ-பு பாபத்தைநீக்கிஉயிர்களிடத்திற் கிருபைவைத்துஇடமகன்ற பூமியெல்லாம் காப்பவனும் அழகியநீண்டகலப்பை ஆயுதத்தையுடையபலபத்திரராமன் பின்வந்தநீருண்டமேகம்போல கருமைநிறமுள்ளகிருஷ்ணமூர்த்தி திருவவதாரஞ்செய்தகீர்த்திபெற்ற பழமையாகியஎதுகுலத்திற்பிறந்த பகைவருடையஉடலூன்றிபுண்ணுண்டாகச்செய்வதற்கேதுவான வாள்பிடிக்குங்கையையுடையவனும்அறிவில்மிகுந்தவனுமாகிய அரசனும்-எ-று

புல்லலிவெகுளிவேகப் புழைக்கைமேற் புலரிக்காலை
யெல்லொளியுதயத்தும்ப ரியைவதேபோலத்தோன்றுங்
கல்லலிதிரடோளாற்றகாவலன்கரும்பின்வேலிப்
பல்லவதேசமாளும்பார்த்திபன் பகைவர்ச்செறறேன்

இ-பு விடியற்காலத்தில்சூரியன் ஒளியையுடையஉதயகிரியில் பொருந்துவதுபோல் புலியையுங்கொல்லுகின்றகோபமும்வேகமுமுள்ள யானையின்மேல்தோன்றுகின்றமலைகளையும்பிளக்கத்தக்கதிரண்டபுசவலியையுடைய காவலனும்பகைவர்களை யுக்தத்தில்கொன்றவனுமாகியகருப்பஞ்சோலைகளை வேலியாகச்சூழ்ந்திருக்கத்தக்க பல்லவதேசத்தையாளும் அரசனும் எ-று ௭௰

காரணங்கடந்தஞானக் கண்ணுதல்சடையின்வாழும்
நீரணங்கூழிகாறுநீக்கறு வளங்கூர்நாடன்
ஆரணம்பகலுநாவினந்தணர்க் களிக்குங்கையான்
வாரணம்பொருந்துதானை வாரணாவாசிமன்னன்

இபு தனக்குமேலொருமுதலில்லாமல்யாவர்க்கும்யாவைக்குந்தானேமுதலாயிராநின்ற நெற்றிக்கண்ணையுடைய பரமசிவன்சடைமுடியில்வாழ்கின்ற நீருருவமாகிய கங்காதேவியானவள் ஊழிகாலம்வரைக்கும்நீங்காமல் பெருகிக்கொண்டிராநின்றவளப்பமிகுந்த நாட்டினையுடையவனும் வேதமோதுமநாவினையுடையபிராமணர்க்குத்தானங்கொடுக்குங் கையையுடையவனுமாகிய யானைகளுள்ள சேனையையுடையவாரணவாசிப் பட்டணத்திலிருக்கும்அரசனும்-எ-று, 0 பிராமணர்கள் அழகிய சாந்தகுணமுள்ளவரி

களாதலால் அந்தணனெனச்கூறினர்-வீரர்கள்போர்க்களத்தில்சண்டைசெய்திறந்தால் வீரசுவர்க்கம் அடையலாமென்கிற அபேட்சைகொண்டு போர்செய்கின்றவர்கள் யானையப்படிக்கின்றதாக அபேட்சையில்லாமல் கோபமிகுதியால் சண்டைசெய்யத்தக்கதாகையால் அரசருக்குள்ளநால்வகைப் படைவுள் யானைப்படையைவிசேஷமகச்சொல்லுவது, சக

கொல்லுலைபகத்திற்காய்ச்சு குருதிதோய்கொடியவேற்கண்
அல்லுருவமைக்கோதை யனக்கனூர்ககமுதமன்னன்
வல்லுடர்கனகக்குன்றத் தொழுதியபழுதிலாற்றல்
வில்லுயர் துவசதிண்டேர் விசலைகொல்லிவேந்தன்

இ-பு கருமானுடையஉலைக்களத்திற்காய்ச்சுபகைவருதிரத்தில் படிகின்றகொடியதாகிய வேலாயுதம்போலகூர்மையாகிய கண்களையும்இருளானது மயிருருவங்கொண்டிருப்பதுபோலக்கருமைநிறந் தங்கிய அளகத்தையுமுடைய தெய்வப்பெண்களையொத்தமாதர்களுக்கு அழகினால் அமுதம்போலிருப்பவனும் ஒளிபுடனுயர்ந்திராநின்ற பொன்மலையாகியமகமேருவினிடத்தில் தீட்டியகுற்றமில்லாத பலமுள்ளஉயர்ந்தவிற்கொடி கட்டியதேரையுடைய கொல்லிமலைக்காசனுமாகிய சேரராசனும்-எ-று- மகமேருவில் கொடிதீட்டினவ னென்பதினால்-அரசர்களையெல்லாம் வென்றவனென்பதாயிற்று. சஉ

பண்டையமனுநூல்காட்டிப் படையெடுத்துபோர்வென்று
கண்டனைக்கனதுதேயத் தடைவதுதவிர்த்தவீரன்
கொண்டலையிபங்களொன்று சோனரிமுழங்கிச்சீறி
மண்டமர்புரியுநேரிமலையினன்வளவர்கோமான்

இ-பு, பழமையாகியமனுவினூல் முறைமையைக்காட்டிப்படையெடுத்துப்போய்க்கொல்லுகின்றபோர்செய்துவென்றுயமதருமராசனைத் தன்னுடையதேசத்தில்வரவொட்டாமல் தடுத்தவனும்மேகங்களையானைகளொன்றென்றெண்ணி ஆரவாரித்துச்சீறியெதிர்த்துப் போர்புரியும்படியானைகளின்கனவாசஞ்செய்கின்ற நேரிமலையையுடையவனுமாகிய சோழராசனும் எ-று சங

என்றிவர்முதலவேந்தர் யாவருஞ்சுயம்வரத்தின்
பொன்றிகழ்மண்டபத்தே புகுதபான்புகுதலோடு
மன்றலந்தண்டார்சிவேன் மணிபுயத்தணிதல்கண்டு
கன்றியமனத்தராகிக் காலர்வெகுளிமிககார்

(இ-பு) தேர்ப்படைவகுப்புங்குதிரைப்படை வகுப்புஞ்சிறியதுகள்போலாகவும் தூசைப்பூமாலையணிந்தகாலாட்படைவகுப்புகால்வேறுகைவேறுதலைவேறாக அறுபட்டுப் பூமியில்விழவும்மேகவொழுங்குபோல யானைவகுப்பு அறுபட்டுவிழவும்போர்செய்வதற்காகச்சாணைபிடித்திராநின்ற ஆயுதவர்க்கங்கள்பொடிப்பொடியாயுதிர்ந்துவிழவும்—எ-று. ௪௭

மன்னவர்தேர்மிசை மந்திரமொழிவார்
சென்னிகள்விழவவர் தேர்மிசையிறையோர்
பொன்னவிர்முடிவிழ பூசலின்வெருவார்
அன்னவரொடுமலரடவிகள்புகுவார்

(இ-பு) (இவ்வாறு நடக்கின்றபோர்க்களத்தில்) ஒருபுறத்தில் அரசர்களிருக்குந் தேர்களினிடத்தில்மந்திரிகளுடைய தலைகளவிழமற்றொருபுறத்தில்மந்திரிகளிருக்குந் தேரினிடத்தில் அரசர்களுடையபொன்னாற் செய்யப்பட்டுப் பிரகாசியாநின்றகிரீடம் அணிந்திருக்குந் தலைகள் விழுகின்றசண்டையிற்பயந்து இறந்தவர்கள்போகப் பிழைத்திருக்கும்; அரசர்களுமந்திரிகளும் காட்டிற்போயொளித்துக்கொள்ளுவார்கள்—எ-று. ௪௮

வேறு

சயமரத்தெதிர்ந்தோர்தம்மைத் துருபதன்றனையைக்காக
வயமலிசிலையால்வென்ற வாகைவேல்விசயனேபோற்
கயமலர்க்கண்ணிநிற்காகக் காவலர்தமைவென்று
புயறொடும்புரிசைக்கூட னின்னொடும்புகுந்தபின்னர்

(இ-பு) (இத்தன்மையாகப்போரில்தோற்றுஓடிப்போகும்படி)சயம்வரத்தில்எதிர்த்தஅரசர்களைத்துருபதராசன்புத்திரியாகிய துரோபதைக்காக வெற்றிபொருந்திய வேலாயுதக்கையுடைய அருச்சுனனானவன் வெற்றிமிகுந்த காண்டீபத்தினால்செயங்கொண்டதுபோலதடாகத்திலலருந் தாமரைமலரையொத்த கண்களையுடையநாயகியே உன்பொருட்டெதிர்த்த அரசர்களையெல்லாம்வென்று உன்னைஎன்தேரில் வைத்துக்கொண்டு மேகமண்டலத்தையளாவுகின்ற மதில்சூழ்ந்தமதுரையில்நான்சேர்ந்தபின்பு—எ-று துருபதராசனென்பவன் பாஞ்சாலராசன் ௪௯

ஆயிழைநீயுநானு மளப்பருங்காலமின்ப
மோறயத்துய்த்துநேமி யொருகுடைநிழல்கொண்டோச்சி
காயெரிக்கடவுண்முன்னர்க் கணக்கிலமகங்கள்செய்து
சேயுயர்விசும்பின்வாழுந் தேவர்தங்கடன்கழித்தும்

(இ-பு) நல்லஆபரணங்களை அணிந்திருக்குந்தலைவியே நானும் நீயும் அனேகங்காலம் ஒழிவில்லாமல்இன்பமநுபவித்து இந்தப்பூமியைஎன் ஒற்

றைக்குடைநிழலில்வைத்துச் செங்கோல்செலுத்தியுஞ்சுவாலைவிட் டெழுகின்ற அக்கினிதேவன் முன்னாக அளவில்லாதமகங்கள்செய்தும் மிகவும் உயர்ந்ததாகிய சுவர்க்கலோகத்தில்வாழுந்தேவர்கள் கடன்களைத்தீர்த்தும்-எ-று. யாகம்-ரு-அவை-பிரமயாகம்-தேவயாகம்-பூதயாகம்-பிதிர்யாகம்- மானுஷயாகம் என்பனவைகளாம்-இவைகளில்-பிரமயாகமாவது-வேதமோதுதல-தேவயாகமாவது-வேள்விசெய்தல்-பூதயாகமாவது பலியிடுதல்- பிதிர்யாகமாவது-தர்ப்பணஞ்செய்தல்-மனுஷயாகமாவது இரப்போர்க்கு- ஆகாரமுதலானதுகள்கொடுத்தல். ருய

அந்தணர்தங்கணெஞ்சத் தவர்க்கெடத்தானமீந்துஞ்
செந்தழல்புரையுமேனிச் சிவனடிபூசைசெய்தும்
பைந்தொடிநீயும்யானும் பண்டுசெய்தவத்தினாலோர்
மைந்தனையீனவந்த மைந்தனுமறையோர்தம்பால்

(இ-ள்) பிராமணர்கள்மனதிலுண்டாகும் ஆசைநீங்கும்படி தானங்கொடுத்தும் சிவந்தஅக்கினியையொத்ததிருமேனியையுடைய பரமசிவனது திருவடியைப்பூசித்தும் மாற்றுயர்ந்தபொன்னினாற்செய்யப்பட்ட வளையலணிந்த கையையுடையவளாகியமனைவியே நீயும்நானும்பூர்வஞ்செய்ததபோபலத்தினாலேஒருபுத்திரனைப்பெற அந்தப்புத்திரன் (வேதமுதலாகியசாஸ்திரங்கள்கற்பிக்கும்)பிராமணர்களிடத்தில்—எ-று. (ருக)

கலைபலபயின்றுமுக்கட் கடவுளுக்கடிமைபூண்டு
நிலையிலாவுலகுதன்னி னிலைபெறப்புகனிறீயுஞ்
சிலைவலித்திரடோளாற்றல் சேருநாளமைச்சர்தம்மோ
டலைகடற்பாரமெல்லா மவன்வயினளித்துயானும்

(இ-ள்) அறுபத்துநாலுகலைகளுங்கற்றுணர்ந்து திரிநேத்திரங்களையுடையபரமசிவனுக்கு அடிமையாகி நிலையில்லாததாகியஉலகத்திலதன்புகழ் நிலைநிற்கும்படிநிறுத்தி விற்போர்செய்யும்பலமுள்ள திரண்டபுஜபலபராக்கிரமஞ்சேர்ந்தகாலில் மந்திரிகளையும் அலையுள்ளசமுத்திரஞ்சூழ்ந்த பூமியாகமெல்லாவற்றையும் அந்தப்புத்திரனிடத்திற்கொடுத்து அதன்பின்புநான் —எ-று. ருஉ

பொய்யுடலெடுத்துமாயப் புணரிகணீந்திநீந்தி
கையிணைகடுத்துமீண்டக் கடலிலாழ்ந்திறந்துபோக
வையுறுபிறவிமாய்த்து மறைகளின்சிரத்தினிற்கு
மெய்யுறுநிலைமைதர்வான் வேட்கைகூருளத்தனாகி

(இ-ள்) பொய்யாகிய இவ்வுடலெடுத்துமாயையாகிய சமுத்திரங்களில் விழுந்து (அவைகடக்க வேண்டுமென்று) நீந்திநீந்திக் கைகளுங்கடுத்து

(கரைசேரக்கூடாமையால்)பின்னும் அந்தச்சமுத்திரங்களில் ஆழ்ந்திறந்து போகும்படியான குற்றம்பொருந்திய பிறவியையொழித்து வேதங்களின் முடிவில் விளங்காநின்ற உண்மையாகிய நிலையை அறியவேண்டுமென்கிற விருப்பமிகுந்த மனமுள்ளவனுகி—எ-று. காமத்தினுலாய மகளிர் நீக்கவேண்டினுல் மேலும்மேலும் அம்மாயைகள் விருத்தியாகும் ஆகவே மனமொருங்கும் என்பார். புணரிகணீந்திநீந்திக்கைகளிளைகளிந்து என்றார்- ஞானத்தினுற் கடக்கலாம்.என்பது துணிவு ருங

பொன்னெடுங்குன்றமன்னபுணர்முலைப்பொலங்கொம்பொப்பா
யென்னெடுஞ்செல்வமெல்லா மெனதல்லவென்று நீத்து
நின்னொடும்போகிவேலை நெடுங்கடலங்கைகொண்ட
மன்னெடுந்தவத்தின்மிக்க மாதவனிருந்துவாழும்

(இ-பு) உண்மைநிலையை அறியவேண்டுமென்கிற விருப்பம் என்மனதில்உண்டானதினுல்) நெடியபொன்மலையையொத்தநெருங்கிய தனங்களையுடைய பொன்கொம்பினைநிகர்த்தநாயகியே அந்நாளத்தினுல் என்னுடையதென்றுநினைத்துக்கொண்டிருந்த பெரியசெல்வங்களையெல்லாம்என்னுடையதல்லவென்று நீக்கிவிட்டுஉன்னுடன் போய்க்கரையையுடைய அளவிடக்கூடாத சமுத்திரநீரைஉள்ளங்கையிலேற்றுண்ட நிலைபெற்றபெரிய தவத்தில்மிகுந்த அகஸ்தியமுனிவரிருந்துவாசஞ்செய்யும்—எ-று. ருச

சந்தனப்பொதும்பர்சூழப் பொருநையந்தாமகாற்றிச்
செந்தமிழ்முழக்கமனற்ற தென்றலங்கன்றுநல்குஞ்
சுந்தரப் பொதியக்குன்றைத் தொழுதனம் வலங்கொண்டேத்திக்
கொந்தழலிந்திருப்பன் கோதறுதவஞ்செய்கலை

(இ-பு) சந்தனச்சோலைசூழ்ந்திருக்கத் தாம்பிரபருணிநதியென்னும் பூமாலையைத்தொங்கவிட்டு இயல் இசைநாடகமென்கிறதமிழ்முழுவதையும் வாசனைவீசுகின்ற இளந்தென்றற்காற்றினை உதருகின்ற அழகுள்ளபொதியமலையைநாம்பிரதக்ஷிணஞ்செய்துதொழுது தோத்திரஞ்செய்து நீசகலிட்டெரிகின்றபஞ்சாக்கினிமத்தியிலிருந்து கொண்டுகுற்றமில்லாத தவஞ்செய்யுங்காலத்தில்—எ-று. ருரு

குறுமுனிவந்துதோன்றிக் கொம்பனைக்கலையாய்த்து
மறுவுறுபிறவியாய மம்மர்நோயகற்றிப்பின்னர்
அறுசமயங்களுக்கு மதிதமாஞ்சிவயோகத்தை
யுறுதியாயுபதேசிப்ப யாமதுவுபதேசத்தால்

(இ-பு) அகஸ்தியமுனிவர்வந்துகாடியதொகிய பாவக்கடலை யொழித்துக்குற்றந்தங்கிய பிறவிநீங்கும்படிமயக்கமாகியபிணியைத்தொலைத்துப்பின்

பு அறுசமயங்களுக்கும் அதீதமாகியசிவயோகத்தைஉறுதியாகஉபதேசிக்க நாம்இந்தவுபதேசத்தினால்—எ-று. சிவயோகமாவது ஞானசாரியர் கிருபையினால்தன்னையுஞ்சிவத்தையுங்கண்டுதற்போதஞ் சீவியாமலிருப்பது

எள்ளுறுமெண்ணெய்போல வெங்கணும்பரந்துநின்ற
வள்ளறன்வடிவுகண்டு மனத்தினுனந்தமூறி
விள்ளுதலில்லாவின்பம் விளைசிவவனுபூதிக்கே
கள்ளுறுமலர்வீழ்வண்டின் முத்தியிற்களிப்பேங்கண்டாய்

இ-பு. எள்ளிற்பொருந்தியஎண்ணெய்போலஎவ்விடத்தும்நிறைந்திருக்கும்பரமசிவனதுசொரூபத்தைக்கண்டு மனதிலானந்தமூறி ஒருக்காலும் ஒழியாதபேரின்பம்விளையாநின்றசிவானுபூதி யனுபவிக்கும் பொருட்டுத் தேன் இடைவிடாதுபெருகாநின்ற மலர்களில்தங்கி அத்தேனையுண்ணும்வண்டுகளைப்போல மோட்சத்தில்ஆனந்தமுற்றிருப்போம்—எ-று. ௩எ

வேறு

என்றுமன்னவனிறுத்தனன் பின்னருமிசைத்தான்
அன்றுநாயுருவெடுத்தியானிறந்திடுமளவிற்
கொன்றையஞ்சடைக்குரிசிலைக் கண்ணுறுங்கொள்கைத்
தொன்றுபட்டதாற்பிறப்பெலாந்தெரிசறவுணர்ந்தேன்

இ-பு இவ்வாறுபேரானந்தமடைவோமென்றுசொல்லிஅவ்வரசன்பின்னுஞ்சொல்வான்நான்முன்னாளில்நாயுருவெடுத்திருந்து இறக்குங்காலத்தில கொன்றைப்பூமாலையணிந்த அழகியசடாமகுடத்தையுடைய பரமசிவனைத்தரிக்குந்தன்மைமுன்னமேகிடைத்ததினால் பிறப்புக்களையெல்லாங்களங்கமற அறிந்தேன் —எ-று. ௩அ

வேறு

பரவையுலகிற்பதினாலாம்பக்கத்
திரவுதொறுஞ்சிவனை யேத்தியடிபேணி
யரிவைபிறவி யகற்றுவாயென்று
குரிசின்மொழிந்தான் குலக்கொடியுங்கேட்டே

இ-பு மனைவியே சிவராத்திரியில்பரமசிவனைத்தரிசித்ததினாலேஇப்படிக்கொத்தமேலான பதங்கிடைத்தது ஆதலால் நீயுஞ்சமுத்திரஞ்சூழ்ந்தபூலோகத்தில்சிவராத்திரிதோறும் பரமசிவனுடையதிருவடிகளைப் பூசித்துத்தோத்திரஞ்செய்து பிறவிநீக்கிக்கொள்ளென்றுஅரசன்சொன்னான் அந்தவார்த்தையைஅம்மாதுங்கேட்டு —எ-று. ௩௯

நன்றுசிவநிசியினன்மையெனாநவிலா
வன்றுமுதலரனையாயிழையும் பூசித்தாள்
மன்றல்கமழ்செழுந்தார்மன்னவனுமாதருமாய்ச்
சென்றுபிறப்பேழ்கழியச்சின்மயவீடெய்தினர்

இப்படிமாசத்தன்கணவன்சொல்லிய வார்த்தையைக்கேட்ட ராசஸ்திரியவள் )சிவராத்திரியின்பலன் மிகவும்நன்மையானதாயிருக்கிறதென்று சொல்லி அந்நாள்முதல் அவளும் சிவராத்திரியில்பரமசிவனைப்பூசித்துவந்தாள-அப்படி பூசித்துக்கொண்டிருந்து ஏழாம்பிறப்புநீங்கினவுடன்வாசனைபரிமளிக்காநின்ற பூமாலையணிந்திருக்கும் ஒரேதினத்தில் - இவ்வுலகத்தைவிட்டுநீங்கி மோட்சத்திற்போய்சேர்ந்தார்கள்-எ-று. ௯௰

இத்தகையவாமேன்றே யீரேழாம்பக்கத்தின்
மெய்த்திறனுமீசன் விளையாட்டின்வித்தகமும்
பத்திவழிபடியார்பான்மையுமற்றங்கவர்தா
முத்திபெறும்வழியு மென்றான்முனிவரனே

இ-பு பராசரமுனியானவர் விமரிசராசரனைப்பார்த்து ராசனேசிவராத்திரியின்உண்மையானமகத்துவமும் பரமசிவனுடைய திருவிளையாட்டின் மகத்துவமும் பத்திமார்க்கத்திலசெல்லும்அடியார்கள்தன்மையும்அந்தஅடியார்களமோட்சம் பெறுகிறமுறைமையும் இத்தன்மையதுகளாமென்று சொன்னர்—எ-று. மற்று-ஆங்கு-அசைநிலை ௯௧

வேறு

பேரறிவின்மாமுனிவன் பின்னருநன்றோதினன்
வாரிபுடைசூழுலகின் மன்னுயிர்கள்யாவர்க்கும்
நீரணியுஞ்செஞ்சடையிமனே தெய்வதமும்
ஈரமுறுகேளு மிருடீர்குரவனுமே

இ-பு ஞானவறிவினையுடைய கவுதமரிஷியானவர் இதுவரையிற் சொன்னதுமல்லாமல்மேலுமவிளக்கவுநசசொல்லுகிறார் நாறபுறமுஞ்சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்திலிராநின்ற நிலையாகியவுயிர்களுக்கெல்லாமகங்கையையணிந்த சடையையுடையபரமசிவனேதெய்வமும் அன்புள்ளசுற்றத்தாரும்அஞ்ஞானத்தைநீக்குகின்ற ஞானசாரியருமவர்—எ-று 0 உடல்அநித்தியமஉயிர்நித்தியம் என்னுமுறைமைபற்றிமன்னுயிரென்றார் ௯௨

என்னுமுறைமணக்கொண்டீசன் றனைநோக்கி
மன்னுமகமுடிப்பார் மந்திரிகள்சிந்திப்பார்

அன்னையுதரத்தடையார்மறந்துனெ
முன்னையருமறைகள் யாவுமொழியுமால்

இ-பு என்கிறவார்த்தையை மனதில்நம்பிக்கையாகக்கொண்டு- அத்தன் மையுள்ள-பரமசிவனைக்குறித்து அழியாதயாகங்களைச் செய்கின்றவர்களு ம்மந்திரங்களையுச்சரிப்பவர்களும இவ்வுடலைவிட்டு நீங்கினபின் மறந்தும தாய்வயிற்றிற்கருவாசக தமகார்களென்றுபழமையாகிய வேதங்களெல்லா ஞ்சொல்லுகின்றன — எ-று மறந்துமென்றதுபிறவார்களென்கிற துணிவு பற்றியெனக்கொள்க சுரு

வேதமுறைசெய்த விதியேனுக்கைவிட்டுச்
சீதமதிவேணிச் சிவனடியைப்பூசிக்கும்
போதமுடையபுராதனரோ பொய்ப்பிறவி
வாதனையைநீக்கி மறைவிட்டிலைகுவார்

இ-பு வேதங்களாற்சொல்லப்பட்ட விதிகளையாளுலும் அதுகளைச்செ ய்யாமல்விட்டொழிந்து குளிர்ச்சிபொருந்திய இளந்திங்களையணிந்தசடா பாரத்தையுடையபரமசிவனது பாதங்களைப்பூசிக்கும் ஞானத்தையுடைய பெரியோர்களே நிலையில்லாதபிறவித்துன்பத்தைநீக்கி வேதங்களிற் சொ ல்லப்பட்டநித்தியமாகியமோட்சத்தில் எக்காலமும் பொருந்தியிருப்பார் கள் — எ-று சுசு

வாழுமனைமேன்மதலையர்மேல் வான்பொருண்மேல்
வீழுமனமவற்றின் வீழாதுதாழ்ந்பிக்
தாழுமவிர்சடையோன் றாள்விழையப்பெற்றவரோ
யேழுபவக்கடலுமேறும்புணைபெற்றார்

இ-பு வாழ்கின்றமனைவியிடத்தும் புத்திரர்களிடத்தும் சிறப்புடைய பொருளிடத்தும் விருப்புகின்றமனத்தை அவைகளை விரும்பாமலடக்கிப் பிரகாசியாநின்றதொங்கிய சடையையுடைய பரமசிவன்திருவடிகளைவிரு ம்பப்பெற்றவரோ எழுப்பிறப்பாகியசமுத்திரங்களைக்கடந்துமோட்சமாகி யகனையிலேறுகின்றவராவார்கள் — எ-று. சுஎ

கங்கையணிவேணியான் காமன்றனைவென்றோன்
மங்கையொருபாகன்றனக்குவழியடியார்
தங்களபெருஞ்செல்வமெலாந்தாழாதளிப்பரன்றி
யங்கமரிவாளாலரிந்துங்கொடுப்பாரோ

இ-பு கங்கையையணிந்தசடையையுடையவரும் மன்மதனைவென்றவரு பார்வதியையொருபாகத்தில்வைத்தருளியவருமாகிய பரமசிவனுக்குப்ப ரம்பரையாகிய அடியவர்கள்தங்களுடையபெரிய செல்வங்களை யெல்லாம்

கொடுத்துவிடுவார்கள் அதுவுமல்லாமல் தங்கள் சரீரத்தையும் வாளால் அரிந்துகொடுப்பார்கள். ௯௧

வேறு

கண்ணுதலானையே நோக்குங் கண்களே கண்கள்
கறைக்கண்டன் கோயில்புகுங் கால்களே கால்கள்
பெண்ணொருபாகனைப் பணியுந் தலைகளே தலைகள்
பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளே கைகள்
பண்ணவன்றஞ் சீர்பாடு நன்னாவே நன்னாப்
பரன்சரிதங் கேட்கப் படுஞ்செவியே செவிகள்
அண்ணல் பொலன்கழலிணைக்கு நெஞ்சமே நெஞ்சம்
அவனடிக்கீழடிமைபுகு மடிமையே யடிமை

இ-பு நெற்றிக்கண்ணையுடைய பரமசிவன் வீற்றிருக்கும் ஆலயங்களைத் தரிசிக்குங் கண்களே நல்ல கண்கள் காளகண்டத்தையுடைய அந்தப் பரமசிவன் வீற்றிருக்கும் ஆலயங்களுக்குச் செல்லுகின்ற கால்களே நல்ல கால்கள் பார்வதியை இடப்பாகத்தில் வைத்தருளிய அந்தக் கடவுளை வணங்குகின்ற தலைகளே நல்ல தலைகள் பிஞ்ஞகனென்னுமொரு திருப்பெயரையுடைய அந்தக் கடவுளை அருச்சிக்குங் கைகளே நல்ல கைகள் அவருடைய புகழைப் பாடுகின்ற நாவே நல்ல நாவு அந்தப் பரமனது சரிதங்களைப் பெரியோர்களால் கேட்கப்படுங் காதுகளே நல்ல காதுகள் பெருமையிற் சிறந்த அந்தக் கடவுளுடைய பொன்மயமாகிய வீரகண்டையணிந்த திருவடியைத் தியானிக்கும் மனமே நல்ல மனம் அவருடைய திருவடிகளுக்கு அடிமையாகிற அடிமைத்திறமே நல்ல அடிமைத்திறம் — எ-று ௯௨

வேறு

குணமிலராயினுங் குலீனராயினு
மணமலிகருங்குழன் மகளிராயினும்
பணமணியாவரைப் பரமனன்பரோ
கணமலியுலகெலாம் பரவுங்காட்சியார்

இ-பு நற்குணமில்லாதவர்களானாலும் நல்ல குலத்தினர்களானாலும் வாசனைபொருந்திய கருமையாகிய அளகபாரத்தையுடைய மாதர்களானாலும் மாணிக்கம்பொருந்திய படத்தையுடைய பாம்பினைக் கச்சாகத் தரித்திருக்கும் அரையினையுடைய பரமசிவனடியார்களே கூட்டமாகவுள்ள உலகத்தாரும் துதிசெய்யும்படியான பெருமையுடையவர்கள் — எ-று ௯௩

வேறு

இன்னதன்மையதெனவீசனன்பர்சீர்
அன்னவாகனனுக்கு மறிவதன்றென

இ-ள். இத்தன்மையுள்ள சிந்தாமணியென்னும் ஆபரணத்தைச் சந்திரசேனமகாராசன் தரித்துக்கொண்டு வாழும்நாளில் அப்படி தரித்துகொள்ளப்பட்ட மணியின்பெருமையினையெல்லாம் தேசங்கள்தோறும்பொருந்திய அரசர்களெல்லாரும் சந்தேகமில்லாமல்கேள்விப்பட்டு அதைத் தாங்கள் தரித்துக்கொள்ளவேண்டுமென்கிற விருப்பத்தினால் தூதர்முன்னிலையிற் சொல்லியனுப்பினார்கள்-எ-று. (௬)

அன்பின்வேட்டனர் சிலர்சிலர் வினையிடை யடுபோர்
வன்பில்வேட்டன ரன்னதுமனக்கொண்ட மறவோ
னென்புயங்களு மென்னுடைவரங்களு மிறந்து
பின்புநல்குவேன் மணியெனவஞ்சினம் பிடித்தான்.

இ-ள். சிலபேர் சிநேகத்தினால் விரும்பினவர்களாய்க்கேட்டனுப்பினார்கள்சிலபேர் (அரசர்கள் ஒருபொருளை அடையவேண்டுமானால் செய்யுஞ் செய்கையில் ஒன்றாகியசொல்லுகின்றபோர்செய்து வன்பினால் வாங்கிக்கொள்வதாக விரும்பிச் சொல்லியனுப்பினார்கள் அப்படியவர்களால் சொல்லியனுப்பப்பட்ட தூதர்கள்வந்துசொல்லியதை மனதில் அறிந்துகொண்டு சந்திரசேனமகாராசன் என்புசபலமும் யான்பெற்ற வரங்களுமொழிந்தபின்பு என்னிடத்திலிருக்குஞ் சிந்தாமணியைத் தருகிறேனென்று தூதர்களுக்குச்சொல்லியனுப்பிவிட்டு தன்மனதில் வைரங்கொண்டவனானான்-எ-று. பகையில் தாம்வலியனென்றுகருதிய அரசர்கள் போர்செய்துவாங்கநினைத்தார்கள் பகையில் சமமானவர்களும் மெலியவர்களுமாயிருப்பவர்கள் நட்பினால்வாங்கக் கருதினார்கள் குறள்- வினைசெயல்வகை, ஒல்லும்வாயெல்லாம் வினைநன்றே யெல்லாக்கால், செல்லும்வாய்நோக்கிச்செயல், என்பதனாலுமறிக. (௰)

அன்னவாசகங் கேட்டலுமவனிகா வலரின்
மன்னுமாகத ராரியர்மாத்திரர் மராடர்
[illegible]கேகயர் சாளுவர்வந்தியர் துருக்கர்
மின்னுகோசலர் சஞ்சையர்கவுரவர் விராடர்.

இ-ள். சந்திரசேனமகாராசன் சொல்லியனுப்பிய வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில் இவ்வுலகத்தையாளுகின்ற அரசர்களில் பொருந்திய மகதேசத்தாரும் ஆரியதேசத்தாரும் மாத்திரதேசத்தாரும்மராடதேசத்தாரும் நிலையாகிய கேகயதேசத்தாரும் சாளுவதேசத்தாரும் அவந்திதேசத்தாரும் துருக்கதேசத்தாரும் பிரகாசியாநின்ற கோசலதேசத்தாரும் சஞ்சையதேசத்தாரும் கவுரவதேசத்தாரும் விராடதேசத்தாரும்-எ-று. (௰௧)

என்றுபேர்பெறு மன்னவர்யாவரு மிகலிக்
கன்றுநெஞ்சினர் கடற்படை தன்னொடுங் கடுகி
வென்றுகோடுமுச் சீனியையென்பது விளம்பிச்
சென்றுசூழ்ந்தனர் சூழ்தலுஞ்சந்திர சேனன்.

இ-ள். என்றுசொல்லப்பட்ட பெயர்பெற்ற அரசர்களெல்லாரும் பகைகொண்டு கோபமுள்ளமனதையுடையவர்களாய்ச் சமுத்திரம்போல் அளவிடப்படாத சேனையுடன்முடுகி உச்சினீபட்டணத்தைவென்று நம்முடையதைவசப்படுத்திக் கொள்ளுவோமென்றுசொல்லிக்கொண்டு அந்தப்பட்டணத்தைச் சூழ்ந்துகொண்டார்கள் அப்படி சூழ்ந்தமாத்திரத்தில் சந்திரசேனமகாராசன்-எ-று. (௯௨)

பகைஞர்வந்ததம் பதிவளைந்தனரெனக் கேட்டு
மிகையுநெஞ்சினன் வெருவலன்வினையமொன் றெண்ணான்
முகைகொள்கண்ணியுஞ் சந்தமுமொய்யொளிக் கலனும்
புகையுந்தீபமு மயினியும்புனலொடு மேந்தி.

இ-ள். பகைவர்வந்து தன்னகரத்தைச் சூழ்ந்துகொண்டார்களென்று கேள்விப்பட்டுத் தளராதமனதையுடையவனாய் அஞ்சாமலும் வேறொருகாரியஞ்செய்ய எண்ணாமலும் மலரும் பக்குவமுள்ள அரும்புகளால் தொடுக்கப்பட்ட பூமாலையும் சந்தனமும் மிகுந்த ஒளியுள்ள ஆபரணங்களும் தூபமுந்தீபமும் அன்னமும் திருமஞ்சனமும் ஏந்திக்கொண்டு-எ-று. (௯௩)

வேறு.

மாகாளமென்றுபெயர் மன்னுமரன்மன்னும்
பூகாடவிச்சிநக ரத்தினிடைபோகி
யேகாலும்பூசியோ டிருந்திதயமேவு
மோகாதிகத்தையு முனிந்துபுறமாக்கி.

இ-ள் மாகாளம் என்றுபெயருள்ளதாய்ப் பரமசிவன் வீற்றிருக்கின்ற கமுகஞ்சோலைசூழ்ந்த ஆலயத்திற்போய் பரமசிவத்தின்திருவடியில் மனம் அமிக்கமாகும்படியான நிஷ்டையிலிருந்து இருதயத்திற் பொருந்திய மோகமுதலாகிய பொய்களையெல்லாங்கடிந்து புறமாக நீக்கி-எ-று. (௯௪)

மறையாகமங்களிடை மந்திரமனைத்துங்
குறையாமலோதியரு ளின்குரவர்கூறு
முறையாலருச்சனைசெய் தன்பினொடுமுந்நீர்க்
கறையாகளத்தனடி யைக்கருதினானே.

இ-ள். என்று இவ்வாறு துதிசெய்த குற்றமில்லாத தவத்தையுடைய
அந்தப்பிள்ளையானவன் (பின்னும்) பிழைசெய்தல் சிறியோர்களுக்கிய
ல்பு சிறியோர்கள்பிழைசெய்தா லவ்வாறுதானென்று பொறுத்துக்கொ
ள்ளுதல் பெரியோர்கள்கடனென்று சொல்லுவார்கள் ஆதலால் அடி
யேன்றாயானவள் முறைமையில்லாமல்செய்த குற்றத்தை நீபொறுத்து
க்கொண்டனை நிருமலனே? அழகியகிருபைக்கடலே மான்பொருந்திய
கையையுடையகடவுளேயென்று வாழ்த்தினன்-எ-று. (உரு)

தன்மனைபுகுந்து துயின்றநற்றாயும் விழித்தலுந்தன்மனையெல்லாம்
பொன்மயமாகக் கண்டுமெய்ப்புளகம் பொங்கிடமகவினைநோக்கி
நன்மகவின்றே னென்றுளங்களித்து நரபதிக்குரைப்பனென்றெழுந்தலை
மன்மனைகுறுகிப் புகுந்தவாறெல்லா மன்னனுக்குரைத்தலுமன்னான்.

இ-ள். இவ்விடத்தில் இவனிப்படியிருக்கத் தன்மகனைச்சிவலிங்கமாகப்
பாவனைசெய்துவைத்துப்பூசித்த (கருங்கல்லையெறிந்துவிட்டு) தன்வீட்
டில்போய் நித்திரைசெய்ததாயானவளும் நித்திரைதெளிந்து பார்த்த
மாத்திரத்தில் தன்வீடெல்லாம் பொன்மயமாயிருக்கக்கண்டு சரீரத்தில்
புளகமுண்டாகப் புத்திரனைப்பார்த்து நல்லபுத்திரனைப் பெற்றேனெ
ன்று மனங்களித்து (இந்தச்சேதியைராசனுக்குச் சொல்லுவேனென்
று விரைவாக அரண்மனைக்குப்போய்க்கண்டுநடந்தசேதியெல்லாஞ்சொ
ன்னாள் அதைக்கேட்ட அரசன்-எ-று. (உசு)

மந்திரவிதியி னமைச்சருமாதி மறைவலாளரும்புடைசூழத்
தந்திரந்தழுவச் சேரிசென்றணுகித் தமனியமனைவளநோக்கி
யந்தரத்தகடு கிழியநீள்பசும்பொ னாலயம்வலங்கொடுபுகுந்து
சந்திரசேனன் சந்திரமவுலி தாளிணைவிதிமுறைதொழுதான்.

இ-ள். மந்திராலோசனையின் முறைமையுணர்ந்தமந்திரிகளும் முத
ன்மையாகிய பிராமணர்களும் புடைசூழ்ந்துவரவும் நால்வகைச்சேனை
களும் பக்கங்களிற்பரவிவரவும் ஆயர்சேரியிற்போய்ச்சேர்ந்து பொன்ம
யமாயிராநின்றவீட்டின் வளப்பத்தைப்பார்த்து அண்டமுகடுகிழியும்ப
டியாக உயர்ந்திராநின்ற ஆலயத்தைப்பிரதக்ஷணஞ்செய்து சன்னிதியி
ற்போய்ச் சந்திரசேனனென்னும் அந்தஅரசன் சந்திரசேகரனாகிய பர
மசிவனுடையதிருவடியை முறைப்படிதொழுதான்-எ-று. (உஎ)

வேதமும்வேத விரிஞ்சனுமாதி விண்டுவுமண்டருங்காணா
ஆதியம்பரம னடியவர்க்குநகி யருளினலடைந்தனனென்னுங்
காதலிற்பொதுவர் மகலையைத்தழுவிக் காவலன்களிமகிழ்வெய்தி
ஓதநீருலாவி யுஞ்சயினிமூதூ ருவகையாற்பொலிவெழுந்ததுவே.

இ-ள். அப்படிதொழுதஅரசன் நான்குவேதங்களும் வேதங்களையு ணர்ந்தபிரமதேவனும் அப்பிரமனுக்கு ஆரியாகியவிஷ்ணுவும் மற்று முள்ளதேவர்களுங்கண்டறியாத யாவர்க்குமாரியாகிய பரமசிவன் அடி யார்க்காகத் திருவுளமிரங்கிக் கிருபையினால் திருக்கோயில்கொண்டம ர்ந்தாரென்கிறஅன்பினால் அந்தஇடைப்பிள்ளையைத் தழுவிக்கொண்டு மிகுந்தமகிழ்ச்சியைஅடைய (அதைக்கண்ட) அந்தப்பழமையாகிய நக ரத்தாருக்குண்டாகிய சந்தோஷத்தினால்கோஷித்த ஆரவாரமானதுபர் வகாலத்தில் சமுத்திரங்கோஷிப்பதுபோல் இருந்தது-எ-று. (உஅ)

வரதவமதலை பூசனைபுரிந்த வண்மையுந்தண்மதிக்குழவிப்
புரிசடையண்ண லருளினுக்கடைந்த புதுமையும்புரவலன்கண்டு
கரையிலாவுவகை யுற்றதுநகரங் களிப்பதுங்காணவந்தனன்போற்
குரைகடனடுவுட்கதிர்குலம்பரப்பியெழுந்தனன்குணதிசைவெய்யோன்

இ-ள். சிரேஷ்டமுள்ளதவத்தையுடைய அந்தப்புத்திரனானவன் பூ சைசெய்தவளப்பமும் குளிர்ச்சிபொருந்திய இளம்பிறையை அணிந்த கட்டுப்பட்ட சடாமகுடத்தையுடையபரமசிவன் திருவருளினால் அவ்வி டத்துத் திருக்கோயில்கொண்டமர்ந்த அற்புதமும் சந்திரசேனமகாரா ஜன்கண்டு அளவில்லாதசந்தோஷம் அடைந்ததையும் நகரத்தாரெல் லாங் களிப்படைந்ததையுங் காணவந்தவன்போல் ஒலிக்காநின்றசமுத் திரத்தினடுவில் ஆயிரங்கிரணங்களையும் பரப்பிக்கொண்டு கீழ்த்திசை யில் சூரியன்உதையமானான்-எ-று. (உகூ)

மூதெயில்வளைந்த காவலரொற்றர் முழுதுமற்புதமெனவேகித்
தாதவிழிதழிச் சடிலவானவனைச் சனிப்பிரதோடத்தினொருநாள்
காதுவேன்மன்னன் வழிபடக்கண்ட காளைசெய்பூசனைமுதலா
ஆதியெம்பரமன் றோன்றியவளவு மவரவரரசருக் குரைத்தார்.

இ-ள். பழமையாகிய மதிலைச்சூழ்ந்துகொண்ட அரசர்களுடைய ஒற் றர்களெல்லாம் இதுஅதிசயமென்று பேசிக்கொண்டுசென்று மகரந்தத் துடன்மலர்ந்த கொன்றைப்பூமாலையணிந்த சடாமகுடத்தையுடையபர மசிவனைச் சனிப்பிரதோஷத்தில் ஒருநாள்கொலைசெய்யத்தக்கவேலாயு தத்தையுடைய சந்திரசேனமகாராஜன்பூசைசெய்யக்கண்ட இடைப்பிள் ளையானவன்செய்தபூசைமுதலாகஆதியாகியநம்மிறைவன்தரிசனங்கொ டுத்தவளவும்(வழுவாமல்)அவரவர்அரசர்களுக்குச்சொன்னார்கள்-எ-று

தம்முடிதுளக்கிக்கேட்டவேல்வேந்தர் தனித்தனிதுன்னெண வெருவிக், கொம்மையங்கொங்கைக் கொடிபுரைதுசுப் பிற்கோகிலமிர ங்குதீங்குதலை, யம்மையங்காள னடியவணிந்த வரசனையவமதித்தந்தோ, வெம்மையினடைந்தே மெனத்தமைமுனிந்து மேற்செயும்வினையயீ தென்னு.

இ-ள். ஒற்றர்களவந்து சொல்லியசெதியைக் கேள்விப்பட்ட வேலேந்தும்அரசர்கள் (இது ஆச்சரியமான காரியமாயிருக்கிறதென்று) தனித்தனியாகத் தங்கள்தங்கள்சிரங்களை ஆசைத்துநடுக்கமுறப்பயந்து இந்தச்சந்திரசேனமகாராஜன்குவிந்த அழகுள்ளதனபாரத்தையும்பூங்கொடியையொத்த இடையினையும்குயிலோசைபோலவசனிக்கும் மதுரமுள்ளமழலைச்சொல்லையுமுடைய பார்வதிதேவியை இடப்பாகத்திலவைத்தருளியபரமசிவனுடைய மெய்யன்பனாயிருக்கிறான் (இதையறியாமல்) இவனை அவமதித்துப் பகைகொண்டுவந்தோமென்று தங்களைத்தாங்கள் வெறுத்துக்கொண்டு இனிநாமசெய்யவேண்டியகாரிய மிதுவென்கிறதாக-எ-று. (௩௧)

கடற்படையனைத்துந் தத்தமூர்க்கேகக் கதுமெனப்பணித்தமரெதிர்ந்தா
ரடற்கருஞ்சேனைச் சந்திரசேன னன்பசேதபமையுமென்றெண்ணிப்
படைக்கலந்துரந்த கையினராகிப் கதிபுகுந்தரசனைப்பணிந்து
விடர்கருநட்பு வேண்டினரிவனும் விள்ளலாநட்பெதிர்விழைந்தான்.

இ-ள். சமுத்திரம்போல மிகுந்த தங்கள்தங்கள் சேனைகளையெல்லாம் தங்களூருக்குப்போகும்படி விரைவாகஉத்தரவுசெய்தனுப்பிவிட்டு யாவராலும் போர்செய்வதற்கரிய சேனைகளையுடைய சந்திரசேனமகாராசனுடையசிநேகமே நமக்குப்போதுமானதென்று கருதிக்கொண்டு தங்கள்கைகளிலிருந்த ஆயுதங்களையெல்லாம் நீக்கினவர்களாம் உச்சினிபட்டணத்திற்போய் அந்த அரசனைக்கண்டுவணங்கி ராசனே! உம்முடைய சிநேகம் எப்போதும்நீங்காமலிருக்கும்படி எங்களுக்குவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள் அதைக்கேட்டஅவ்வரசனும் (அவர்களைப்பார்த்து) அரசர்களே! உங்களுடையசிநேகமும் எனனிடத்திலெப்போதும நீங்காமலிருக்கும்படி நானும்விரும்பியிருக்கிறேனென்றான்-எ-று. (௩௨)

மன்னனுநட்பின் மன்னருமேகி மாகாளநாதனை வணங்கிப்
பின்னரேதொறுவன் பூசனைக்கெதிர்ந்த பிஞ்ஞகன்றாளிணைதொழுது
முன்னர்நின்றிறைஞ்சு மதலையைத்தழுவிமுகமனன்ககமகிழ்நதுரையா
இந்நிலத்தாயர் குலங்கட்குநீயே யிறைமகனெனெ விசைத்தார்.

இ-ள். இவ்வாறுசிநேகங்கொண்டபின்பு சந்திரசேனமகாராசனும்நட்பினராகிய மறுதேசத்தரசர்களும்போய் மாகாளேசுவரனை வணங்கி உடனே இடைப்பிள்ளைசெய்த பூசைக்காகஎழுந்தருளி வீற்றிராநின்ற சிவலிங்கமூர்த்தியையும்பணிந்து தங்களெதிரில்நின்றுவணங்கிய அந்தப்பிள்ளையைத் தழுவிக்கொண்டு மகிழ்ச்சியுடன் நல்லஉபசாரவார்த்தைகள்சொல்லி இந்த உலகத்திலிருக்கும் ஆயர்குலத்துக் கெல்லாம் நீயேயிறைவனாயிருக்கக் கடவையென்றுசொன்னார்கள்-எ-று. (௩௩)

வேறு.

அங்காலே யின்வந்தா னடலடையார்புரநூறப்
புக்கார்கலியிலங்கைப் பதிபுகையத்தழன்மடுத்துக்
கைக்கார்முகநெடியோன் றனைக்கலுழன்றனிற்பொறுத்த
மிக்கான் கவிகுலநா யகனனுமானெனுமேலோன்.

இ-ள். இவ்வாறு அரசர்கள்சொன்னபோது பலம்பொருந்திய பகைவராகிய அரசர்களுடையபதியை அழிக்கும்படிபோய்ச் சமுத்திரத்தினடுவிலிருக்கும் இலங்கையானதுபுகைந்தெரியத்தக்கதாகத் தீயூட்டிக் கையினிடத்துக் கோதண்டத்தையுடைய இராமமூர்த்தியைப்போர்க்களத்தில் கருடனைப்போல வாகனமாய்த்தாங்கிய மிகுந்த பராக்கிரமசாலியும் வானரர்களுக்குப் படைத்தலைவனுமாகிய அனுமானென்னும் பெயரையுடைய மேலானவன் - எ-று. (நூச)

அம்மாருதிவரக்கண்டலு மடிவீழ்ந்தடல்வேந்தன்
செம்மாங்கலர்மழை தூய்ப்பலவழிபாடுகள்செய்தே
யெம்மானிவனெய்தத் தவமென்செய்தனமெனவே
விம்மாவுளங்களித் தார்வமொடிருப்பக்கவிவீரன்.

இ-ள். அத்தன்மையுள்ள அனுமான்வந்ததைக் கண்டமாத்திரத்தில் பலமுள்ள சந்திரசேனமகாராசன் அவர்பாதத்தில் சேவித்துக்கொண்டு மிகுந்தகளிப்படைந்து மேகம்பொழிவதைப்போல மலர்களைச் சொரிந்து பலவகையாகிய ஆராதனைகள்செய்து எம்மிறைவன் இந்தநாட்டில்வரும்படி நாங்கள் என்னதவஞ்செய்தோமோவென்று துதிசெய்து, மனக்களிப்படைந்து ஆசையுடனிருந்தான் அப்படியிருக்கும்போது, அனுமான் - எ-று. (நூரு)

கோபாலர்தங்குலச்சே யினைக்குளிர்மார்புறவணைத்தே
பூபாலர்கள்கேண்மினுரு பொருளொன்றையுமுணரா
மாபாலனிங்கிவன்செய்திடு வழிபாட்டினுண்மகிழ்ந்தே
காபாலிவந்தருள்செய்ததைக் கண்டீரிவையெல்லாம்.

இ-ள். ஆயர்குலப்புத்திரனைக் குளிர்ச்சிபொருந்திய தன்மார்பில் அணைத்துக்கொண்டு அரசர்களேநீங்கள் உலகிற்பொருந்திய யாதொருபொருளையும் அறியாதபெருமைபொருந்திய இந்தப்புத்திரன்செய்த ஆராதனைக்குத் திருவுளமகிழ்ந்து பரமசிவன் தரிசனந்தந்தருளியதைக் கண்டீர்களோ இவைகளெல்லாம் எ-று. (நூசு)

இறைசந்திரசனம் புவி யெழுப்புகழுரவோன்
அனையு சனிவார பிரதோட ந்தனிமாரனை

மறையின்படிவழிபட்டமை கண்டிங்ஙனமதலை
பொறையொன்றிய மனத்தாற்புரிபூசாபலம்போலும்

இ-ள், ஏழுலகமும் புகழத்தக்க வல்லமையுடையவனாகிய சந்திரசேனமகாராசன்(வேதாகமங்களால்)விசேஷமாகச் சொல்லப்படுகிற சனிப்பிரதோஷத்தில் முறைமைப்படி பரமசிவனைப் பூசித்ததைக்கண்டு இந்தப்புத்திரன் சாந்தந்தங்கிய மனத்துடன்செய்த பூசையின்பலமாகும்-ஏ-

அப்பூசனைகண்டார்பெறும் பேறித்துணையளவோ
இப்போதிவன்வழியாவரு மெட்டாந்தலைமுறையிற்
கைப்போதகமழைக்கும் மழைக்கார்வண்ணனைவளர்ப்பான்
மெய்ப்போதத்துநந்தனெனுங் கோன்றோன்றுவன் விளங்க

இ-ள். அத்தன்மையுள்ள சனிப்பிரதோஷ பூசையைக்கண்டவர்கள்பெறும்பேறு இவ்வளவிலடங்குவதோ இப்போது பூசைசெய்தஇந்தப்புத்திரனுடைய சந்ததியாய்வருகின்ற எட்டாந்தலைமுறையில் (முதலைவாயிலகப்பட்டுக்கொண்ட) துதிக்கையையுடையஒருகாட்டானையானது அழைக்க அதைரட்சித்த மேகவண்ணங்கொண்ட மகாவிஷ்ணு(கிருஷ்ணவாதாரஞ்செய்வார்) அவனைவளர்க்க உண்மையறிவையுடைய நந்தனென்கிற ஆயர்கோனொருவன் அந்தக்குலம் விளங்கும்படி தோன்றுவன்-எ-று, (ரு-அ.)

இன்றேமுதல்வேல்வேந்தர்க ளெல்லீருமற்றிவனை
நன்றேதருபுகழச்சீதர னெனவேபெயர்நவில்வீர்
என்றேயடலனுமான்சிவ பூசாபலத்தியல்பை
யன்றேதவமதலைக்கினி தருள்செய்தனன்போனான்

இ-ள். வேலாயுதத்தையுடைய அரசர்களே நீங்களெல்லாரும்இன்றுமுதல் இந்தப்புத்திரனை நன்மையைத்தருகின்ற புகழினையுடைய சீதரனென்று பெயரிட்டழையுங்க ளென்றுசொல்லி மேலும்பராக்கிரமமுள்ளஅனுமான் அப்போதே சிவபூசையின் கிரமத்தை தவத்தையுடைய அந்தப்புத்திரனுக்கு இனிதாக உபதேசித்தருளிப்போனார்-எ-று. ()

காற்றின்புதல்வன்போய்பின் கருதாதமர்சொல்லி
மாற்றஞ்சியபடைமன்னரை வழிக்கொள்ளுநும்பதிக்கென்
றாற்றந்தருகரிதேர்பல வொண்பூண்டுகிலுதவிப்
போற்றுந்தவக்கோபாலனொ டிருந்தான்புனைதாரான்

இ-ள். வாயுதேவன் புத்திரனாகிய அனுமான் போய்விட்டபின் ஏனென்னுடம் போர்செய்வோமென்று சொல்லிக்கொண்டுவந்துபின்புசண்டைசெய்யப்பயந்த சேனையுள்ள அரசர்களைப்பார்த்து நீங்கள் உங்களு

ருக்குப்போங்களென்றுசொல்லி வலிபொருந்திய யானைகளுந் தேவர்களும் குதிரைகளும் ஒளியுள்ள ஆபரணங்களும் வஸ்திரங்களும் வெகுமதியாகக்கொடுத்து அனுப்பிவிட்டுப் பூமாலையணிந்திருக்கும் அவ்வரசன்போற்றுகின்ற தவத்தையுடைய அந்தப்புத்திரனுடன் தன்னகரத்திருந்தான்-எ-று. (சம)

நெடுநாளிருவோருந்திரு நிலமாமகள்போகங்
கடவாதினிதருந்திச்சிவன் கழல்சனைபுரிந்தே
முடியாவிறுதியினேறினர் முத்திக்கரையென்னுப்
படுபாகவினைவென்றவர்க் குரைத்தான்பழந்தவத்தோன்

இ-ள். அரசனும் ஆயர்குலப்புத்திரனும் நெடுங்காலவரைக்கும் ஒருநாளாவதுமுட்டுப்படாமல் இவ்வுலகத்தின்பத்தைஅனுபவித்துக்கொண்டிருந்து பரமசிவனுடைய திருவடிகளையும்பூசித்து முடிவில்லாத அந்தியத்தில் மோக்ஷமாகிய கரையிலேறினார்களென்று பிறவிதோறும் பொருந்திய தீவினையைவென்ற நைமிசாரணிய முனிவர்களுக்குச்சூதமுனிவர் சொன்னார்-எ-று. (சக)

ஐந்தாவது சனிப்பிரதோஷத்தில் சந்திரசேனன்

பூசைசெய்த அத்தியாயம்-முற்றிற்று.

ஆக விருத்தம்-உ௱அம.

---



உ

சிவமயம்.

ஆறாவது

# சத்தியாதனன் பூசைசெய்த

## அத்தியாயம்.

---

பின்னுநான்மறைமுனிவரர் பெருந்தவத்தோனே
முன்னரோதுபிரதோடமும் பூசையின்முறையு
மன்னிநாடொறும்வழிபடு மவர்பெறுவரனும்
இன்னுமெங்களுக்கிருளற வியம்புதியென்றார்

(இ-ள்)இவ்வாறுசூதமுனிவர்சொல்லக்கேட்டு,பின்னரும் நான்குவேதங்களுமுணர்ந்த நைமிசாரணியமுனிவர்கள்(சூதமகாரிஷியைப்பார்த்து)மிகுந்த தவத்தையுடையசுவாமிகளே முன்னஞ்சொல்லிய பிர

தோஷகாலமும் அந்தப்பிரதோஷ பூசையின் கிரமமும் இடைவிடாம ல்நாள்தோறும் பூசிப்பவர்கள் பெறும்வரமும் இன்னமும் எங்களுக்கு மயக்கந்தீரும்படி சொல்லுமென்றார்கள்-எ-று. (௪)

மூந்தைநான்முனி யன்னவை மொழிவலென் றுரைத்தான்
சிந்தைசெய்குதிர் பதின்மூன்றும் பக்கமாந் திவாவில்
அந்தமாகிய மாலையே பிரதோடமாகும்
இந்துசேகரன் விரும்பிய காலமுமிஃதே

(இ-ள்) அவைகளைச்சொல்லுகிறேன்கேளுங்கள்பதின்மூன்றாநாளா கிய திரயோதசி தினத்தில் பகற்பொழுதின் முடிவாகிய மாலைப்பொழு தே பிரதோஷமாம் சந்திரசேகரனாகிய பரமசிவன் விரும்பிய காலமும் அதுவேயாமென்றுவேதமுணர்ந்தசூதமகாரிஷியானவர்சொன்னார்-எ-று

ஆயகாலையி னடையலர் திரிபுர மழலிற்
றீயவாணகை முகிழ்த்தருள் செம்மலை யல்லான்
மாயனான்முகன் முதலிய தேவரை வணங்கி
மேயபூசனை புரிபவர் நரகிடைவீழ்வார்

(இ-ள்) அந்தப்பிரதோஷகாலத்தில்தேவர்களுக்குப்பகைவர்களுடை ய திரிபுரங்கள் அக்கினியால் வெந்துபோம்படி ஒளிபொருந்தியபுன்ன கைசெய்தருளிய பரமசிவனைப் பூசிக்காமல் விஷ்ணு பிரமன் முதலாகி யதேவர்களைவணங்கி விரும்பிப் பூசைசெய்கிறவர்கள் நரகத்தில் விழு வார்கள்-எ-று. (௫)

சொன்னகாலையி லீசனை வழிபடு தூயோர்
மன்னுமார்க்கட லுடுத்தபார் முழுவதும் வணங்க
முன்னுபோகங்கள் யாவையு முறையினிற் றுய்த்துப்
பின்னர்வீற்றினி திருப்பராற் பேரின்ப வீட்டின்

(இ-ள்) மேற்சொல்லிய பிரதோஷகாலத்தில் பரமசிவனைப்பூசைசெ ய்கின்ற பரிசுத்தர்கள் நிலைபெற்ற பெரியகடல்சூழ்ந்தபூலோகத்திலிருப் பவர்களெல்லாரும் வணங்கும்படி (அரசர்களாய்)நினைக்காநின்றபோக ங்களையெல்லாங் கிரமமாக அனுபவித்துப் பின்புமறுபிறப்பில்மோக்ஷ வீட்டில் இனிதாக வீற்றிருப்பார்கள்-எ-று. (௬)

அனையகாலையி னருச்சனை புரிந்துவீ டடைந்தார்
எனையரொன்றுநீர் வினவுதி ரேலஃதிசைக்கேன்
வினைய வென்றியான் விதர்ப்பதே சாதிபனெழிலாற்
றனையொவ் வாதவேள் காமுறுஞ் சத்தியாதனனே

இ-ள், அத்தன்மையுள்ள பிரதோஷகாலத்தில் பரமசிவனை அருச்சி த்துமோக்ஷம் அடைந்தவர்கள் யாவரென்று நீங்கள் கேட்பீர்களானல்

ந்தைச் சொல்லுகிறேன் போர்த்தொழில்செய்துபெற்ற வெற்றியையு டையவனும் விதற்ப தேசாதிபதியு மாகிய அழகினால் தனக்கொப்பில் லாதமன்மதனும் இச்சைகொள்ளத்தக்க சவுந்தரியமுள்ள)சத்தியர்தனெ ன்னும்பெயருள்ள ஒரு அரசன்-எ-று. காமமுறுமென்பது-விகாரவ கையான் காமுறுமெனநின்றது. காமம்உறும்எனப்பிரித்துக்கொள்க.)

அறிவினீதியின் வாய்மையி னமைச்சினி னழகிற்
பிறிதில்கல்வியிற் பெருமையி லிருநிதிப் பெருக்கிற்
செறியுமூதா னுடைமையின் வீரத்திற திறல்வேல்
எறியவூறஞ்சாக் கடற்படை யுடைமையி னிசையின்

இ-ள். அறிவினாலும் நீதியினாலும் சத்தியத்தினாலும் ஆலோசனை யினாலும் சவுந்தரியத்தினாலும் ஒப்புவேறில்லாத கல்வியினாலும் பெ ருமையினாலும் பெருமைபொருந்திய பொருள் மிகுதியினாலும் அழி யாமல் பழமையாகியநால்வகை யரண்களை யுடைமையினாலும் வீரத்தி னாலும் வெற்றிபொருந்தியவேலாயுதத்தைப்பகைவர்கள் தங்கள்மேலெ றிய அதுகள்வந்துபடும் காயததுக்குப்பயப்படாத சமுத்திரம்போன்ற சேனைகளையுடைமையினாலும்புகழினாலும்-எ-று நால்வகைஅரண்களா வன மனதிலரண் அகழரண் மலையரண் காட்டரண் என்பனவைகளாம்.()

மற்றுமின்னன தருமிறை மாட்சியின் மலிவிற்
கொற்றவேந்தரி னவனியி னிகரிலாக் குரிசில்
பற்றலார்கள்வந் தடிதொழ நாணிலம் பரித்தாங்
குற்றநாளினி லவன்பகை யாகிய வுரவோர்

(இ-ள்) முன்சொன்னவைகளுமல்லாமல் இவைகள்போல இன்னமு ம்விசேஷமான குணங்களுண்டா யிருக்கும் அரசுக்குரியபெருமையின் மிகுதியினாலும் செயம்பெற்றிருக்கும் வேந்தர்களுக்குள் இந்தவுலகத்தி ல் ஒப்பில்லாத அரசன் அத்தன்மையுள்ளவன்பகைமன்னவர்வந்துதன் பாதத்தை வணங்கும்படி தன்னுடையதேசத்தையாண்டுகொண்டிருக் குநாளில் அவனுடைய பகைவர்களாகிய பலமுள்ளவேந்தர்கள்-எ-று.()

விண்டலம்புகழ் சாலுவ தேசத்தின் வேந்தர்
கொண்டலன்னதுன் மருடணன் முதலியோர்குழாங்கொண்
டெண்டிசாமுகந் தூளியின் மறைந்திட வெழுந்து
மண்டுதானையாற் சத்தியா தனன்பதி வளைத்தார்

(இ-ள்) தேவலோகத்தாரும்புகழத்தக்க பெருமையுள்ளசாலுவதே சத் தரசர்களாகிய மேகத்தையொத்த துன்மருஷணன்முதலானவர்கள் கூட்டமாகச் சேர்ந்துகொண்டு அஷ்டதிக்குகளும் தூளியினால்மறையு

ம்படி எதிர்சென்றுபோர்செய்யத்தக்க நால்வகைச்சேனைகளோடும் புறப்பட்டுச் சத்தியாதனனுடையநகரத்தைவளைந்துகொண்டார்கள்-எ-று.

முகையுடைந்துதார் மதுமழைபிலிற்றிட முல்லை
நகைமடந்தையர் முலைபொருநலந்திகழ் மார்பன்
பகைஞர்வந்துதன பதிவளைந்தனரெனப் பகரு
மிகையடைந்தசொற் கேட்டலுநக்கிவை விளம்பும்.

இ-ள். அரும்புகள் முருக்குவிரிந்து தேன்மழை பொழியும்படியாக முல்லையரும்புகளையொத்த பற்களையுடைய மாதர்தனங்கள் பொருந்தத்தக்கபூமாலையணிந்திருக்கும் அழகுவிளங்காநின்ற மார்பையுடைய சத்தியாதனமகாராசன் பகைவர்கள்வந்து தன்னகரத்தை வளைந்துகொண்டார்களென்கிற குற்றம்பொருந்தியசொல்லைக்கேட்டமாத்திரத்தில் நகைத்துக்கொண் டிந்தவார்த்தைகளைச்சொன்னான்-எ-று. (கூ)

மன்றறங்கிய மாலைவேற்றுனைமாற் றரசர்
வென்றியம்புயத் தருக்குமென்றடம்புய விறலு
மின்றுகாண்குவன் கடற்படையெழுகென வியம்பித்
துன்றுதாரவ னேறினன்சுடர்மணி நெடுந்தேர்.

இ-ள். வாசனைதங்கிய மாலையணிந்த வேலாயுதத்தையுடைய பகைமன்னவர் வெற்றிபொருந்திய அழகியபுஜவீறுப்பையும் என்னுடையபெரியபுஜபலத்தையும் இன்றறிகிறேனென்று சமுத்திரம்போன்ற சேனைகளைப்புறப்படச்சொல்லி உத்தரவுசெய்து நெருங்கியபூமாலையணிந்திருக்கும் அந்தராசன் பிரகாசியாநின்ற பெரியதேரிலேறினான்-எ-று. (ய)

இருவர்தம்பெருஞ் சேனையுமேற்றெதி ரிகலிப்
பொருகளத்தனின் விளைந்தபோரமலையிற் புழுங்கிக்
கருவுதிர்ந்தரு முகிர்ந்தனகார்க்குல மென்றாற்
பரவைமாநிலம் வெருவருந்தன்மையார் பகர்வார்.

இ-ள். சத்தியாதனமகாராஜன் ரததிலேறிக்கொண்டு போர்க்களத்திற்சென்றவுடன் இருவர்சேனையும் எதிர்த்துப் பகைகொண்டு யுத்தஞ்செய்யும்போர்க்களத்தில் உண்டாகிய பெரியஓசையினால் மேகங்களும் பயந்துகருவழிந்த இடிசளைக்கக்கின்வென்றால் சமுத்திரத்தினாற் சூழப்பட்ட இவ்வுலகத்தார்பயமுற்றதன்மை (யிப்படிக்கொத்ததென்று)தெரிந்துசொல்லுகின்றவர்கள்யார் ஒருவருமில்லை-எ-று. (யக)

நிணநெடும்படை தாக்கலினெடுங்குடர் சரிந்து
மணமலிந்ததார் சிரம்புயமணிக்கரந் துணிந்து

பிணம்விழுந்தவக் களவயிற் றுணங்கைப்பே யுடனக்
கணமெழுந்துநின் றூடினவெண்ணிலாக் கவந்தம்.

இ-ள். பகைவர் பிணங்கள்பொருந்திய பெரியஆயுதங்கள் படுகிறதி னுல் நெடியகுடல்கள்சரிந்து வாசனைதங்கிய மாலையணிந்திருக்கும் சில தலைகளும் புசங்களும் அழகியகைகளும் அறுபட்டுப் பிணங்கள் விழுந்த அந்தப்போர்க்களத்தில் கைகோர்த்துக்கொண்டாடுகின்ற பேய்களுடன் அப்பொழுதே அளவில்லாதகவந்தங்களும் எழுந்துநின்றூடின எ-று. * கவந்தமென்பது தலையறுந்தஉடல்கள். (௰உ)

விளையமென்னுமு மந்திரத்தலைவரும் விரைத்தார்
புனையுந்திண்புயச் சேனைகாவலநம் விண்புகுந்தா
ரினையபூசலிற் றுன்மருடணன்கொல விறந்தான்
வனையும்வார்கழற் சத்தியாதனனெனு மறவோன்.

இ-ள். இப்படியாக (நடக்கும்போர்க்களத்தில்) நடக்குங்காரியங்களை ஆலோசிக்கத்தக்க மந்திரிகளும் வாசனையுள்ள வெற்றிமாலையணியும் புசங்களையுடைய சேனாதிபதிகளும்இறந்து வீரசொர்க்கஞ்சேர்ந்தார்கள் அத்தன்மையுள்ளயுத்தத்தில் நீண்ட வீரகண்டையணிந்திருக்கும் சத்தியாதனனென்னும் அரசன் துன்மருஷணனுற் கொல்லப்பட்டிறந்தான்-எ-று. * யுத்தமுகத்தில் பின்னிடாமல் சண்டைசெய்திருக்கின்றவர்கள் வீரசொர்க்கஞ்சேர்ந்து அங்குள்ளதேவஸ்திரீகளுடன் இன்பம் அனுபவித்துக்கொண்டிருப்பார்கள். (௰௩)

வேறு.

வென்றவேந்தர் தம்மணியைவிளித்து மாய்ந்தோன்வியன்பதியை
யின்றுகொண்டுகூட்டுண்மினென்னும்வெஞ்சொற்பொருன்போல
கன்றுசிந்தைக் கதிரவனுங்காயுங் கதிரையறச்சுருக்கிக்
குன்றினின்றுத் தேரோடுங்குடபாற் கடலிற்குப்புற்றுன்.

இ-ள். இவ்வாறுஜெயம்பெற்ற அரசர்கள் தம்முடையசேனைகளை அழைத்து இறந்துபோன சத்தியாதனனுடைய பெரியநகரத்தைக் கொள்ளையிடுங்களென்று சொல்லியதுகேட்டுச் சகிக்காதமனதையுடன்போலச் சூரியதேவன் காய்கின்ற தன்னுடையகிரணங்கள் முழுவதையுஞ் சுருக்கிக்கொண்டு உதயகிரியினின்றுதேருடன்மேற்குச்சமுத்திரத்தில் குதித்துவிட்டான்-எ-று. * சூரியதேவன்மேற்குச்சமுத்திரத்தில் குதித்தானென்றதால் பகற்பொழுது போயிற்றென்பது தாற்பரியம். (௰௪)

கந்துல்வந்துபுகுமளவிற் கருதார்சேனைபதிபுகுத
மந்துபோர்ச்சத்தியாதனன்றன் மனைவிசத்தியாமடநல்லாள்

அங்கைகொண்டுவயிற்றெற்றி யந்தோவினையேனெனவரற்றிப்
பொங்குமிருளிற்றமியளாய்க் கரந்துகுடபாற்போயினள்.

இ-ள். இராத்திரிகாலம்வந்தவளவில் நகரத்தைக கொள்ளையிடும்படி அந்தச்சேனைகள் பிரவேசித்ததைஅறிந்து போரில் இறந்துபோன சத்தியாதனன் மனைவியாகியசதியென்னும் பெயருள்ளமாதானவள் இரண்டுகைகளினாலுந் தன்வயிற்றிலடித்துக்கொண்டு அய்யோபாவியானேனென்றழுது அந்தஇராப்பொழுதில் ஒருவருந்துணையில்லாமல் தனியளாயாருக்குந்தெரியாமல் மேற்குத்திசைநோக்கிப்போய்விட்டாள்-எ-று.

வேறு.

துன்பத்துணையேயன்றிமற்றோர் துணையொன்றயலிற்காணாதா
ளன்பிற்சேவற்றுணையிழந்த வன்றிற்பெடைபோலழுதிரங்கி
வன்பிற்செலவுங்கருமுதிர்ந்த வருத்தமுறலானடைமாய்த்து
முன்புற்றறியாநெடுங்கான வாவிக்கரையைமுடுகினள்.

இ-ள். மேற்குத்திசைநோக்கிப்போனவள் துன்பமாகியதுணையேயல்லது வேறொருவரைத்துணையாக அயலிற்காணாதவளாய் அன்பினையுடைய ஆணன்றிலைப்பிரிந்த பெட்டையன்றில் அழுவதுபோல அழுதிரங்கி நடக்கமாட்டாமல் நடந்துபோகவும் கருப்பமுதிர்ந்த வருத்தத்தையடைவதினால் நடைகள்ளாடிக்கொண்டுபோய் ஒருக்காலும்போய்க்கண்டறியாத பெரியகாட்டிலிருக்கும் ஒருதடாகத்தின் கரையிற்சேர்ந்தாள்-எ-று. (மசு)

வேறு.

நல்வினைதணக்குமாறுந் தீவினைநணுகுமாறு
மொல்லையினுறுவதென்று ணுணருமென்றறிவிப்பாள்போற்
பல்லியந்துவைக்குமன்றில் விழாக்களிபகலிற்றுய்த்தா
ளல்லினிற்றமியளாகி யணங்குறைவனத்தளானாள்.

இ-ள். நல்வினைப்பயன் நீங்குமுறைமையும் தீவினைப்பயன்வந்துசேருமுறைமையும் விரைவாகப்பொருந்துவதை யென்னால் அறிந்துகொள்ளுங்களென்று தெரிவிக்கின்றவள்போல பலவாத்தியங்கள் சப்திக்கும்படி தன் அந்தப்புரத்தினிடத்தில்நடக்கும் சிறப்புகளைக்கண்டு பகற்பொழுதில் சந்தோஷத்தையனுபவித்தவள் இராப்பொழுதுவந்தபோது தனிமையானவளாய் வனதேவதைகள் வாசஞ்செய்யத்தக்க காட்டிலிருப்பவளானாள்-எ-று. (மஎ)

எற்றியவருத்தத்தாலு மெழுச்சியினடையினானு
முற்றியகருப்பமேன்மேல் வேதனைமுதிர்ந்துகாட்டப்

பெற்றனளன்பமன்னே பெரும்பகையிழைத்துச்செற்ற
கொற்றவர்க்கிடந்துடிப்பக் குமரனைக்கொலைவேற்கண்ணாள்.

இ-ள். பகைவரைக் கொலைசெய்யத்தக்க வேல்போன்ற கண்களையுடைய அந்தராஜஸ்ரீயானவள்தனியே காட்டிற்போனவுடன் புருஷனிறந்துபோனபோது அடித்துக்கொண்ட வருத்தத்தாலும் வழிநடந்த வருத்தத்தினாலும் முதிர்ந்தகருப்பமானது அதிவேதனையைக்காட்ட பகைகொண்டுபோர்செய்துவென்ற அரசர்களுக்குஇடத்தோளும்இடக்கண்ணும் துடிக்கும்படி ஒருபுத்திரனைப்பெற்றாள்-எ-று. (௧௮)

அருநெறிநீந்தலானு மரசனைத்தணத்தலானும்
திருமகன்றன்னையீன்ற வேதனைத்தியக்கத்தானும்
ஒருமகளுண்ணுநீர்வேட் டோடையினிறங்கலோடுங்
கருநிறக்கொடியசீற்றக் கராமுயிர்கவர்ந்ததன்றே.

இ-ள். அருமையான வழியைக்கடந்து வந்ததினாலும்தன்கணவனாகிய அரசனையிழந்ததினாலும் சிறந்தபுத்திரனையீன்ற உபத்திரவமுள்ளமயக்கத்தினாலும் ஒப்பற்றஅந்தராஜஸ்ரீயானவள் நீருண்ணவிரும்பிஒருநீரோடையி லிறங்கினமாத்திரத்தில் கரியநிறமுள்ள கொடியதாகிய கோபங்கொண்டமுதலையானது அவளுயிரைவாங்கிக்கொண்டது-எ-று. ()

உதிரமுநிணமுமுண்ட கராமுளையுழையிற்போக
அதிர்கடலவனியாள வவதரித்தானைக்காண்பான்
கதிரவன்றந்தைபோலக் கதுமெனக்கடலின்வந்தான்
மதலையைப்புரப்பாரின்றி வாய்திறந்தரற்றுங்காலை.

இ-ள், அவளுடையஉதிரத்தையும் மாமிசத்தையுமுண்ட முதலையானது சேற்றினிடத்தில்போக ஒலிக்காநின்ற சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தையாள்வதற்காகப் பிறந்தபுத்திரனைக்காண அவன்பிதாவந்தது போலச் சூரியன்கடலினிடத்தி லுதயஞ்செய்தான் அந்தக்குழந்தையை ஆதரிப்பவர்களில்லாமல் வாய்திறந்தழும்போது-எ-று. (௨௰)

கமையினுள்கைமையுற்றாள் பார்ப்பனிவறுமைபூண்டா
ளமைவுறுகரத்திற்றன்சே யாண்டொன்றுபுக்கான்றன்னை
சுமையெனமருங்குனின்று துவண்டிடக்கையிற்றாங்கி
யுமையெனும்பெயரினாளவ் வோடையின்றீரமுற்றாள்.

இ-ள். பொறுமையினையுடையவளும் கைம்பெண் தன்மையடைந்தவளும் தரித்திரமுள்ளவளும் உமையெனும் பெயரையுடையவளுமாகிய ஒருபிராமணஸ்ரீயானவள் ஆசைபொருந்திய ஒருவ்ருஷத்துக்குழந்தையாகிய தன்புத்திரனை ஒருபளுவைச் சுமப்பதுபோலாக இடையா

ளைது துவளும்படி கையிலேந்திக்கொண்டு அர்த்தடாகத்தின் கரையி
ற்சேர்ந்தாள்-எ-று, (உ௧

தாயிழந்தாருமின்றித் தரையினிற்கிடந்துசெய்ய
வாய்திறந்தாற்றுகின்ற மதலையையுற்றுநோக்கிக்
காய்கதிர்க்கடவுள்விம்பங் கடலினின்றுதித்ததேயோ
லேயுமிச்சேயையீன்றாள் யாவளோவென்றுதேர்வாள்.

இ-ள். தாயையிழந்து வேறொருவருமில்லாமல் மண்ணிற்கிடந்து சிவந்தவாயைத்திறந்து அழுகிறகுழந்தையின் சமீபத்திற்போய்ப்பார்த்துச் சூரியதேவன் சமுத்திரத்தினின்றும் உதயமானதுபோலத் தேசு பொருந்திய இந்தக்குழந்தையைப்பெற்றவள் எவளோவென்று யோசிக்கின்றாள்-எ-று. உஉ)

அரசிளங்குமரனாக வந்தணன்மதலையாக
விருநிலத்திவரேயன்றி யாவரேபெறுதற்பாலார்
நிரைவளைபுனிற்றினுண்மற்றி யாண்டையாய்நின்றாண்மைந்தன்
புரிகொடிநாபியின்னு மறுத்திலாள்புகுந்ததென்னே.

இ-ள். (இந்தப்பிள்ளை) இராசகுமாரனாகவேண்டும் அல்லது பிராமணப்பிள்ளையாகவேண்டும் பெரியஇந்தவுலகத்தில் மேற்சொல்லியவர்கள் பெறுந்தன்மையையுடையவர்கள் இதைப்பெற்றவள் எவ்விடத்திலிருக்கின்றாளோ இந்தக்குழந்தையின் கட்டுப்பட்டிருக்கும் தொப்புள் கொடியை இன்னமும் அறுக்காதவளாயிருந்தாள் மத்தியில் என்னசம்பவித்ததோ-எ-று. (உ௩)

என்னிளங்குழவிக்கினோ னிளவலாயின்பாலூட்டி
மன்னியகாதல்கூர வளர்ப்பனோவென்னவெண்ணு
மன்னியவருணத்தானே லந்தணர்க்கடாதேயென்னுந்
தன்னிளங்குமரனோடு தராபதிமகவைப்பார்க்கும்.

இ-ள். என்னுடையஇளங்குழந்தைக்கு இவன்தம்பியாக இனியபாலூட்டிநிலையான ஆசைமிகுதியாகும்படி வளர்ப்பேனோவென்று எண்ணுவாள் மேற்சொல்லிய இரண்டுவருணமுமில்லாமல் அன்னியகுலத்துப்பிள்ளையானல் பிராமணகுலத்துக்குத் தகாதேயென்றெண்ணுவாள் தன்னுடையபுத்திரனோடு இராசகுமாரனைப்பார்ப்பாள்-எ-று. (உ௪)

இத்திறமையமெய்தி யிடைந்திவணிற்கும்வேலை
சத்திரங்கரகங்கொண்டோர் தவமுனியோடைசார்ந்து

புத்திரசோகமுற்றுப் பொன்னனுணின்றவாறு
முத்தமக்குமரன்வந்த வரலையுமுளத்திஞேர்ந்தான்.

இ-ள். இப்படியாகச் சந்தேகத்தைப்பொருந்திய யிவளிடைந்து நிற்கும்போது ஒருகையில்குடையும் மற்றொருகையில்கமண்டலமுமுடையவராய் ஒருரிஷியானவர் அந்தமடவினிடத்தில்வந்து புத்திரசோகத்தையடைந்து மகாலட்சுமிபோன்ற அழகுள்ள அந்தப்பிராமண ஸ்ரீயானவள் நிற்குந்தன்மையையும் நன்மையுள்ள இராஜகுமாரன் பிறந்தவகையையும் தமதுமனதில் ஞானதிஷ்டியினால் அறிந்தார்-எ-று. (உ௫)

வேறு.

ஐயமெய்திய வந்தணமாதுகே
டுய்யவோரையிற் றோன்றியதோன்றலை
மையலின்றி மருவிவளர்த்திடி
னுய்யுமுங்கள் குலமுமுலகுமே.

இ-ள். சந்தேகப்பட்டுக்கொண்டிருக்கும் பிராமணமாதேகேள் நல்லலக்கினத்தில்பிறந்த இந்தராசபுத்திரனைச் சந்தேகமில்லாமல் விரும்பி வளர்த்தால் உங்கள்குலமும் இந்தவுலகமுங் கடைத்தேறும்-எ-று. ()

என்னமாமுனி கூறலுமேந்திழை
மன்னுமாநிதி போலுமகவுட
னின்னறீர வெடுத்துக்கொண்டேகினுள்
மன்னர்மன்னன் மகனைமற்றென்பவே.

இ-ள். இப்படியாகவந்த முனிவர்சொல்லலும் அதைக்கேட்ட பிராமணஸ்ரீயானவள் நிலையான பெரியநிதியொத்த தன்பிள்ளையுடன் சத்திரியாதனன் புத்திரனைத் துன்பந்தீரும்படி யெடுத்துக்கொண்டு போனுள்-எ-று. (உஎ)

போதலுற்ற புரிகுழற்பார்ப்பனி
மாகமுட்டிய மாளிகைவான்றலை
மேகமுற்று விழைவுடன்கண்படு
மேகச்சக்கர மாநகரெய்தினுள்.

இ-ள். இராஜகுமாரனை யெடுத்துக்கொண்டுபோகின்ற கட்டுப்பட்ட அளகத்தையுடைய பிராமணஸ்ரீயானவள் ஆகாயத்தையளாவிய மாளிகைகளின் பெரியசிகரங்களில் மேகங்கள்வந்து சந்தோஷத்துடனித்திரைசெய்யும்படியான ஏகசக்கிரமென்னும் பெயரையுடைய நகரத்தில் போனுள்-எ-று. (உஅ

உண்டுநல்குர வாற்பலியேற்றுண்டு
மாண்டசெல்வ மகவிருவோரையும்
ஆண்டுநன்சிறப் பால்வளர்த்தாக்கினள்
பூண்டவேதமுந் நூலும்புனைவித்தே.

இ-ள். ஏகசக்கரபுரத்துக்குப்போன (அந்தப்பிராமணஸ்திரீயானவள்) பொருந்தியவறுமையினால் அந்நகரத்தில் பிக்ஷையெடுத்துண்டு மாட்சிமைபொருந்திய செல்வம்அடையத்தக்க இரண்டுபிள்ளைகளையும் மிகுந்தசிறப்புடன்வளர்த்து உபநயனகல்லியாணஞ்செய்வித்து விதிவிலக்குகளைச்சொல்லுந் தன்மையுள்ளவேதமு மோதுவித்தாள்-எ-று. (௨௯)

மக்களோரிரு வோருமறையவர்
புக்கிரூறுஞ்சென் றேற்றிடும்போனகந்
தக்கதாயுட னுண்டுசதுர்மறை
யொக்கவேந்தியர் தம்மொடுமோதினர்.

இ-ள். அந்தப்பிள்ளைகளிருவர்களும் பிராமணர்கள் வீடுதோறுஞ்சென்று பிக்ஷையெடுத்துக்கொண்டுவருகிற அன்னத்தைக்கற்புள்ளதாயுந் தாங்களுமுண்டு நான்குவேதங்களையும் ஒருங்கே பிராமணப்பிள்ளைகளுடன் அத்தியானஞ்செய்தார்கள்-எ-று. * நான்குவேதங்களாவன இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்பனவைகளாம். (௩௰)

அரியவேதமு மங்கமும்விற்படைக்
குரியகல்வி முதலவுலகினின்
விரியுமெண்ணெண் கலையின்விகற்பமுங்
கரியமாலும்பின் னோனுமெனக்கற்றார்.

இ-ள். அருமையாகியவேதங்களும் ஆறங்கங்களும் வில்லாதியான ஆயுதப்பயிற்சிக்குரிய கல்வியும் இவைமுதலாக உலகத்திற்பிரந்த அறுபத்துநாலுகலைகளின்விகற்பங்களும் இராமலட்சுமணர்கள்போலக் கற்றார்கள்-எ-று. வேதாங்கமாவன, மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம். நிருத்தம், சோதிடம் என்பனவைகளாம் * அறுபத்துநாலு கலைகளாவன, அக்ஷரலக்ஷணம் லிகிதம் கணிதம் வேதம் புராணம் வியாகரணம் நீதிசாஸ்திரம் சோதிடசாஸ்திரம் தருமசாஸ்திரம் யோகசாஸ்திரம் மந்திரசாஸ்திரம் சகுனசாஸ்திரம் சிற்பசாஸ்திரம் வைத்தியசாஸ்திரம் உருவசாஸ்திரம் இதிகாசம் காவியம் அலங்காரம் மதுரபாடணம் நாடகம் நிருத்தம் சத்தப்பிரமம் வீணை புல்லாங்குழல் மிருதங்கம் தாளம் அத்திரபரிட்சை கனகபரிட்சை இரதபரிட்சை கசபரிட்சை அசுவபரிட்சை இரத்தினபரிட்சை பூமிபரிட்சை சங்கிராமவிலக்கணம் மல்லயுத்தம் ஆக்கிருஷணம் உச்சாடனம்வித்துவேஷணம் மத

ஷகாத்திரம் மோகனம் வசிகரணம் இரசவாதம் காந்தருவவாதம் பைசீலவாதம் கவுத்துகவாதம் தாதுவாதம் காருடம் நஷ்டம் முஷ்டி ஆகாயப்பிரவேசம் ஆகாயமனம் பரகாயப்பிரவேசம் அத்ருசியம் இந்திரசாலம் மகேந்திரசாலம் அக்கினித்தம்பம் சலத்தம்பம் வாயுத்தம்பம் திடத்தம்பம் வாக்குத்தம்பம் சுக்கிலத்தம்பம் கன்னத்தம்பம் கட்கத்தம்பம் அவத்தைப்பிரயோகம் என்பவைகளாம், (கூக)

வேறு.

இவ்வாறுமைந்தர் வளர்கின்றகாலை யிவரோடுமன்னையுமைபோய்
மைவாரணத்தி னுரியாளர்கோயில் வழிபாடுசெய்துவருநாட்
சைவாகமத்தி னெறிநன்றுணர்ந்த சாண்டில்லியனென்னுமுனிவன்
செவ்வாய்மலர்ந்து வுமையோடுவந்து தெருளத்தெருட்டல்புரிவான்.

இ-ள். இவ்வாறு அந்தஇரண்டுபுத்திரர்களும் வளர்கின்றகாலத்தில் இவர்களுடன்தாயாகிய உமையென்பவள் கறுத்த யானைத்தோல்போர்த்த பரமசிவனுடைய ஆலயத்திற்குப்போய் வந்தனைவழிபாடுசெய்துவருகிறநாளில் ஒருநாள் சைவாகமங்களைப் பழுதறவுணர்ந்த சாண்டில்லியனென்கிறஒருமுனிவர்மகிழ்ச்சியுடன்உமையென்பவளிடத்தில்வந்து அவளுக்குத்தெரியும்படி திருவாய்மலர்ந்து சொல்லுகின்றார்-எ-று. )(

அந்தோசிவன்றன் விளையாடல்யாவு மரியாதிதேவரறியார்
மைந்தோரிலிந்த விளையானுனக்கு மகவாகிவந்தசெயலை
நந்தாதுரைக்க முடியாததென்று நவிலாமுனங்கைபணியா
முந்தாவெனகுண் மகிழத்தெரித்தி முறையாயென்மைந்தன்வரவே.

இ-ள். அதிசயமும் இரக்கமும் உண்டாக முனிவர் சொல்லுகிறதாவது உமையென்பவளே பரமசிவனுடைய திருவிளையாடலையெல்லாம் விஷ்ணுமுதலாகிய தேவர்களுமறியமாட்டார்கள் புத்திரர்களில் இந்த இளையவன் உனக்குப்புத்திரனாகிவந்த செய்கையை விவரித்துச்சொல்ல முடியாதென்று சொல்வதற்குமுன் அவள்வணங்கிப் பெரியவரேமனமகிழ்ச்சியுண்டாகும்படி இளையபுத்திரனுற்பத்தியை முறைமையாகஎனக்கருளிச்செய்யவேண்டுமென்றாள்-எ-று. ✱ (மைந்தர்என்னுஞ்சொல் ஈண்டு மைந்தோரெனநின்றது.) (கூஙு

வேறு.

என்னுமுமைக்குமாமுனிவ னிசைந்தானிந்தமாமதலை
தன்னையீன்றதாதைபெயர் சத்தியாதனனுந்தார்வேந்தன்
மன்னர்மன்னன்வைதர்ப்ப நாடனவன்போர்மருவலராற்
கன்னியமரினுயிரிழந்தான் மனைவிசதியுங்கானடந்தாள்

இ-பு இளையபுத்திரனுற்பத்தியைச் சொல்லவேண்டுமென்றுகேட்ட உமையென்பவளுக்குப் பெருமைபொருந்திய முனிவர் சொல்லுகின்றார் இந்தப்புத்திரனைப்பெற்றதகப்பன்பெயர்சத்தியாதனனென்பதாம்(அவன் என்னவருணத்தானென்றால் மாலையணிந்திருக்கும் அரசனுகியட்சத்திரியவருணத்தான் அரசர்க்கெல்லாம் அரசனுயிருப்பவன் வைதர்ப்பதேசத்தையுடையவன் இத்தன்மையுள்ளவன்வலியபோர்செய்கின்ற பகைவரால் அழிவில்லாதயுத்தகளத்தில் உயிர்விட்டிறந்தான் அதையறிந்தஅவன்மனைவியாகிய சதியென்பவள்காட்டிற்போய்விட்டாள்-எ-று. ௬௪

அடைந்தவனத்தினிம்மகவையரிதினீன் றவருத்தத்தாற்
றுடைந்துநீருண்பதுவேட்டு வாவியிடத்திற்குறுகுங்கான்
மிடைந்தவன்மீனுயிர்கவாவிந்தாள்பாலன்றனித்தழுதா
னுடைந்தகுரல்கேட்டுடன்மகவாயெடுத்துவளர்த்தாயெனவுரைத்தான்

இ-பு அப்படியாகச்சென்றவனத்திலேசதியென்பவள்இந்தப்புத்திரனையரிதாகப்பெற்றவருத்தத்தினுல் சரீரத்தைச்சுத்திசெய்துகொண்டுநீருண்ணவேண்டுமென்கிற விருப்பத்தினுல்ஒருதடாகத்தினிடத்தில்போனபோது அதிலிருக்குமுதலையானது வந்து பிடித்துக்கொண்டு விழுங்க உயிரிழந்தாள்பிறந்தபுத்திரன்யாருமாதரவில்லாமல் தனியாயழுதுகொண்டிருந்தான்நீ அவனழுங்குரல்கேட்டுப்போயெடுத்துவந்து உன்புத்திரனுக வளர்த்தாயென்றுசொன்னுர்-எ-று ௬௫

கேட்டவுமையுமிறும்பூதுகிளரவிந்தமகவீன்றோன்
வாட்டமிலனுய்ரசாட்சிவரும்போகத்தைநுகர்போதிற்
றோட்டுமமருளவனுவியொன்னுர் தொலைக்கத்தொலைந்ததுவும்
காட்டினடைந்துமிவனன்னைகராவாலிறந்தகாரணமும்

இ-பு தன்இளையபுத்திரனுற்பத்தியைச் சாண்டில்லியமுனிவர்சொல்லக்கேட்டஉமையென்னும்பிராமணஸ்திரீயானவள்மிகுந்தஆச்சரியமடைந்து (அந்தமுனிவரைப்பார்த்துப்பின்னுங்கேட்கிறுள் ஐயரே) இந்தப்புத்திரனைப்பெற்ற வரசன் மனவாட்டமில்லாதவனுய் அரசாட்சியினுல் வருகிற போகங்களை அனுபவித்துக்கொண்டிருக்குங்காலத்தில் கூட்டமாகக்கூடிய போர்க்களத்தில்பகைவர்கள் யுத்தஞ்செய்துகொல்ல அவனுயிரிழந்தகாரணமும்இந்தப்புத்திரனுக்குத்தாயானவள்நம்முடையகணவன் இல்லாதநகரத்திலிருந்தாலேதாவதுஅபாயம்நேரிடுமென்றுகாட்டிற்சென்றும் முதலையினுலுயிரிழந்தகாரணமும்-எ-று ௬௬

இந்தமகவுமரசுரிமையெய்துங்காலமென்றெனவு
மந்தமகவுமென்செய்வறுமையகன்றுவாழ்வதென்றெனவு

முந்தைதனைக்கண்மறைமுனிவன் மொழியாற்றெளிந்து வளர்த்தேற்குச் சிந்தைமகிழவருந்தவனேசெப்புகென்றாள்செப்புவான்

இ-பு முன்னொருநாள்நான்வனத்திற்குப்போனபோது(இந்த இளையபுத்திரன்சிசுவாயழுதுகொண்டிருக்கக்கண்டு இதுயார்பெற்றதோ வென்று நான்சந்தேகப்படும்போது)அவ்விடத்தில்வந்த ஒருபிராமணமுனிவர் சொல்லத்தெளிந்தெடுத்துவந்து இந்தக்குழந்தைக்கு உரிய அரசாட்சியையெக்காலம் அடையுமோவென்றும் அந்தப்பிராமணப்பிள்ளை தரித்திரம்நீங்கியெக்காலம்செல்வத்தையடைவானோவென்றும் எண்ணிக்கொண்டுவளர்த்தவெனக்குமனமகிழ்ச்சியுண்டாகும்படி அரியதவமுள்ளமுனிவனேசொல்லுமென்றாள் அவருஞ்சொல்லுகிறார்-எ-று ௰௭

காளையிவன்றன்றாதைமுனங்கழிந்தபவத்திற்கைதவர்கோன்
பாளைவிரிந்துமணங்கமழு மதுராபுரிக்குப்பார்த்திபனாய்
வாளைமுனிந்துகடைசிவந்தவரிக்கண்மடவார்மாரனெனத்
தாளைவணங்கார்முடிவணங்கத்தருமச்செங்கோற்செலுத்தினான்

இ-பு உமையேநீகேட்ட இரண்டுகாரணமுஞ்சொல்லுகிறேன்கேள் இந்தஇளையபுத்திரனுடையபிதாவானவன்முன்பிறப்பில்பாண்டியராசன் பாளைகள்விரிந்துவாசனைவீசும்படியானவளப்பத்தையுடைய மதுராபுரிக்கு அரசனாகியும் வாளாயுதத்தைக்கோபித்துக் கடைசிவந்துசெவ்வரிபரந்தகண்களையுடையமாதர்களுக்குமன்மதன்போல அழகுள்ளவனாகியும்பகைவர்கள் தங்கள்முடியினால்தன்பாதத்தை வணங்கத்தக்கதாகத்தருமநெறியில்வழுவாமல்செங்கோல்செலுத்திக்கொண்டிருந்தான்-எ-று ௰௮

ஈசனெண்ணெண் விளையாட்டு மியற்றினோனங்கயற்கண்ணி
நேசன்றொண்டுபூண்டுசிவ நேசநிசியின்முகந்தோறும்
வாசவன்போல்வழிபட்டுவருபன்னாளிலொருஞான்று
பேசுபதின்மூன்றாந்தினம்வந்தெதிர்ந்ததறைப்பிரதோடத்தின்

இ-பு அறுபத்துநாலுதிருவிளையாடல்செய்தருளினவரும் மீனாட்சியம்மையின்மணவாளருமாகியசோமசுந்தரக்கடவுளுக்குஅடிமைபூண்டு பரமசிவன்விருப்பமுறத்தக்கபிரதோஷகாலந்தோறும்தேவேந்திரன்பூசைசெய்ததுபோலப்பூசைசெய்துகொண்டுவருகின்ற பலநாள்களில் ஒருநாள் திரயோதசிதினம்வந்தது அந்தத்தினத்தின்பிரதோஷகாலத்தில்-எ-று ௰௯

ஆலவாயினான்றன்னை யரசன்வழிபட்டலர்தூவும்
வேலைவளவன்முதல்பகை வேந்தரமர்க்குமேவினான்

னோலையோடுதூதர்வர வுவாரீர்க்கடலினொலியெழுந்து
ஞாலம்புகழுந்தமிழ்மதுரை நடுங்கவரசனுருத்தெழுந்தான்

இ-பு திருவாலவாயில் வீற்றிராநின்ற சோமசுந்தரக்கடவுளை இந்தப்பாண்டியராசன் ஆராதனைசெய்துமலரால் அருச்சிக்கும்போது சோழராஜன் முதலாகியபலதேசத்துமன்னவர்கள்பகைகொண்டுபோர்செய்ய வந்தார்களென்றுதூதர்கள் ஓலைகொண்டுவரபர்வகாலத்துச் சமுத்திரவோசைபோலொருபேரோசையுண்டாகிப் பூலோகத்திலுள்ளவர்கள் புகழும்படியானதமிழ்நாட்டிலுள்ளமதுரையிலிருப்பவர்களெல்லாரும்பயந்து நடுங்கவேபாண்டியராசன்கோபித்தெழுந்தான்-எ-று. ஆலவாயென்பதுசொக்கநாதர்வீற்றிருக்கும் ஆலயத்தின்பெயர் ௪௰

கொன்றையங்கண்ணிக்கடவுள்பூசனையுமுடித்திலமென்பதுகுறியான்
கன்றியமனத்தன்சேனைகாவலனைக்கதுமெனவம்பின்களென்றுங்
குன்றுறழ்பிணித்தேர்பண்ணுதிவலவ கொணர்திநீயென்றென்றுங் கூறிச்
சென்றனன்கொழும்பொற்கோயில்வாய்கடந்துவீதிவாய்ச் செல்கின்றவே

இ-பு கொன்றைப்பூமாலையணிந்தபரமசிவனுடையபூசனையைமுடித்திலோமென்பதையுங்கருதாதவனாய்க்கோபிப்புள்ளமனத்துடன்சேனாதிபதிகளைப்பார்த்துநீங்கள்சேனைகளைக்கூட்டிக்கொண்டுவிரைவாகவாருங்களென்றும்தேர்ச்சாரதியைப்பார்த்துநீதேரைப்பூட்டிக்கொண்டு வாவென்றும்சொல்லிப்புறப்பட்டுச்செழுமையுள்ளபொன்னாற்செய்யப்பட்டதன்ஆசாரவாசல்கடந்து வீதியினிடத்திற்செல்லும்போது-எ-று. ௪௧

மந்திரகிழவன்மாபெலவேந்தன் வாதனைப்பூசனைபுரிதல்
சிந்தையினெண்ணிநாற்படைசூழச்சேனைகாவலரொடுஞ்சென்று
தந்திரமிரியப்பொருதுசெம்பியனைத்தருக்கறப்பிணித்தனன் கொணர்ந்து
செந்தமிழ்மாறன்றிருமுனம்விடலுஞ்செழியர்கோன்வாளினாற்றடிந்தான்

இ-பு இவ்வரசன்சிவபூசையையும்மத்தியில்நிறுத்திவிட்டுயுத்தஞ் செய்யப்புறப்பட்டதுதெரியாமல்அவனுடையமந்திரியானவன் பகைவர்போர்செய்யவந்திருக்கிறார்களென்பதைக்கேள்விப்பட்டவுடன்இப்போதுநம்முடையராசன்சிவபூசைசெய்துகொண்டிருப்பதினால் இந்தச்சேதியை அவருக்குத்தெரிவித்தால்சிவபூசைக்குவிக்கினமாகும் ஆதலால் நாமேபோய்ப் போர்செய்து சயம்பெற்று வருவோமென்று மனதிலெண்ணிக் கொண்டு (தேர்-யானை-குதிரை-பதாதியென்கிற)நால்வகைச்சேனைகளுஞ் சூழ்ந்துவரப்படைத்தலைவர்களோடும்போய் எதிரியினுடையசேனைகளெல்லாம் ஓடும்படிபோர்செய்துசோழராசனை இறுமாப்புக்கெடக்கட்டிக்கொண்டுவந்து

செவ்வியதமிழைவிர்த்திசெய்தபாண்டியனெதிரில்விட அவ்வரசனைத்தன் வாளினாற்கொன்றான் ௬௨

அடையலர்ச்செகுத்தசெருக்கினாற்றென்னனாலவாயரன்றிருப்பூசை
யிடையினிற்றணந்தேமுடித்திலமென்ப தெண்ணிலனெல்லியினையினி
மடைவளஞ்சுரப்பவருந்தினனந்தமடமையான்மறுமையிற்போகக்
கடைசெலவருந்தாதிடையினிலென்றார்கருவியாற் களத்தினின்மடிந்தான்

இ-பு. பகைவரைக்கொன்றஇறுமாப்பினால்பாண்டியனானவன் திருவாலவாயில்வீற்றிருக்கும்சொக்கநாதர் திருவாராதனையைமத்தியில்நீங்கி நிறைவேற்றவில்லையேயென்பதைநினையாமல் இராப்பொழுதில் ஆறுஉருசியுள்ள குறையாமல்வாய்க்குஇனிமையைத்தரத்தக்கதாக அன்னம்உண்டான் அந்தஅறியாமையினால்மறுபிறப்பில்பூர்ணாயுசுடனிருந்துபோகங்களை அநுபவிக்காமல்நடுவதுபாதியிலேதானே பகைவருடையஆயுதத்தால்போர்க்களத்தில்இறந்தான்-எ-று ௬௩

அன்றுமிக்குமானந்தவேல்வழுதிக் காநம்பெற்றகுமரனாயுதித்துக், தன்
றிருத்தாதைசெய்கைபோற்றானுந்தரியலர்ச்செகுத்தனமென்னும்வென்றி
யிற்களித்துத் தாதையோடயின்றவினையென்றாயில் கொடுகழித்தான்
றென்றுபட்டுளவாந்தீமையாலின்னவறுமையார்துயர்க்கடல்குளித்தான்

இ-பு அந்தநாளிலுமிந்தப்புத்திரன்வேலாயுதத்தையுடைய அந்தப்பாண்டியனுக்குப்பெறுதற்கரியபுத்திரனாய்ப்பிறந்துசிறப்புள்ள தன்தகப்பன்செய்கைபோலத்தானும் பகைவரைக்கொன்றோமென்கிற வெற்றியால்மமதையடைந்துசொக்கநாதர்பூசை நிறைவேறாமையால்தீவினைவந்து சம்பவிக்குமென்பதையெண்ணாமல்தகப்பனுடன் அன்னம்உண்டு நித்திரைசெய்து இராப்பொழுதுகழித்தான் இவ்வாறுபழமையாய் வருகின்றபாவத்தினால் இத்தன்மையுள்ளதரித்திரமாகிய துக்கசமுத்திரத்தில்மூழ்கினான்-எ-று

மற்றிவன்றாயுமங்கைவாள்வழுதி மனைவியாய்வாழுமுற்பவத்தின்
வெற்றிவேன்மன்னன்பன்னியராய் வேறுளமடவியர்க்கெல்லாம்
குற்றமேபுரிந்துநீவிட மருத்திக் கொலைபுரிபாவமேயிவளைப்
பெற்றநாளந்தமுதலைவாய்ப்படுத்திப் பெய்வளையுயிர்கவர்ந்ததுவே

இ-பு. இவ்வாறுதுக்கசாகரத்துள் அழுந்திய இவள் தாயானவளும் வாளாயுதமேந்திய அந்தப்பாண்டியராசன் மனைவியாய் வாழ்ந்துகொண்டிருந்தமுன்பிறப்பில் வெற்றி பொருந்திய வேலாயுதத்தையுடைய அவ்வரசன்மனைவியர்களாகிய மற்றுமுள்ள மாதர்களுக் கெல்லாம் குற்றங்க

ளையேசெய்து கொடியதாகிய விஷயிட்டுகொலைசெய்தபாவமானதே இவனைப்பெற்றாளில் அகதமுதலைவாயில் அகப்படச்செய்து அவனுடைய பிராமணனைக கவர்ந்துவிட்டது-எ-று. ௬௫

வேறு.

ஆதியம் பரமனை யருளினுறிவை
காதலின் முற்பவம் வழிபடாக்கலா
வேதனை வறுமையான் மெலிந்துமிப்பவக்
கேதமோ டுபெலி யெடுப்பரின்சொலாய்

(இ-பு) இனியசொல்லை யுடையவளே ஆதியாகியபரமசிவனை கிருபைக்கடலை முன்பிறப்பில் அன்புடன்பூசைமுற்றச்செய்யாமையால் சம்பவித்தவேதனையைத்தருகின்ற தரித்திரனால் வருந்தியும்இப்பிறப்பில் துன்பத்துடன் பிக்ஷையையெடுக்கின்றார்கள்-எ-று. ௬௬

மல்கியசெல்வமும் வளனுமைந்தரும்
பல்கியகிளைஞரும் பழுக்கவர்முநர்
நல்கிய கிரீசனை நாளு நாடியே
யலகலிற் பலங்தொறு மருச்சித் தேக்கினர்

(இ-பு) கிறைந்தசெல்வமும் வளப்பமும் புத்திரர்களும்மிகுந்த சுற்றத்தாரும் செழித்திருக்கும்படி வாழ்கின்றவர்கள்மேற்சொல்லியவைகளையெல்லாம் அருளிச்செய்கின்றகயிலாசபதியைநாள்தோறு மனதில்தியானஞ்செய்து குறைவில்லாத சநநங்கள்தோறும் அருச்சனைசெய்து துதிசெய்யப்பெற்றவர்களாம்-எ-று. ௬௭

வேறு

மறையு மங்முமாசில் புராணமுஞ்
செறியு மாகமமூன்றின் செப்புமாற்
பொறியி னல்வினைபோக்கிமெய் வீட்டின்ப
மறியநல்கு மரனடியென்னவே

இ-பு, அந்தச்சிவபூசையின் பலனான தனு்பொறிகளால் அனுபவிக்கத்தக்க தீவினையைநீக்கி உண்மையாகியமோக்ஷ இன்பத்தை அறிந்து ஆநந்தம் அடையும்படி பரமசிவனுடைய திருவடியைத்தருமென்றுவேதங்களும் குற்றமில்லாத பதினெண்புராணங்களும் பொருந்திய இருபத்தெட்டாகமங்களும் ஒன்றுக்கொன்றுமாறுபடாமல் நின்றுசொல்லுகின்றன-எ-று

சொன்னவிப்பர தோடத்திற்கித்தனை
மன்னு மான்மியம யாதெனின் மாறுகேள்

கன்னல்வேளை யெரித்தநங் கண்ணுத
லின்னதாயர சனி முகத்தினே

இ-பு சொல்லிய இந்தப்பிரதோஷத்துக்கு நிலைபெற்ற இவ்வளவுமகத்துவம் உண்டானதென்னவென்றால் அந்தணமாதேசொல்லுகிறேன்கேள் கரும்புவில்லையுடையமன்மதனை யெரித்தநெற்றிக்கண்ணையுடைய நம்முடையபரமசிவன் இத்தன்மையுள்ளதாகிய பிரதோஷகாலத்தில்-எ-று.௬௪

வேறு.

விண்டலமளக்கும் வெள்ளிவேதண்டத் தாதிதன்னியநெடுஞ்சிகரத்
தெண்டிசாமுகமு மிருள்கெடவிமைக்க வெழுந்தபேராலயமன்றின்
அண்டநாயகிகண் டிவந்தெழிலரிமா னசனத்தினிதுவீற்றிருப்பக் [றுக்கி
கொண்டலினிறந்தோன்கொண்டலினுருமிற் குடமுழாகருடங்கையின்மு

இ-பு, ஆகாயத்தை யளக்கும்படியானகயிலாசகிரியில் விசாலமுள்ளதாய் உயர்ந்திருக்குஞ் சிகரங்களையுடையஅஷ்டதிக்குகளி னிடத்திலும் இருள்கெடும்படி பிரகாசிக்கவோங்கிய விசாலமாகியதம்முடைய ஆலயமாகிய சபையில் பார்வதிதேவியார்நோக்கிச்சந்தோஷித்து அழகுள்ளசிங்காசனத்தில்வீற்றிருக்கவும் விஷ்ணுஇடிமுழக்கம்போலக் குடமுழாவென்னும்வாத்தியத்தைத் தன்னுடையஉள்ளங்கையினால் முழுங்கவும்-எ-று ௬௰

தும்புருநாரதர்பாடப் புரந்தரன்துதியினிறகூட்ட
அம்புயமடந்தை தோரியவனிதை யாகியேமகரயாழ்தடவ
வம்பணிமுலையிற் கோடுறத்தழுவி மாடகமலர்க்கையான் முறுக்கி
யம்பவளத்தின் வாய்மலாதிறந்து நாமகளமுதப்பாட்டயர

இ-பு. தும்புருநாரதர்கள் இசைபாடவும் அதைத்தேவேந்திரன்துதியிற்கூட்டவும் திருமகளானவள் ஒத்துப்பாடுகின்றமகளிர்போல மகரவீணைவாசிக்கவும்சரஸ்வதிகச்சணிந்ததன்னுடையஸ்தனங்களினிடத்தில்வீணைத்தண்டுபொருந்தும்படி சார்த்திக்கொண்டுசெந்தாமரைமலர்போன்ற கையினால்முறுக்காணியைமுறுக்கி அழகியபவளத்தையொத்தவாயைத் திறந்து அமுதம்போல மதுரமுள்ள இசைபாடவும்-எ-று. ௬௧

அவனியையின்றவிரிஞ்சரோர்பதின்மர்க்காதியாஞ்சதுர்முகவிரிஞ்சன்
புவனிவாழுலகஞ்செவிசெவிடெறியப் பொற்கரத்தாளத்தைச் சதியிற்
சிவனுடைநடத்துக்கிசையவேதாக்கத்தேவர்களனைவருமேத்துத்
தவளவெண்ணீற்றோனளவில்பல்கோடிதபனரினுருவெடுத்தாடும்

இ-பு. பூலோகத்தைச் சிருட்டிக்கத் பத்துப்பிரமகளுக்கு ஆதியானசதுர்முகப்பிரமதேவன் பூலோகத்திலுள்ளவர்களுக்கும் தேவலோகத்திலு

ள்ளவர்களுக்கும் காதுகள்செவிடுபடும்படி அழகியகைத்தாளத்தை தாள க்கிரமப்படி இவனுடைய நடனத்துக்கு இசைவுபெறத்தாக்கவும் தேவர்க ளெலலாரு ந துதிசெய்யவும் வெண்மைநிறமுள்ள விபூதியணிந்திருக்கும் பரமசிவன் அளவில்லாத பலகோடி சூரியர்கள் போலத்திரு வுருவங்கொ ண்டு தாண்டவமாடும்-எ-று. ௩௨

விண்டுவேமுதலாந் தேவர்களெவரும்விதுவுறைசடிலவானவன்றன
றண்டவினிருத்தங் காணியவேகுந்தன்மையாலன்னவ ரெல்லா
மண்டுநீருலக மாதியஞ்சுடரை வழிபடுபூசனை தமதாய்க்
கொண்டுநின்றுவப்ப ரென்றுநான்மறையுங் கூறுமாகமங்களுங்கூறும்

இ-பு, விஷ்ணுமுதலாகியதேவர்களெல்லாரும் சந்திரன்பொருந்திய ச் டாமகுடத்தையுடைய பரமசிவனது சதானந்த நிருத்தத்தைத்தரிசிக்கச்செ ல்லுந் தன்மையால் அவர்களெல்லாரும் சமுத்திரஞ்சூழ்ந்தஇந்தவுலகத்தி ல்ஆதியாகியபரமசிவனை ஆராதனைசெய்யும்பூசனை தங்களுடையதாகக்கொ ண்டு எந்நாளும்மகிழ்ச்சிஅடைவார்களென்று நான்குவேதங்களுஞ்சொல் லுகின்றன அவ்வாறேஇருபத்தெட்டுஆகமங்களுஞ்சொல்லுகின்றன-எ-று

அன்றியுமடமாய் நின்வயினுதித்த வரும்பெறற்காளைவேதியன்முன்
சென்றிடுமும்மைப்பிறப்பின்வேதியருட் செல்வமிக்குடையனாயிருந்தும்
கன்றியவுலோபஞ் சிந்தையைக்கலற்றக் கைவிரித்தெவரளித்தாலும்
நன்றெனவேற்றவளவிலியோடு நாடொறும்பாவமுமீட்டி.

இ-பு, இதுவுமல்லாமல்உன்னிடத்திற்பிறந்தஇந்தப்பிராமணப் பிள்ளை யானவன் முன்பிறப்பில்பிராமணகுலத்தில்மிகுந்தசெல்வமுடையவனாயி ருந்தும் கொடிதானலோபகுணமானது தன்மனதைப்பிடிப்பதனால்(தன க்குள்ளதைவைத்துக்கொண்டுண்ணுமல்)எவர்கள் கொடுத்தாலும்கைவிரி த்துத் தானமாகவாங்கிக்கொள்ளும்பொருளுடனேபாவத்தையும்நாள்தோ றும் சேர்த்து-எ-று.* புண்ணியவான்களுடையசொத்துவாங்கலாம் பாவி களுடையசொத்து வாங்கலாகாது. ௩௪

வாழுநாளகத்துளொருபகலேனும் வறியவர்க்கிட்டுண்டொழிந்த
பீழையால்வறுமைபிணிபிடித்திந்தப் பிறப்பினிவன்னணை மூழுன்முன்
போழிளமதியமுடித்தசேகரனைப் பூசனைபுரிவரோன் மைந்தர்க்
கூழுறுவறுமை பரிதிவானவன்முன் னிருட் பிழம்பெனவொழியும்

இ-ள். இவ்வாறுவாழுநாளில் தன்வீட்டில்வருகின்றயாசகருக்கும்ஒரு நாளாவதுபிட்சையிட்டுண்ணுதகுற்றத்தினால் வறுமைநோயடைந்து இந்த ப் பிறப்பில்இவ்விதமாகவருத்தமடைந்தான் ஒருகலையாகிய இளஞ்சந்திர

ளையணிந்த திருமுடியையுடையபரமசிவன்சனிப்பிரதோஷத்தில் பூசனை செய்வார்களானால் இந்தப்புத்திரர்களுக்குஊழினால் நேரிட்டிருக்கிற வறுமைநோயானது சூரியனைக்கண்டவிருந்தஇருட்கூட்டம் நீங்குவதுபோல நீங்கிவிடும்-எ-று. ௫௫

இவ்வண்ணமுரைத்தமுனிவான்மொழியைமின்பொடுவிருப்புறக்கேட்டான், கவ்வண்ணமெல்லா மனக்கொடுமகிழ்வுற்றன்னைவள்பின்னருமந்த
வெவ்வினையறுத்தமுனியுடன்கேட்டகதையெல்லாம்விளம்புவனென்றுச்
செவ்வண்ணவேணிச் சூதமாமுனிவன்றெருளுறச செப்பினனன்றே

இ-பு, இப்படியாகச்சொன்னமுனிவனுடையவார்த்தையைச்சந்தோஷமும் இன்பமும்உண்டாகக்கேட்டு அம்முறைமைகளையெல்லாம் மனதில் அறிந்துகொண்டுமகிழ்ச்சியடைந்துஅந்தப்பிராமணஸ்ரீயானவள் தீவினையொழித்த அந்தமுனிவனிடத்தில் மேலுமேலும் கேட்டகதையெல்லாஞ் சொல்லுகிறேனென்று செம்மைநிறமுள்ள சடையையுடைய சூதமுனிவரானவர் நைமிசாரணியமுனிவர்களுக்குத் தெளிவுண்டாகும்படி சொன்னார்-எ-று. ௫௬

ஆறாவது- சததியாதனன்,
பூசைசெய்த அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம் - ௩௩௬



௨

சிவமயம்.

ஏழாவது.

# பிரதோஷபூசைமகிமைஅத்தியாயம்

மன்னியகற்பினருந்ததியனைய மடவாலுமையவள் கேட்டுத்
தன்னிருகரமு முச்சிமேற்குவியத்தவமுனிமலரடிதாழ்ந்து
பன்னகாபரணன் பூசனைபுரியும்படியெலா மடியனேனறிய
நின்னருள் புரிந்துவாய்மலர்திறந்து நிகழ்த்தெனக்கெடுத்தவ ளுரைத்தாள்

இ-பு. நிலைபெற்ற கற்பினையுடைய அருந்ததியையொத்த பதிவிரதாபாவத்தினை வரலாறாக உடைய உமையென்னும் பெயருள்ள பிராமண

ஸ்ரீயானவன் முனிவர்சொல்லியதை யெல்லாங் கேட்டுத்தன்னுடைய இரண்டுகைகளையும் உச்சியின்மேல்குவித்து வைத்துக்கொண்டு நமஸ்கரித்து அந்தமுனிவருடையதாமரைமலர்கள்போன்றபாதங்கடில்சேவித்துப் பரமசிவனுடைய பூசைசெய்யுங் கிரமமெல்லாம் அடியேன் தெரிந்துகொள்ளும்படி கிருபைசெய்து உம்முடைய திருவாய்மலர்ந்துசொல்லுமென்றாள்-எ-று, (௧)

வேறு.

திங்கடோறுங் குறையாது திகழுமிரண்டு பக்கத்துக்
கங்குன்முகங்கள் பன்மூன்றாந் தினத்துவந்த காலமெலாம்
பொங்குந்தூய புனலாடிப் பகற்போதுண்டி பொருந்தாம
லங்கண்மாலைப் போதுவர வலர்கம்பலத்தின் விதானித்தே.

(இ-பு.) மாதந்தோறுங் குறையாமல் விளங்குகின்றஇரண்டுபக்ஷத்துப்பதின்மூன்றாந்திதியில் பிரதோஷம்வருகிற காலமெல்லாம்மிகுந்தபரிசுத்தமாகியநீரில் ஸ்நாநஞ்செய்து பகற்பொழுதில் ஆகாரங்கொள்ளாமல் அந்நாளில் மாலைப்பொழுது வருகிறகாலத்தில் பிரகாசிக்கின்றபலவிதசித்திரங்களெழுதிய சிவப்புப்புடைவையினால் மேல்விதானங்கட்டி-எ-று, இரண்டுபக்ஷமாவது பூர்வபக்ஷம் அபரபக்ஷம் என்பவைகளாம்பந்தல்போட்டு அதற்குள் மேல்விதானங் கட்டுகிறது முறைமையாதலால் விதானித்து என்று சுருக்கிச்சொன்னார்-எ-று,(௨)

புனிதமணிமண் டபம்புகுந்து புரிநூற்கும்ப மண்டலங்கண்
முனிவில்விதான முறைபிறழா தியற்றிக்குரவன் மொழிபேணி
நனிசேர்சைவா கமவிதியும் புராணவிதியு நான்மறையி
னினியவிதியு மலைவுபடா தொன்றும்விதியி னியல்போர்ந்து,

(இ-பு,) இப்படியாகப் பந்தல்போட்டு மேல்விதானங்கட்டினபரிசுத்தமான அழகிய மண்டபத்தில் பிரவேசித்துக்கும்பங்களுக்கு நூல்சுற்றிமண்டலங்கள் குற்றமில்லாத சாத்திரமுறைக்கு மாறுபடாமல்ஏற்படுத்திக் குருசொல்லிய உபதேசமொழியைவிரும்பி சைவாகமவிதியும்புராணவிதியும் இனியதாகியவேதவிதியும் ஒன்றுக்கொன்றுமாறுபடாமல் சரியொத்திருக்குமுறைமையை யுணர்ந்து-எ-று. (௩)

ஐந்துபுலனுமொருவழியே நிறுவிமனத்தி னழுக்ககற்றிச்
சிந்தையாரப் பாவித்து வாயாற்றிருமந் திரஞ்செப்பி
முந்துகாத்த லலர்முதல வழிபாடொண் முறைமுடித்துக்
கந்தமலரும நாற்றமும்போ லபேதமாய் கருத்தினனாய்,

(இ-பு,) ஐம்புலன்களையொருவழிப்பட நிறுத்திக்காமவெகுளியை நீக்கிச்சித்தத்திற் பொருந்தப்பாவித்து வாயினால் பஞ்சாக்ஷரத்தைச்

சொல்லிமுந்தியகைகளினால் மலர்கள்முதலாகிய சோடசோபசாரபூசைசெய்தாலும்அதன்வாசனையும்பேதமில்லாமலிருப்பதுபோலபேதப்படாதகருத்தையுடையவனாய்-எ-று. (௪)

வெற்புக்கரையன் றிருமயிலை மின்னிற்பொலியு மேனியளை
யற்பமருங்கிற் கிடர்செய்யு மணிபூத்திருக்கு முலையாளை
கற்புக்கரசி தனைச்சந்திர கலையார்மேகக் கருங்குழலைப்
பொற்புக்கழகு தரும்வதனப் பொலம்பூங்கொம்பிற் பொலிவாளை

(இ-பு,) மலையரையன் புத்திரியாய் மயில்போலச்சாயலையும்மின்னலைப்போலப்பிரகாசிக்குந் திருமேனியையும் சிறியமருங்குலுக்குத்துன்பஞ் செய்யத்தக்கதாய் அழகுகொண்டிருக்குந் தனங்களையும் பதிவிரதாதருமத்துக்கு அரசியென்று சொல்லத்தக்கதன்மையும் சந்திரகலையென்கிறஒருவிதஆபரணந்தங்கிய கரியஅளகத்தையும்அழகுக்கு அழகினைத் தருவதாகியதிருமுகத்தையுமுடைய பொன்கொம்புபோலவிளங்கும்பார்வதிதேவியாரை-எ-று, (௫)

வாமபாகத் திருத்துவழிபட்டேத்தி மணித்தவிசிற்
காமனைக் மடலைசெய்த கனலிவழங்கு கட்கரும்பைப்
பூமனார் தஞ்சிரங்கமழும்புலவையொழிப்பப்பொற்கொன்றைத்
தாமநாற்றத் திசைகமழு மணிமார்புடைய தனிப்பொருளை

(இ-பு,) இரத்தினங்கள் பதித்த ஆசனத்தில் பரமசிவனுடையஇடப்பாகத்தில் எழுந்தருளப்பண்ணி அருச்சனையுடன் ஆராதனைசெய்து மன்மதனுடைய சரீரத்தை நீறுசெய்த தீயைவழங்கிய நெற்றிக்கண்ணையுடையவராய் அடியார்களுக்குக் கரும்புபோலிருக்கும் கடவுளைப்பிரமதேவனுடைய தலையினின்றும் நாறுகின்ற புலால்நாற்றதனைநீக்கப்பொன்னிறமுள்ள கொன்றைப்பூமாலையின்வாசனையானது அஷ்டதிசைவரைக்கும் பரிமளிக்கும்படி அணிந்திருக்கும் அழகியமார்பையுடையஒப்பற்ற பரம்பொருளை-எ-று, (௬)

வெள்ளிமலையின் மாணிக்க வெற்புவருதல் போல்விளங்கும்
பள்ளியுரக மால்விடையிற் பவனிபோதும் பரஞ்சுடரைத்
துள்ளிமதியோ டிகலியலை துளும்புங்கங்கைச் சடையானைப்
புள்ளியிளமான் கன்றுகளும் புண்டரீகக் காத்தானை.

(இ-பு.) வெள்ளிமலையின்மேல் மாணிக்கமலைவருவதுபோலவிளங்குகின்ற சர்ப்பசயனத்தில்பள்ளிகொள்ளும்விஷ்ணுவாகிய ரிஷபவாகனத்தில் பவனிசெல்லுகின்ற பரஞ்சுடரும் சந்திரனுடன் பகைத்துத்துள்ளிஅலைகள்ததும்பிக்கொண்டிருக்கும் கங்கையை அணிந்த சடை

யையுடைய வரும்இளமையாகிய புள்ளிமான் கன்றுவிளங்கிக்கொண்டிருக்கும் செந்தாமரைமலர்போன்ற திருக்கரங்களையுடையவரும்-எ

வாங்குமலைநீர் வாரிதிபு மலையுநிலனு மற்றெவையுந்
தாங்குபுயங்க நூபுரத்தின் மறைநின்றிரைக்குந் தாளானை
வீங்குபுணரி யாலால விடமுண்டிருண்ட களத்தானை
யோங்குசிகைமுத் தீயென்ன வொளிருஞ்சூழுமுட் படையானை

(இ-பு.) உலகத்தைச் சூழ்ந்திருக்கும் அலைநீரையுடைய சமுத்திரத்தையும் மலைகளையும் பூமியையும் மற்றுமுள்ள எல்லாவற்றையும் தாங்குகின்ற ஆதிசேஷனுடன்வேதமாகிய சிலம்புகள் சத்தித்துக்கொண்டிருக்குந்திருவடிகளையுடையவரும் நீர்மிகுந்த சமுத்திரத்தில் உண்டாகியஆலகாலவிஷத்தைஉண்டு கறுத்தகழுத்தினையுடைய வரும் ஓங்குகின்ற சிகையினையுடைய முத்திபோலவொளிருகின்ற சூலாயுதத்தையுடையவருமாகிய பரமசிவனை-எ-று, (அ)

அன்பினிருத்திச் சிவாகமத்தி னமைவிற்கருப்பூரத்தீப
மின்பநிறைக்கு நறுந்தூப மியாவுங்குறையா தினிதமைத்து
நன்பொன்மலர்த்தார் முடித்தசடை நாதன்றுணைத்தாள் வழிபட்டாற்
றுன்பமில்லை யார்மாட்டு மென்றுசுருதி முறையிடுமே,

(இ-பு.) அன்புடன் ஆசனத்தி லெழுந்தருளப்பண்ணிச்சிவாகமத்திற்சொல்லியிருக்குமுறைமைப்படி கர்ப்பூரதீபமும்நல்லவாசனையைத்தருகின்ற தூபமும் மற்றஎல்லா வுபசாரமுங்குறைவுபடாமல்இனிதாகச்செய்து நல்லபொன்னிறமுள்ள கொன்றைப்பூமாலையை அணிந்தசடையையுடையபரமசிவன்இரண்டுதிருவடிகளையும்ஆராதித்தால் யாவரிடத்திலுந்துன்பமில்லையென்று வேதங்கள்முறையிடுகின்றன-எ

வேறு,

இத்திற மிருவரு மியற்றுவா ரெனிற்
றெத்திண ரிதழியான் றெண்டுபூண்டிடும்
பத்தியின் முன்னவன் வறுமை பாழ்படுஞ்
சத்திரத் திளவலுந் தரணி காக்குமே.

(இ-பு,) இப்படியாக இந்தஇரண்டுபேரும்பிரதோஷகாலத்தில் பூசைசெய்வார்களானால் கொத்தாகிய கொன்றைப்பூமாலையணிந்த கயிலாசபதியின் அடிமைத்திறம்பொருந்திய பக்தியினாலே மூத்தவனுடைய தரித்திரமானதுபாழ்பட்டுப்போம் இளையவன் அரசனாகிஒருகுடையின் கீழிருந்து பூலோகத்தைக்காப்பன்-எ-று. ௰

வேறு.

என்று முன்ன மெழுந் திறைஞ்சினர்
முன்று முன்னிய வோகை முற்றுற
அன்று நின் னடியே மருந்துய
ருன்று லேகடவுய்ந்து வாழ்ந்தனம்,

இ-பு. இவ்வாறு முனிவர்சொல்வதற்கு முன் அவர்களெழுந்து வணங்கினவர்களாய் எங்களுக்குத் தாயையொத்த மகானுபாவரே உம்மால் நாங்கள் முன்னாலே கருதிய மகிழ்ச்சிபொருந்தவும் அடியேங்களுநை அருமையாகிய துயரமானதொழிந்து போகவும் தீவினையினின்று பிழைத்து வாழ்வை யடைந்தோம்,எ-று, ௰௧

எ ரு ரன்பி னிரங்கி மாமுனி
ந ரு கென் று நயந்து மைந்தர்பாற்
றன்று ணெஞ்சுக னுச்சி சாத்தியே
குன்று மந்திர மூலங் கூறினான்,

இ-பு, அன்புடனே இவ்வாறு சொன்னார்கள் அதைக்கேட்டமுனிவரானவர் கிருபைவைத்து உங்களுக்கு நன்மையுண்டாகக்கடவதென்று ஆசீர்வதித்து அந்தப்புத்திரர்களுடைய சிரசிலும்நேத்திரங்களிலும்இருதயத்திலும் தம்முடைய பாதத்தை வைத்து அழிவுபடாதமூலமந்திரத்தை உபதேசித்தார்-எ-று, ௰௨

கேட்டார் வல்வினை வேரோடே கெட
வூட்டா நல்வினை மேலு மோங்கிடச்
சேட்டார் மைந்தர்க டேசிகன் பதஞ்
சூட்டா நின்றனர் பின்னுஞ் சொல்லுவான்

இ-பு, அவ்வாறு முனிவருபதேசித்த மந்திரத்தைவலியதீவினைகள் ஆணவமலத்துடன் கெடவும் ஆகாமிய மேறச்செய்யர்தநல்வினைமேன்மேலும் விர்த்தியாகவும் கேட்டுக்கொண்டு இளமைப்பருவத்தையுடைய அந்தப்புத்திரர்கள் ஆசாரியராகிய முனிவருடையபாதங்களைத்தொழுதார்கள் அவர்கள்தொழுதவுடன் முனிவர்பின்னுஞ் சொல்லுகின்றனர்-சு-று, ௰௩

வேறு,

வல்லமறையோன் மதலைசுசி விரதனெனவு மணிவயிரக்
கல்லிற்றிரடோ ளரசிளங்கோக் காளைதரும் குத்தனென்றுஞ்
சொல்லக்கடவ துலகமெனச் சொல்லி முகமன் பலவியம்பிச்
செல்லறவிர்த்து மகிழ்வோடுங் குமரர்தம்மைச் செல்கென்றான்

(இ-பு,) வல்லமையையுடைய பிராமணபுத்திரனைச்சுசிவிரதனென வும் அழகியவயிரக்கல்லைப்போலப்பலமுள்ளதாய்த் திரண்டதோளை யும்இளமைப்பருவத்தையுமுடையராசகுமாரனைத் தருமகுத்தனென் றும் உலகத்தார்சொல்லக்கடவரென்று பெயர்கூறிஅன்றியுமஉபசார வார்த்தைகள் பலவாகச்சொல்லித் துன்பத்தைநீக்கி மகிழ்ச்சியுடன் அவ்விரண்டுபுத்திரர்களையும் போங்களென்று உத்தரவுகொடுத்தார் எ-று. தருமகுத்தன் என்பதற்குத் தருமத்தைப்பாதுகாப்பவன்எனப் பொருள்கொள்க

வேதமுனிவன் விடைகொடுப்ப விளங்குகுமாரிருவோரும்
போதமுறுதங் தாயருடன்மனையிற்புகுந்துபுரமெரித்த
நாதன்றன்னை நிசிமுகத்தினுணாளும விசேடிதமாய்ப்
பாதகமலந்தொழுதேத்தி வழிபாடனைத்தும்பண்ணியே

(இ பு,) வேதங்களுணர்ந்த முனிவரானவர் உத்தரவுகொடுப்பவி ளங்குகின்ற இரண்டுபுத்திரர்களும் தெளிவுபெற்ற தாயாருடன்வீட் டில்வந்து திரிபுரதகனஞ்செய்தபரமசிவனைப் பிரதோஷகாலத்தில்நா ளுக்குநாள் விசேஷமாய்ச் சோடசோப சாரத்துடன் பூசைசெய்துப ரமசிவனுடையதிருவடித்தாமரைகளைவணங்கி-எ-று ௰௫

திங்களொருநான் கிவ்வாறுசெல்லச்செல்வரிருவோரிற்
பொங்குபுரிநூற் சுசிவிரதன் புனிதநதியிற்புனலாட
அங்கணுநசா ரேகுதலுந்தெண்ணீர்பொருதவகன்கரைவாய்க்
கொங்கைக்குவமை சான்றதொரு குடத்தினிதியங் கண்ணுற்றான்

(இ-பு,) இவ்வாறு நாலுமாதஞ்செல்ல அந்தப் புத்திரர்களிருவரி ல்பூணநூல்விளங்கு மார்பினையுடையசுசிவிரதன் அவ்விடத்தில் ஒரு புறத்திலுள்ளபரிசுத்தமான நதியில்தீர்த்தமாடச் சென்றான் அப்படி செல்லவும்தெளிந்த அலைநீர் மோதுகின்ற கரையினிடத்தில் மாதர்க ள்கொங்கைக்குஉவப்புள்தான ஒருகுடத்தில்திரவியமிருக்கக்கண்டான்

ஓகையொடுநான்மறைவல்லோ னுற்றபொருள்கண்ணுற்றிடலும்
பாகைவிரவு மொழியுமையாள் பங்கன்பூசைப்பலனென்றே
தோகைபாகன் புகழ்பாடித் தோளிற்சுமக்குங் குடநிறைந்த
ஈகையோடு மனையகத்தினெய்தித்தாயர்க்கிதுசொன்னான்

(இ-பு) தான்கண்டறியாத திரவியத்தைக்கண்டவளவில் பிராமணப் பிள்ளையானவன் சந்தோஷத்துடன் வெல்லப்பாகினையொத்தமதுரவ சனமுள்ளபார்வதிதேவியாரை யிடப்பாகத்திலுடைய பரமசிவனைப் பூசித்தலால் கிடைத்தபலனிதுவென்று அவருடைய புகழையெடுத்

துப்பாடித்தோத்திரஞ்செய்து பொன்னிறைந்தஅந்தக்குடத்தைஎடுத்துத்தோளில் வைத்துக்கொண்டுவீட்டில்வந்து தாயாருக்குஇந்த வார்த்தையைச்சொன்னான்-எ-று, ௰எ

அன்பர்க்கெளியன் வெள்ளிமலையமர்ந்தமுதல்வனருள்ம்பணி
யின்புற்றியற்றும்பூசனையி னெய்துபயன்காணிதுவென்ன
துன்பக்கடலி னழுந்துமுமை தூயபுதல்வன்சொற்கேளா
என்புற்றுருகி யகங்குளிர்ந்தங்கிளையான்முகம்பார்த்திதுசொல்வாள்

(இ-பு,) அன்பர்க்கெளியவரும் வெள்ளிமலையில் வீற்றிருப்பவருமாகியபரமசிவனுடையதிருவருளைவிரும்பி இன்பம்பொருந்திச்செயயும்பூசனையினால் அடையும்பலன் இதுவென்றுபரிசுத்தனாகிய தன்புத்திரன்சொல்லியவார்த்தையைக்கேட்டு முன் துக்கசாகரத்தில்அழுந்தியஉமையென்னும் பெயரையுடையதாயானவள் எலும்புநெக்குவிட்டுருகி மனமகிழ்ச்சியடைந்து அந்தஇளையபுத்திரன்முகத்தைப்பார்த்து இந்தவசனஞ்சொல்லுகிறாள்-எ-று, ௰அ

மைந்தர்நீங்களிருவீரு மாளைபகிர்ந்துகொண்மினென
கந்துங்கழையும்பொருதகளிற்றுக் கழற்கால்வேந்தன்றிருப்புதல்வன்
அந்திவண்ண னளித்ததீதவற்கேயெமக்கு மவனளிக்கும்
புந்தியவலமொழிகென்னத் தாயர்த்தொழுதுபுகன்றானே

(இ-பு,) புத்திரர்களே நீங்களிருவரும் இந்தத்திரவியத்தைப்பங்கிட்டுக்கொள்ளுங்களென்றுசொல்ல கட்டுத்தறியையும் குத்துக்கோலையும்முறிக்கத்தக்க யானைகளையுடைய வீரகண்டைகட்டிய காலினனாகியராசபுத்திரன்சொல்லுகிறான் தாயேஇதுபரமசிவன்என்தமையனுக்குஅருளிச்செய்ததாகையால் அவருக்கேயுரியதாம்எனக்கும்அந்தக்கடவுள்கிருபைசெய்வார் உன்மனதிலிருக்குந்துயரத்தைநீங்கென்றுதாயைவணங்கிச்சொன்னான்-எ-று, ௰கூ

வேறு,

மற்றவன்கூறிய வண்ண மைந்தருஞ்
செற்றமி லன்னையுஞ்செல்வ மோங்கவே
யுற்றநல்குரவினை யொழிந்து வைகுநாட்
கொற்றவன் காதலன்கொள்கை கூறுவாம்

(இ-பு,) ராஜகுமாரன் சொல்லியபிரகாரமேகுற்றமில்லாததாயும்புத்திரர்களும் ஒருநாளாகப் பொருந்திய தரித்திரத்தையொழிந்துசெல்வம் அதிகரிக்கவாழும்நாளில் அந்தராசகுமாரனுடையசெய்கையைச்சொல்லுகிறோம்-எ-று, உ௰

ஐம்புலனொருவழி யடக்கியாறணி
பைம்பொனு ரிதழியம்படனவேணியான்
வம்பறு மலரடிவணங்கி யேத்தலும்
இம்பரிற் றிங்களி ரிரண்டுசென்றவே

(இ-பு) பஞ்சேந்திரியங்களையும் ஒருவழியில்அடக்கிக் கங்காநதியையும் மாற்றுயர்ந்தபொன்னிறமுள்ளகொன்றைப்பூமாலையையும்அணிந்த சடையினையுடைய பரமசிவனது வாசனைநீங்காத திருவடித்தாமரையை இவ்வுலகில் வணங்கித்துதிசெய்துகொண்டு வருகையில்பன்னிரண்டுமாதஞ்சென்றன-எ-று, ௨௧

அன்னதுநிகழவோ ராழிமேயதேர்
மன்னவன் வடதிசைவழிக்கொண் டேகுநாட்
கன்னலஞ்சிலைமதன் விழவு காணிய
வின்னிளவேனில்வந் திறுத்ததென்பவே

(இ-பு.) அத்தன்மையாகப் பன்னிரண்டுமாதம் அவன்பூசைசெய்துகொண்டிருக்க ஒருவண்டில்பூண்டதேரையுடைய சூரியன் வடதிசையைநோக்கிச் சொல்லுநாளாகிய உத்தராயணத்தில் கரும்புவில்லையுடையமன்மதனுக்குரியதிருவிழாவைக்காண இனியதாகியஇளவேனிற்காலம்வந்தடைந்தது என்றுபெரியோர்கள் சொல்லுவார்கள்-எ-று- இளவேனிற்காலமாவது சித்திரைவைகாசிமாதம், ௨௨

நறுமலர்ப்பாடலந் துணர்த்தநாகங்கள்
குறுமுகைவெண்மலர்கொழுத்தகோங்கினந்
துறுமலர்ப்பொ தூளிப்பொன் னணிந்துதோன்றின
வெறிமலர்க் காஞ்சிப்பூப்பசந்தவீறினே

(இ-பு,) இளவேனிற் காலம்வந்தபோது வாசனைபொருந்தியமலர்களையுடைய பாதிரிமரங்கள்கொத்துக்கொத்தாகப்பூத்தனபுன்னைமரங்கள்சிறிய அரும்புகளுடன்வெண்மலர்களைப் பூத்தனகோங்கம்விருக்ஷங்கள்நெருங்கியமலர்களைப் பொருந்திப்பொன்னையணிந்துகொண்டதுபோலத் தோன்றின வாசனைதங்கியகாஞ்சிமலர்கள்செழுமையுடன் பசலைநிறமுள்ளதாயிருந்தன-எ-று. ௨௩

பாசிலையுதிர்த்தன பழுவப்பாதவம்
வீசியபணைதொறுந் தளிரின்வேய்ந்தன
காசறுபசும்படா மொருவிக் காய்கதிர்
பூசுறு செம்படாம்போர்த்தபோலுமே

(இ-பு,) ஆலமரங்கள்பச்சைஇலைகளையெல்லாம்உதிர்த்தன அப்படியுதிர்த்தபின்பு)நீண்டகொம்புகள்தோறும்துளிர்களைவிட்டு அலங்கரி

க்கப்பட்டன போலிருந்தன (இவ்வாறு பச்சிலைகளுதிர்ந்து செந்தளிர்துளிர்த்தன எப்படியிருக்கின்றனவென்றால்) குற்றம் நீங்கியபச்சைப்போர்வையை நீக்கிவிட்டுச்செந்தளிர்மிகுந்த சிவப்புப்போர்வையைப்போர்த்துக் கொண்டனபோலிருந்தன-எ-று, (௨௪

கொடியவு மிளந்தளிர் குழைத்த கோட்டவுங்
கடிமலர் குடைவன கள்ளுண் வண்டினம்
பெடையொடு குயிலினம் பிறங்கு தண்முறி
யிடையிடை கோதுவை கான மெக்குமே

(இ,பு) இவைகளுமன்றி அந்த வனமெங்கும் மதுவை யுண்கிற வண்டினங்கள் கொடிகளில் உள்ளனவும் இளந்தளிர்கள் துளிர்த்த கொம்புகளில் உள்ளனவுமாகிய வாசனைபொருந்திய மலர்களைக்குடைவனவாம் மாமரங்களி னிடந்தோறும் ஆண்குயில்களும் பெட்டைகுயில்களும் பிரகாசியாநின்ற குளிர்ச்சிபொருந்திய துளிர்களை மூக்கினுல் கோதுவனவாம்-எ-று, (௨௫)

கலைமகள் வடிவினை மராங் கவர்ந்தன
மலைமக ளெழிலினைப் பூவை வாங்கின
கொலைமகள் கவினைநி டிலவங் கொண்டன
அலைமக ளழகினை யசோக ணிந்தவே

(இ-பு· சரஸ்வதியின் சரீரநிறத்தை வெண்கடப்பமலர்கள் கிரகித்துக்கொண்டன பார்வதிதேவியாருடைய அழகாகிய திருமேனிநிறத்தைக்காயாமலர்கள் கவர்ந்து கொண்டன திருமகள்நிறத்தினை அசோகமலர்கள் கவர்ந்துகொண்டன-எ-று,எனவே*கடப்பமலர் வெள்ளைநிறமென்றும் காயாம்பூ கறுப்புநிறமென்றும் இலவப்பூ சிவப்புநிறமென்றும் அசோகம்பூ பொன்னிறமென்றுங் கொள்ளப்படும் (௨௬

கிளிகளுங் குயில் களுங் கேசரங்களு
மளிபடு தாதினு டளைந்த தென்றலுந்
துளிபடு சினைதொறுந் துவன்றி மேவலாற்
களிமதன் பாசறை போன்ற காவெலாம்

இ-பு) கிளிப்பிள்ளைகளும் குயில்களும்வண்டுகளும்வண்டுகள்பொருந்திய பூந்தாதுகளைப்பூசிய தென்றற் காற்றும் தேன்துளிபொருந்தியனைகள்தோறும் நெருங்கி யிருப்பதினுல் அவ்வனமெல்லாம் களிப்பினையுடைய மன்மதனது பாசறையென்னும் படைவீடு போலிருந்தது-எ-று. *மன்மதனுக்கு கிளி குதிரை குயில் எக்காளமென்கிற ஊ

தப்பட்டவாத்தியம், வண்டுகள்வில்லிற்பூட்டும்நாண், தென்றற்காற்று-தேர், இக்காரணம்பற்றிப்படைவீடென்றார் இரத்தினச்சுருக்கவெண்பா- ஆலைக்கரும்புசிலையைங்கணை நாணசுரும்பு, மாலைக்கிளிபுரவி மாருதந்தேர்மீவலைகடிமுரசங்கங்குல்களிறுகுயில்காளங்கொடிமகரந் திங்கள்குடை-எ-று. ௨௭

அந்தர வகடுபோழ்ந் தகன்றதண்டலைப்
பைந்தருத்தொறுங்கொடி படர்ந்து பற்றின
சுந்தர மிழந்துமூப் படைந்ததொன்மையோர்
மைந்துடனரம்புயர் வன்மைபோன்றவே

(இ-ள்,) ஆகாயத்தி னடுவைப்பிளக்கும்படியான உயரமுள்ளதாய்ப்பரந்தசோலையிலிருக்கும் பசியமரங்கள்தோறும்கொடிகள்படர்ந்து பற்றிக்கொண்டிருக்குந்தன்மை யெப்படியிருக்கிற தென்றால் அழகினையிழந்துமூப்புப்பருவம்அடைந்தகிழவர்கள்- அவயவத்தில்வலிமையுடன்நரம்புகள் மேலிட்டிருப்பனபோ லிருந்தன-எ-று, ௨௮

தேசுறுகிளியின் மொழுங்கிற்சேண்வழி
வீசியசிறையவாய்ப்பறத்தல்வேனில்வேந்
தாசைசூ ழுலகங்கொண்டதற்குகாட்டிய
பாசிலைத்தோரணப் பான்மைபோன்றவே

(இ-ள்,) பச்சென்ற ஒளியினையுடைய கிளியினங்கள் ஆகாயமார்க்கத்தில் சிறைகளைவீசிக்கொண்டு ஒழுங்காகப்பறந்து செல்லுதல்வசந்தகாலத்துக்கு அரசனாகிய மன்மதனானவன்வந்து எட்டுத்திக்கிலுஞ்சூழப்பட்ட இவ்வுலகத்தைத் தன்வசப்படுத்திக்கொண்டதின் பொருட்டுப்பச்சிலைத்தோரணங்கட்டிய தன்மைபோ லிருந்தன-எ-று ௨௯

அரும்பவிழ் நறுமலர்ச்சுழல வாயிடைச்
சுரும்பினந் தருமுத லனைத்துஞ் சூழ்ந்தன
மரங்கிழம்படுதலின் வழாத மைந்துற
இரும்பினற் பூண்பிடித்திட்டதொத்தவே

இ-ள். அம்புகள்விரிந்த நறியமலர்களி னிடத்துச்சுழன்று தேனுண்ணுவதற்கு வண்டுகள் அவ்விடத்திலிருக்கும் விருக்ஷங்கள் முதலானவைகளிடத்தில் சூழ்ந்துகொண்டிருக்தல்எத்தன்மையாகஇருக்கின்ற தென்றால் விருக்ஷங்கள் கிழத்தன்மை யடைந்தபடியினால் இனியொடிந்துபோமெனக்கருதி யொடியாம லிருக்கும்வண்ணம் இரும்பினால் பூண்செய்து அமைத்தது போலிருந்தன-எ-று. ௩௰

அலங்கல்வெண் கவிகைவே டிளைஞரீட்டமு
மிலங்கிழை மகளிரோ டிளைஞரீட்டமும்

பொலங்கொடி மாளிகை நீங்கிப் போந்தளி
துலங்குபூங்காவகந் துன்னிச் சேர்ந்தவே

இ-பு; வெற்றி மாலையினையும் வெள்ளைக் குடையினையும்வேலாயுதத்தையுமுடைய அரசர் கூட்டமும் பிரகாசியாநின்ற ஆபரணங்கள் அணிந்திருக்கு மாதர்கூட்டமும் காளையர்கூட்டமும் பொன்னாற்செய்யப்பட்டகொடிகள்கட்டிய மாளிகைகளை விட்டுச்சென்றுவண்டுகள் விளங்கிக்கொண்டிருக்கு மலர்களையுடையசோலையினிடத்தில்நெருங்கிச்சூழ்ந்தன-எ-று. சோலையானது தளிர்விட்டுத்தழைத்து அரும்புகள்மலர்ந்து அதிககுளிர்ச்சியா யிருத்தலால் நீர்விளையாடியும்போது கொய்தும்இன்பம் அனுபவித்தலின்பொருட்டுச் சென்றதெனக்கொள்க- ௯௧

இருநில மன்னர்மார் பிலகுமாரம்போல்
அருவரை நெற்றிக்கா ழருவி யாடியு
முருகயர் புலமென மகளிர் முண்டா
மருவிரி வாவியங் கரையின் வைகியும்

இ-பு. பெரிய இவ்வுலகத்தை யாளுகின்ற அரசர்கள் மார்பில் பிரகாசித்துக்கொண்டிருக்கும் முத்துமாலைபோல பெரியமலையினுச்சியிலிருந்து விழுகிற அருவிநீரில் விளையாடியும் வாசனைவிரிச்செய்கின்றநந்தனவனத்திற்பொருந்துவதுபோல மாதர்கள்தாமரைமலர்கள்வாசனையுடன் மலருகின்ற அழகிய தடாகக்கரையில்பொருந்தியும்-எ-று

சிலம்பெதிர் கூவியுஞ் சிற்றில் கோலியு
முலம்பொருகுவத்தோ ளுழக்க கொங்கைமேற்
கலம்பல திருத்தியுங் கலவை யாடியு
நலம்பல துய்த்தன ரதியின்பாங்கரே-

இ-பு-மலைகளுக்கெதிரில்கூவியும நதியின்கரையில்சிறுவீடுகட்டிவிளையாடியும் தத்தங்கணவர்களுடைய திரண்ட வயிரக் கல்லையொத்துத்திரட்சியாகியபுயங்களில்படிந்ததனங்களின்மேல்பலவித ஆபரணங்களை அணிந்தும் வாசனைத் திரவியஞ்சேர்ந்தசந்தனக்குழம்புபூசியும் இவ்வாறுபல இன்பங்களை அனுபவித்தார்கள்-எ-று-* மலைகளுக்கெதிரில்கூவினால் அதனிடத்தில் கூவுகின்றவர்களோசைபோலாவது அவர்கள் வசனம்போலாவது தொனியுண்டாகும் ஆதலால்அதுவுமோர் விநோதமாகக்கூவினரெனக்கொள்ளுக வொருவகை அவ்வாறன்றித் தங்கள்கணவர்களுடன் ஊடினவர்களுக்கு மகிழ்ச்சி யின்மையால்மற்றொருவிநோதத்தில்மனஞ்செல்லாமல்பேச்சுத்துணைக்காகமலையுடன் கூவினார்களெனக்கொள்ளுகவொருவகை கிள்ளை குயில் இவைகளுடன் பேசலாகாதோ வென்னில் அவைகளினோசைவிரகத்துக்கேதுவானது

கம்பராமாயணம்-வரைக்காட்சிப்படலத்தில்-உ௮-வது, செய்யுள்,வெயினிறங்குறையச்சோதியின்னிழல்பரப்பமுன்னர்த்-துயிலுணர்செவ்வியாருந்துனியுறுமுனிவினோருங்குயிலொடுமினிதுபேசிச்சிலம்பொடுமினிதுகூவி-என்பதனானுமறிக, ௩௩

இத்தலை யின்னண நிகழவெண்ணரில் சீர்ச்
சத்தியா தனன்றரு தருமகுத்தனு
மெய்த்தவத் தோழனை நீங்கி வேறொரு
பத்திரம் பொதுளிய பழுவ மெய்தினான்

இ-பு. இவ்விடத்தில் இவ்வாறு நிகழ்ந்து கொண்டிருக்க அளவில்லாதசீரினையுடைய சத்தியாதனனின்ற தருமகுத்தனென்பவன் உண்மையாகிய தவத்தினையுடைய தன்தோழனைவிட்டுநீங்கி இலைமுதலானவைகள்நிறைந்துள்ளவேறொருவனத்திற்சென்றான்-எ-று, ௩௪

வேறு,

மஞ்சுசூழ்குடுமி வெள்ளிவேதண்ட மழுவலான் செவிக்கிசைநிறைக்கும்,விஞ்சையர்பெருமான் றிருமகளாய வெள்வளைத்தோழியாங் கொருத்தி,வஞ்சிநுண்ணிடையார் பண்ணையுளாடும் வனப்பினைக்கண்டலுமயங்கிக், குஞ்சரநுகர்ந்த வெள்ளில்போன்மாழ்கிக்குழைந்துதன்னுளந் தனிற்குனித்தான்.

இ-பு. அப்படிபோன தருமகுத்தனானவன் மேகங்களாற்சூழப்பட்டசிகரங்களையுடைய கயிலாசகிரியில் வீற்றிருக்கும் பரமசிவனுடைய திருச்செவிகளிற்பொருந்த இசைபாடுகின்ற வித்தியாதரமன்னவன் புத்திரியாகியசங்குவளையலணிந்தகையினையுடைய ஒருமாதானவள் அவ்விடத்தில்பூங்கொடிபோல நுண்ணிய இடையினையுடைய தோழிமார்கூட்டத்தில் விளையாடிக்கொண்டிருக்கும் அழகைக்கண்டமாத்திரத்தில் மனமயங்கிவேழமுண்ட விளாங்கனிபோலசோர்வுடன்மெலிந்துதன்மனதில் இவ்வாறுநினைத்தான்-எ-று. வேழமுண்டவிளாங்கனியெப்படியிருக்குமென்றால் தேரையோந்த தேங்காய்போ லிருக்கும். வேழமென்பது விளாங்கனிக்குரியதோர் நோயென்றும் அது தேங்காய்க்குத்தேரையென்றொரு நோயிருப்பதுபோலென்றும் நச்சினார்க்கினியார் சீவகசிந்தாமணியில் ஒருசெய்யுளுரையில் எழுதியிருக்கின்றனர்சிலவுரைகாரர் யானையுண்டவிளாங்கனியென்பர், ௩௫

பூவுறைதிருவோ நாகர்தங்கொடியோ பொருப்புறைகுமுதவாய்மயிலோ-தேவர்தமுலகி னின்றிழிந்தருளுஞ் செய்யவாய்மடமொழிக்கிளியோ-யாவளிங்கிருந்த வேந்திழையென்ன விறைமகனெண்ணமுற்றிரங்கக்-கோவிளங்குமரன் வனப்பினை நோக்கிக் கொடியிடைமடந்தையுங் குறித்தாள்,

இ-பு, இங்கிருக்கின்ற மாதானவள்செந்தாமரைப்பூவில்வீற்றிருக்குந்திருமகளோ நாகலோகத்தில் வாசஞ்செய்யும் நாககன்னிகையோ மலையில்வாழும் செவ்வல்லி மலர்போன்ற வாயினையுடைய வரையரமகளோ தேவருலகத்திலிருந்துவந்த சிவந்தவாயையும்மழலைச்சொல்லையுமுடைய கிள்ளையொத்த ரம்பாஸ்திரீயோ இன்னாளென்று தெரியவில்லையேயென்று அந்தராஜகுமாரன் எண்ணங்கொண்டு-காமவிகாரதினால்-வியாகுலமுடையவனாயிருக்க அவனுடைய சவுந்தரியத்தைப்பார்த்துக்கொடிபோன்ற நுண்ணியஇடையையுடைய அந்தஸ்திரீயும்இச்சைகொண்டாள்-எ-று, ௧௬

பண்ணுறுகான விஞ்சையருலகிற் பாகசாதனன்றிருநாட்டிமன்- மண்ணகவரைப்பி னிளமையினலத்தின் வடிவினிலிவன்றனக் கிணையார்-கண்மணிகுளிர்ப்ப வடிவுகொண்டிறந்த காமனோவஞ்சனனென்னா வுண்ணிறையழிய வுலையிடுமெழுகொத் தொருமொழிதோழியர்க் குரைத்தாள், *

இ-பு. இசைபொருந்திய கானம்பாடுகின்ற வித்தியாதரருலகத்திலாவது தேவேந்திரனுடைய உலகத்திலாவது பூலோகத்தினிடத்திலாவது இளமைப்பருவத்திலும் சவுந்தரியத்திலும் உருவத்திலும்இவனுக்கொப்பானவர்கள் யாரிருக்கிறார்கள்முன்னிறந்தமன்மதன்-பார்க்கின்றவர்களுடைய-கண்மணிமகிழ்ச்சியடையும்படி உருவங்கொண்டு வந்தானோவென்றுஉள்ளத்திலிருக்கும் கற்புமுதலானவை அழியத்தக்கதாக-கருமானுடைய-உலைக்களத்தீயில் இட்டமெழுகைப்போல - மனமுருகி-தோழிகளைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லினாள்-எ-று. ௧௭

மங்கைமீர்நீவி ரனைவருமிந்த வனத்தினுக் கப்புறம்போகி
பொங்கரிற்புகுந்து நறுமலர்கொய்துபோதுமினென்றவர்ப்பணியா
அங்கவர்யாவருந் தணந்தபினிந்த வணங்கொருதமியளாயெதிர்ந்து
பங்கயமுகத்துக் குமரன்மாட்டணுகிப் பரிவுடனினையன பகர்ந்தாள்

இ-பு. தோழிகளேநீங்களெல்லாரும் இந்தவனத்துக்கப்புறம்போய்ச்சோலையிற்சேர்ந்து வாசனைபொருந்திய மலர்கள்பறித்துக்கொண்டுவாருங்களென்று அவர்களுக்குக்கரவுசெய்து அவர்களெல்லாரும் நீங்கிப்போனபின்பு இந்தமாதானவள் தானொருத்தியுந் தனிமையாகப்போய்த்தாமரைமலர்போன்ற முகத்தினையுடைய ராஜகுமாரன் சமீபத்தில் அடுத்துவிருப்பத்துடன் இந்தவார்த்தையைச்சொன்னாள்.எ-று

கன்னலஞ்சிலைவே ளுருவுகொண்டனைய காளையீண்டடைந்த காரணமு-மின்னுடைநாடு நின்றிருமரபு நின்றிருப்பெயருமியாவென்னப் பொன்னிளமுலையாள் வினவலுங்கேட்டுப் புந்தியினவள்குறிப்புணர்ந்து-மின்னணிமவுலி வேந்தர்கேசரித்த விடலையுமனமகிழ்ந் துரைத்தான்?

இ-பு, கரும்புவில்லையுடைய மன்மதனானவன் முன்போல உருவுகொண்டதுபோன்ற வாலிபனே நீயிவ்விடத்திற்குவந்தகாரணமுமஉன்னுடையநேயமும் உன்னுடைய விசேட குலத்தினமும்உன்னுடையநாமதேயச்சிறப்பும்யாவையென்று பொன்னிறமுள்ள தேமல்பரந்தஇளமைபொருந்திய தனங்களையுடையவள் வினவவும் அதைக்கேட்டுத் தன்மனதில் அவள்குறிப்பை அறிந்துகொண்டு ஒருபொருந்தியமகுடம் அணிந்தமன்னவனீன்ற ராஜகுமாரன்மனமகிழ்ந்துசொல்லுகின்றான்-எ-று, ௩௬

விரைமலர்நாற்றம் யோசனைகமழும் விதர்ப்பதேசாதிபன் விரிந்தகு
டையெலாநிழற்று முழுமதிக்கவிகைச் சத்தியாதனன்றனக் கமைந்த,
மறைமலர்த்திருவே யனையவள்சதியா மடவரறிருவயிற்றுதித்தே,னி
றைவனைக்கரத்தாயெந்தைபோர்ப்பகைஞர் நெடும்படைக்களத்திடைம
டிந்தான், *

இ-பு, மலர்களின் வாசனையானது ஒருயோசனை தூரவரையில்பரிமளிக்கும்படியான சோலைகளால்சூழப்பட்ட விதர்ப்பதேசத்துக்கு அரசனுகிப் பரந்த உலகத்திலிருக்கும் உயிர்களுக்கெல்லாம்நிழலைச்செய்துகொண்டிருப்பதாய்ப் பூரணசந்திரனையொத்த வெள்ளைக் குடையினையுடையவனால் ராச்சியபாரஞ்செய்த சத்தியாதன மகாராசாவுக்கு அமைந்த-மனைவியாகிய வாசனைதங்கிய தாமரைப்பூவில் வீற்றிருக்குந்திருமகளையொத்த சவுந்தரியமுஞ்செல்வமுமுள்ளசதியென்னும்பெயரையுடையாள் வயிற்றிற்பிறந்தேன் வரிசையாகவளையலணிந்த கையையுடையமாதே என்பிதாவானவர் போர்செய்யவந்தபகைவருடையபெரியயுத்தகளத்தினிடத்தில் எதிர்த்துப்போர்செய்து மடிந்தார்-எ-று-அரசன்குடையின்கீழிருந்து நீதியுடன் அரசுசெய்யஉயிர்கள் சுவுக்கியமுற்றிருப்பதினால்உயிர்களுக்குநிழலைச்செய்யுங்குடைஎன்றது

ஈன்றவெம்மாயு நீருணுக்கயத்தி லிடங்கர்வாய்ப் பட்டனண்மடிய
த், தோன்றியவுமையாம் பார்ப்பனியெனைத்தன் சேயென்றலுக்கினவலா
ய்வளர்த்தாள், சான்றுசான் முனிவனெனக் குறுநாமந்தருமகத்தன்
னெனச்சாற்றி,யான்றவெந்துயரினழிவுறுவண்ண மரண்டிக்கென்னை
யாட்கொடுத்தான்.

இ-பு, என்பிதா இறந்துபோகவே,என்தாயானவள்நகரத்தைவிட்டுத்தனியே வனத்திற்போய் அவ்விடத்தில்,என்னைப்பெற்று அங்கிருக்கும் ஒருகுளத்தில்நீருண்ணப்போய் அதிலிருக்கும் முதலைவாயில்அகப்பட்டுக்கொண்டு இறந்துபோனாள் அப்படி என்தாயானவள் இறந்துபோகவேநான்சிசுவாய் அழுதுகொண்டிருக்குந் தருணத்தில் அங்கேவந்த உமையென்னும் ஒருபிராமணஸ்திரீ யென்னையெடுத்துக் கொ

ண்டுபோய்த்தன்புத்திரனுக்கு இளையவனாக வளர்த்தாள் அப்படிசன்வளரும் நாளில் மேன்மையிருந்த சாண்டில்லியர்என்னும் ஒருமுனிவர்வந்து எனக்குத் தருமகுத்தன் எனப் பொருந்த முள்ளதானபேர்கூறி மிகுந்தகொடிதானபிறவித்துன்பத்தில் வருந்தாதவகையாகப் பரமசிவனுடைய திருவடிகளுக்கு என்னை அடிமையாகக்கொடுத்தார்-எ-று, ௪௧

உமையவழிலவன் றனைவருப்பட்ட உறுதியாலொருவரு மொவ்வாக்கமையினாய்நின்னை யெதிர்ந்தனனல்லோர் காட்சியாலெய்துதல் சிறிதே-எமையளித்திறந்தோ னிழந்தவான்றிருவுமிகுநிலக்கிழமையுமெதிர்ந்தோன்-அமையிளந்தோளாய் மரபுநின்பதியு மறைகுதிபெயரொடுமென்றான்.

இ-பு, பார்வதி கணவனாகிய பரமசிவனைப்பூசித்த உறுதியினாலே ஒருவரும் ஒப்பில்லாத கற்புக்குரிய பொறுமையினை யுடையவளோ, உன்னையெதிர்ப்பட்டேன் நல்லவர்கள் தரிசனத்தினால் அடையும்பேறுசிறிதோ என்னைப்பெற்று இறந்தபிதாவானவர் பகைவராலிழந்தசிறப்புள்ளசெல்வமும், பெருமைபொருந்திய ராச்சியபாரமும், அடைந்தேன் பசியமூங்கிலையொத்த தோளையுடையமாதே உன்குலமும்உன்னூரும் உன்பெயரும் சொல்லுதியென்றான்-எ-று, ௪௨

அயிலெயிற்றுழுவை யதளசைத்தாடு மாணிரந்தரமினி துறையுங். கயிலையிற்றென்பாற் சேடியுள்வாழுங் கந்தர்ப்பர்கொழுங்கழற் குரிசில், புயலுறழ்நடக்கைத்திரமிடனென்னப் பொறித்திடுந்திருப்பெயராற்குக், குயின்மொழித்துவர்வாய்த தாரணிவயிற்றிற் றோன்றினேனென்றவள் கூறி, *

இ-பு. கூர்மையுள்ள பற்களையுடைய புலியின்தோலையுடுத்துநடனஞ்செய்யும் பரமசிவன் மகிழ்ச்சியுடன் நிரந்தரமாக வாசஞ்செய்யுங்கயிலாசகிரிக்குத் தென்புறத்திலாகின்ற சேடியென்னும்நகரத்தில்வாசஞ்செய்கின்ற கந்தருவர்கள் தொழும்படியான அரசனாகியமேகத்தையொத்த பெரியகையையுடைய திரமிடனென்று சொல்லப்பட்ட அழகியபெயருள்ளவனுக்கு அவன்மனைவியாகியகுயிலோசைபோன்றஇனியசொல்லையும் பவளம்போன்ற வாயையுமுடைய தாரணியென்பவள் வயிற்றிற் பிறந்தேனென்று அவள்சொல்லி-எ-று. ௪௩

என்பெயரஞ்சுமதியெனவுரைப்பர் யானுமென் றோழியருடனே, நன்யறமுழவும் பொதும்பரின்மொழில்வாய் நறுமலர் கொய்குவான்புகுந்தேன்-அன்புடையாயம் போக்கிநிற்கானு மவாவினிற்றமியளாயடைந்தேனுன்படிவமுமெய்யழகையுங்கண்டேனினைதொறுநிறையழிந்தயர்ந்தேன்.

இ-ள். என்பெயர் அஞ்சுமதி யென்றுசொல்லுவார்கள் நீருண்டமேகந் தவழும்படியான இவ்வனத்திலுள்ள இனியசோலையினிடத்தி

ஸ்வாசனைபொருந்தியமலர்கள் கொய்யவந்தேன் அப்படி வந்தநான் உன்னைப்பார்க்கவேண்டுமென்கிறஆசையினால் என்னிடத்தில் அன்பினையுடையதோழிகளை அப்புறம் அனுப்பிவிட்டுத் தனியாளாய்வந்தேன் வந்து உன்வடிவத்தையும் அழகையுங்கண்டு நினைக்குந்தோறுமகற்புநிலைமாறிச்சோர்வினையடைந்தேன்-எ-று, ௬௪

கானவர்வியப்பமகரயாழ்வீணை வரிநரம்பணியிட றென்னக், கானங்குணர்ந்தோ ராயினுமுணராக்கானவிஞ்சைகண்முழு துணர்ந்தேன்,ஞானநன்னிலையால் யாவர்தங்கருத்துங் கசையையுங் குறிப்பினிலறிவேன்வேனில்வேளனையா யென்னுழைநினக்குவேட்கையுண்டென்பதுங் குறித்தேன்,

இ-பு, தேவர்களும் வியப்படையும்படி மகரவீணைவாசித்துக்கட்டுப்பட்டிருக்கிற தந்திரிகள் ஓசையிதுவென்றும்கண்டத்தினோசையிதுவென்றும் நன்றாகக்கானம்பாடுதலை யுணர்ந்தவர்களேயானாலும்அறியப்படாமல் பாடும்படியான கானவித்தைகள் முழுவதும் தெரிந்திருக்கிறேன் இதுவுமன்றி நல்லஞானநிலையினாலெ எல்லாருடைய கருத்தையும் அவர்களிச்சையையுங்குறிப்பாக அறிந்துகொள்வேன் வசந்தகாலத்துக்குரிய மன்மதனையொத்தவனே இப்போது என்னிடத்தில்உனக்குஆசையுண்டென்பதையும் அறிந்துகொண்டேன்-எ-று, ௬௫

இன்னனபன்னி யெமக்கியல்பாய தியாழினோருமண மதாகன், கன்னவிறோளா யென்வகைமணத்திற் கந்தற்பமணமெனுமறைநூல். அன்னகாலெனது கைக்கிளையாகா தண்ணலுமன்பினை யாதன்; முன்னையூழ்வினையின் முடிந்ததென்றந்த மொய்குழலுரைத்திது செய்தாள்.

இ-பு, இவ்விதமான வார்த்தைகளைச்சொல்லிப் பின்னுஞ்சொல்லுகிறாள் மலைக்கொப்பாகச்சொல்லுகின்ற தோள்களையுடைய ராசகுமாரனே அருமையாகிய காந்தர்வவிவாகம் எங்களுக்கு இயல்பாயிருப்பது அந்தவிவாகமானது எட்டுவகைமணத்திலொன்றென்று வேதசாஸ்திரங்கள் சொல்லுகின்றன வேதசாஸ்திரங்கள் அப்படிசொல்லியிருக்கின்றபடியினாலே எனக்குண்டாகிய ஒருதலைக்காமத்தின் மட்டாகாமல்நீயும் என்னிடத்தில் மோகங்கொண்டவனானது பழைய ஊழ்வினையினால் நேரிட்டதென்று நெருங்கிய அளகத்தையுடைய அந்தமாது சொல்லி அதற்குமேல் இந்தக்காரியத்தைச்செய்தாள் அது என்னவென்றால்-எ-று, * எட்டுவகைமணமாவது பிரமம்பிரசாபத்தியம் ஆரிஷம் தெய்வம் காந்தர்வம் ஆசுரம் இராக்கதம் பைசாசம் என்பவைகளாம், ௬௬

* இவற்றுள் (பிரமசாரிக்குக் கன்னிகையைத் தீமுன்னர்க்கொடுப்பது பிரமமாம்) (தலைமகனினத்தார்வேண்டத் தலைமகளினத்தாருட்ப

ட்டவளைத் தீமுன்னர்க்கொடுப்பது பிரசாபத்தியம்) ஒன்றிரண்டு பசுவும் எருதும் வாங்கிக்கொண்டு கன்னியைத்தீமுன்னர்க் கொடுப்பது ஆரிஷம் வேள்வியால்வந்தகன்னியைத் தீமுன்னர் கொடுப்பது தெய்வம் கொடுப்பாருங் கேட்பாருமின்றி யிருவருந்தனியிடத்தெதிர்ப்பட்டுத்தாமேகூடுவது-காந்தர்வம் பெண்ணுக்குப் பொன்சூட்டிச் சுற்றத்தாருக்குப் பொன்வேண்டுவன கொடுத்துக் கொள்வது-அசுரம் பெண்ணும் பெண்ணினத்தாருமுடன்படாமல் வலிதிற்கொள்வது-இராக்கதம் துயின்றாளைச்சென்று கூடுவது-பைசாசம்,

கொங்கையங்குவட்டிற் றரளமாலிகையைக் கொழுஞ்சுடர்க் குருமணி
யாழியங்கையிலேந்திமணிச்சிலம்பரற்றவன்னக்களலமலர்நடந்து-சி
ங்கவல்லேறனையானுலம்பொருதடந்தோட் சேர்த்தினள்சேர்த்தலுமரசு
புங்கவன்சிறுவனுவகைபூத்தந்தப்பொலங்கொடிக்கிளையனபுகன்றான்.

இ-பு. பொன்மலையையொத்த தனங்களினிடத்தில் அணிந்திருக்குமுத்துமாலையைச் செழுமையுள்ளவொளியினையும் நிறத்தினையுமுடைய ரத்தினங்கள் பதித்தமோதிரம் அணிந்த கையினால்கழற்றி யேந்திக்கொண்டு மணிகள்பதித்த சிலம்புசத்திக்கவும் அன்னப்பக்ஷிகள்மயக்கவும்நடந்து ஆண்சிங்கம்போன்ற ராசகுமாரனுடையதிரண்டகல்லையொத்தபுசங்களில் அணிந்தாள் அப்படி அணிந்தமாத்திரத்தில் ராஜசிரேஷ்டனாகிய சத்தியாதனமகாராஜாவின் புத்திரன் சந்தோஷம் அடைந்து பொற்கொடியையொத்த அந்தமாதைப்பார்த்து இந்தவார்த்தைசொன்னான்-எ-று.

அரசிழக்கந்தோ வறுமைபூண்டுழல்வ னணியநின் னாரமாலிகை
யைத்-திரமிடனெனுமுன் றந்தைநோராதுசேர்த் தனையிஃதுளந்தேரிற்
பரவருங்கற்பிற் பைந்தொடிமுறையின் பகுதியென்னேயெனப்பகர-ம
ருமலர்க்குழலாள் குறுநகைகோட்டி வணங்கிவாய்புதைத்துநின் று
ரைத்தாள்.

இ-பு. அரசாட்சியையிழந்து தரித்திரமுள்ளவனா யுழன்றுகொண்டிருக்கிறயான் அணிந்துகொள்ளும்படி உன்முத்துமாலையைத் திரமிஷனென்கிற உன்பிதாவின் சம்மதியில்லாமல் என்புசத்தில்தரித்தாய்இந்தச்செய்கையைமனதில் ஆலோசிக்குமிடத்தில் புகழ்தற்கரிய பதிவிரதாதருமத்தையுடையவளே நீதியின்பாற்பட்டதல்லவே என்று அவன்சொல்லவாசனைதங்கிய பூமாலையணிந்த அளகத்தையுடைய அந்தக்கந்தருவமாதானவள் புன்னகைசெய்துவணங்கி ஒருகையால் வாயைப்பொத்திக்கொண்டு நின்றுசொல்லுகிறாள்-எ-று, ௪௮

மன்னவன்சிறுவ கேட்டிநீயுரைத்த வாசகமழகிதேயடிச்சி
நின்னுடைக்கருத்தை யெண்ணியமுறையே திரப்புவனையுமீள

இங்கெடுவனத்தினெய்துதியென்று வேந்திழையாயமோடேகத்
தன்னிகரில்லான் றுணைவனுக்கிதனைச் சாற்றினன்னகரடைந்து

(இ-பு.) ராசகுமாரனேநான்சொல்லுகிறவார்த்தையைக்கேள்நீசொன்னவார்த்தை அழகுள்ள தாயிருக்கின்றது அடிச்சியாகியநான் உன்னுடையமனதில் நினைத்தவைகளை முறைமைப்படி நிறைவேற்றுகிறேன்மறுபடிநாளையதினமும் நெடிதாகியஇவ்வனத்தில்வாவென்றுசொல்லிஅந்தக்காந்தர்வ ஸ்ரீயானவள் தன்தோழிகளுடனே போகத்தனக்குஒப்பில்லாதவனாகிய ராசகுமாரன்இந்தச்சேதியைத் தன்தமையனாயிருப்பவனுடன்சொல்லித் தன்பதியைச்சேர்ந்து-எ-று, ௪௬

உமையெனுமன்னைக் கெதிர்ந்தனவாயவுவகையை யப்படியுரைத்துச்சுமையுடைத்திங்கட்சடிலவானவனைத் தொழுது வந்தனைத்தொழிலியற்றி,யெமையவித்தருணீயென்றுகொண்டந்த வேந்திழையுரைத்திடும்வழிநாள்-அமைநிரைந்தோங்கவனந்தனிற்புகுந்தியாழரசனேடரிவைக்கண்டான்

(இ-பு,) தன்பதியிற்போன ராசகுமாரன்உமையென்னும்பெயரையுடையதன்-தாயைக்கண்டு தனக்குநேரிட்டசந்தோஷசமாசாரத்தை நடந்தபடிசொல்லி இளந்திங்களை யணிந்திருக்குஞ் சடாபாரத்தையுடையபரமசிவனைத்தொழுது ஆராதித்துஅடியேங்களைரட்சித்தருளுமென்று வேண்டிக்கொண்டு அந்தக்காந்தர்வ ஸ்ரீவரச்சொன்னமறுநாள் மூங்கில்கள்வரிசைவரிசையா யோங்கிவளர்ந்திராநின்றஅந்தவனத்தில்போய்க் கந்தர்வராசனையும் அந்தமாதினையுங்கண்டான்-எ-று ௪௭

கண்டவர்தம்மைக் கண்டியாழ்விஞ்சைக் கதிர்முடியரசுவப்போடு
வண்டிமிர்தெரிய லாசிளங்களிறேவருகெனவாங்குபுதழுவி
யண்டரிலொருவனான வேதியனை யடுத்தனன்புல்லியாங்கிருத்தித்
துண்டவெண்பிறையான் கூறியமாற்றஞ்சுடர்முடியரசகேளென்றான்

(இ-பு,) ஒளிபொருந்தியகிரீடம் அணிந்திருக்கும்வித்தியாதரர்மன்னவன் தன்னைக்கண்டவர்களைத் தானும்பார்த்துச் சந்தோஷத்துடன் வண்டுகள்இசைபாடிக்கொண்டிருக்கும்படியான பூமாலையணிந்தயானையையொத்த ராசகுமாரனே வாவென்றுசமீபத்தில் வரவழைத்துத்தழுவிக்கொண்டு தேவர்களில் ஒருவனான பிராமணனையும்அடுத்துத்தழுவிஅவ்விடத்தில் தன்னுடன் இருக்கும்படிவைத்துக்கொண்டு வெண்மையாகிய இளந்திங்களையணிந்த பரமசிவன் அருளிச்செய்த திருவாக்கினைப்பிரகாசந்தங்கியமகுடத்தையுடையஅரசனேகேளென்றுசொன்னான்-எ-று. ௪௮

விண்ணகடணவும் வெள்ளியங்கிரியின் விளங்குமாமணிசெய்மண்டபத்திற்,பண்ணவர்பெருமா னிணையடிக்கமலம் பணியயானென் வலினடைந்தேன்-கண்ணுதலடியர்க்கெளியவனமலன் கருணைவாரிதியெனைநோக்கி-யுண்ணிறவுவகைபுறம்பொழிந்தோங்கவக மகிழ்ந்தின் னவாறுரைத்தான்

(இ-பு) அண்டமுகட்டைப்பொருந்தியஅழகிய வெள்ளிமலையாகிய கயிலாயகிரியில் பிரகாசித்துக்கொண்டிராநின்ற மாணிக்கமுதலாகிய ரத்நங்களினாற்செய்யப்பட்ட மண்டபத்தில் எழுந்தருளியிருந் தேவர்களுக்கெல்லாம் இறைவனாகிய பரமசிவனுடைய இரண்டுதிருவடித்தாமரைகளையும்வணங்கநான்நேத்துப்போனேன்போனவிடத்தில்நெற்றிக்கண்ணையுடையவரும் அடியார்க்கெளியவரும் நிர்ம்மலமானவரும்கிருபைக்கடலானவருமாகிய கயிலாசபதியானவர் அடியேனைப்பார்த்துஉள்ளே நிறைந்தசந்தோஷமானது புறத்தில்பெருகியோங்கத்தக்கதாகத்திருவுளமகிழ்ந்து இவ்வாறுசொல்லியருளினார்-எ-று ருஉ

ஆசில்சீர்க்குமர நினதுநற்றாயு மத்தனுமிறந்ததுமதன்பின்
மாசிலாளொருத்திபார்ப்பனிவளர்க்க வறுமையங்கடலினாழ்ந்ததுவுந்
தேசிகமுனியுன்பிறப்பெலாந் தெருட்டிச்சிவனையேபூசியென்றதுவும்
ஈசனதடியினன்பினான்மலர்பெய் தேத்திநீபூசைபண்ணியதும்

(இ-பு·) குற்றமில்லாதபுகழினையுடையராசகுமாரனே உன்னுடையநல்லதாயும் தகப்பனும்இறந்துபோனதும்அதன்பின்உத்தமியாகிய ஒருபிராமண ஸ்ரீயானவள் உன்னைவளர்க்க வளருநாளில் நீங்கள்தரித்திரமாகிய சமுத்திரத்தில் மூழ்கியிருந்ததும் ஒருமுனிவனாகியஆசிரியன்வந்து உன்பிறப்பின் விவரத்தைத்தெரிவித்து-நீ-சிவனையேபூசித்துக்கொண்டிருவென்றுசொல்லியதும் அவர்சொல்லியபடிநீபரமசிவனுடையதிருவடியில் அன்புடன்மலர்களால் அருச்சித்துத் துதிசெய்துபூசைசெய்ததும்-எ-று ✻ வறுமையங்கடல் என்பதினிடையிலிருக்கும்-அம்சாரியையாகக்கொள்க ருங

அன்னதாலுன்மாட்டன்புமிக்குடையேமென்பதுமறிகெனவுரைத்துப்பின்னருநினதுகாதையைமாய்த்துப்பெரும்பதிவளனெலாங்கவர்ந்தமன்னரைவீட்டிக்கடம்படைதுணித்துவாகை கொண்டரசிளங்குமரன்றன்னருட்கவிகையுலகெலாநிழற்றத்தருக்கொடுதுணை செய்வாயென்றான்,

(இ,பு) அந்தமுனிவர்சொற்படிபூசைசெய்ததன்மையினால் அவனிடத்தில் மிகுந்தகிருபைவைத்திருக்கிறோமென்பதும் அறியக்கடவையென்றுசொல்லிப்பின்னும் அவன்தகப்பனைக்கொன்றுபெரியநகரமு

தலாகியவளப்பங்களையெல்லாம் அபகரித்துக்கொண்ட அரசர்களைக் கொன்று அவர்களுடைய கடல்போன்ற அளவற்றசேனைகளையுங்கொன்றுவெற்றியடைந்து அந்தராஜபுத்திரன் (ராச்சியபட்டாபிஷேகஞ்செய்துகொண்டு) உயிர்களுக்கெல்லாம் கிருபைசெய்யத்தக்கதன்குடையானது நிழல்செய்யும்படி தருக்கொடுத்துணைசெய்யென்று எனக்குக் கட்டளையிட்டாரென்று சொன்னான்-எ-று, ※ ராஜகுமாரன்முனிவன் சொற்படி நம்மைப்பூசித்ததினால் தன்பகைவரைவென்று அரசாட்சி செய்வான் அந்தக்காலத்தில் அவனுக்குசகாயஞ்செய்யென்று பரமசிவன்தனக்குக்கட்டளையிட்டதாக வித்தியாதரன் சொன்னான் என்பது தாற்பரியம், ௫௪

முத்தலைச்சூலஞ்சுவன்மிசையிருத்து முழுமுதலுனா தலைமேற் கொண்டத்தலைநின்று நகரின்வந்தனை வேற்கணங்கிவளாளுனைப்படியே-கைத்தலநெல்லிக் கனியினின்மரபுங்கவினும்வந்துரைத்திடக்கேளா-இத்தலைவந்தேன் சிவனருள்பெற்றார்க்கெய்திடாப் பொருளுமென்றுளதோ

(இ-பு,) மூன்றுபிரிவாகிய தலையினையுடைய சூலாயுதத்தைத்தமது பிடரியினிடத்துவைக்கும்பரமசிவன் அருளிச்செய்த திருவாக்கினைச் சிரசின்மேலேற்றுக்கொண்டு அவ்விடத்திலிருந்து என்னகரத்தில்வந்துசேர்ந்த எனக்குஎன்புத்திரியாகிய இந்தக் கன்னிகையானவள் வந்துபரமசிவன் அருளிச்செய்ததிருவாக்கின்படி கையினிடத்திற்பொருந்தியநெல்லிக்கனிபோல உன்னுடைய மரபினையும் அழகினையும்சொல்லக்கேட்டு (உன்னைக்காணும்பொருட்டு) இவ்விடத்தில்வந்தேன்பரமசிவனுடைய கிருபையைப்பெற்றவர்க்குக் கிடையாத ஒருபொருளுமிருக்கின்றதோ எ-று. ※ இவ்வுலகமெல்லாம் சிருஷ்டியாதவற்குமுன்னமேயிருப்பவரும் அவையெல்லாம்இறுதியடைந்தபின்னும் இருப்பவரும்எல்லாவற்றிற்குங்காரணராயிருப்பவருமாதலால்பரமசிவனை முழுமுதலென்றது இதனை ஆதியும் அந்தமுமாயினார்க்கு என்னுந்திருவாசகத்தானுமுணர்க. ௫௫

ஆதலாலஞ்சுமதியிவளினக்கேயடிப்பணிசெய்கெனவளித்தேன்
காதலாயெனப்பொற் கரநீரவன்றன்கரத்தினின்விடுத்தபின்கமல
மாதுநேர்மகளிர் நவமணிகனக மால்கரித்தேர்பரிபதாதி  [தான்
மோதுபோர்க்கணியங் கவசம்விற்றூணிதூரிவேல்வாளிவைகொடுத்

(இ-பு) இந்த முறைமையினால் அஞ்சுமதியென்னும் பெயரையுடையஎன்புத்திரியாகிய இந்தக்கன்னிகைஉனக்குப் பணிவிடைசெய்யக்கடவளென்று விருப்பத்துடன் கொடுத்தேனென்று பொற்கரத்திலிருக்கும் நீரை அவன்கையில்விட்டபின்பு திருமகளையொத்த (அழகுள்ள) தோழிகள் நவரத்தினங்கள்சுவர்ணம் பெரியயானைகள்தேர்கள்குதிரைகள் பதாதிகள் தாக்கும்படியானமழுவாயுதம் கவசம் தனுசு

அம்புறுத்தூணிபலம்பொருந்திய வேலாயுதம்வாளாயுதம் முதலிய வைகளையுங் கொடுத்தான்-எ-று, ருசு

வேறு,

முனிவரன் புதல்வனாய முழுமழுவிராமன்போல
அணிகமோ டெய்தித்தெவ்வ ரருங்கிளையறுத்துச்செங்கோ
லினிதினேச்சியபின் மைந்தற்கிறைமையீந்தெம்பாலெய்தித்
தனிமுதல்பதத்திற்சோதி தையலோடரசவென்ன

(இ-பு,) இவைகளைக்கொடுத்த வித்தியாதரன்பின்னுஞ் சொல்லுகி றான்ராஜகுமாரனே-நீயிச்சேனைகளுடன்சென்று சமதக்கினியென்னு ம்முனிவரனுடைய புத்திரனாகிய மழுங்காத பரசாயுதத்தை யுடைய பரசுராமன் பகைவரைவென்றதுபோலவெல்லுதற்கரியபகைவரைச்சு ற்றத்தாருடன்கொன்று உயிர்களுக்கெல்லாம் இன்ப முண்டாகும்ப டிசெங்கோல்செலுத்திப் (புத்திரசம்பத்துமுதலாகிய அஷ்டசம்பத் துகளுடன் வாழ்ந்துகொண்டிருந்து)அதன்பின்புஉன்புத்திரனுக்குஅ ரசாட்சிகொடுத்துஉன்மனைவியுடன் எம்மிடத்தில்வந்துஒப்பற்றபரம சிவனுடைய திருவடியிற்சேரக்கடவை யென்றுசொல்லி-எ-று, பரசு கோடாலி, ருஎ

எடுத்துற முயங்கிநின்ற வேந்திழைக் கினிதுகூறி
யடுத்தநற் சேனைமுற்று மவன்றுணையாகத்தூண்டி
மடுத்தொலி முரசமார்ப்ப வாழ்த்தினன்மருமான்றன்னை
விடுத்தயன் விமானமூர்ந்து வெள்ளிவேதண்டஞ்சேர்ந்தான்

(இ-பு,) தன்புத்திரியையெடுத்து முகத்தோடுமுகமுறத் தழுவிக் கொண்டு அங்கமாதுக்குஇனியஉபசார வார்த்தைகள்சொல்லிப்பொ ருந்தியசேனைகளையெல்லாம் ராசகுமாரனுக்குத் துணையாகச்செல்லு ம்படிஅனுப்பி ஒளிபொருந்திய பேரிகைவாத்தியமுழங்கத் தக்கதாக வாழ்த்துதல் செய்துமருமகனுக்குவிடைகொடுத்து (அதற்குமேல்அ ந்தவித்தியாதரன்)பிரமலோகத்து விமானத்திலேறிக் கொண்டுபோய் வெள்ளியங்கிரியிற் சேர்ந்தான்-எ-று. ருஅ

குங்குமக் குவடுபோலக் குவிந்தெழு வயிரத்தோளான்
மங்கையர்க்கரசுஅஞ்சு மதியெனுந்திருவினோடும்
பங்கயத் தண்டார்முன்னோன் புடைவரப்பதாதிசூழத்
தங்குலக்குரிமையான விதர்ப்பதேசத்தைச்சார்ந்தான்

(இ-பு,)வித்தியாதரன்போனபின்புகுங்குமமலைபோலத்திரண்டுயர் ந்ததிண்ணிய தோள்களையுடையராசகுமாரனவன் அழகுமுதலிய வைகளால் மாதர்களுக்கு அரசியாகிய அஞ்சுமதியென்னுந்தன்மனைவி

யுடன் குளிர்ச்சிதங்கிய தாமரைமலரால் தொடுக்கப்பட்ட மாலையணிந்தபிராமணனாகிய தமையன் தன் அருகில்வரவும் சேனைகள்சூழ்வுஞ் சென்றுதன்குலத்தாருக்குஉரியதாகியவிதர்ப்பதேசத்தைச்சேர்ந்தான்

வெ ம்படைப் பகைவரெல்லா நேர்ந்துபோர் தருகவன்றேல்
அடும்படைத் தொழில்கைவிட் டெம்மடிப்பணி செய்கதக்க
மிடும்பினைத் தடியவந்தேம் யாமென விறைமைசாற்றி
முடங்கலிற் பொறித்துத்தூதிற் போக்கினான்முழவுத்தோளான்

(இ-பு,) இப்படியாக விதர்ப்ப தேசத்தைச்சேர்ந்த மத்தளம் போலத்திரண்டதோள்களையுடைய தருமகுத்தனென்னும் ராசகுமாரனவனிருந்தசேனைகளையுடைய பகைவர்களாகியமன்னவர்களே நீங்களெல்லாரும் வந்துசண்டைசெய்யுங்கள் இல்லாவிட்டால்போர்த்தொழிலைவிட்டுநம்முடைய பாதத்தைவணங்கிக் குற்றேவல்செய்யக்கடவீர்கள்உங்களுடைய அகங்காரங்களை அடக்கநாம்வந்தோமென்றுராசவீரத்தைஓலையிற்செப்பியெழுதித்தூதர்கள்கையிற்கொடுத்தனுப்பினான்.

கேட்டமன்னவர்க ளெல்லாங் கிரித்திண்டோள் குலுங்கநக்கரங்
கூட்டரக்கனைய செங்கண் சிவந்திவ னொருவனோவெம்
வாட்டிறற் கெதிர்வனென்னா வந்துவெங் களத்தரானார்
கோட்டமில் குணத்துத்தன்ம குத்தனும் போரினேற்றான்

(இ-பு.) இவ்வாறு அனுப்பப்பட்டஓலையைவாசிக்கச்சொல்லக்கேட்டஅரசர்களெல்லாரும் மலைபோன்ற புசங்கள்குலுங்கும்படி நகைத்துச்செந்தாமரைமலர்போன்றகண்கள் செம்மைநிறமேற்றிய அரக்குப்போலச் சிவக்கத்தக்கதாகக்-கோபங்கொண்டு- இச்சிறுவனொருவனோ எங்கள்வாள்வலிக்கு அஞ்சாமல்எதிர்க்கத்தக்கவனென்று - அவமதிப்பாகப்பேசித்தங்கள்தங்கள்சேனைகளுடன்-வெவ்விதாகிய யுத்தகளத்தில்வந்து சேர்ந்தார்கள் மாறுபடுதலில்லாதநற்குணத்தையுடைய தருமகுத்தனும்போர்க்களத்தில் எதிர்த்தான்-எ-று-நக்காங்கு- இதிலிருக்கும் ஆங்கு அசைநிலை-எ-று, ௬௧

ஏற்றெதிர் மலையவேந்த ரெறிபடை வடிவேலேந்திக்
கூற்றென வுடன்றுசாபங் குழைத்தடு பகழிதூர்த்தார்
வேற்றடங் தானைவீரர் வெருவந்து றஞ்சியாங்கே
யாற்றல ராரைன்ன தரசிளங்குமரன் கண்டான்

(இ-பு,) இவ்வாறு எதிரிட்டுயுத்தஞ்செய்ய பகைமன்னவர்கள் எறிந்துகொல்லத்தக்க ஆயுதங்களையும் வடித்தவேலையும் ஏந்திக்கொண்டு நமன்போலக்கோபமுள்ளவர்களாய் வில்லைவளைத்துப்பாணங்களைப்பிரயோகஞ்செய்தார்கள்-அந்தப்பாணங்கள் பட்டுத்தேர்ப்பாகர் முதலா

னவர்கள்-தலைமுதலாகிய அவயவங்கள் அறுபடுவதைக்கண்டு பயந்து தன்படைவீரர்களெதிர்நின்று போர்செய்யமாட்டாதவர்களாய்ப் பின்னிட்டோடினார்கள் அதைத்தருமகுத்தனென்னும் ராசகுமாரன்கண்டான்-எ-று- ௬௨

வரிசிலை குழையவாங்கி வடிக்கணை தொடுத்துமாற்றார்
விரிபிணக்குவையின் குப்பை வெற்பென மலியவீட்டிப்
புரையறு வடிவேலேந்தித் தாதையை முன்னம்போரிற்
றரையினிற் செற்றான்செம்பொற் றலையறத் தடிந்திட்டானே,

(இ- பு,) நீண்டவில்லை நன்றாகவளைத்துக் கூர்மையுள்ள பாணங்களைப்பிரயோகஞ்செய்து பகைவருடைய பிணக்குப்பைகளெங்கும்பரந்துமலைகள்போலக்குவியும்படிகொன்றுமுன்புவேலாயுதத்தையுடையவனாய்வந்துபோர்க்களத்தில் தன்பிதாவின்தலையானதுபூமியில்விழும்படிகொன்றவனுடைய பொன்னாலாகியமகுடமணிந்ததலையையறுத்துத்தள்ளினான்-எ-று- ௬௩

படைமலை வொழிகவென்னப் பணைமுரசறைவித்தம்பொற்
குடைபுவி நிழற்றமன்னர் குரைகழற் றாளின்வீழ
இடையிடையமைச்சர் பாதத் தேத்துபுவணங்கிநிற்பத்
தொடையணி மார்பன்றங்க டொன்னக ரடைந்துபின்னாள்,

(இ-பு,) தருமகுத்தனென்கிற ராஜகுமாரன் தன்பகைவனுடையதலையைஅறுத்துத்தள்ளினவுடன் இனிப்போர்செய்வதை யொழியுங்களென்றுபெரியபேரிகை சாற்றும்படிஉத்தரவுசெய்து அழகியபொன்மயமாகியவெற்றிக்குடையானதுபூமிக்கெல்லாம்நிழல்செய்யவும்போர்செய்யவந்தமற்றஅரசர்கள்சத்தியாநின்றவீரகண்டையணிந்ததன்னுடையபாதத்தில்விழுந்துப்ணியவும்செல்லுமிடந்தோறும் வரிசைவரிசையாகநின்று மந்திரிமார்களும் தன்பாதத்தைத்துதிசெய்துவணங்கிநிற்கவும்வெற்றிமாலையணிந்த மார்பையுடையவனாய்ப் பழமையாகிய தங்கள்நகரத்திற் போய்ச்சேர்ந்து மறுநாள்-எ-று, ௬௪

மந்திரக்கிழவர்சூழ வணங்கலர் வணங்கிவாழ்க்கத்
தந்திரத் தலைவர்போற்றத் தமனிய மகுடஞ்சூடி
யைந்தருக் கொடைகண்டேத்த வவனியை முழுதுங்காத்தான்
கந்தினைத் தழன்றுபாயுங் கடாமுகக் களிற்றினானே,

(இ-பு.) மந்திரிகள் சூழ்ந்திருப்பவும் பகைமன்னவரா யிருந்தவர்களெல்லாரும்வணங்கிவாழ்த்தவும்சேனாதிபதிகள் போற்றிசெய்யவும் பொன்னினாற்செய்யப்பட்ட மகுடமணிந்துகொண்டு தேவலோகத்திலிருக்கும்பஞ்சதருக்களும்தான்கொடுக்குந் தியாகத்தைக்கண்டுபுகழ

வும்கோபங்கொண்டு ஆரவாரித்துக்கட்டுத்தறியைப்பாய்கின்ற மதசலம்பெருகும்படியான சுவடுதங்கியமுகமுள்ள யானைகளையுடையதருமகுத்தராசனானவன்பூமிமுழுவதையுங்காத்தான்-எ-று ✻யானைவெறிமிகுந்தால்கட்டுத்தறியாகிய ஸ்தம்பங்களை முறித்துவிட்டுவெளியேபுறப்படுகிறசெய்கையுள்ளனவாதலால் கந்தினைப்பாய்கின்றவென்றது✻பஞ்சதருக்கள் அரிச்சந்தகம்-கற்பகம்-சந்தானம்-பாரிசாதம்-மந்தாரம் - இவைகேட்டபொருளைக் கொடுக்கத்தக்கனவைகள் ௬௫

வேறு.

மையணிகண்டன்றனையருச்சித்துவரும்பிரதோடத்தின்பலத்தாற்-செய்யகோறிசைகண் மீச்செலமாலைத் திங்கள்வெண்குடைபுவிகவிப்ப-ஐயநின்னடிமையாமெனத்தெவ்வரடிதொழப்புவிமுழுதாண்டுதுய்யபோகந்துகர்ந்துபின்னிறந்து துணைவியோடரன்பதமடைந்தான்

(இ-பு) கருமைநிறந்தங்கிய கண்டத்தையுடைய பரமசிவனைச்சனிப்பிரதோஷத்தில் அருச்சனைசெய்துவந்த பலத்தால்செங்கோலானது அஷ்டதிக்கு வரையில்செல்லவும் பர்வதினத்தின்சாயுங்காலத்தில்உதயமாகாநின்ற பூரணச்சந்திரனை ஒத்த வெள்ளைக்குடை பூமிமுழுவதையும் கவித்துக்கொள்ளவும் பகைவராகிய அரசர்கள் இறைவனே நாங்கள் உன்னுடைய அடிமையென்றுபாதத்தைவணங்கவும்பூமிமுழுவதையுமாண்டு நல்லபோகங்களை அனுபவித்துப்பின்பு இவ்வுடலத்தைவிட்டுத் தன்மனைவியுடன்சிவபதஞ்சேர்ந்தான்-எ-று ௬௬

இன்னதேயருளுமிப்பிரதோட மென்னயாம்வழுத்துகற் கெளிதோ அன்னவாகனனுங்கலுழவாகனனு மறிவதன்றதனுடைப்பெருமை-பன்னகாபரணன் பூசையினிதுபோற்பலந்தரும் பூசையின்றென்னு-முன்னைநான்முழுதுமுணர்ந்தவன்மொழிந்தான் முனிவரானை வருமகிழ்ந்தார்

(இ-பு.) சனிப்பிரதோஷ பூசையின்பலனான துஇத்தன்மையுள்ள இகபரவுக்கியங்களைத் தருமென்று நாம் விவரித்துச்சொல்வதற்கெளிதல்ல அதனுடையபெருமை பிரமதேவனாலும்விஷ்ணுவினாலும் அறியதக்கதுமல்ல-சர்ப்பாபரணங்களை அணிந்திருக்கும் பரமசிவனுக்குரியபூசைகளில் இந்தப்பூசையைப்போல பலனைத்தரும் பூசைவேறொன்றுமில்லை யென்று வேதாகமசாஸ்திரங்களையெல்லாம்உணர்ந்தசூதமுனிவர்சொன்னார் அதுகேட்டு நைமிசாரணிய முனிவர்கள்மனமகிழ்ந்தார்கள்-எ-று, ௬௭

---

ஏழாவது-பிரதோஷபூசைமகிமை

அத்தியாயம்-முற்றிற்று,

ஆ விருத்தம்-௩௱௩.



உ

சிவமயம்

எட்டாவது.

# சோமவாரவிரதமான்மிய அத்தியாயம்

சீதமதிப்பிள்ளை வெள்ளை யமுதங்கா லுஞ்செஞ்சடைமைக்கருமி டற்றுப்பசியசாயன்-மாதுவளரொருபுறத்து நீறுபூத்தமாணிக்கமலைய னையவருண்மேனி- நாதனது சரித்திரத்தின் மேன்மையின்னு நவில்வ னெனத் தவமுனிவரெவருங்கேட்பச் - சூதனெனும்புராண முனிமு றைகணான்குஞ் சொன்னமுனியடிதொழுது பின்னுஞ் சொன்னான்,

(இ-பு.) குளிர்ச்சிபொருந்திய இளந்திங்கள் வெண்மைநிற முள்ள அமுதகிரணத்தைப் பொழிந்துகொண் டிருக்கும்படியான சிவந்தச டைமுடியினையும் மேகம்போன்றகாளகண்டத்தினையும்பச்சைநிறமு ள்ள பார்வதிதேவியார் அமர்ந்தஇடப்பாகத்தினையும்நீறுபூத்தமாணி க்கமலையையொத்த செம்மைநிறமுள்ள திருமேனியையுடையபரமசி வனது சரித்திரத்தின்மேன்மையையின்னுஞ் சொல்லுகிறேனென்று நைமிசாரணியத்தில் தவஞ்செய்யுமுனிவர்களெல்லாருங் கேட்கும்ப டிசூதனென்கிற புராணமுனிவரானவர் நான்குவேதங்களுஞ் சொன் னவியாசமுனிவர்பாதங்களை மனதில்சிந்தித்து; வணங்கிப் பின்னுஞ் சொல்லுகின்றார் க

நித்தியமா யானந்தவுருவமாகி நிறைவுபடும் பொருளாகிக்குறை படாது-சத்தியமா யனைத்துயிர்க்குமுள்ளீடாகிச் சங்கற்பவிகற்பங்கட் கயலதாகி-வைத்தசிவதத்துவத்தினியல்புதன்னைவருகுரவ னருளினி னிதுணர்ந்துவாழும்-அத்தகையர்பிறப்பாழியிடைநின்றேறியழியாத சிவகதியினடைவரன்றே

(இ-பு,) நித்தியப்பொருளாயும் ஆநந்தமேதிருமேனியாகக்கொண் டபொருளாகியும்குறைபடாமல் எங்கும்நிறைந்த பொருளாகியும்சத் தியமானபொருளாயும் எல்லாவுயிர்க்குள்ளும் உயிராகியும் சங்கற்ப விகற்பங்களுக்கும் அன்னியமாகியும்பொருந்திய சிவதத்துவத்தின்இ யற்கையைக்குருவினடையால் எழுந்தருளிய ஆசாரியர் அநுக்கிரகித்தமு றைமையினால்உணர்ந்து வாழ்கின்றதன்மையுடையவர்கள் பிறவிச்ச முத்திரத்திலிருந்துங் கரையேறி அழியாதசிவகதியை அடைவார்கள் எ-று,சங்கற்பம்என்பது மனவியாபாரம் உ

வாங்குதிரைக் கடலுடுத்த ஞாலமீதின் மண்ணாசை பொன்னாசைமகளிராசை, நீங்குதருமெனக்கருதித் துறந்துதங்கள்சிந்தனையைப்புலனெறியிற் செலுத்தாராகிப், பூங்கனக வரைச்சிலைகொண்டவுணர்மாயப் புரமெரித்த கயிலைமலைப் புனிதன்றாளி-னோங்குமறைநெறியின்வழிபாடுசெய்வோ ருதரவழி வருங்கவலை யொழிப்பர் மாதோ,

இ-பு, உலகளையுடையசமுத்திரஞ்சூழ்ந்த பூலோகத்தினிடத்தில் மண்ணாசைபொன்னாசைபெண்ணாசையென்னுமிம்மூன்றாசையும்பொல்லாங்கினைத்தருமென்றுகருதித்துறந்துதங்கள்மனதையும்புலன்வழியிற்செலுத்தாதவர்களாய்ப் பொலிவுள்ளமகமேருவாகிய வில்லினால் அவுணர்களெல்லாருமாயும்படித்திரிபுரங்களையெரித்த கயிலாசவாசியாகியபரமசிவனுடையதிருவடிகளில் ஓங்கியவேதவிதிப்படி பூசைசெய்கின்றவர்கள்தாய்வயிற்றில்தங்கிப்பிறக்கும்படியானதுன்பத்தைநீங்குவார்கள்-எ-று,

எண்ணரிய விடயங்களுடனே கூடி யிடைவிடா தொழுகினும் யாவரேனுங்-கண்ணுதல்வா னவனடியை மறவாராகிக் கருத்தினின்வைத்துறுங்காலங் கழிக்குமாந்தர். மண்ணகநீள் வரைப்பின்வருபோகமெல்லாம் வைகன்றோறு நுகர்ந்துடலமாயமேலை, விண்ணகநாடதனிடைச்சென் றடையுங்காலை விடயத்தான் வருந்துயர மீள்வரன்றே,

இ-பு. எண்ணுதற்கரிய விஷயங்களுடனேகூடி இடைவிடாமல்காலங்கழித்தாலும் எவர்களேயானாலும்நெற்றிக்கண்ணையுடைய பரமசிவன்திருவடிகளைமறவாதவர்களாய்த்தங்களிருதயத்தில்வைத்துப்பொருந்திய காலங்கழிக்குமாந்தர்கள் இப்பெரிய உலகத்தில்வரும்போகங்களையெல்லாம் நாள்தோறும் அனுபவித்து இவ்வுடலம்நீங்கிமேலுலகமாகிய தேவலோகத்தில் செல்லுங்காலத்தில் முன் அனுபவித்தவிஷயங்களால் நேரிடத்தக்கதுயரங்களை அனுபவிக்கமாட்டார்கள்-எ-று-

நீடுபெரும் போகநுகர் வேட்கையெல்லா நீத்தறியாவொருவனிருவினையினீங்கி, வீடுபெறக் கருதியருந் தவங்கள்செய்தும் வேறுசமயத்தடைந்து மாவதுண்டோ, கோடுயரு நெடுங்கயிலை மலையின் மன்னுங்கொழும்பவள மணிவரையி னருணபாதத், தேடவிழு மலரின்வழிபடுவானாயினிரும்போக நுகர்ந்துயர்வீ டெய்துவானே,

இ-பு, மிகுதியானபோகங்களை அனுபவிக்கவேண்டுமென்கிற ஆசைகளைநீக்கியறியாத ஒருவன்நல்வினை தீவினையென்னும் இருவினையினின்றும் நீங்கிமோக்ஷத்தை அடையவேண்டுமென்கிற எண்ணங்கொண்டு அருமையாகிய தவங்கள்செய்தும் மற்றொரு சமயத்தில்சென்றுங்கிடைப்பதுண்டோ சிகரங்களுயர்ந்த கயிலாயகிரியில்வீற்றிருக்கும் செழுமையான பவளமலைபோன்ற பரமசிவனுடைய சிவந்ததிருவடிகளில் இதழ்கள்விரிந்த மலர்களால் ஆராதிப்பானாகில் இம்மை மறு

மை யின்பங்களை அநுபவித்து அதற்குமேல் பதவிகளுக்கெல்லா மே லாகிய மோக்ஷத்தை அடைவான்-எ-று, ௫

பிறையினொடு நறையிதழித் தொடையும்வானிற் பெருகிவருஞ் சுரநதியு முடித்தவேணிக்,கறையணியு மணிமிடற்று முக்கட்செய்ய களிற்றுரிவை யந்தணன்றாள் பணியுமாந்தர்,மறைகளொரு நான்குமவற்றங்கமாய மன்னுபுராணங்கள் பதினெட்டுநாடி,யுறையவரிதாயடி யரெளிதிற்றேரு மழிவில்பெருஞ் சிவகதியை யடைவர்தாமே,

இ-பு, இளஞ்சந்திரனுடன் வாசனைதங்கிய கொன்றைப்பூமாலையும் ஆகாயத்திற் பெருகி வருகின்ற கங்கா நதியையுமுடித்திராநின்றசடா மகுடத்தையும் விஷந்தங்கிய காளகண்டத்தையும் திரிநேத்திரத்தை யும்யானைத்தோற்போர்வையையும் உடையபரமசிவனது திருவடியை ப்பணியுமாந்தர்கள் நான்குவேதங்களும் அவைகளுக்குரிய ஆறங்கங்க ளும் நிலைபெற்றதாகியபதினெண்புராணஙகளும் ஆராய்ந்தறிந்துசொல்வதற்கரியதாய் அடியவர்கள்எளிதில்உணரும்படியான அழிவில்லாதபெரியசிவகதியை அடைவார்கள்-எ-று-* செய்யகளிறு என்றதுயானைகளுக்குக்கூறுமிலக்கணங்க ளமைந்ததென்னுங் கருத்தாகக்கொள்க,*பரமசிவன்தேவர்களுக்குள்பிராமணனாதலால் அந்தணனென்றார்

சொன்னவிவை யெவற்றினுக்கு மேலதாகிச் சுருதி சிவாகமம்புகலுஞ் சோமவார.மன்னிவரும் பிரதோடந் தோறுஞ்செம்பொன்மலைச்சிலை வானவனை யுலகங்களீன்ற,கன்னியுடனாகமத்தின் வழிதப்பாது கடிமலரின்வழிபாடுபுரியுமேலோ,ரின்னலெனும் பெருங்கடலின் கரைநின்றேறி யிகபரத்தும் போகநுகர்ந் திடுவரன்றே.

இ-பு, பரமசிவனைப்பூசிக்கும்படிபிதுவரையிற் சொல்லிவந்தபூசைகளெல்லாவற்றிலும் உயர்ந்ததாய் வேதங்களிலும் சைவாகமங்களிலுஞ்சொல்லப்படுகிற சோமவாரதினங்களில் பொருந்திவருகிறபிரதோஷந்தோறும் மகமேருவை வில்லாகவுடைய பரமசிவனைஉலகத்துயிர்களையீன்ற கன்னியாகிய பார்வதிதேவியாருடன் ஆகமவிதிதவறாமல் வாசனைபொருந்திய மலர்களால் ஆராதனைசெய்யும் பெரியோர்கள் துன்பமென்கின்ற பெரிய சமுத்திரத்தின்கரையிற்சென்றேறிஇம்மைப்பயனையுமறுமைப்பயனையும் அநுபவிப்பார்கள்-எ-று, ௭

இல்லரத்தின் கிழமைதனைப் பூணுமாந்த ரியல்புடனில்லறக்கிழமைபூண்டமாந்தர்,தொல்லரத்தின் கொழுநருடன் வாழுமாதர் துணைவர்தமையிழந்து துயருழக்குமாதர், புல்லறத்தை யொருவியரன் சோமவாரபூசனையே புரிவரெனிற் புவனமீதி,னல்லலறுத் தன்னவருண்ணினைந்தவெல்லா மவர்வினைவின் படியேவந் தடையுமன்றே,

இ-பு. இல்வாழ்க்கையி னுரிமையைப் பூணுதவர்களும் கிரமமாக இல்வாழ்க்கையைப் பூண்டவர்களும் பழமையாகிய அந்தஇல்வாழ்க்

கையில்தத்தம் கணவருடன்வாழுமாதர்களும் கணவர்களையிழந்து துயரமனுபவிக்கு மாதர்களும் பொருந்திய அந்த இல்வாழ்க்கையை நீங்கிப்பரமசிவனது சோமவாரபூசையே செய்வார்களானால்இவ்வுலகத்தினிடத்தில் துன்பங்களை நீங்கிஅவர்கள்மனதில்கருதியபொருள்களெல்லாம் அவர்கள்கருத்தின்படி வந்துபொருந்தும்-எ-று. அ

என்றுயல தருமமெடுத் திசைத்தேமீட்டு மிமயமலை யரையன்மடப் பாவைகேள்வன்,ஒன்றுபடு மாகமங்க ளோருமுண்மைச்சுருதிதொறும் புகன்றருளுஞ் சோமவாரத்,தொன்றுபெருங்கதையனந்தமவற்றுண்மின்னு ரொளியிழைசீ மந்தனியெனு லகம்போற்றுங்,குன்றனைய பெருந்தவத்துக் கோதினிதிக் கொம்பனையா ளோற்றகதை கூறுவாமே.

இ-பு. முனிவர்களே இதுவரையில் பலவாகியசிவதரும் சரித்திரத்தைச்சொன்னோம் இன்னமும் பார்வதிதேவியார்கணவனாகியபரமசிவன்பழமையாகிய ஆகமங்கள் தோறும் உண்மையாகிய வேதங்கள் தோறும்சொல்லியருளிய சோமவாரப் பூசையைக்குறித்தசரித்திரமனந்தம்அவைகளுக்குள் மின்னலையொத்த மாதர்களுக்கு ஆபரணம்போன்ற அழகுள்ள சீமந்தனியென்று உலகத்தார்சொல்லப்பட்ட மலைபோன்ற தவத்தினையும் குற்றமற்ற நீதியினையுமுடைய ஒருமாது சோமவாரவிரதம் அனுஷ்டித்த கதையைச்சொல்லுகிறோம்-எ-று * மின்னுரொளியிழைசீமந்தனி என்பதற்கு மின்போல ஒளிபொருந்திய ஆமரணமணிந்த சீமந்தனிஎனப்பொருள் கூறினு மமையும், கூ

வேறு.

இளங்கதிர் நுழைகலா விருள்கொள்பூம்பொழில்
வளங்கெழு மாரிய வருத்த நாட்டினன்
விளங்கொளி மணிமுடி மிலைந்த வேந்தர்கோ
னளந்தறிவருங்கலைக் காழி யேயனன்.

இ-பு. சூரியனது இளங்கதிரும் நுழைபக்கூடாத இருள்சூழ்ந்த பூஞ்சோலைகளும் வளப்பங்களும் பொருந்திய ஆரியவர்த்தநாட்டையுடையவன் விளங்குகின்ற ரத்தினமகுடமணிந்த அரசர்களுக்கு அரசனாயிருப்பவன் அளந்தறிவிடுதற்கரிய கல்வியுணர்ச்சியில் சமுத்திரத்தையொத்தவன்-எ-று. ய

எண்டிசை முழுவது மெழுது வண்புகழ்
மண்ட லிகர்க்கெலா மகுடம் போல்பவன்
புண்டரு கொழுநிணப் புலவுநாறுவேற்
றிண்டிறற் சித்திர வரும னென்பவே,

இ-பு, அஷ்டதிக்குகளிலும் எழுதிய வெண்மைதங்கிய புகழுள்ள அரசர்களுக்கெல்லாம் மகுடம்போலிருப்பவன் போர்முகத்தெதிர்க்கும்பகைவருடைய சரீரத்திற்பட்டு புண்ணிலுண்டான கொழுமையுள்ளநிணத்தின் புலால்நாற்றம் நாறுதற் கேதுவான வேலேந்தியதிண்ணியவெற்றியையுடைய சித்திரவருமனென்னும் பெயருள்ளவனென்றுசொல்வார்கள்-எ-று, ௰௧

ஆவவ னெண்ணிலா மகங்க ளாற்றியுந்
தாயென வுயிரெலாந் தழையப் போற்றியு
மீயுறு முகிலென வெறுக்கை மாமழை
தூயநன் மறையவர் சுமப்ப நல்கியும்,

இ-பு, அந்தச்சித்திரவருமனென்பவன் அளவில்லாதயாகங்கள்செய்தும் தாயைப்போல உயிர்களெல்லாந் தழையும்படி ஆதரித்தும்ஆகாயத்திற் சஞ்சரிக்கும் மேகம்போலப் பொன்மழையைப் பரிசுத்தர்களானபிராமணர்கள் சுமந்துகொண்டு போம்படிகொடுத்தும் -எ-று,

மரகத வரையென வயங்கு மாதவன்
குரைகழல் வணங்கியுங் குன்ற வில்லினாற்
புரமெரி கொளுவிடப் பொருத வன்கழ
லிரவினும் பகலினு மலர்பெய் தேத்தியும்,

இ-பு. மரகதரத்தின மலையையொத்தபச்சைநிறமுள்ளமகாவிஷ்ணுவின் ஒலிக்கும்வீரகண்டையணிந்த திருவடிகளைவணங்கியும் மகமேருவில்லினால் திரிபுரத்தில் தீபற்றப்பொருத பரமசிவனுடைய திருவடிகளைப் பூவிட்டருச்சித்து இரவினும்பகலினும் துதிசெய்தும்-எ-று

முழவொலி படுகடன் முத்துவெண்குடை
நிழலிடை யுலகெலா நெறியிற் காக்குநாட்
குழன்மொழி மனைவியர் வயிற்றிற் கொல்சின
மழவிடை யெனச்சில மகப்பெற் றனரோ.

இ-பு, முழவம்போல ஓசைபொருந்திய கடலினிடத்துண்டானமுத்துகளால் அலங்கரிக்கப்பட்ட வெள்ளைக்குடை நிழலில் முறையாக உலகத்தைக் காக்குநாளில் வேய்ங்குழல்போல இனிமையுள்ளவசனத்தையுடைய மனைவியர்கள் கருப்பத்தினிடமாக இளவயதுள்ளரிஷபமென்றுசொல்லத்தக்க சிலபுத்திரர்களைப் பெற்றான்-எ-று-* கொல்சினவிடையென்றது சத்துருக்களைக்கொல்லத்தக்ககோபத்தையுடையரிஷபம்.

பெற்றபி னிறைமகன் பெண்மகாரெமக்
குற்றில ரெனநினைந் தேசன் றலாதன
நற்றவ மிழைப்பவோர் மனைவி நாண்மலர்ப்
பொற்றிரு வெனவொரு திருவைப் பூத்தனள்,

இ-பு, புத்திரர்களைப்பெற்றபின் அவ்வரசன்பெண் குழந்தைகள்ந வக்குண்டாக வில்லையேயென்றுகருதிப் பலபல நல்லதவங்களைச்செ ய்ய ஒருமனைவியானவள் தாமரைப்பூவில் வீற்றிருக்கும்மகாலட்சுமி போல ஒருபுத்திரியைப் பெற்றாள்-எ-று. ௰ரு

வேறு,

தாமந்திகழ்கரு மொய்ம்பொடுதழைசித்திரவருமன்
சீமந்தனியெனவேயருள் செல்விக்ககமகிழ்வா
னுமந்தனை மறைநீதியி னன்னாளிடை நகிலா
வாமங்கெழுமையைத்தரு மிமவானின் மகிழ்ந்தான்

இ-பு' வெற்றிமாலை பிரகாசித்துக்கொண்டிருக்கும் புஜங்கள் பூரிக் கமனப்பூரிப்பையுமுடைய சித்திரவருமன் தான்பெற்ற புத்திரிக்குமன மகிழ்ச்சியுடன்வேதவிதிப்படி நல்லதினத்தில்சீமந்தனியெனப்பெ யர்கூறி சவுந்தரியமுள்ள உமையவளைத் தனக்குப் புத்திரியாகபெ ற்ற மலையரையன்போல மகிழ்ச்சியடைந்தான்' எ-று. ௰௬

மதவெங்களி விறல்யானையு மன்னன்றரு மேவற்
குதவுந்தன துறையோர்களை யுயர்சோதிட நூலின்
விதமொன்றிய மறைவாணரை யழையின்னெனவிடுப்பக்
கதமொன்றிய காலிற்கடி கேகிக்கொடுவரவே

இ-பு, மதத்தினால்வெவ்விய மயக்கங்கொண்டிருக்கும்வெற்றிபொ ருந்திய யானைப்படையுள்ள அவ்வரசன்தான் உத்தரவுசெய்யும் ஏவ லுக்குத் தடையில்லாமல் உதவுகின்றவர்களாகியஏவலாளிகளைநோ க்கிஉயர்ந்த சோதிஷ சாஸ்திர வகையெல்லாம் உணர்ந்த சாஸ்திரிக ளை அழைத்துக்கொண்டு வாருங்களென்று அனுப்ப அவர்கள்சண்ட மாருதம்போல அதிவிரைவாகச்சென்று அழைத்துக்கொண்டுவரஎ

கண்ணுற்றன னவரைப்பல கணிதத்துறைவல்லீர்
பெண்ணிற்கணி யெனயானருள் பெண்ணின்றிறனெல்லா
மண்ணிற்கருதொண்ணுநிலை வருசோதிடவிதியா
லெண்ணித்துணி வுறுசாதகமிடுகென்றிறைசொன்னான்

இ-பு, வந்த சோதிஷசாஸ்திரிகளைப்பார்த்துப்பலவாகிய சோதிஷ சாஸ்திரமுணர்ந்தவர்களே பெண்களுக்குஆபரணம்போல நான்பெ ற்றபெண்ணின் திசாபலன்களையெல்லாம் இவ்வுலகத்தில்அறிதற்கரி யநிலைமையினையுடைய சோதிஷசாஸ்திரவிதியால் ஆராய்ந்து நிச்சய மான சாதகமெழுதுங்களென்று அவ்வரசன்சொன்னான்,எ-று- ௰அ

என்றுமுன மொருவேதிய னவட்கினிருவினையு
முன்றுநிலை பெருசாதகமுற்றும்படியெழுதிப்
போன்றார்களை கலன்மன்னவ புவிமாமகள்புணரு
மன்றுவினவ கேண்மோவென வழுவாதுரைசெய்தான்

இ-பு. இவ்வாறுசொல்வதற்குமுன் ஒருபிராமணன் அந்தப்பெண்ணினுடையஇருவினையையும் ஆராய்ந்துநிலைபெற்றசாதகமுங்குறைவில்லாம லெழுதிப்பொன்னாற் செய்யப்பட்டவீரகண்டையணிந்தமன்னவனே பெருமைபொருந்தியபூமிதேவிசேரும்படியான மன்னவனேஇவைகேளென்று தவறாமற்சொன்னான்-எ-று - என்னசொன்னானென்றால் ௰௯

வேறு,

மணத்தினி லுமையாண் மகப்பெறற்கதிதிவடிவினிலுயற்றமயந்தி
குணத்தினிற்கமலை கற்பினிற்சனகிகொழுங்கலைக்கியன்மகளென்னுப்
பணத்துறையுலகமுழுவதும்புகழும்படிபதினாயிரம்பருவங்
தணப்பிலளாகக் கொழுனனோடுறையுந்தராபதிநின்மகளென்றான்

இ-பு, அரசனேஉம்முடையபுத்திரிகல்லியாணத்தில்உமையவளென்று சொல்லத்தக்கவள் புத்திரர்களைப் பெறுவதில் அதிதியென்றுசொல்லத்தக்கவள் சவுந்தரியத்தில்உயர்ந்ததமயந்தியென்றுசொல்லத்தக்கவள்,நற்குணத்தில் திருமகளென்னத்தக்கவள், பதிவிரததருமத்திற்சீதையென்னத்தக்கவள்செழுமையுள்ளகலைகளுக்குச்சரஸ்வதியென்று சொல்லத்தக்கவளென்றுசொல்லி ஆதிசேஷன்முடியில்பொருந்தியஇவ்வுலகமுழுவதும்புகழும்படி பதினாயிரம்வருஷம்கணவனைவிட்டுப்பிரியாமல் வாழ்ந்துகொண்டிருப்பாள்-எ-று உ௰

என்றவனுரைத்த சாதகப்பொருளினியல்பெலாங்கேட்டுளமகிழ்ந்து-பொன்றழைகிணிதோட் புரவலனவற்குப்பொருணனிகொடுத்தனளிருப்ப-பின்றையுமொருவனேழிரண்டாண்டிற் பிறைநுதன்மங்கலமிழக்கும்-வென்றிவேலிறைவவென்றலுநிருபன்வெய் துயிர்த்தனேமிசைவிழுந்தான்,

இ-பு, இவ்வாறு அந்தப்பிராமணன் சொல்லின்சாதகப் பொருளினியல்பையெல்லாம் கேட்டு மனமகிழ்ந்து அழகுநிறைந்ததிண்ணியதோளையுடைய ராசன் அவனுக்குமிகுந்தபொருள்கொடுத்துசந்தோஷத்துடன்இருக்கமற்றொருபிராமணன்-சாதகம்பார்த்து-வெற்றிபொருந்தியவேலாயுதத்தையுடைய அரசனேஇந்தப்பெண்ணானவள்பதினாலாம்வருஷத்தில் மங்கிலிய மிழப்பாளென்றுசொன்னான் - அப்படிச்சொல்லவே-அவ்வரசன்பெருமூச்சுவிட்டுக்கொண்டு சோகத்தினால் ஆசனத்தின்மேல் விழுந்துவிட்டான்-எ-று, உக

பைவிரியரவ மிடிவிழவெருவும் பான்மைபோலோரிருகன்னல்வெய் துயிர்த்திருந்துகணிதனைப்போக்கிவிசிவலியறிகுவமென்ன- மெய்தவழ்வடிவேற் புரவலனுளத்தி னினைவுடனெழுகுமங்காளின்-மைவிழிச்செவ்வாய்வெண்ணகையவட்குமங்கையற்பருவம் வந்ததுவே,

இ-பு. படத்தைவிரிக்காநின்ற சர்ப்பமானது இடிவிழுந்தால்பயந்துசுருண்டு வீழுந்தன்மைபோல இரண்டுநாழிகைவரைக்கும்பெருமூ

ச்சுவிட்டுக்கொண்டிருந்து பின்புஒருவாறுதெளிந்து சோசியர்களை அனுப்பிவிட்டுஊழ்வினையின் வன்மையை அறிவோமென்றுபகைவர் உதிரத்தில் தவழும்படியானவடித்தவேலையுடையஅவ்வரசனானவன் மனதில் ஞாபகத்துடனிருக்கும்நாளில் மையணிந்தகண்களையும்சிவந்தவாயினையும் வெண்மைநிறம்பொருந்திய தந்தங்களையுமுடையஅந்தக்கன்னிகைக்கு அழகியமங்கைப்பருவம்வந்தது-எ-று- உஉ

மங்கையம்பருவம் வருதலுமவளை வழிபடுசேடியர்குறுகித்
திங்கள்வாணுதனீ யேழிரண்டாண்டிற்றிருவிழந்திருக்குவையென்ன
வங்கவள்வெருவியர்க்கியவர்க்கி யாகியமுனிவரனமனைவி
தங்கியசாலைசென்றவட்டொழுது தன்னுறு துயர்நிலைசொன்னாள்

இ-பு, மங்கைப்பருவம்வந்தமாத்திரத்தில்அவளைப்பூசிதைசெய்துகொண்டிருக்கிற தோழிகள்வந்து இளந்திங்கள்போல வளைவாகிபஒளிதங்கிய நெற்றியினையுடையவளே நீபதினாலாம்வருஷத்தில் மங்கிலியம்இழந்துவிடுவை யென்றுசொல்ல அதைக்கேட்டு அவள்பயந்துயர்க்கியவர்க்கிமுனிவர் பத்தினியாகிய மயித்திரையென்பவளிருக்கும்பன்னசாலைக்குப்போய் அவளைத்தொழுது தனக்குநேரிட்டிருக்கிற துயர்நிலையைச் சொல்லுவாள்-எ-று. உரு

அருந்ததியனைய கற்புடையன்னையடியனேனுன்னாப்பதொன்றுளதா-பெருந்திருவிழப்பன்யானெனக்கணிதர் பிதாவுடனுரைத்தனரதனாற்-றிருந்தியநின்னைவந்தடைந்தனனித்தீவினைப்பிணியகற்றுதற்கோர்-மருந்தருள்கென்றென்றடி தொழுதிரப்பவரமயித்திரையும் பின்னுரைத்தாள்-

இ-பு, அருந்ததியையொத்தகற்பினையுடையதாயே அடியேன்சொல்லுவதோர் வார்த்தையிருக்கின்றது அதுஎன்னவெனில் நான்பதினாலாம்வருஷத்தில் மங்கிலியம்இழப்பேனென்றுசோதிஷர்கள் என்பிதாவுடன்சொன்னார்கள் அதனால்கற்பினால்மேன்மைபெற்ற உன்னைச்சரணென்றடைந்தேன் இந்தத்தீவினையாகிய நோயை நீக்குவதற்கு ஒருஅவுஷதம்கிருபைசெய்யென்று பாதத்தைவணங்கி யிரப்பச்சிரேஷ்டமுள்ள மயித்திரை பின்புசொல்லுகிறாள்-எ-று, உச

புரிகுழலணங்கே சோமவாரத்திற் புனிதநீரினிதாடிப்
பரிவுடனுணவு முதலியதுறந்துமோனமாய்ப் பவித்திரையாகித்
தெரிமலர்கொணர்ந்துபரமனோடுமையைச்சிவாகமவிதிமுறைவழுவா
துரியபூசனைசெய் தருமறையவர்க்குமுவப்புடனன்னமுமளித்தே

இ-பு, கட்டப்பட்ட அளகத்தையுடைய பெண்ணே சோமவாரத்தில் பரிசுத்தமாகிய தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து வெறுப்பினறி ஆகாரமுதலானதுகளைநீக்கிமவுனமாய்ப்புநிதையாய்மலர்களை ஆய்ந்துகொ

ண்டுவந்து பரமசிவனுடன்பார்வதிதேவியாரையும் சைவாகமவிதி த
வறாமல் உரியபூசைசெய்து அரியபிராமணர்களுக்குச்சந்தோஷத் து
டன் அன்னமுங்கொடுத்து-எ-று, ௨௫

இன்னணமானே யேத்திவேழிபட் டீசனே யென்னுறு துணையே
யுன்னுடையருளே வேண்டினனென்ன வுரைத்துநல்விரதமுமுடித்தா
மன்னியவிரதந் தரும்பெருநலத்தான் மாதுநின்கணவனுக்குரிய (ன்
தன்னுடைஞால மல்லதுவேண்டுந் தராதலமளவிலவுளவாம்

இ-பு. இந்தப்பிரகாரம் பரமசிவனை ஆராதித்துத் துதிசெய்து ஈச
னே எனக்குப்பொருந்திய துணையே தேவரீருடைய திருவருளையே
விரும்புகிறேனென்றுசொல்லி நீநல்லவிரதத்தையும் நிறைவேற்றின
ல்நிலைபெற்றஇவ்விரதந்தரும் பெரியபலத்தினால் மாதேஉன்னுடை
யகணவனுக்குரிய சொந்தத்தேசமு மல்லாமல் அவன்விரும்புந்தே
சம்பலவுண்டாகும்-எ-று விரதமுடித்தலாவது உத்தியாபனஞ்செய்த

சந்தமுமலரு மரிசனத்துடனே சாத்தினால்வளம்பலதழைக்கும்
நந்தலற்றூப மளித்திடி னுடலநறுங்கடிகமழுந்தல்லா
ணந்தமிறீப மளிக்கினேருளவா மயியளித்திடி னுணவுளதாம்
பைந்தொடிபாகு வெள்ளிலையளிக்கிற் பதுமமாளிகைமயில்சேரும்

இ-பு, சீமந்தனியே மஞ்சளுடன் சந்தனமும் மலர்களுஞ்சாத்தின
ல்பலவளங்கள் உண்டாகும், கெடுதலில்லாததூபங்கொடுத்தால்சரீர
ம்நல்லவாசனைகமழ்ந்துகொண்டிருக்கும்-இதுவுமல்லாமல்குறைவுப
டாததீபங்கொடுத்தால் அழகுண்டாகும் அன்னம்நிவேதித்தால் ஆ
காரம் உண்டாகும்-பாக்கும்வெள்வெற்றிலையும் நிவேதித்தால் தாம
ரைமலராகிய ஆலயத்தில்வீற்றிருக்குந்திருமகள்நிவாசங்கிடைக்கும்

அஞ்செழுத்தோதி னட்டமாயோக மடைந்திடுமாகுதிபண்ணி
னெஞ்சிலினிலைத்த கருமங்கள்யாவு நினைத்தவாறெளிதினிற் கூடும்
வஞ்சிநுண்ணிடையா யந்தணர்க்கடிசின்மகிழ்வுடன்வழங்கின்மற்றத
லெஞ்சலிற்றகுதிக் கடவுளரெவரு மிருங்களியெய்துவாரறிநீ ஞ

இ-பு, பஞ்சாக்ஷரஞ்சபித்தால் அஷ்டாங்கயோகஞ் சித்தியாம்-சி
வயாகஞ் செய்தால் மனதில்நினைத்தகாரியங்க ளெல்லாம் நினைத்தப
டிஎளிதிற்கைகூடும் பூங்கொடிபோலநுண்ணியஇடையையுடையவ
ளேமகிழ்ச்சியுடன் முனிவர்களுக்கு அன்னங்கொடுத்தால் அதனால்
குறைவில்லாதமேம்பாட்டினையுடைய தேவர்களெல்லாரும் மிகுந்த
களிப்பையடைவார்களென்று நீயறிவாயாக-எ-று, ௨௮

என்னுரைவழாமல்யான்மொழிந்தருளுமிந்தவாறிளமதிக் கொழுந்து
மன்னு செஞ்சடில வாணவன் றன்னை மாதுடன் வழிபடத் துணிந்தா

லுன்னுடையுளத்திற் கவலையுந்துயரு மொழிந்திடுமுண்மையி தென்னு
ப்பன்னருஞ்சிறப்பிற் பார்ப்பனியுரைத்துப் பைந்தொடியேகெனப்பணி
த்தாள்,

(இ-ள்.) என்சொல் தவறாமல் நான்சொல்லிய பிரகாரம் இளந்தி
ங்கட்கொழுந்து பொருந்திய செஞ்சடையையுடைய பரமசிவனைப்பார்வ
தியாருடன் ஆராதனைசெய்யத் துணிந்தால் உன்னுடைய மனவியாதி
யுந்துயரும் நீங்கிவிடும் இதுநிச்சயமென்று சொல்லுதற்கரிய சிறப்பி
னையுடையபிராமணஸ்திரீயாகிய மயித்திரை யென்பவள்சொல்லிப் பசி
யபொன்னாற்செய்யப்பட்ட வளையலணிந்த கையினையுடையவளாகியமா
தே, நீ செல்லென்று உத்தரவுசெய்தாள்-எ-று, (௨௬)

தொழுகுலத்தணங்கு புகன்றவைகேட்டுச் சோமவாரந்தொறுஞ்சிவனை
வழுவறவுமையோ டாகமவிதியின் மடவரல் வழிபடுநாளி
னெழுவுறழ்திணிதோ ளன்றருகுமர னிந்திரசேனன்மாமதலை
முழுவலிபெறுசந்திராங்கதனென்போன்முருகனிற்கட்டழகுடையோன்

(இ-ள்,) பிராமணகுலமாதாகிய மயித்திரை சொன்ன வைகளைக்
கேட்டுச்சீமந்தனியென்பவள் சோமவாரந்தோறும் குற்றமில்லாமல் ஆ
கமவிதிப்படி பார்வதிதேவியாருடன் பரமசிவனை ஆராதனைசெய்யுநாளி
ல் ஏழுத்தம்பத்தைபொத்த பலம்பொருந்திய இந்திரசேனனுடையபெ
ருமையுள்ள-புத்திரன் மிகுந்த பராக்கிரமம் பொருந்திய சந்திராங்கத
னென்பவன் சுப்பிரமணியனைப்போல மிகுந்த சவுந்தரியமுள்ளவன்-எ

அன்னவன்றனக்குச் சித்திரவருமனரியமாதவத்தினி னீன்ற
தன்னுறுதநயை வனிதையர்க்கணங்காய்த் தயங்குசீமந்தனியென்னுங்
கன்னியைமகிழ்ந்து கொடுத்தலும்விதியிற் கடிமணமுடித்துநன்னலங்க
ளின்னமுதாகச் சிறிதுநாளுகர்ந்தங் கிருந்தனனிருந்திடு நாளின்

(இ-ள்.) அந்தன்மையுள்ள சந்திராங்கத னென்பவனுக்குச்சித்திர
வருமனென்னும் அரசன் பெருமைபொருந்திய அரியதவத்தினாற்பெற்
ற தன்னுடைய புத்திரியாய் மாதர்களுக்கெல்லாம் தெய்வம்போல் விள
ங்கும் சீமந்தனியென்னுங் கன்னிகையை மகிழ்ச்சியுடன் கொடுக்கவும்
சாஸ்திரவிதிப்படி விவாகஞ்செய்துகொண்டு சிலநாள்நல்ல இன்பங்களை
யினிய அமுதம்போல அனுபவித்துக்கொண்டிருந்தான் அப்படியிருக்
கும் நாளில்-எ-று. (௨௭)

வேறு.

தருவென வழங்குவண்கைச் சந்திராங்கதனு நண்பின்
மருவியதோழர்தாமு மணிநிற யாணர்நன்னீர்

பெருகிய யமுனையாற்றிற் பெயர்தரு தோணிமீது
வெருவில ராகியன்னோ ரேறினர் விதியின்கோட்பால்.

(இ-ள்.) கற்பகவிருக்ஷம்போலக் கொடுக்கத்தக்கவளப்பம்பொருந்தியகையினையுடைய சந்திராங்கதனும்நட்புடன்பொருந்தியதோழர்களுமாகிய இவர்கள் மணிகளும்பொருந்திய அழகியநல்லநீர்பெருகுகின்றயமுனையாற்றினிடத்தில் செல்லுகின்றதோணியின்மேல் விதிவசத்தால் அச்சமுறாதவர்களாய் ஏறினர்கள்-எ-று. (௩௨)

திரையெடுத் தெறிதலானுஞ் செலவிடு கடுப்பினாலும்
நிரைநிரைமாந்தர்தொக்கு நெருங்குதலானும் நீருள்
விரைவொடு துவன்றிப்பாயும் வேகமிக் கிடுதலானுங்
கரைகடப் பரிதாயோடங் கவிழ்ந்தது கவிழ்தலோடு

(இ-ள் அலைகளெடுத்து வீசுவதினாலும் செல்லும்படிவிடுகிற விரைவினாலும் வரிசையாக மனிதர்சேர்ந்து நெருங்கி யிருப்பதினாலும் நீரினிடத்து விரைவுடன் பொருந்திப்பாயும் வேகமிகுந்து தள்ளுதலினாலும்கரைகடப்பதரிதாய்ப் படவானது கவிழ்ந்தமாத்திரத்தில் எ-று ()

சந்திராங் கதனுந்தோழர் தாங்களும் புனலினாழ
வெந்திறலிடங்கரத்தத் தோழரை விழுங்கவேந்தன்
முந்தைநல் வினையின்பான்மை முளைத்தெழவுரகர்வாழு
மந்தமில் பிலத்துப்புக்கோ ரருநதிக் கரையைச் சார்ந்தான்

(இ-ள்.) (அந்தத்தோணியிலிருந்த) சந்திராங்கதனுந் தோழர்களும் நீருக்குள் முழுகிவிட (அப்படிமுழுகினவர்களில் வெவ்விதானவலியுள்ள முதலைகள் அந்தத்தோழரை விழுங்கின (சந்திராங்கதனென்னும்) அரசனோவென்றால் முன்சனனங்களில்செய்த தருமமானது முன்வந்துதவ நாகங்கள்வாழும் முடிவில்லாத பிலத்துக்குட்போய் அவ்விடத்திருக்கும் அரியநதிக்கரையைச் சார்ந்தான்-எ-று. (௩௪)

நதியினி னாடுகின்ற நாகர்த மகளிர்நோக்கி
யதிசய மெய்தியின்னோ னார்கொலென் றருகுசேர்ந்து
புதியவன்றன்னைத்தங் கடக்கன் புரவுபூண்டு
வதிதரும் கோயிலாங்கண் வருகெனக் கொண்டுபுக்கார்

(இ-ள்) அந்தநதியில் விளையாடுகின்ற நாககன்னியர்கள்பார்த்து ஆச்சரியமுற்று இவன்யாவனென்று அவனருகில்வந்து விருந்தனாய்வந்தவனை தங்கள் அரசனாகிய தக்ஷகன்காவல்கொண்டு வாசமாயிருக்கிற அரண்மனையினிடத்துக்கு வாவென்று அழைத்துக்கொண்டு போனார்கள்-எ-று.

புக்கவ ரவனைவாயிற் புறத்தினினிறுவிப்போகித்
தக்ககன் றிருமுன்காளையடைந்தமை சாற்றலோடு

மக்கணத் தவனேநீவி ரமைபின்க ளென்னமாதர்
மக்களிற் றிலகவீண்டு வருகென வேந்தர்வேந்தன்

(இ-ள்.) சந்திராங்கதனை அழைத்துக்கொண்டுபோனவர்கள் அவனை வாயிலினிடத்து நிறுத்திவிட்டுத் தாங்கள்மாத்திரம்உள்ளேபோய்த் தக்ஷகன் சமுகத்தில் சந்திராங்கதன் வந்திருப்பதைச்சொல்லவும் அப்பொழுதே அழைப்புககனென்றுசொல்ல அந்தமாதர்கள்போய்மனிதர்களுக்குள்திலகம்போன்றவனே யிங்குவாவென்று கூட்டிக்கொண்டுபோகப்போன அவ்வரசன்-எ-று. (௩௬)

ஆயிரந்தபனர்தொக்காங் கவிர்கதிர் சொரிவதேய்ப்ப
பாயொளி மவுலிதோறும் பருமணிவிமைக்கவைந
நாயகன் றன்னைநாக மடந்தையர் நடுவட்டோன்றிச்
சேயுயர் விசும்பிற்றேவிற் பொலிதரு தேவைக்கண்டான்

(இ-ள்) ஆயிரஞ் சூரியர்கள் ஒன்றாகச்சேர்ந்து விளங்குகின்றகதிர்களைச் சொரிவதையொப்பாகப் பரவுகின்ற ஒளியையுடைய பணமகுடந்தோறும் பருத்தமாணிக்கம் பிரகாசிக்கும்படி வீற்றிராநின்ற தக்ஷகனென்னும் நாகராசனாகிய நாககன்னியர் கூட்டத்தினடுவில் தோன்றி மிகவும் உயர்ந்ததாகிய விண்ணுலகிலிருக்கும் இந்திரன்போலவிளங்குகின்ற தேவனைக்கண்டான் -எ-று. நாகராசனாகிய தேவைக் கண்டான் என்க. (௩௭)

கண்டடி தொழுதுநின்ற காலையக் காளைதன்னைத்
திண்டிறல் வேலினாயநின் றேயமுங்குலனுமற்று
மொண்டிறற் றாதைபேரு முரைத்தியென் றுரைத்தலோடு
முண்டக முகைபொற்செங்கை கூப்புபு மொழியலுற்றான்

(இ-ள்) கண்டு தன்பாதத்தை வணங்கிநின்றபோது தக்ஷகராசன் அந்தராசகுமாரனைப்பார்த்துப் பலமும் வெற்றியுமுள்ள வேல் யுதத்தை யுடையவனே உன்னுடைய தேசமும் குலமும் எங்கும் விளங்கும்படியானவெற்றியையுடைய உன் பிதாவின் பெயரும் சொல்லென்று சொன்னவுடன் தாமரை யரும்புபோல் கைகளைக் குவித்துக் கொண்டு சொல்லத்தொடங்கினான்-எ-று, (௩௮)

நெடுங்கடல் வளாகவைப்பி னிடதநா டெனதுநாடு
கடுங்கலிக் கிலாய்வந்த மன்னவன் கருதலார்க
ளடங்கிடப் பொருதவைவே லாற்றலானறத்தின்மிக்கா
னடுங்கலின் மனத்துச்செங்கோ னளனென வுளனோர்வேந்தன்

(இ-ள்.) நெடிய சமுத்திரஞ் சூழ்ந்த பூலோகத்தினிடத்திற் நிடத தேசமென்று சொல்லப்படுவது என்னுடையதேசம் கொடியதாகியபாவத்துக்குப் பகையாய்வந்தஅரசனும்பகைவராயிருப்பார்கள் அடங்கத்

க்கதாக யுத்தஞ்செய்துவென்றகூர்மைதங்கியவேலாயுதமேந்தும்பராக்கிரமமுள்ளவனும் தருமத்தில் மிகுந்தவனும்நடுங்குதலில்லாதமனதையுடையவனுமாகிய செங்கோலென்னும்(நீதிசெலுத்துகின்ற)நளனென்னும்பெயரையுடைய ஓரிராசனுளன்-எ-று. (ாகூ)

கொடையினி லறிவின்மானக் குலத்தினிற் புகழினேரி
னடையலர்ச்செருக்கும்வைவேலாற்றலினொருவரொவ்வான்
றொடையணிந் துடையதேவி தொழத்தகு வடமீனென்ன
நடையறி புலவரேற்றி நவில்தமயந்தியென்பாள்

(இ-ள்) அவ்வரசன் இன்னும் எத்தன்மையுள்ளவனென்றால்கொடையிலும் அறிவிலும் மானமுள்ள குலத்திலும் புகழிலும் அழகிலும் சத்துருக்களைப் போர்செய்து கொல்லத்தக்க பராக்கிரமத்திலும் தனக்கு ஒருவருமொவ்வாதவன் மாலைசூட்டிய இவ்வரசன் மனைவியானவள் எல்லாரும் வணங்கத்தக்க அருந்ததியென்று ஒழுக்கமாவது இத்தன்மையதென்று அறிந்து நடக்கும் அறிஞர்களாகிய பெரியோர்கள்புகழ்ந்து சொல்லத்தக்கதமயந்தியென்பவள்-எ-று. (சய)

அவடிரு வயிற்றின்வந்த வரும்பெறற் புதல்வனுய
திவள்பரி நிருபனிந்திர சேனன்மற் றெனதுதாதை
கவளமால் யானைச்சந்திராங் கதனெனும் பெயரினனெம்யான்
தவளவாண் முறுவற்சீமந் தனியைவேட் டுறையுநாளின்

(இ-ள்) அந்தத் தமயந்தியின் அழகிய கருப்பத்தினின்றும் உற்பவித்த பெறுதற்கரிய புத்திரனாகிய இடக்குச்செய்யாமல் வீராவசப்பட்டுச்செல்லத்தக்க குதிரைப்படையையுடைய இந்திரசேனமகாராசனென்னுடைய பிதா (யோர்முனையில் பெரிய யானையையொத்தவனாகியசந்திராங்கதனென்னும் பெயரையுடைய நான் வெண்மைநிறந் தங்கியவொளியுள்ள பற்களையுடைய சீமந்தனியை விவாகஞ்செய்துகொண்டுவாழும்நாளில்-எ-று கவளயானை கவளமுண்ணும்யானை, (சக)

தோழரும் யானும்வாவு துணைப்பரி கடாவுமாபோ
லூழுறு வினையாலொன்று முணர்கிலா தோடமேறி
யாழுநீர் யமுனையாற்றுள் விடுதலு மம்பிதாழ்ந்து
காழுறு கழையத்தள்ளிக் கவிழ்ந்தது கவிழ்ந்தவேலை

(இ-ள்.) தோழர்களும் நானும் தாவுகின்ற விரைவினையுடைய குதிரையைச் செலுத்துவதுபோல பழமையாகப்பொருந்திய வினையினால் ஒன்றும் யோசியாமல் தோணியிலேறி ஆழ்ந்த நீரையுடையயமுனையாற்றில்அதிவிரைவாகச் செல்லும்படி விடவும் அந்தத்தோணி தாழ்ந்து வயிரம்பொருந்திய மூங்கிற்சோலையுந் தள்ளிக்கொண்டு கவிழ்ந்துவிட்டது அப்படிக் கவிழ்ந்தபோது-எ-று. (சஉ)

இறந்தனர் நண்பரெல்லாம் யானினை யெய்துமூழாற்
றிறந்துயிர் விடாதுவந்து தொழுதன னென்றுகூற
அறந்தரு சிந்தைபானுமதிசயித்தரசேநீங்க
டிறந்தெரிந் தேத்துந்தேவன் யாரென்றான் செம்மல் சொன்னான்

(இ-ள்,) என்னுடைய தோழர்களெல்லாரும் இறந்துபோனார்கள் நான் உன்னை அடையும் ஊழினால் உயிர்துறந்துபோகாமல்வந்து தொழுதேனென்றுசொல்லத் தருமந்தங்கிய மனதையுடைய நாகராசன் ஆச்சரியமுற்று அரசனே நீங்கள் உண்மையறிந்து துதிசெய்யுங்கடவுள் யாவனென்றால் அதற்குப் பெருமையிற் சிறந்தவனான சந்திராங்கதன் சொல்லுகின்றான்-எ-று. (௪௩)

வேறு.

யாவனொருவ னெவ்வுயிரு மெல்லாவுலகங் களுமுடையான்
யாவனொருவன் கடவுளருக் கெல்லாமிறைமை பூண்டுள்ளான்
யாவனொருவன் றிரிபுரமு மெரியக்கனகச் சிலைகுனித்தான்
யாவனொருவன் விடநுகர்ந்தா னவனேயெங்கட்கிறையோனே

(இ-ள் எல்லாவுயிரையும்எல்லாவுலகங்களையுமுடையஒருவர்எவரோ தேவர்களுக்கெல்லாம் தேவராயிருக்கும் ஒருவர் எவரோ திரிபுரங்களும் எரியும்படிபொன்மலையை வில்லா கவளைத்தஒருவரெவரோவிஷமுண்டவர் எவரோ அவரேயெங்களுக்குக்கடவுள்-எ-று. (௪௪)

என்றுமெவ னிராசதத்தி னயனையீன்று படைப்பிப்பா
னென்று வென்சாத் துவிகத்தி னரியையீன்று புரப்பிப்பா
னென்றுமெவனோ தாமதத்தி னரனையீன்று துடைப்பிப்பா
னென்று மவனே யெங்குலத்தை யிணைத்தாணீழ லளிக்குமால்

(இ-ள்,) எந்நாளும் இராசதகுணத்தினிடமாகப் பிர்ம்மதேவனை உண்டாக்கி இவ்வுலகங்களைச் சிருஷ்டிக்கச்செய்கின்றவரெவரோஎக்காலமும்சத்துவகுணத்தினிடமாக விஷ்ணுவையுண்டாக்கி ரட்சிக்கச்செய்கிறவரெவரோ எக்காலமும் தாமதகுணத்தினிடமாக அரனை உண்டாக்கி உயிர்களைச்சங்கரிக்கச் செய்கின்றவரெவரோ அவரே எக்காலமும் எங்களைத் தம்முடைய திருவடிநீழலில்வைத்து ரட்சிப்பார்-எ-று

வேறு.

ஆரணந் தனக்குமுன்னை யாரணமாகி மன்னும்
காரணங் களுக்குமுன்னைக் காரணமாகித் தோன்றும்
பூரண வொளிகட்கெல்லாம் பூரண வொளியாய்நின்று
நாரண னுணர்கிலாத நாதன்யா முணருநாதன்

(இ-ள்.) வேதங்களுக்கெல்லாம் முதல்வேதமாகியும்நிலைபெற்றகாரணங்களுக்கு முதற்காரணமாகியும்தரிசனப்படுகிறபூரண வொளிகளு

க்கெல்லாம் பூரண வொளியாயுமிருந்து விஷ்ணுவினாலும் அறியப்படா தநாதன் நாங்கள் தியானஞ்செய்யுநாதன்-எ-று. (சகூ)

வானமே முதலாம்பூத வகைதொறு முள்ளீடாகித்
தானருளுயிர்கட்கெல்லாஞ் சான்றுமா யவற்றினெல்லா
மானபற் றென்றுமின்றி யரியதன் விஞ்சையாலே
யூனமி லுலகமெல்லாந் தன்வயத் தொழுகநின்றும்

(இ-ள்) ஆகாயமுதலாகிய பஞ்சபூதங்கள்தோறும் அவைகளுக்கு ள்ளீடாகியும் தாம் அருளப்பட்ட உயிர்கட்கெல்லாம் சாட்சியாகியும் அ வைகளிலெல்லாமாகிய பற்றுக்களில் தமக்கொருபற்றுமில்லாமல் அரு மையாகிய தன்வல்லமையினால் கெடுதலில்லாத உலகமெல்லாம் தமது வசப்பட்டு நடக்கநின்றும்-எ-று பஞ்சபூதங்களுக்குத் தனித்தனியேஉ ள்ளீடாயிருப்பது என்னவெனில் பிரிதிவுஎன்றும்பூதத்தில்-சத்தம்பரி சம் ரூபம்-ரசம்-கந்தமாயும் அப்புவினிடத்தில்கந்த நீங்கலாக மற்ற நா ன்காகியும் தேயுவில்-ரசமுங்கந்தமும நீங்கலாகமற்றமூன்றாகியும்வாயுவி ல்-சத்தம்பரிசமாகியும்-ஆகாயத்தில்சத்தமாகியுமிருப்பது. (சஎ)

ஒருவனாய் முதல்வனாகி யுறுவரங் கொடுப்போனாகி
மருவுமுக் குணங்கணீத்து மனத்திடை நினைத்தற்கெண்ணாத்
திருவருளுடையவுண்மைத் திகழொளி யாயதெய்வங்
குருபர னருளின் யாங்கள் வழிபடக் குழைபுந்தேவே

(இ-ள்.) தனக்குமேலொரு கடவுளில்லாமல் தானொருவனே கட வுடளாகியும் எல்லாவற்றிற்குங் காரணனாகியும் அன்பர்களுக்கு மிகுந் தவரங்கொடுப்பவனாகியும் பொருந்திய முக்குணங்களையு நீக்கி மனதினி டத்தில் நினைத்தற்கரிய திருவருளையுடைய உண்மையாய்விளங்குகின்ற சோதியாயுமிருக்குந் தெய்வமே குருபரனருளினாலே நாங்க ளாராதனை செய்யத் திருவுளமிரங்குந் தெய்வம்-எ-று. (சஅ)

நினைவரும் பாதகங்க ளைந்தையு நீக்கியின்பக்
கனைகட றுளைப்பண்ணுங் கண்ணுதல்கருத்திலாது
தினையள வடியர்செய்த சிற்றியற் பூசையேனும்
பனையள வாகக்கொள்ளும் பரமனெம் பரமனாவான்

(இ-ள்.) நினைத்தற்கரிய பஞ்சமாபாதகங்களையும் அடியார்க்குநீங்கி ப்பேரின்பமாகிய கடலினிடத்துப் பொருந்தச்செய்யும் பரமசிவனும்உ ரித்தில்லாமல் தினையளவாக அடியார்கள் செய்வதுசிறிய இயல்பினையு டையபூசையேயாயினும்பனையளவாகக்கொள்ளும் பரமனுமானவனேஎ ங்களுக்குக் கடவுளானவர்-எ-று; கனை என்பது ஒலி சிற்றியற்பூசையா வது ஆகமவிதியின்றிச் செய்யும்பூசை. (சகூ)

கங்கையை முடியிற்சூட்டிக் கவுரியைப் பாகம்வைத்துப்
பொங்கர வங்கடம்மைப் புரிகுழை யணிந்துபாதச்
செங்கம லத்தைவேதச் சிரத்தினி திருத்தித்தேவ
ரங்கைகள் கூப்பநின்ற வவனெம்மை யளிக்குந்தேவே.

(இ-ள்) கங்கையைத் திருமுடியிலணிந்து பார்வதியை யிடப்பாகத்தில்வைத்து விளங்குகின்ற சர்ப்பங்களை விரும்புங்குண்டல மாகத்திருச்செவியில் தரித்துத்திருவடித்தாமரைகளை வேதமுடியில் வைத்துத் தேவர்களெல்லாரும் அழகியகைகளைக்குவித்துத்தொழவிருக்கும் தேவனே எங்களைரக்ஷிக்குந்தேவனும்-எ-று. (ருய)

அத்துவா வென்னுந்தூய வருமணித் தவிசினங்க
ணுத்தம மூர்த்தியாகி யுயர்குணங் கடந்துவைகு
நித்தனே யெமக்குநாத னீண்முடி வேந்தேயென்று
கொத்தலர் நறிய வடைந்தார்க் கோமக னுரைத்தலோடும்

(இ-ள்,) ஆறத்துவாக்களாகிய பரிசுத்தமுள்ள அழகிய ஆசனத்தினிடத்தில் உத்தமமூர்த்தியாகிய உயர்ந்தகுணங்களைக்கடந்து வீற்றிராநின்ற நித்தியனே எங்களுக்குக்கடவுள்நீடிய மகுடமுள்ள நாகராசனே யென்று கொத்தாகிய மலர்களால் தொடுக்கப்பட்ட வாசனைதங்கியமாலை யணிந்தராசகுமாரன் சொல்லவும்-எ-று, * ஆறத்து வாவாவனமந்திரம்பதம்வன்னம் புவனம் தத்துவம் கலை, (ருக)

சிறியனீ யாயுமென்முன் சிவனது தகுதியெல்லா
மறிவுற மொழிதலாலே யருங்களியெய்துகின்றே
வெறிகமழ்தொடையாய்நின்பால்விளம்புவதொன்றுண்டன்னப்
பொறிவரிப் பகுவாய்நாகர் புரவலன் புகலலுற்றான்,

(இ-ள்,) வாசனைகமழ்கின்ற பூமாலையணிந்த ராசகுமாரனேநீசிறியவனாயிருந்தும் பரமசிவனுடையபெருமைப்பாட்டினையெல்லாம் என்னிடத்திற்றெரியும்படி சொன்னமையால்மிகுந்த களிப்பினை யடைந்தேன ஆதலாலினிஉன்னிடத்தில்நான்சொல்லும்வார்த்தையொன்றுண்டென்று பொறிகளையும் வரிகளையும் பகுப்பாகிய வாய்களையுமுடைய நாகராசன்சொல்லுகிறான்-எ-று, (ருஉ)

இவ்வுல கனைத்துஞ் செய்ய வெரிமணி மயமதாகு
மவ்விய மகன்றநாக மகளிரு மரம்பையன்னார்
துவ்விடு புனல்கள்யாவுஞ் சுராறுணு மமுதமாகுந்
திவ்விய மொழில்க ளெல்லாஞ் செழுந்தரு வாகுமன்றே,

(இ-ள்) இந்தவுலகமெல்லாம் செவ்விதாகிய தீயையொத்த நிறமுள்ளமாணிக்கமயமாயிருக்கின்றது பொறாமையாகியகுற்றம் நீங்கியநாகமகளிரோவென்று லரம்பாஸ்திரிகளை யொத்தவர்கள் உண்ணுகின்றநீரெ

ல்லாம் தேவருண்ணும் அமிர்தமாயிருக்கின்றது திவ்வியமானசோலையெ ல்லாம் செழுமையுள்ள கற்பகச்சோலையாயிருக்கின்றது-எ-று. (ருக)

நரைதிரை மருவாவெய்ய நமன்றமர் கணுகல்செய்ய
ருரைதரு குரிசினீயிங் குறைகென வுரைத்தலோடுந்
தரைபுக ழெந்தையா வெனையன்றித்தனயரில்லான்
றிரைதரும் பவளவாயென் மனைவியுஞ் சிறியளென்றான்.

(இ-ள்,) மேன்மைபொருந்திய ராசகுமாரனே இங்கிருப்பவர்களை நரையுந்திரையும்பொருந்தா யமதூதர்களிவ்விடத்துக்கு வரார்கள் ஆதலால்நீயிவ்விடத்திலேதானே வாசமாயிருவென்றுசொன்னவுடன் ஐயர் பூலோகத்தாற்புகழப்பட்டஎன் பிதாவானவர் என்னையல்லது வேறேபு த்திரரில்லாதவர் கடலிலுண்டாகும் பவளம்போன்ற செவ்வாயையுடை ய என்மனைவியுஞ் சிறியளென்றுசொன்னான்-எ-று. (ருச)

அன்றியு மன்னேரம்பி கவிழயா றாற்றுளாழ்ந்து
பொன்றின னென்னவன்றே பொன்றுதல் பொருந்தினாரோ
கன்றியகாலஞ்செய்தகற்பனை யறிகிலேன்யான்
வென்றிவே லிறைவவெம்மூர் மேவுவன் விடுத்தியென்றான்,

(இ-ள்.) இதுவுமல்லாமல் ஆற்றில்தோணிகவிழநான அதில்அமி ழ்ந்துஇறந்தேனென்று அப்போதே அவர்களிறந்துபோனார்களோவெ வ்வியகாலஞ்செய்தகற்பனையின்னதென்றுநானறிகிலேன் ஆதலால்வெ ற்றிபொருந்திய வேலையுடைய நாகராசனே எங்களூர்க்குநான்போகிறே ன் உத்தரவு கொடுவென்று ராசகுமாரன் சொன்னான்-எ-று. (ருரு)

ஈதவனுரைத்தலோடு மெழுந்தபே ருவகைபொங்க
கோதறு குணத்துநாகக் குரிசிலு முழையர்க்கூவி
மேதகு கலன்களாடை முதலிய வெறுக்கைமற்றுங்
காதலிற் கொணதி சென்று காவருற் களித்துப்பின்னும்.

(இ-ள்.) அந்தராசகுமாரன் இந்தவார்த்தைசொன்னபோதுமனதி லுண்டாகிய மிகுந்தசந்தோஷம் பொங்கக்குற்ற மற்றகுணத்தையுடைய நாகராசன் ஏவலாளிகளையழைத்து மேன்மைபொருந்தியஆபரணங்கள் வஸ்திரங்கள் முதலாகியவைகளும் பொன்னும் மற்றுமுள்ளவைகளும் ஆசையுடன்கொண்டுவாருங்களென்றுஉத்தரவுசெய்து அவர்களால்கொ ண்டுவரப்பட்ட அப்பொருள்களையெல்லாம் அவ்வரசனுக்குக் கொடுத் துப்பின்னும்-எ-று. (ருசா)

திரைக்கட லேழுஞ்சூழ்ந்து சேண்முக டளக்குமேமி
வரைத்தலை தன்னையெல்லை மண்டலமிட்டுமீளு
முரைப்பரி தாயவேகத் தொருவயப் பரியுநல்கி
விரைக்கலி கலவைச்சாந்தும் வேண்டிய வெறுப்பநல்கா,

(இ-ள்) அலைகளையுடையஎழுகடலையும்ஒவ்வொன்றாகச்சூழ்ந்துவந்து அண்டமுகட்டையளக்காநின்ற சக்கிரவாளகிரியின் சிகரத்தினிடத்தை யும் அதிகவிரைவாகமண்டலமிட்டுவரும்படியான சொல்லுதற்கரியவே கத்தையுடைய பலமுள்ள ஒருகுதிரையுங்கொடுத்து வாசனைதங்கிய கூட்டுவர்க்கஞ்சேர்ந்த சந்தனக்குழம்பும் வெறுக்கும்படிகொடுத்து-எ-று.

அளித்தவைசுமப்பமற்றோ ரயிலெயிற்றரக்கன்றன்னை
விளித்துடன் விடுத்துப்பின்னும் வேறொருபுயங்கராசன்
களிப்புறு குமரன்றன்னைக் காக்கெனப் பணித்தலோடுந்
துளித்தலை முகிலனானுந் தொழுதனன் விரைவிற்போகி.

இ-ள். கொடுத்த இப்பொருளையெல்லாம் எடுத்துக்கொண்டு போவ தற்காக கூர்மையான பற்களையுடையஒருராக்ஷதனைஅழைத்து அவ்வர சனுடன் அனுப்பி மேலும் வேறொரு நாகராசனையழைத்துக்களிப்புப் பொருந்திய இந்திராசகுமாரனைப் பாதுகாத்துக்கொண்டு போவென்று உத்தரவுசெய்தான் அப்படிஉத்தரவுசெய்தவுடன் துளியாக முதற்பெய லைச்சொரியும் மேகத்தையொத்த ராசகுமாரனும்நாகராசனைவணக்கிவி டைபெற்றுக்கொண்டு விரைவுடன்சென்று-எ-று. (௫௯)

குறைபுன லதனுளாக குமரனு நிருதன்றானும்
புரையறு மனத்தராகிப் புரிவுகொண்டருகிற்போத
விரைபரி யுகைத்துநீருள் வெய்யவ னெழுதன்மானத்
தரைபுகழ் குருசிறோன்றி யமுனையங் கரையைச்சார்ந்தான்.

(இ-ள்.)ஒலிக்கும்நீரையுடையயமுனையாற்றினிடத்தில் நாககுமாரனு ம் அரக்கனும் குற்றமில்லாத மனத்தையுடையவர்களாய்ப் பாதுகாத்து க்கொண்டு தன்னருகில்வர விரைவுடன்செல்லுகின்ற குதிரையைச்செ லுத்திக்கொண்டு சமுத்திரத்தினிடத்துச் சூரியன் உதயமாவது போல உலகம்புகழ்கின்ற ராசகுமாரன் நீர்மேலெழுந்து அழகிய யமுனை ஆற் றங்கரையைச்சார்ந்தான்-எ-று. (௬௰)

பாதலந் தன்னின்வீழ்ந்து படருழ வாதுவந்த
தாதலர் நறியமாலைத் தராபதி குமரன்செய்கை
யோதின னிப்பாலன்னோ னுற்றதற் குற்றோருற்ற
தீதுறு துயரமெல்லாந் தெளிவுறச் செப்பலுற்றேன்.

(இ-ள்.) பாதாளத்தில்வீழ்ந்து துன்பம்அடையாமல்வந்தமகரந்தத்து டன் மலர்கின்ற வாசனைதங்கிய மாலையணிந்த ராசகுமாரன் செய்கை யைஇதுவரையிற்சொன்னேன் இனி அவன் ஆற்றில்வீழ்ந்ததற்காகஅ வனுடைய சுற்றத்தார்பொருந்திய கொடியதுயரங்களையெல்லாம் விவர மாகச்சொல்லுகிறேன்-எ-று. (௬௧)

நெளிதிரை யமுனையாற்றி னீர்விளை யாடல்செய்து
தளிதரு புயலினல்குஞ் சந்திராங் கதனுமன்னு
ளளிபெறு தோழன்மாரு மம்பியிற் கவிழ்ந்துநீரின்
விளிதரு தன்மையெல்லா மாதுலன் விரைவிற்கேட்டான்.

(இ-ள்.) நெளிகின்ற அலையையுடையயமுனையாற்றினீரில்விளையாடித்துளியைத்தருகின்ற மேகம்போலத் தானங்கொடுக்கத்தக்கசந்திராங்கதனும் அவனுடைய தயையைப்பொருந்திய தோழர்களும் தோணியுடன்கவிழ்ந்து நீரில் இறந்துபோனதன்மையெல்லாம் அவன்மாமனரான சித்திரவர்ம்மன் அப்போதே கேள்விப்பட்டான்-எ-று. (௬௧)

கேட்டலு மெழுந்தியாற்றின் கிளர்கரை குறுகிவந்து
வாட்டிறக் குரிசிலேயென் மருகவோ மருகவோவென்
நீட்டிய துயரமீக்கொண் டெடுத்தெடுத் தழைத்தல்கேளாக்
கோட்டமின் மனத்துமன்னன் குமரரு மயங்கிவீழ்ந்தார்.

(இ-ள்.) கேள்விப்பட்டமாத்திரத்தில் எழுந்து அந்தநதியின்கரையில்வந்துசேர்ந்துவாள்யுத்தஞ்செய்யத்தக்கவல்லமையையுடையராசனே என்மருமகனேஎன்மருமகனேயென்றுநேரிட்டதுயரம் அதிகமாககொண்டு எடுத்தெடுத் தழைத்தலைக்கேட்டு மாறுபாடுதலில்லாதமனதையுடையஅவ்வரசன்புத்திரர்களுமயங்கிச்சோர்ந்தார்கள்-எ-று. (௬௨)

மற்றவன் மனைவிமாரு மனக்குழைந் தழுதுநைந்தார்
செற்றமில் கமலையன்ன தெரிவைசீ மந்தனிக்குஞ்
சொற்றன ரவர்களுங்கேட்டுச் சுடுதொழி லுருமுவீழப்
புற்றர வழுங்குமாபோற் புரண்டனள்புலம்புகின்றாள்.

(இ-ள்.) அவனுடையமனைவியர்களுமனமுருகிஅழுதுமெலிந்தார்கள் குற்றமில்லாத திருமகளையொத்த சீமந்தனியென்னு மாதுக்குஞ்சொன்னார்கள்-அவள் அந்தச்சேதியைக்கேட்டுச் சுடுகின்ற செய்கையையுடைய இடிவிழுந்தால் புற்றிலிருக்கும் சர்ப்பங்கள் வருந்துவது போலப்புரண்டுபுரண்டு அழுகின்றாள்-எ-று. (௬௩)

(வேறு)

நீர்மலிந்த பண்ணை நிடதத்தாற் மன்னவனே
தார்மலிந்த மார்பா தமியே னுயிர்த்துணையே
சீர்மலிந்த சொல்வாணர் தீயகலிக் கொடைதெறுங்
கார்மலிந்த வண்கைக் களிறேகளிறேயோ.

(இ-ள்.) நீர்நிறைந்த வயல்களையுடையநிடதேசத்திலிருப்பவர்கள் அரசனே, பூமாலை நிறைந்தமார்பையுடையவனே தமியேனுகியஎன்னுயிர்த்துணையே? சீர்பொருந்தியபாவலர்களுடையகொடியவறுமையாகிய கொடையைக் கெடுக்கத்தக்க மேகம்போன்ற வளப்பந்தங்கியகையையுடைய மதகஜமே? மதகஜமே-எ-று. (௬௪)

புன்னைச் செழுங்காவிற் பூவணையில் யாமுயங்கு
முன்னைப் பெரும்போகம் வேண்டாய் முனிந்துதா
னென்னைப் பிரிந்தாய்நீ யென்றாலும் யானறியே
னுன்னைப் பிரிந்தாவி யுய்யேன்மற் றுய்யேனே?

(இ-ள்.) செழுமைதங்கியபுன்னைவனத்தில் மலர்மஞ்சமேல் நாமிருவருஞ்சேருகின்ற மிகுந்ததாகிய மும்போகத்தைவிரும்பாமல் வெறுத்துநீயென்னைப்பிரிந்துவிட்டாலும் நானுன்னைப்பிரிந்து தமியளாயுயிர்பிழைத்திரேன் பிழைத்திரேன்-எ-று. (௬௫)

என்றென் றரற்றி யிலங்கிழைதன் கைமலராற்
குன்றொன் றுகொங்கை குழையும்படி புடைத்து
நின்றொன் றுஞ் சொல்லா ணெருப்பிடைபுக் கியான்விழுந்து
பொன்றும் பொழுதன்றிப் போமே துயரென்றாள்.

(இ-ள்.) சீமந்தனியானவள் இவ்வாறு சொல்லிச்சொல்லியழுதுசெந்தாமரை மலர்போன்ற தன்கைகளால் மலையையொத்த தனங்கள்குழையும்படி அடித்துக்கொண்டு நின்று யாதொருபேச்சும் பேசாமல் நான்போய் நெருப்பினிடத்தில் விழுந்து இறந்தகாலத்திலல்லதுஇந்தத்துக்கந்தீராதென்றாள்-எ-று. (௬௬)

இங்கிவடா னிவ்வண்ண மையவிகல் வேந்தன்
பொங்குதுயர் மாதவராற் போக்கியுளந் தெளிந்து
திங்கடிரு வாண்முகத்துச் சீமந்தனியுறையு
மங்குமொருடு சென்னிமணிக் கோயில்வந் தடைந்தான்.

(இ-ள்.) சீமந்தனியானவள் இவ்வாறு துயரப்பட்டுக்கொண்டிருக்க பலமுள்ள ராஜனானவன் தனக்குண்டான துயரத்தை முனிவர்களால்நீங்கிமனந்தெளிந்து சந்திரனையொத்த அழகினையும்ஒளியினையும்பொருந்திய முகத்தினியுடைய சீமந்தனியிருக்கும்மேகத்தையளாவுகின்றசிகரத்தையுடைய ரத்தினங்கள்பதித்த மாளிகையிற்சேர்ந்தான்-எ-று. ()

தாதையக்கண் டுள்ளந் தளரா வடிவீழ்ந்த
மாதினைத்தன் கையார வாங்கி யெடுத்தணைத்துப்
பூதலத்து யாவர் வினையைப் புறங்கண்டார்
காதலித்து மாதே கவலா தொழிகென்றான்.

(இ-ள்.) வந்தபிதாவைக்கண்டு மனந்தளர்ந்து பாதத்தில்விழுந்தபுத்திரியைத் தன்கைகள்பொருந்தவாரியெடுத்தணைத்து மகளே பூலோகத்திலிருப்பவர்களில் வினையைக்கடந்தவர்கள் யாருமில்லை(ஆதலால்)கணவனிடத்தில்விருப்பம்வைத்துத் துயரப்படாதேயென்றான்-எ-று. (௬௮)

என்னு முரையு மிகந்து படருழந்து
தன்னு ளயர்ந்து தலைவன் றனையடைவான்

வன்னி புகுவதன்றி வாழே னெனவரற்று
மின்னி னுணுகிடையை வேந்தன் விலக்கினான்.

(இ-ள்) இவ்வாறு தன்தகப்பன்சொன்ன சொல்லையுந் தவிர்த்துத்தனக்குள் துன்பமடைந்து சோகங்கொண்டுகணவனிடத்திற்போய்ச் சேர அக்கினிப்பிரவேச மாவதேயல்லாமல் இனியுயிருடன்வாழேனென்றுசொல்லி அழுகிற மின்னலைப்போல நுண்ணிதான இடையையுடையவளாகிய தன்மகளை அக்கினிப்பிரவேசமாகவொட்டாமல்அவ்வரசன்விலக்கினான்-எ-று. (௬௯)

தந்தை விலக்கத் தளிரியலாள் சாவொழிஇச்
சிந்தை நலியுந் துயரஞ் சிறிதகற்றிப்
புந்தி தெளியச் சிவனையே பூசைசெய்வே
னெந்தையறிவா யெனக்கயினி யாயினாள்.

(இ-ள்) தன்பிதாதடுத்ததினால் மாந்தளிர்போன்ற சாயலையுடையசீமந்தனியானவள் சாதலையொழிந்துமனம்வருந்தும்படியான துயரஞ்சிறிதுநீக்கிப் புந்திதெளிவடைந்ததினால் இனிப்பரமசிவனையே பூசைசெய்வேன் என்னையனே நீயறிவாயென்றுசொல்லி விதந்துவானாள்-எ-று ()

எண்ணார் தொழுவா ழிகலிந்திர சேனன்
றண்ணார் புனல்வீழ்ந்து தன்மதலை மாய்ந்ததுவும்
பெண்ணா ரணங்குகைமை பெற்றதுவுங் கேட்டரற்றிக்
கண்ணா ரவலப் புனலாற் கடல்செய்தான்.

(இ-ள்) பகைவரெல்லாம்வணங்கும்படி வாழ்கின்ற பலமுள்ள இந்திரசேனமகாராசன் தன்புத்திரன் குளிர்ச்சிபொருந்திய யமுனையாற்றில் விழுந்து இறந்ததுவும் மருமகள் கைம்பெண்ணானதுவுங்கேள்விப்பட்டுஅழுதுகண்களிலிருந்து பெருகாநின்றதுக்கநீரினால் சமுத்திரமொன்றுண்டாக்கினான்-எ-று. (௭௧)

சுற்றமு நற்றாயுந் துயர்க்கடலின் மூழ்கினார்
மற்று நிடதத்தா ரெல்லா மனங்கவன்று
கொற்றவனை யெங்கொளித்தா யென்றுட்குழைந்தழுதார்
பற்றலருங் கேட்டார் பழம்பகைதீர்ந்தோமென்றார்.

(இ-ள்) பந்துசனங்களாயுள்ளவர்களும்நல்ல தாயுந் துக்கசாகரத்தில்முழுகினார்கள்-இவர்களுமன்றிநிடததேசத்தாரெல்லாரும் மனக்கவலையுற்று எங்களரசனை யெங்கேயொளித்தாயோவென்றுமனங்குழைந்து அழுதார்கள் பகைவர் இந்தச்செய்தியைக்கேள்விப்பட்டுப் பழம்பகைதீர்ந்தோமென்றார்-எ-று. (௭௨)

காலமிஃதென்னக் கலிமாவுங் கைமாவும்
வேல்வில்லகு தானையுடன் மேவார் சமர்வேட்டுக்

கோலியம ராடிநளன் கோமகனைத் தேவியுடன்
ஞாலமெலா நொந்து நடுங்கச் சிறைவைத்தார்.

(இ-ள்.) அப்படிக்கேள்விப்பட்ட பகைவர்கள் இந்திரசேனனை வெல்லுதற்கு இதுதான்காலமென்றுகனைக்காநின்ற குதிரைகளுந் துதிக்கையையுடைய யானைகளும் வேலேந்தியபதாதிகளுடன்வரச் சென்றுயுத்தஞ்செய்தலைவிரும்பிச் சூழ்ந்துபோர்செய்துநளச்சக்கிரவர்த்தியினுடைய புத்திரனாகிய இந்திரசேனனை அவன்மனைவியுடன் கொண்டுபோய்த் தேசமெல்லாம் நொந்துநடுங்கும்படி சிறையில்வைத்தார்கள்-எ-று. ()

மல்கு நிதியும் வளநாடு மாநகருஞ்
செல்வ முழுதுஞ் செருநரோ கைக்கொண்டு
பல்பகல்வந் தாளுநாட் பாதலத்தை விட்டெழுந்த
வில்கெழுதோண் மைந்தன் வினையம் விளம்புவாம்.

(இ-ள்.) நிறைந்த நிதிகளையும் வளப்பப்பொருந்திய நாட்டினையுற பெருமைபொருந்தியநகரத்தையும் மற்றுமுள்ள செல்வமெல்லாவற்கையும் பகைவர்கள் கைக்கொண்டுவந்திருந்து பலநாள்ஆண்டுகொண்டிருக்குநாளில் பாதாளத்தைவிட்டுவந்த வில்பொருந்திய புஜத்தையுடையசுந்திராங்கதனுடைய செய்தியைச்சொல்லுகிறோம் -எ-று. (எச)

வேறு.

நன்னதிக் கரையின்வந்து நளன்றரு மிந்திரசேன
னின்னருண் மதலைவாமா வியல்புட னேறுமேல்வை
யன்னவன் மனைவியாயத் தவர்களோ டணுகித்தானும்
பொன்னிரு கரையுஞ்சிந்துங் பூம்புன லாடவந்தாள்.

(இ-ள்.) நளச்சக்கிரவர்த்திபெற்ற புத்திரனாகிய இந்திரசேனனுடையஇனிதாகிய அருள்பெற்றபுத்திரனானவன் நல்லயமுனையாற்றங்கரையில்வந்து தாவிச்செல்லுங்குதிரையின்மேல்இயல்புடனேறும்போது அவன்மனைவியாகிய சீமந்தனியானவள் தோழிக்கூட்டங்களுடன் சென்று இரண்டுகரையிலும் பொன்சிந்துகின்றயமுனையாற்றில் நீராட வந்தாள்-எ-

ஐயிரு காதஞ்சந்தத் தருங்கடி கமழச் செம்பொன்
மெய்யணி திகழநொய்ய வெண்டுகின் மருங்கிற்சாத்தித்
துய்யவ ரிருவர்காணத் துனைப்பரி யேறியாடு
மையறு குமரற்கண்டு மனமறு குற்றுநின்றாள்.

(இ-ள்.) நீராடவந்தவள் [illegible]தம் வரையில் கிடைப்ப தற்கரிய சந்தன வாசனை பரிமளிக்கவும் சரீரத்தி லணிந்திருக்கும் ஆபரணங்கள்பிரகாசிக்கவும் நுண்ணியதாகிய வெள்ளைவஸ்திரம் இடையிலணிந்து பரிசுத்தர்களான நாகராசனும் இராக்கதனுமாகிய இருவரும்பார்க்கு

படிவேகமாகச்செல்லத்தக்க குதிரையிமேலேறிக்கொண்டுவிளையாடுகின்ற குற்றம்நீங்கிய அந்தராசகுமாரனைக்கண்டு மனங்கலங்கினின்ருள்-எ-று

மங்கல மிழந்துமெய்யின் மணவணி துறந்துநின்ற
கொங்கலர் கோதைதன்னைக குமரனுங் குறுகிநோக்கித்
திங்கள்வா ணுதனீயார்கொ றிருமணம் புணர்ந்தாள்யாவ
னிந்நீ கைம்மையான காரணமென்கொ லென்ருன்.

(இ-ள்.) மங்கிலியசூத்திரமிழந்து அங்கத்திலணியும் மங்களயுத்துக்குரியஆபரணங்களையுமிழந்துநின்றசீமந்தனியைச்சந்திராங்கதன்சென்றுகண்டு உன்னைச்சிறப்புடன்விவாகஞ்செய்துகொண்டவன்யாவனை இப்போது நீகைம்பெண்ணாயிருக்குங் காரணமென்ன வென்ருன்-எ-று.* வாசனைத்திரவியம் கைம்பெண்ணானகாலத்தில் அணிவதில்லையாயினும் அளகத்துக்குள்ள இயல்பைக்குறித்துச் சொன்னதாகக்கொள்ளுதலொன்றுஅன்றியும் கொங்கலர்கொதை என்பது அன்மொழித்தொகையாதலால்பதம்பிரித்துப் பொருளுரைக்கவேண்டுவதின்று. (எஎ)

அவனவை வினவலோடு மரிவையு நாணிநிற்பக்
கவலுறு மவடன்ருேழி யொருமகள் கழறுகின்ரு
ளிவள் பிதாச் சித்திரவன்ம னிருநில முழுதுங் காக்குந்
தவலருங் கேள்விச்சந்திராங் கதனிவ டலைவனுமால்.

(இ-ள்.) இவ்வாறு அவன்வினவினமாத்திரத்தில்சீமந்தனிநாணத்துடன்நிற்பதினுல்கவலையடைந்திருக்கும்அவளுடைய தோழிமார்களிலொருத்தி சொல்லுகின்ருள்(ராசகுமாரனேகேள்) இவளுடையதகப்பன்சித்திரவன்மன் இவள்கணவனேவென்ருல் பெருமைபொருந்திய பூமிமுழுவதையுங்காக்கும் கெடுதலில்லாத நல்லகேள்வியையுடைய சந்திராங்கதனென்பவன்-எ-று. (எஅ)

கொடுவினை துரப்பமற்றக் கோமகன் ருனுமுன்னுட்
டொடுபுனல் யமுனையாற்றுட் டுஞ்சிடத் துயரமெய்தி
யுடுபதி யிழந்துமாழ்கு ரோணியி னெளியைநீத்து
வடுவகல் கற்பினங்கை மங்கலமிழந்து நின்ருள்.

(இ-ள்.) (இவள்கைம்பெண்ணானதற்குக்காரணமென்னவெனில்இவள்வாழ்ந்துகொண்டிருக்குநாளிலொருநாள்) கொடியவினையானது இழுத்துக்கொண்டு போகப்போய்ஆழ்ந்தபுனலையுடையயமுனையாற்றில்இவள்கணவனுகிய அந்தராசகுமாரன் இறந்துபோனதினுல்துயரம்அடைந்து சந்திரனையிழந்து விசனப்படுகின்ற ரோகணிநக்ஷத்திரம்போலவொளியிழந்து குற்றமில்லாத கற்பினையுடைய இந்தமாதானவள் மங்கலமிழந்திருக்கின்ருள்-எ-று. * அசுவினிமுதலாகச்சொல்லப்பட்ட இருபத்தேழுநக்ஷத்திரங்களும் சந்திரன்மனைவியர்களென்றும் அவர்களுக்குள் உ

ரோகணியினிடத்தில் சந்திரனுக்கு மிகுந்தப்பிரியமென்றுஞ் சொல்லப்படுவதினால் சந்திரனையிழந்தஉரோகணிபோலென்றார். (எ௯)

மங்கல மிழந்துசென்ற வருடமூன் றாகுமையா
திங்களங் கண்ணிவேய்ந்த சிவனது சோமவாரங்
கொங்கையங் கண்ணி நோற்பாள் குளிர்புனலாடல்வேண்டி
யிங்கெழி லாயமெல்லாஞ் சூழ்வரவெய்தினாளே.

(இ-ள்.) ராசனே மங்கிலியமிழந்து மூன்றுவருஷமாகின்றது அன்றுமுதல் இவள்சந்திராங்கிய அழகியமாலையணிந்தபரமசிவனுக்குரியசோமவாரவிரதம் அனுஷ்டிக்கின்றாள் அதன்பொருட்டுநீரில் ஸ்நானஞ்செய்யவிரும்பி அழகுள்ளதோழிமார்கூட்டஞ்சூழ்ந்துவர இவ்விடத்தில்வந்தாள்-எ-று. (அ0)

அன்றியு மிவடன்கேள்வ னரும்பெறற் றாதைதன்னைக்
கன்றிய தெவ்வர்பற்றிக கடுஞ்சிறை வைத்துநீதி
யொன்றிய நாட்டையெல்லா மொருங்குடன் புரவாநின்றார்
வென்றிவேற் குமரகேண்மோ வென்றவள் விளம்புங்காலை.

(இ-ள்.) இதுவுமல்லாமல் இவள்கணவனுடையதகப்பனைப்பகைகொண்டு சத்துருக்கள்பிடித்துக்கொண்டுபோய்க் கொடியசிறையில்வைத்து நீதிபொருந்திய நாட்டையெல்லாம் ஒருங்காகஅரசுசெய்கின்றார்கள் வெற்றிபொருந்திய வேலாயுதத்தையுடைய அரசனே கேளென்று அந்தத்தோழிசொன்னபோது-எ-று. (அக)

நாணொடு நின்றநங்கை நாணிகந் திருஞ் செம்பொற்
பூண்ணி மார்பனேநீ புதுமலர்ப் பகழிசேர்க்குந்
தூணியுஞ் சிலையுமில்லாற் தொடுகழன் மதனோவன்றிச்
சேணுயர் விசும்பிற்றேவ குமரனோ செப்புகென்றாள்-

(இ-ள்.) நாணத்துமனின்ற சீமந்தனியானவள் பின்புநாணம்விட்டுப்பிரகாசியாநின்ற செம்பொன்னாலாகிய ஆபரணங்களணிந்த மார்பையுடைய மன்னவனே நீபுதியமலர்க்கணைகள்வைக்கும் தூணியுங்கருப்புவில்லுமில்லாத வீரகண்டையணிந்த மன்மதனோ அல்லதுமிகவுமுயர்ந்த தேவலோகத்தில்வாசஞ்செய்யும்தேவகுமாரனோ சொல்லென்றாள்-எ-

என்றவன் கீட்டுமென்ற வின்னலே முதலவெல்லா
மொன்றறப் புகலக்கேட்டே யெனையுநீ யுணர்திகொல்லோ
கன்றிய மனத்தேனின்னைக் கனவிடைக் கண்டேன்போலு
நின்றநீ யாவனின்னை நிகழ்த்துதி கரவாதென்றாள்.

(இ-ள்.) அவளிவ்வாறுசொல்லிப் பின்னுஞ்சொல்லுகிறாள் எனக்குநேரிட்ட துன்பங்கள்முதலானவைகளையெல்லாம் ஒன்றும் வழுவாமற்

கேட்டாய் நீ என்னையறிவையோ வருந்திய மனதையுடைய நானுன்னைக்கனவில்கண்டேன் இங்குநின்ற நீயாவன் ஒளிக்காமலிப்பொழுதே சொல்லென்றாள்-எ-று. (அங)

மற்றவ னுரைத்தான் யானோர் மானிடனல்ல னெண்ணிற்
செற்றமில் குணத்துநங்காய் சித்திபெற்றுடையதேவ
னற்றமில் புவனமெங்கு மொல்லையி னடைந்துமீளக்
கற்றவ னுவனென்று காந்தளஞ் செங்கைபற்று.

(இ-ள்.) அவளிவ்வாறுவினவ சந்திராங்கதன்சொல்லுகிறான்குற்றமில்லாத குணத்தையுடையமாதநான்மனிதர்களுக்குள்ஒருவனல்லனஎண்ணில்லாத சித்திகள்பெற்ற தேவரிலொருவன் பழுதில்லாதஉலகங்களெங்கும் அதிவிரைவாகச்சென்றுவரக் கற்றவனென்றுசொல்லி அவளுடைய செங்காந்தள்மலர்போன்ற கையைப்பிடித்துக்கொண்டு-எ-று

அருகுற வழைப்பமாத ரையுற வெய்திப்பின்னும்
பருகுவார் போலநோக்கிப் பணைமுலை புளகங்கொள்ள
வெருவினர் நிற்பமன்னன் மின்னிடைச் செவியின் மெல்லென்
றொருமொழி யுறுதியாக வுவப்புட னுரைப்பதானான்.

(இ-ள்,) சமீபத்தில்வரும்படிஅழைக்க அதைக்கண்ட)தோழிமார்கள் சந்தேகமுற்றுப்பின்னும் அவ்வரசனை உண்ணுமவர்களைப்போலப்பார்த்துப் பருத்தனங்கள் புளகத்தையடைவதுமன்றிப் பயந்துநிற்கசந்திராங்கதன் சீமந்தனிகாதில் மெதுவாக ஒருவார்த்தை யுறுதியாகச்சந்தோஷத்துடன் சொல்லலானான். (அரு)

உன்னுறு துணைவன்வேறோ ருலகத்தி னுள்ளான்மாதே
யன்னவன் றனக்குயானு மாருயிர்த் தோழனந்த
மன்னனு மிரண்டுநாளின் வந்துன தவலநீக்கு
மின்னது புகல்வான்வந்தே னென்றன னெழிலின்மிக்கான்.

(இ-ள்) மாதே உன்கணவன் வேறோருலகத்தி லிருக்கிறான்அவனுக்குநான்உயிர்போன்ற சிநேகன் அந்தமன்னவனு மிரண்டுநாளையிலவந்துஉன்னுடைய துக்கத்தைநீக்குவான் இந்தச்சேதியுனக்குச்சொல்லநான் வந்தேனென்று அழகில்மிகுந்த சந்திராங்கதன் சொன்னான்-எ-று.

நெஞ்சினி னவலநீத்தி நெற்றியங் கண்ணனுணை
வஞ்சிறுண் ணிடையா யன்னோன வருவதேநிண்ணமாகுந்
தஞ்சமென் றிதனையார்க்குஞ் சாற்றலை யென்றுசாற்றிப்
பஞ்சின்மெல் லடியினாட்கு மீட்டிது பகரலுற்றான்.

(இ-ள்.) (சந்திராங்கதன்பின்னுஞ்சந்தேகநீங்கச்சொல்லுகிறான்)பூங்கொடிபோன்றதுண்ணிய இடையையுடையவளே உன்மனதி லிருக்கும்

துன்பத்தை நீங்கு நெற்றிக்கண்ணையுடைய பரமசிவனுணைப்படி அவ ன்வருவது நிச்சயமாய் நான்சொன்னவார்த்தையை எளிதாகக்கருதி யாருடனுஞ் சொல்லாதேயென்றுசொல்லிச் செம்பஞ்சினுமெல்லிய பாதத்தையுடைய சீமந்தனிக்கு மறுபடியுமிந்தவார்த்தை சொல்லு கின்றான்-எ-று, ௮எ

தெரிவைநின் கொழுநற்குற்ற திறனெலாந்தெரியச்சொன்னேன்
பரிவுறு மெனதுதாதை தாயர்தம் பயவுநீக்க
விரைவினி னெனதுதேயத் தேகுவனென்று வேகக்
குரகதந் தூண்டிவைவேற் குரிசிலுங் கடிதிற்போனான்,

இ-பு. மாதே உன் கணவனுக்குப்பொருந்திய செய்கையெல்லாம்உ னக்குத்தெரியும்படிச்சொன்னேன்-இனி-என்னிடத்தில்விருப்பம்வை த்திருக்கும் என்தாய்தந்தையருடைய வருத்தத்தை நீக்கவிரைவாகஎ ன்தேசத்துக்குச் செல்லுகிறேனென்றுசொல்லிக் கூர்மைதங்கியவே லாயுதத்தையுடைய சந்திராங்கதனனவன் வேகமாகச்செல்லத்தக்கது திரையை நடத்திக்கொண்டு துரிதமாகப்போனான்-எ-று, ௮அ

சேயொளிக் குரிசில்போய பின்னரத் திருவினல்லாண்
மாயமோ வன்றிநெஞ்சின் மயக்கமோ கனவுகொல்லோ
போயவ னுரைத்தவெல்லாம் பொய்கொலோமெய்கொலோவெ
ன்றுயவ ளழுதுதேம்பி யவலங்கொண் டினையசொன்னாள்,

இ-பு. செவ்விதான ஒளியையுடைய சித்திராங்கதன் போய்விட்ட பின்புதிருமகளினுஞ்சிறந்தஅழகுள்ள சீமந்தனியானவள்இப்போது போனஇந்தத்தேவகுமாரன் சொன்னதெல்லாம மாய்கையோ அல் லதுநம்முடைய மனதிலிருக்குமயக்கமோ அல்லது சொப்பனமோ பொய்யோ அல்லது மெய்யோவென்றுஅழுதுதேம்பித்துன்பங்கொ ண்டு இந்தவார்த்தைசொன்னாள்-எ-று. ௮௯

வேறு.

என்னுறு சிந்தனை யென்கண வன்பான்
மன்னுவ தல்லது மற்றொரு வன்மேற்
றுன்னுவ தன்று விளைந்தமை சொல்லி
னனவ னேயெனை யாளு நலத்தோன்,

இ-பு, பொருந்திய என்மனமானது என்கணவனிடத்திற் பொருந் துமேயல்லது மற்றொருவனிடத்திற் பொருந்துவதன்று-ஆதலாலிப் போது-நடந்ததை ஆலோசிக்குமிடத்தில்இங்குவந்துபோன மகாபுரு ஷன் எனையானத்தக்க தன்மையையுடைய என்கணவனேயாகும்-

யாக்கிய வர்க்கர்த மில்லுறை நல்லாள்
வாக்கிய நம்பி மழுப்படை வள்ள

லாக்கினை யாலவ னுக்கருள் பூசைப்
பாக்கியம வந்து பலித்தது கொல்லோ,

இ-பு, யாக்கியவர்க்கென்னு முனிவருடைய பத்தினியாகிய மயித்திரைசொல்லிய வார்த்தையைநம்பி மழுவாயுதமேந்தியபரமசிவனது ஆக்கினையாகிய சைவாகமவிதிப்படி அவனுக்குச்செய்த பூசைப்பாக்கியம் நமக்குவந்து பலித்ததுவோ-எ-று, கூக

அன்றியு முன்னமோ ரந்தண னெந்தைக்
குன்றிரு வோர்பதி னயிங்சால
மன்றல்செய் தோனுடன் வாழ்குவளென்ற
நன்றறி சொன்னெறி நண்ணியதேயே,

இ-பு, இதுவுமல்லாமல் முன்னமொருபிராமணன் உன்குமாரத்தி பதினயிரவருஷம் கணவனுடன்வாழ்வாளென்றுஎன்பிதாவுடன்சொன்ன நன்மையறிந்த சொல்லின் முறைமை பொருந்தியதோ-எ-று-

நிரந்தர நற்சொ னிமித்தமு முண்டா
நரந்தரு பூசை மகிழ்ந்தெமை வாழ்விக்
வரந்தரு பூசை மகிழ்ந்தெமை வாழ்வித்
தரந்தைகெடுப்பதை யாரறிகிற்பார்,

இ-பு, எப்போதும் நல்லவாக்கியங்களாகிய சகுனங்களுமுண்டாகின்றது மயிர்ச்சாந்தணிந்த வாசனைதங்கிய அளகத்தையுடையபார்வதி தேவியாரை யிடப்பாகத்திலுடைய பரமசிவன் அனுக்கிரகஞ்செய்யதக்கதாகிய நாம்செய்தபூசைக்கு மகிழ்ந்து நம்மைவாழ்வித்துத்துன்பங்கெடுப்பதை யாரறிகின்றவர்கள்-எ-று, கூங

பாவிய னேது பகுத்தறி வேனென்
னாவிய னனடை யும்மிவ னென்னைன்
றோவிய மாகுற லொத்தவள் வைகிக்
காவியி னேர்தரு கண்கள் கலுழ்ந்தாள்.

இ-பு. பாவியாகிய நான்என்னென்று பிரித்தறிவேன் என்னுயிர் போன்ற கணவன் எந்நாள் இங்குவந்துசேர்வானோவென்றுசித்திரம் அழுக்குறுவதையொத்தவள் தனித்திருந்து நீலோற்பலமலர்போன்றகண்களில் நீர்சோரும்படி அழுதுகொண்டிருந்தாள்-எ-று, கூச

இருந்து புலம்பு மிளங்கிளி தன்னை
வருந்தல் வருந்தன் மடக்கொடி யென்றே
பொருந்திய தோழியர் பூம்புனலாட்ட
அருந்ததி கோயி லடைந்தன ளிப்பால்,

இ-பு, இப்படி அழுகிற இளங்கிளிபோல்பவளைத் தாயே வருந்தாதேவருந்தாதேயென்று தேறுதல்சொல்லித்தோழிமார்ஸ்நாநஞ்செய்

விக்க அருந்ததியையொத்த கற்புள்ள சீமந்தினியென்பவள் சன்மாளி கையிற்போய்ச்சேர்ந்தாள் அதற்குமேல் நடந்ததென்னவெனில்-எ-று

போரணி மாமிசை போகியவேலோ
னீரணி சூழ்நிட தத்திரு நாட்டிற்
றோரண நீடிய தொன்னகர் முன்னர்க்
காரணி சோலை களிப்பொ டடைந்தான்.

இ-பு, போர்க்கோலமணிந்த குதிரையின்மேற்சென்றவேலையுடையராசகுமாரன் நீர்வளமிகுந்த அழகிய நிடதநாட்டில் தோரணங்கள் ஓங்கிய பழமையாகிய நகரத்துக்கு முன்னிருக்கும்மேகமண்டலமளாவிய சோலையினிடத்தில் களிப்புடன்சேர்ந்தான்-எ-று. ௬௬

சேண்வழி வந்திடு செல்ல லகற்றிப்
பூண்மலி கின்ற பொலந்திரு மார்ப
ஞண்மரு வுஞ்சிலை நாக குமாரன்
வாண்முக நோக்கியோர் மாற்ற முரைத்தான்

இ-பு, அதிதூரமாகிய வழியில்வந்தவருத்தத்தை நீக்கிக்கொண்டு ஆபரணங்கள்நிறைந்துள்ள பொன்னிறந்தங்கிய அழகியமார்பையுடைய அந்தராசகுமாரன் நாணிபூட்டத்தக்க வில்லையுடைய நாககுமாரனது ஒளிபொருந்திய முகத்தைப்பார்த்துஒருவார்த்தைசொல்லுகின்றான்

பாதவ மேவிய தும்பணி நாதன்
மேதரு மெய்வர நல்கிய தும்மிப்
பூதல முற்றது மின்று பொருந்தார்க்
கோதுதி பின்னரு மோதுவ துண்டால்,

இ-பு. யமுனையாற்றில் விழ்ந்த நான் பாதாளலோகத்தில் சென்றதையும் அங்கிருக்கும்நாகராசன் எனக்குவரங்கொடுத்ததையும்அந்த வரம்பெற்றுக்கொண்டு பூலோகத்தில் வந்ததையும் இப்போதுநீபோய்நம்முடைய பகைவருக்குச்சொல்லு இதுவுமல்லாமல் இன்னமுஞ்சொல்வதுண்டு அதென்னவெனில்-எ-று ௬௮

எண்ணுறு தாதை யிருஞ்சிறை யோடெங்
கண்ணக னாடிது காலம் விடாரேன்
மண்ணுல காளு மதிப்பை யொழித்தே
விண்ணுலகாள விடுக்குவ னென்பாய்

இ-பு. யாவரு மதிக்கத்தக்க என்பிதாவின் சிறையையும் எங்களுடையஇடமகன்ற தேசத்தையும் இப்போது விடாராகில் மண்ணுலகத்தையாளும்படி அவர்க்குள்ள எண்ணத்தையொழித்து விண்ணுலகத்தையாளும்படி அனுப்புவேனென்றுஞ்சொல்லு-எ-று ௬௯

என்றவ னேவ லினையந்தன னேகிக்
குன்றென நீடிய கோபுர மூதூர்ச்
சென்று புகுந்தடு சேரலர் தம்பாற்
கன்றிய நெஞ்சொடு கட்டுரை செய்வான்.

இ-பு. இவ்வண்ணஞ்சொல்லிய ராசகுமாரனேவலுக்கு நாககுமாரன் சம்மதித்தவனாகிச்சென்று மலைபோலுயர்ந்த கோபுரத்தையுடையபழமையாகிய நகரத்திற்சேர்ந்து கொல்லுகின்ற பகைமன்னரைக்கண்டுகோபங்கொண்ட மனதுடனே உறுதியானவார்த்தை சொல்லுகின்றான்-எ-று ௱

இந்திர சேன னெனும்புகழ் மன்னன்
மைந்த னடுந்திறல் வாகு வலத்தான்
றந்திர மேவிய தக்க கனல்க
அந்த மிலாத வரங்கொ டடைந்தான்

இ-பு இந்திரசேனனென்னும் பெயர்பெற்ற புகழுள்ள மன்னவனுடைய புத்திரனாகிய சத்துருக்களைப் போர்முகத்தில் கொல்லும்படியானபுசபலத்தையுடையவன் நாகப்படைகளையுடைய தக்ஷகனென்னும்நாகராசன்கொடுக்க அளவில்லாத வரங்கள்பெற்றுக்கொண்டு வந்திருக்கிறான்-எ-று ௱௧

ஆதலி னவனோ டமராடல்
பேதைமை யென்றறி வீர்பிழை செய்தீர்
தாதையும் விட்டுயர் தண்ணடை நீர்விட்
டேத முறுவகை யேகுமி னென்றான்

இ-பு ஆகையா லவனுடன் போர்செய்குதல் உங்களுக்கு அறிவில்லாமையென் றறியுங்கள் நீங்களோ மிகுந்தகுற்றஞ்செய்திருக்கிறீர்கள் ஆகிலுமிப்போது நீங்கள் க்ஷேமமடையவேண்டுமென்கிற எண்ணமிருந்தால் அவன்தகப்பன் சிறையைநீக்கி அவன்தேசத்தையும் விட்டுவிட்டுநீங்கள்போய்விடுங்களென்று சொன்னான்-எ-று. ௱௨

இத்திற நாக குமார னியம்ப
மத்தக யானை மறப்படை மன்னர்
அத்தகை வேந்த னருஞ்சிறை நீக்கித்
தத்த மரும்பதி போயினர் சார்ந்தார்

இ-ப இப்படியாக நாககுமாரன்சொல்ல மத்தகத்தையுடையயானைமுதலாகிய வீரத்தன்மையுள்ள நால்வகைப்படையோடுங்கூடிய அந்தமன்னவர்கள் மேன்மைபொருந்திய இந்திரசேனனைச்சிறைவிடுத்துத்தங்கள்தங்கள் நகரத்திற்போய்ச்சேர்ந்தார்கள்-எ-று-* வீரர்கள்போர்செய்திறந்தால்வீரசுவர்க்கம் அடையலாமென்னும்விருப்பங்கொண்டு

போர்செய்கின்றவர்கள் யானை அப்படிக்கொத்த விருப்பமின்றியுக்கஞ்
செய்வது ஆதலால்யானைப்படை சிறந்ததாகச் சொல்லப்பட்டது யா
னையுடையான் படைகாண்டல்முன்னினிதே என்பதினுமுணர்க
து இனியநாற்பதில், ௱௩

வேறு,

மேவலாளர்போயபின்னர் வேந்தன்மாமகன்வரா
வேவலாளர் கூறக்கேட்டு வின்பமுற்றமைச்சரைக்
கூவிபொல்லை யென்மகற் கொணர்மினீண்டென்றவர்
பூவர்சோலை யுட்புகுந்துபுண்ணியற்கொடுவந்தார்

இ-பு, பகைமன்னர்போய் விட்டபின்பு இந்திரசேனனென்னும் அ
ரசன் தன்மகன்வந்திருப்பதை யேவலாளர்சொல்லக்கேட்டுமனமகிழ்
ச்சியடைந்து மந்திரிகளை அழைத்து என்புத்திரனை விரைவினில் இவ்
விடத்துக்கு அழைத்துக்கொண்டு வாருங்களென்று சொல்ல அந்தமந்
திரிகள் மலர்களையுடைய சோலையினிடத்துக்குப்போய்ப் புண்ணிய
வானாகிய அந்தக்குமாரனை அழைத்துவந்தார்கள்-எ-று, ௱௪

வந்துதந்தைதாளின்வீழ்தன் மைந்தனைப்பொன்மார்புறத்
தந்தையும்பரிந்துதன் றடக்கையாலணைத்திடா
எந்தைதண் புனற்குள்வீழ்ந் திறந்தநீபிழைத்ததென்
முந்தையோர்கள் செய்தவ முடித்தநன்மையாலென்றான்

இ-பு, புத்திரன்வந்து தகப்பனாகிய இந்திரசேனன்பாதத்தில் வண
ங்கினவுடன் அவனையெடுத்துத் தன்மார்பிற்பொருந்த நீண்டகையி
னால் அணைத்துக்கொண்டு என்னையனே குளிர்ச்சியுள்ள ஆற்றில்விழு
ந்து இறந்தநீ பிழைத்தது என்பெரியோர்கள்செய்தவமாகிய தவஞ்செ
ய்துமுடித்த நன்மையாலென்றான்-எ-று- ௱௫

என்பதாய் நன்கினி தியம்பமைந்தனும்மெழுந்
தன்புகூரு மன்னைதன்னடி வணங்கவன்னையுந்
தன்பவாரிவிட்டகன்று சூழ்கரைக்கடந்ததோர்
இன்பவாரியூடுபுக்கெழாதுமூழ்கினளரோ

இ-பு, இவ்வண்ணஞ்சொல்லுவதாகிய நல்லவார்த்தைகளை பிரி
தாகத்தகப்பன்சொல்ல (அதன்பின்பு)புத்திரனானவன் எழுந்து அன்பு
மிகுந்தசந்தாயினுடைய பாதத்தைவணங்க அந்தத்தாயானவள் துக்க
சமுத்திரத்தைவிட்டுநீங்கிச்சூழ்ந்தகரைகடந்ததாகிய பெரிய இன்பச
முத்திரத்தில்புகுந்து எழாதவண்ணமுழுகினாள்-எ-று ௱௬

ஏனைநற்கிளை ஞரு மிரும்பதியுண் மாந்தரும்
போனவாவிபெற்றுடையர்போன்மகிழ்வுகூர்ந்தபின்

மானமன்னன் மைந்தவுற்ற வாறெலாங்கிளத்தெனத்
தேனெய்மாரி பெய்வதென்னச் செம்மல்யாவுஞ்செப்பவே,

இ-பு, இவர்களுமல்லாமல் மற்றைச்சுற்றத்தாரும் பெருமைபொருந்திய நகரத்துச்சனங்களும் தங்கள் உயிர்பெற்றவர்கள்போல் மகிழ்ச்சியடைந்தபின்பு பெருமைபெற்ற ராசனானவன் புத்திரனைப்பார்த்து மைந்தனே நீந்தியில்விழுந்தபின்புநடந்த சேதியெல்லாம் சொல்லென்றுவினவ தேனும்நெய்யுமாகக்கலந்து மழைபொழிவதுபோல நடந்தசேதியெல்லாம் ராசகுமாரன்சொல்லி-எ-று, ௱எ

தக்ககன்பரிந்தளித்த தாவில்பல்வளனெலா
மிக்கதாதைபாலளிப்ப வேந்தனுண் மகிழ்ந்துபின்
புக்கவாறு சித்திரவன்ம னுக்குரைத்திர்போதிரொன்
றக்கணத்தி னோலைதூதி னன்புடன்விடுக்கவே

இ-பு, தக்ஷகன்பரிவுடன் கொடுத்தகெடுதலில்லாத பொருள்களையெல்லாம் அன்புமிகுந்தபிதாவினிடத்தில் கொடுக்க அந்தராசன்பார்த்துமனமகிழ்ந்து அப்பொழுதேயோலையெழுதித்தூதர்கையில்கொடுத்து நீங்கள் சித்திரவன்மராசனிடத்திற்குப்போய் என்குமாரன்வந்தசேதியைச்சொல்லுங்களென்று அனுப்பினான்-எ-று ௱அ

ஆரியவருக்கநா டடைந்ததூதரோலையை
வேரியார்நறுந்தெரியல் வேந்தனுக் களித்தலுஞ்
சோரிவேலினானுமோலை சொற்பொருளுணர்ந்துடல்
பூரியாவிருந்துதன்னமைச்சுடன்புகறனன்

இ-பு, அப்படியனுப்பப்பட்ட தூதர்கள் ஆரியவருத்தசேசம்போய்ச்சேர்ந்து தங்களிடத்திலிருக்கு மோலையைத்தேனிறைந்த வாசனைதங்கிய மாலையணிந்த சித்திரவன்மனுக்குக்கொடுக்கவும் பகைவருடலுதிரந் தோய்வதற்கேதுவான வேலாயுதத்தையுடைய அவ்வரசன் தூதர்கொடுத்தவோலையி லெழுதியிருக்கும் சேதியைப் படித்துணர்ந்தமாத்திரத்தில் உடல்பூரிப்படைந்திருந்த தன்மந்திரியுடன் சொன்னான்-எ-று, ௱கூ

சொன்னவாய்மைகேட்டவன் றறக்கலேலினானென
மன்னர்மன்னன் வன்கழல் வழுத்திநிற்பமன்னனும்
அன்னவாறுதன்மகட்குரைப்பவந்தவன்னமுந்
தன்னையீன்றதாதைதாளின் வீழ்த்தாதை சாற்றுவான்

இ-பு, இவ்வாறு அரசன்வார்த்தையைக் கேட்டமந்திரியானவன்சுவர்க்கலோகத்தின்பம்பெற்றவன்போலமகிழ்ச்சியடைந்து ராசன்பாதத்தைவணங்கித் துதிசெய்திருப்பப்பின்னும் அவ்வரசன்ஒலைவந்தசேதியைத்தனமகளாகியசீமர்தனிக்குச்சொல்ல அன்னநடை போன்றந

டையையுடைய சீமந்தனியானவள் மகிழ்ச்சிகொண்டுதன்னைப் பெற்றபிதாவின்பாதத்தில் வணங்கிநிற்க அவ்வரசன்சொல்லுகிறான்-எ-று

கங்கைதங்கு செஞ்சடைக் கணிச்சிவானவற்குநீ
யங்கையாலருச்சனை புரிந்தடைந்த நன்மையான்
மங்கையுன்றன் மன்னனுய்ந்துவந்ததென்றுகூறிடாப்
பொங்குதீயவெந்துயர்ப்புணரிநின்றுமேறினான்

இ-பு, கங்கைபொருந்திய சடாமகுடத்தையுடையவராய் மழுவாயுதமேந்திய பரமசிவனுக்குநீயுன் அழகியகையினால் அருச்சனை செய்துவந்த நன்மையினாலே புத்திரியே உன்கணவன் பிழைத்துவந்ததென்றுசொல்லிப்பொங்குகின்ற தீயதாகியவெவ்விய துக்கசமுத்திரத்தினின்றுங்கரையேறினான்-எ-று, ௩௧௧

மாசுசூழ்குமாமணி கழீஇயவாறுபோலவே
பாசிழையைப்பைம்புனலி னாட்டிப்பாலினுவியந்
தூசுடுத்தியொண்மலர்ச் சுரிகுழல்கணைந்துபின்
பூசுசாந்தணிந்துசெய்ய பொற்கலன்கள்சேர்த்தினார்

இ-பு, அழுக்கடைந்த மாணிக்கத்தைக்கழுவியதுபோல்பசும்பொன்னினாற்செய்யப்பட்ட ஆபரணமணிந்துள்ளவளாகிய சீமந்தனிக்கு நல்லநீரினால் ஸ்நானஞ்செய்வித்துப் பாலின்புகைபோல அழகுள்ளவஸ்திரமணிந்தும் வாசனையுள்ள மலர்களைக்கூந்தலிலணிந்தும்பின்புசந்தனம்பூசிச்செவ்விதாகிய பொன்னாற்செய்யப்பட்டாபரணங்களுமணிந்தார்கள்-எ-று. ௩௧௨

கோலமைக்கண் மாதைவாவுகொய்யுளைப்பரித்திண்டேர்
மேலிருத்திச்சேடியர் நெருங்கவெண்சங்கார்ப்பெழப்
பாலிழைத்தவேலையிற் பரந்துசேனைசூழ்வரக்
காலியற்கலினமாவி வர்ந்துகாவலன்சென்றான்

இ-பு, இவ்வாறு அலங்காரஞ்செய்தபின் அழகியமையிட்ட நேத்திரத்தையுடைய சீமந்தனியை தாவிச்செல்லும் கத்தரித்தகழுத்துமயிரினையுடைய குதிரைகள்கட்டிய பலம்பொருந்திய தேர்மேற்றித் தோழிகள்சூழ்ந்திருக்கவும் தவளச்சங்கம் ஆரவாரிக்கவும் பானிறைந்தசமுத்திரம்போலச் சேனைகள்சூழ்ந்துவரவும் காற்றைப்போல அதிவேகமாகச்செல்லுகின்ற கடிவாளம்பூட்டியகுதிரையின்மேல் அவ்வரசன் ஏறிக்கொண்டுசென்றான்-எ-று, ௩௧௩

நீடுசெங்நெறிகடந்து நென்மலிநிடதமா
நாடுமேவியிந்திரசேன னன்னகர்ப்புறத்திரேர்
ஏடவிழ்ந்தபூம்பொழி லிருந்துதூதுபோக்கியே
யாடல்வேந்தனுக்குத்தா னடைந்தவாறறிவித்தான்,

இ-பு, அவ்வாறுசென்ற அரசன் நெடியதாகிய மார்க்கத்தைக்கடந்துநெற்கள்நிறைந்த பெருமைபொருந்திய நிடதநாட்டைச்சேர்ந்து இந்திரசேனனுடைய நகரின்புறத்திலிருக்கும்இதழ்கள்விரிந்தமலர்களையுடைய ஒருசோலையினிடத்திலிருந்து தூதனையனுப்பித்தான்வந்திருப்பதை யிந்திரசேனமகாராசனுக்குத்தெரிவித்தான்-எ-று. ஆடல்வேந்தன்வெற்றியுள்ளஅரசன் ௱௧௪

வெங்கலிகெடத்தராந்த வேந்தர்வேந்தனுமுணர்ந்
தங்குநின்றெழுந்துதன் னமைச்சரோடெதிர்கொளா
மங்குறங்கு கோயில்வாய்வருகெனக்கொண்டேகியே
பொங்குமோகை யோடவன் புதுவிருந்துநல்கினன்

இ-பு, கொடியபாவமானது கெடும்படிநீக்கிய மன்னர் மன்னவனாகியஇந்திரசேனன் சித்திரவன்மனென்னு மரசன்வந்திருப்பதைத்தூதர்களாலறிந்துகொண்டு தன்மந்திரிகளுடன் அவ்விடத்தி லிருந்துபுறப்பட்டு எதிர்கொண்டு மேகங்கள்பொருந்தும்படியாகிய உன்னதமுள்ள தன்அரண்மனைக்குவாவென்று அழைத்துக் கொண்டுபோய்அவ்விடத்தில் மிகுந்தசந்தோஷத்துடன் புதுமையானவிருந்து செய்வித்தான்-எ-று, ௱௧௫

சந்திராங்கதனும்வந்து தாழ்ந்துமாதுலனடிக்
கந்தநாண்மலர்வணங்கக் கையினாலெடுத்தணைத்
திந்தமாதினுவியோடு மெங்களாவியாவையும்
உய்ந்துவாழவென்றநீயு முய்ந்துவந்ததாமரோ

இ-பு, சித்திரவன்மனானவன் விருந்துண்டிருக்கும்போது சந்திராங்கதன்வந்து தன்மாமனாருடைய பாதத்ாமரை மலர்களை வணங்கினமாத்திரத்தில் மாமனாகியராசன்தன்னைவணங்கின மருமகனைக் கையினாலெடுத்தணைத்து மார்புடன்தழுவிக்கொண்டுஇந்தச் சீமந்தனியுயிரும்எங்களுயிரும் பிழைத்துவாழும்படியாக நீயும் பிழைத்துவந்தது எ-று. கந்தநாண்மலர்-என்பது-வாசனையுடன்-அன்றுமலர்ந்தமலர் ()

என்றுகூறியன்றுசந்தி ராங்கதற்கினைந்தநாட்
டுன்றுசோதிடத்தர்சொல்ல வோரையிற்சுருதிநூல்
ஒன்றுநீதியந்தண ருரைப்பவொள்ளழலின்முன்
மன்றனாறுகோதையை மறுமணம்புணர்த்தினன்

இ-பு. இவ்வாறுசொல்லிஅதன்பின்பு சந்திராங்கதனுக்குப்பொருந்திய நல்லநாளின்னநாளென்று அங்குவந்திருந்தசோதிடர்கள்சொல்லஅந்த லக்கினத்தில் வேதசாஸ்திரங்களுணர்ந்த நீதியாளர்களாகிய பிராமணர்கள் மந்திரங்கள்சொல்ல ஓமாக்கினியின்முன்சீமந்தனியை மறுமணஞ்செய்வித்தான்-எ-று, ஒள்ளழல்-என்பது ஒளியுள்ளதீ*மன்றல் நாறுகோதை என்பது-வாசனைகமழுங்கூந்தலையுடையவள், ()

மணஞ்செய்வித்தபின்னரன்பு மன்னுசித்திரவன்மன்வீ
றிணங்குநல்லமைச்சர்தா மிருபுறமுஞ்சூழ்வரக்
கணங்கொடானையோடுதேர் கடாவியேகியூர்புகுந்
தணங்கனார்நலத்தின்மூழ்கி யண்டர்கோனின்வைகினன்

இ-பு, மறுமணஞ்செய்வித்தபின்பு அன்புள்ளசித்திரவன் மனுனவ
ன்பெருமைபொருந்திய நல்லமந்திரிகள் இருபுறத்திலும் வரும்படிக்
கூட்டமாகிய சேனைகளுடன்புறப்பட்டுத்தேரைச் செலுத்திக்கொண்
டுபோய்த் தன்பதியிற்சேர்ந்து தெய்வமகளிரையொத்ததன்னுரியமா
தர்களுடன் இன்பம் அனுபவித்துக்கொண்டு தேவேந்திரன் போலி
ருந்தான்-எ-று ௩௧௮

வேறு,

பூமண்டலத்தைப்பொறுக்கும் புயங்கேசனீந்த
தாமங்கலன்பூணிறை சந்தனமயாவுநல்கிச்
சீமந்தனியைத் திருமேவருஞ் செம்பொன்மார்பன்
றாமங்கமழுஞ்செழுஞ் சேக்கையிற்றோயுநாளின்

இ-பு, இந்தப்பூமியைத்தாங்கும் படியானநாகராசன் கொடுத்தமா
லைவஸ்திரம் ஆபரணம்நிறைந்த சந்தனம்என்னுமிவைகளைக்கொடுத்
துத் திருமகள்மேவிய மார்பனாகிய சந்திராங்கதன்வாசனைப்புகையரி
மளித்துக்கொண்டிருக்குஞ் செழுமையுள்ள மலர்ச்சயனத்தில் சீமந்
தனியுடன் கூடிக்குலாவிவாழுநாளில்-எ-று ௩௰௯

நெய்வண்ண வேற்கைநிகராருமிலைநனைந்துக்
கொய்வண்ண மாலைக்கெழும் பொன்முடிசூட்டிமன்னன்
பொய்வண்ண மாயவுடலான்வரு போகநீக்கி
மெய்வண்ண மேவத் துறவின்றலைமேவினனே

இ-பு, பகைவருடலுதிரந்தோயும்படியான அழகியவேலேந்துங்கை
யையுடையவனாகியஒருவருமொப்பில்லாத ரிஷபம்போன்றநடையை
யுடைய தன்புத்திரனுக்குப்பொன்மகுடந்தரித்து அவன்பிதாவானவ
ன்பொய்த்தன்மையுள்ள மாயாசம்பந்தப்பட்ட உடலினால் வரத்தக்க
போகங்களை வெறுத்துநீக்கி உண்மைப்பொருளாகிய மோக்ஷமடை
யத்துறவினிடத்திற்சேர்ந்தான்-எ-று-கொய்வண்ணமாலைதிருந்திய அ
ழகுள்ள மாலையணிந்தமுடி கொழும்பொன்- செழுமையுள்ளபொன்

தன்றாதைபோய்நற் றவஞ்செய்திடத்தாமவேலோன்
பொன்றாழ்குடைக்கீ ழுகன்ஞாலம்புரக்குமெல்லை
நன்றாயுமைந்தரிரு நால்வரையீன்றுநற்பொற்
குன்றார்முலைமங்கையோர் கொம்பினையும்பயந்தாள்

இ-பு, இப்படியாகத்தன்பிதா வனத்திற்போய்நல்ல தவஞ்செய்து
கொண்டிருக்கவெற்றிமாலையணிந்தவேலையுடையசந்திராங்கதன் அழ

குதங்கியகுடை யின்கீழிருந்து அகன்றபூமியைக்காக்குநாளில்கன்னெறியையுணரத்தக்க எட்டுப்புத்திரர்களைப்பெற்றுப்பின்னும்நல்லபொன்மலையொத்த தனத்தையுடைய பூங்கொம்புபோன்றவொருபுத்திரியையும்பெற்றான்-எ-று. ௱உக

மாவண்கைமன்னன் மகட்பேற்றின்மனங்களித்துப்
பாவந்தவிர்ந்துபதினாயிர மாண்டுபாரிற்
றாவின்றிபின்பநுகர்ந் தான்றனிஞானவாழ்வு
மேவுந்தவத்தீரெனச்சூதன் விளம்பினானே

இ-பு, ஒப்பற்ற ஞானவாழ்வினையுடைய தவத்தர்களாகியநைமிசாரணிய முனிவர்களே மிகுந்தவளப்பந்தங்கிய கையையுடையசந்திராங்கதன்புத்திரர்கள்பிறந்துநன்மார்க்கத்தில் நடக்கத்தக்கவர்களாயிருப்பதினால் மனமகிழ்ச்சியடைந்து(நீதியுடன்செங்கோல்செலுத்தி) பாவஞ்சேராதவண்ணம் நீக்கி யிவ்வுலகத்தில் பதினாயிரம்வருஷம்குறைவில்லாமல் இன்பம் அநுபவித்துக்கொண் டிருந்தானென்றுசூதமுனிவர்சொன்னார்-எ-று, ௱உஉ

எட்டாவது-சோமவாரவிரதபூசை-அத்தியாயமுற்றியது,
ஆ திருவிருத்தம்-௫௨௩.



உ
சிவமயம்,

ஒன்பதாவது,
# சோமவாரத்திற்சீமந்தனி
# பாவவினைபெற்ற
அத்தியாயம்,

பின்னுமாதவர்விழைவுறப் பெருந்தவவியாதன்
அன்னசூதமாமுனிவர னரனருளடியா
மன்னுசெய்கையுஞ் சோமவாரத்தின்மான்மியமும்
இன்னுமோதுவதுண்டவைகோணமினென்றிதைசான்

இ-பு, நைமிசாரணிய முனிவர்கள் பின்னு[illegible] அடையும்படிபெரியதவத்தையுடைய வியாசரையெ[illegible]முனிவர்பரமசிவனருள்பெற்றஅடியார்களுடைய நிலைபெற்ற[illegible] சோமவார

விரதமகிமையும் இன்னமூஞ் சொல்லத்தக்கதுண்டு அவைகளைக்கே ளுங்களென்று சொன்னார்-எ-று, ௧

பொங்குவெள்ளிமீன் புதையினுஞ்சகட்டினைப்போழ்ந்து
பங்குவேறினும் படிமழைப் பருவம்பொய்த்தாலுந்
திங்கண்மூம்மழைத் திறம்பிலவாய்வளஞ்சுரக்கும்
மங்குறோய்பொழில் வைதர்ப்ப நாட்டில்வாழ்மறையோர்

வேறு,

இ-பு, விளங்குகின்ற சுக்கிரனென்னுங்கிரகமானது மூடத்தில் வி ழுந்தாலும் உரோகணிநக்ஷத்திரத்தைப்பேதித்துக் கொண்டுசனிக்கி ரகம்வக்கிரித்துச்சென்றாலும் நியதியாகப்பொருந்தியமழைகாலந்தப் பினாலும் மாதந்தோறுமூம்மாரி மாறுபடாமல்வளப்பம்உண்டாகும் படியான மேகமண்டலவளாயிற் பொருந்தியசோலைசூழ்ந்தவைதர்ப் பநாட்டில் வாழ்கின்றபிராமணர்கள்-எ-று, ௨

இனியநண்பொடுவேதமித் திரன்றவத்தின்ற
புனிதநான்மறைபுகல்சுமே தாவுநற்புகழோன்
றுனியிலாமதியாலுயர் சார்ச்சுதன்றோன்றல்
தனிமெய்ஞ்ஞானநூற் சாமவானெனுந்தகவோனும்

இ-பு, வேதமித்திரனென்பவன் அன்புடன்செய்ததவத்தினாற்பெற் ற புனிதமாகிய நான்குவேதங்களையும் ஓதியுணர்ந்தசுமேதா என்பவ னும் நல்லபுகழையுடையவனாய் துன்பமடையாத புத்தியினாலுயர்ந்த சார்ச்சுத னென்பவனுடைய புத்திரனாகிய ஒப்பற்ற மெய்ஞ்ஞானநூ லோதியுணர்ந்த மேன்மையுள்ள சாமவானென்பவனும்-எ-று ௩

அரியநான்மறைமுதலிய வங்கங்களாறுந்
தெரிவரும்பொருட்புராணமு மாகமத்தெளிவும்
விரியுமற்றுளகலைகளுங் குரவனால்விளங்கிக்
கரியகாமனுஞ் சாமனுமெனக்கவினமைந்தார்

இ-பு, அருமையாகியநாலுவேதங்களும் ஆறங்கங்களும் தெரிதற் கரியபொருளமைந்த பதினெண்புராணங்களும் ஆகமங்களிற்சொல் லுகின்ற நிச்சயப்பொருளும் பரந்திராநின்ற மற்றுமுள்ளகலைகளும் ஆசாரியரால் கற்றுணர்ந்து மன்மதனும் அவன்தம்பியாகியசாமனும் போல் அழகமைந்தார்கள்-எ-று, ௪

மைந்தர்கல்வியுமிளமையு மனக்கொடுமகிழ்ந்த
அந்தணாளர்த மரும்பெறற்புதல்வரைநோக்கிச்
சிந்தையோகையாற்சிறுவர்நீர் புவிக்கெலாமணியாம்
இந்தமாநிலவைதர்ப்பவேந்தன்மாட்டெய்தி

இ-பு, தங்கள்புத்திரர்களுடைய வாலிபத்தையும் அவர்களந்தச்சிறுவயதில் கற்றுணர்ந்த கல்வியின்திறத்தையும் மனங்கொண்டு மகிழ்ச்சியடைந்து பிராமணரிருவர்களும் பெறுதற்கரியதங்கள் புத்திரர்களைப்பார்த்து உள்ளத்திலுண்டான சந்தோஷத்தினால் சிறுவர்களே நீங்கள் இவ்வுலகத்துக்கு ஆபரணம்போல் விளங்குகின்றபெரிய இடத்தையுடைய இந்தவைதர்ப்பநாட்டு அரசனிடத்திற்சென்று-எ-று. ௬

கற்றகல்வியாற்காவலன் சிந்தையைக்கனிவித்
துற்றமாநிதிப் பரிசிலாங்குவைகையினேற்றுப்
பெற்றசெம்பொருற்கன்னியர் கடிமணம்பேணி
முற்றுமில்லறம்புரிவதே மேற்கொண்டுமுயல்வீர்

இ-பு, நீங்கள்கற்றகல்வியால் அரசன்மனங்கனியச்செய்து அவன்பரிசிலாகக்கொடுக்கும் மிகுந்ததிரவியத்தைச் சந்தோஷத்துடன்வாங்கிக்கொண்டுவந்து நீங்கள்பெற்றுக்கொண்ட அந்தத்திரவியத்தினால் கன்னிகைகளைவிவாகஞ்செய்துகொண்டு குறைவில்லாதஇல்லறம் நடத்துவதை மேற்கொண்டு நன்மைவரத்தக் முயற்சியைச் செய்யுங்கள்

என்றுகூறலுமிருவரு மிசைந்தனரேகிக்
குன்றுபோலுயர்கோயிலிற் கொற்றவற்குறுகி
நின்றுதங்குலவிஞ்சைக ணிகழ்த்தலுநிருபன்
நன்றுநன்றுநீர்வேட்டவை பெறுகெனநவின்றான்

இ-பு. இவ்வாறு அவ்விருவர்பிதாக்களுஞ்சொல்ல அதற்குச்சம்மதித்துச்சென்று மலைபோலுயர்ந்த அவ்வரசன் மாளிகையிற்சேர்ந்துகண்டு தாங்கள்கற்றிருக்குங்கல்விகளைப்பிரசங்கித்தார்கள் - அரசன் அதைக்கேட்டு உங்களபிரசங்கமுங்கல்வியும் மிகவும்நன்றாயிருக்கின்றது ஆகையால் உங்களுக்கு வேண்டியபொருள்களைப் பெற்றுக்கொள்ளுங்களென்றான்-எ-று ஏ

மாலைவண்குடைமன்னவர் மன்னமற்றிதுகேள்
சேலைவென்றகட்டிருந்திழையார்மணமுடிப்பான்
ஏலவந்தனமிருநிதிதந்தருளென்னக்
கோலவெள்ளெயிறிலங்கிடநகைத்திதுகூறும்

இ-பு. முத்துச்சரங்களால் அலங்கரித்திருக்கும் வெள்ளைக்குடையையுடைய மன்னவர்மன்னவனே நாங்கள்சொல்லுவதைக்கேள்கயல்மீனைவென்ற அழகுள்ளபார்வையுடையகன்னியரைவிவாகஞ்செய்துகொள்ளமனதிலுத்தேசித்து உன்னிடத்துக்குவந்தோம் அதற்குத்தகுதியாகமிகுந்ததிரவியங்களெங்களுக்குக் கொடுவென்றுசொன்னார்கள் அதைக்கேட்டஅரசன் அழகியவெண்மைநிறமுள்ளபற்கள் விளங்கும்படிநகைத்து இந்தவார்த்தைசொல்லுகின்றான்-எ-று. அ

யண்டுதிம்புனனிடதத்தர் கோமகன்மனையாள்
கொண்டகற்புடைக்கோதை சீமந்தனிக்கொப்பர்
துண்டவெண்பிறை வேணியானசோமவாரத்தில்
அண்டருங்கண்டுவியப்புற வருச்சனைபுரிந்தே,

இ-பு, மதுரமுள்ள நீர்வளம்நிறைந்த நிடததேசத்தரசன் மனைவி யாகிய சீமந்தனியென்பவள் இளந்திங்களணிந்த சடையையுடைய பரமசிவனைச் சோமவாரதினத்தில் தேவர்களுங்கண்டு ஆச்சரியப்படும்படி அருச்சனைசெய்து-எ-று, * கொண்டகற்புடைக்கோதைசீமந்தனிக்கொம்பர்-எ-து, கற்புநிலைதங்கிய பூமாலையணிந்த பூங்கொம்பினை யொத்த சீமந்தனி யெனப்பொருள்கொள்க, ௯

அந்தவேளையினனமறை முனிவரையடங்கச்
சந்தமென்முலைதையலா ரொடுவரச்சாற்றி
விந்துசேகரனுமையென வவர்களையெண்ணிப்
புந்தியான்மகிழ்ந்தருச்சனை வழிபடல்புரியா.

இ-பு. அந்தசோமவாரகாலத்தில் பிராமணர்களையெல்லாம் அவரவர்பத்தினிமாருடன்வரும்படி சொல்லியனுப்பிவந்தவர்களைப்பார்வதிபரமேசுவரர்களாக மனதில்பாவித்து மகிழ்ந்து அருச்சனைசெய்து-எ-று, * சந்தமென்முலைத்தையலாருடன்-எ-து-சந்தனக்குழம்பணிந்த மிருதுவாகிய தனங்களுள்ள மாதர்களுடன் எனப்பொருள்கொள்க- சந்தம்-என்பது-அழகுளதைக்கூறினுமமையும், ௰

வேண்டுநன்கலன்வெறுக்கைகள் மிகவவர்க்களித்தும
ஆண்டுநீவிர்களிருவரி லொருவனுடைகையாய்ப்
பூண்டகோலத்தின்மனைவியா யொருவனைப்புனைந்து
காண்டகுஞ்சிறப்பிறைமகள் பாற்சென்றுகடிதின்

இ-பு. அவர்கள்வேண்டிய நல்ல ஆபரணங்களும் திரவியமும் மிகுதியாகக்கொடுக்கிறாள் ஆகலால் நீங்களிருவரி லொருவன் ஆண்மகனையாகி ஒருவனைப்பூண்டகோலத்தையுடைய அவன்மனைவியாக அலங்கரித்து ராசகுமாரத்தியாகிய சீமந்தனியிடத்தில் விரைவிற்போய் எ-று * காண்டகுஞ்சிறப்பிறைமகள் என்பதற்குயாவருமதிக்கத்தக்க சிறப்பினையுடைய அரசன்மகளாகிய சீமந்தனியெனப் பொருளுணர்த்துக்கொள்க ௰௧

கைதவத்தினாலவடரும் வெறுக்கைகள்கவர்ந்து
மைதழைத்தகண்மடவியர் கடிமணமருவி
யுய்திறென்னுமைமறுத்திரேற் றண்டமுனடென்றுங்
கொய்துணர்த்தொடை வேந்துரைத்தலுமுளங்குலைந்தார்

இ-பு, இப்படிக்கொத்த வஞ்சகத்தினால் அவள்கொடுக்கிற திரவியத்தை அபகரித்துக்கொண்டுபோய்க்கன்னியர்களை விவாகஞ்செய்து

கொண்டுவாருங்கள்-என்சொல்லைத் தப்பிர்களானால் உங்களுக்குத்
தண்டனைகிடைக்குமென்று அறசன்சொல்லவும் அவர்கள்மனம்வருந்
தினார்கள்-எ-று, ❋ மைதழைத்த கண்டமடவியர் என்பதற்குமைபொ
ருந்தியகண்ணையுடைய கன்னியர் எனவும், கடிமணம் விளக்கமுள்ள
விவாகம்-எ-ம்-கொய்துணர்த்தொடைவேந்தன்-கொய்த பூங்கொத்து
க்களால் தொடுக்கப்பட்டமாலையணிந்தஅரசன்-எ-ம்-பொருள்கொள்க

வேறு.

அந்தோவந்தோ வெங்கடமக்கிகழகிற்றே
கொந்தார்மாலைக்கொற்றவ கோயில்குறுகுற்று
நந்தாநின்றவஞ்சனைவேட நணுகுற்றால்
எந்தாயெந்தை தங்குலமுதலோடிஅவாரோ,

இ-பு, இப்படி அந்தராசன்சொன்னதைக்கேட்ட பிராமணச்சிறுவ
ர்களவனைநோக்கி (ஐயையோ) வேதமுதலாகியசாஸ்திரங்களையெல்
லாங்கற்றிருக்கும் எங்களுக்கிந்தகாரியம் நன்மையுடையதோ அரச
னே உன்ஆசாரவாசலுக்குவந்த நாங்கள் வஞ்சனையான வேஷத்தை
ப்பொருந்தினால் எங்கள் மாதாபிதாபிதாக்கள் குலமுதலுடன் அழி
ந்துபோவார்களே-எ-று. கொந்தார்மாலைக் கொற்ற-கொத்தாகிய பூ
மாலையணிந்தஅரசனே எனப்பொருண்மைத்துக்கொள்க, ௰௩

இம்மைதனக்குமறுமை தனக்குமெழுமைதனக்கும்
வெம்மைசெய்கேடு நரகும்விளைக்கும்விறல்வேந்தே
செம்மையகற்றித்தாயெனி லின்றேசெய்வேமென்
றம்மறையோர்நின் றஞ்சியுறைப்பவடல்வேந்தன்,

இ-பு. இவ்வாறுசெய்யுஞ்செய்கையானது இம்மை மறுமையென்
னுமிரண்டினிலுமல்லாமல்எழுபிறப்பிலுந் துன்பஞ்செய்யும்படியா
னகெடுதியையும் நரகினையும் உண்டாக்கும்வெற்றியுள்ள அரசனே ந
ன்மார்க்கத்தைக் கற்பித்தாயானால்இப்பொழுதே செய்கிறோமென்று
அந்தப்பிராமணர்கள் எதிரில்நின்றுபயந்துசொல்ல (அதைக்கேட்ட)
வலியுள்ள அவ்வரசன்-எ-று, ௰௪

வெஞ்சினமூளக் கண்கள்சிவக்கவெடிசொல்லாற்
செஞ்சொலுரைக்குந் தேசிகர்தேவர்திறல்வேந்தர்
தஞ்சொலைவின்று லம்மொழிகேளாத்தகவில்லோர்
அஞ்சிநடுங்கத் தண்டமிழைப்பதறமென்னா

இ-பு, வெவ்வியகோபமூண்டு கண்கள்சிவக்கவெடித்த சொல்லா
ல்சொல்லுகிறான் நல்லவார்த்தையைச்சொல்லுங் குருதேவர்கள்வெ

ற்றியுள்ள அரசர்கள் என்னுமிவர்கள் ஏதாவதொருசொல்சொன்னால் அவர்கள் வார்த்தையைக்கேளாத தகுதியில்லாதவர்கள் பயந்துநடுங்கு ம்படி தண்டனைசெய்வது தருமமென்று-எ-று. ௰௫

என்னுரைகேளீ ராமெனினுங்களையிப்போதே
யன்னியகீழ்மைக் குலராய்வேதியராகாது
கொன்னுறுதண்டஞ் செய்குவனென்றென் றிறைகூற
முன்னுறநிற்கும் வேதியர்வெருவாமொழிகுற்றார்

இ-பு, இவ்வாறுசொன்ன அரசன் என்வார்த்தையை நீங்கள் கேளாவிட்டால் உங்களையிப்பொழுதே பிராமணரென்கிறயோக்கியதையில்லாமல் நான்குவருணத்துக்கும் அன்னியமான தாழ்ந்தசாதியாய்ப்போகத்தக்க கொடியதண்டனைசெய்விப்பேன் கொடியதண்டனைசெய்விப்பேனென்றுபின்னுஞ்சொல்ல எதிரிலிருக்கும்பிராமணர்கள்பயந்து சொல்லுகின்றார்கள்-எ-று, ௰௬

சீறலைமன்னா சீறலையுன்றன் றிருவுள்ளப்
பேறலதுண்டோ நின்குடைவாழப்பெற்றோர்க்குத்
தாறலைபூகத்தொடுகளி தேமாத்தலைசாய
ஆறலைமோது நிடதத்திருநாடணைவோமே

இ-பு, மன்னவனே கோபஞ்செய்யாதே கோபஞ்செய்யாதே உன் குடைநிழலில் வாழப்பெற்றவர்களுக்குஉன்திருவுள்ளப்பேறன்றிவேறொன்றுண்டோ(இல்லை ஆகலால்)குலைகள்அசைந்துகொண்டிருக்கும்படியானகமுகமரமும்பழங்களையுடையதேமாமரங்களும்தலைசாயும்வண்ணம்ஆறானது அலையினால் மோதத்தக்க நிடததேசத்துக்குப்போகிறோம்-எ-று, ௰௭

என்றவர்கூறச் சிந்தைவந்தேயிகல்வேந்தன்
ஒன்றியசாமவானமடமாதருருவாகப்
பொன்றணிபெண்மைக் கேயும்வனப்புப்புனைகென்னத்
துன்றியணைந்தார் கைபுனைவண்ணத்தொழில்வல்லோர்

இ-பு, இவ்வாறு அவர்கள்சொல்லும்சிறந்தவலியுள்ள அவ்வரசன் மனமகிழ்ந்து அலங்காரசெய்விக்கும் நல்லதொழில்வல்லவர்களை அழைப்பித்து இந்தச்சாமவானுக்கும் பெண்ணுருவாகும்படி அழகுமிகுந்தபெண்மைக்குப் பொருந்தின அலங்காரஞ் செய்யுங்களென்று சொல்ல அவ்வாறுசெய்ய வொத்துக்கொண்டுபோனார்கள்-எ-று,

மங்கையர்போலக் கொங்கைகள்கோரேவனைவித்துக்
குங்குமசந்தத்தேய்வைகள் கோட்டிக்குளிர்முத்தத்
தொங்கல்வனைந்திட் டினமளபெய்கசுருளோதி
பொங்கிருளணைச் சிகழிகையாகப்பொறப்பித்தார்

இ-பு, மாதர்களுக்கிருப்பதுபோலிருக்கும்படி வேறே தலைக்கள் நூதனமாக அதற்குத்தக்கஒருபொருளால்ஏற்படுத்திக் குங்குமப்பூமுதலிய வாசனைதிரவியஞ்சேர்ந்த சந்தனக்குழம்புபூசி ஒளிச்சிதங்கிய முத்துமாலைகள் அணிந்து பூமாலைசூட்டிய அளகபாரத்தைத் திருகுமானும்படி கொண்டையாக அலங்கரித்தார்கள்-எ-று, ௰௯

கோலவிழிக்குக்கருமை சிறக்குங்கோதீட்டி
யாலசைக்கப் பொற்குண்டல முக்காதணிசெய்து
பாலநுதற்குப்புண்டரமிட்டுப் படர்வேலை
ஞாலமும்விற்குந் தூசமைத்தார்நவையற்றார்

இ-பு, அழகுள்ள நேத்திரங்களுக்குக் கறுத்த மையைச் சிறக்குந் தூரியக்கோலாலெழுதி அசையும்படி இரண்டுகாதிலும் பொற்குண்டலங்கள் தரித்து நெற்றியினிடத்தில் திரிபுண்டரமாக விபூதியணிந்து பரங்கசமுத்திரஞ்சூழ்ந்த உலகத்தையெல்லாம் (விலைக்காக) விற்றுக் கொடுக்கத்தக்க மதிப்புள்ள வஸ்திரமுமணிந்தார்கள் அலங்காரஞ் செய்யுந்தொழிலில் குற்றமற்றவர்களாகியவண்ணமாதர்கள்-எ-றுபாலநுதல் மீமிசைப்பதம், ௨௰

வேறு,

இருடிகண் மயக்கத் தாருகாவனத்தி னெதிர்ந்தநாண் மாயனார்மாயம்
புரிதருபெண்மை மோகினிநயம் பொருவுறப்பொற் பலங்கரித்து, ந
ரபதிதனக்குக் காட்டலுமகிழ்ந்துநன் றெனவவன் விடைகொடுப்பத்,
தெரிவையரோடும் புகுந்தருமறையோர் குழாத்தொடு மிவர்களுஞ்
சென்றார்,

இ-பு, இருடிகள்மயங்கும்படி தாருகாவனத்தில் சென்றநாளில்விஷ்ணுவானவர் மாயத்தினலேற்படுத்திக்கொண்ட மோகினியென்னும் பெண்ணுருவையொப்பாக அழகுடனலங்கரித்து அரசனுக்குக்காட்டினவுடன் அவன்மகிழ்ந்து நன்றாகவிருக்கின்றதென்று சொல்லி உத்தரவுகொடுக்கப் பெற்றுக்கொண்டு சீமந்தனியிடத்துக்குத் தங்கள் தங்கள்பத்தினிகளுடன் செல்லுகின்ற பிராமணக்கூட்டத்துடன்போனார்கள்-எ-று, ௨௧

குடங்கையினடங்கா நெடுங்கணாளிருந்தகோயிலிற்குமரனுங்கோல
வடங்கருமுலையா ளாயுருவெடுத்தமைந்தனும் வருதலுமகிழா
நடந்தெதிர்சென்றாங் கருக்கியமுதலனவையறுபூசனைபுரிந்தாங்
கடைந்தமாதவரோடிருக்கெனவிவர்க்கு மகமகிழ்ந்தாசன மளித்தாள்

இ-பு, உள்ளங்கையினளவி லடங்காதநெடியகண்களையுடையசீமந்தனியிருக்குங்கோயிலில்சுமேதாவென்பவனும் அழகியமணிவடமணிந்ததனங்களையுடையபெண்ணுருவமைந்த சாமவானென்பவனும் செல்லுதலுஞ்சீமந்தனியவர்களைக்கண்டுமனமகிழ்ந்துஎதிர்கொண்டுபோய் அருக்கியமுதலானகுற்றமற்றபூசைசெய்து அவ்விடத்தில்வந்திருக்கும்

ம் பிராமணர்களுடன் மகிழ்ந் திருங்களென்று இவர்களுக்கும் ஆசனங் கொடுத்தாள்-எ-று. (உஉ)

சுழிபடுகங்கைச்சடிலவானவன்றன்சோமவாரத்தினிற்றெக்க,பழி
படுதீமை முனிந்தவேதியரைப் பன்னியரோடு பன்முறையால், வழிபடு
மமையத் திவர்முகநோக்கி மைந்தரிங்கிவரெனமதித்துப், பொழியருட்
கண்ணு ணகைமுகங்கோட்டிப் பொருக்கெனமறைத்திதுசெய்தாள்.

இ-ள். சுழிகள்பொருந்திய கங்கையையணிந்த சடாமகுடத்தையுடைய பரமசிவனுக்குரிய சோமவாரதினத்தில் தன்னிடத்தில் வந்திருக்கும் பிராமணர்களை அவரவர்கள் பத்தினிமாருடன் பலமுறையோடு பூசனைசெய்யுங்காலத்தில் இவர்கள் முகத்தைப்பார்த்து இவர்களிருவரும் ஆண்மக்களென்று தனக்குளறிந்துகொண்டு அருளைப்பொழிகின்ற கண்ணையுடையவள் வெறுப்பினால் பொலிவுள்ளமுகத்தைச் சற்றுவளைத்துக்கொண்டு பின்புவிரைவுடன் அதைமறைத்து இந்தக்காரியஞ்செய்தாள்-எ-று. * பழிபடுதீமைமுனிந்த வேதியரை என்பதற்கு பாவமுண்டாகும் தீமைகளைவெறுத்த வேதியரெனப் பொருள்கொள்க. (உங)

எத்திறத்தானு மடைந்தவரெல்லா மீசனுமுமையுமே யென்ன
அத்திரவிழியாள் வேதநூன்முறையு மாகமமுறையுமா யடுத்துப்
பத்திசெய்பூசை விதிமுறைபுரிந்து பால்பழந் தேன்கழைத்தீம்பால்
சித்திரக்கனக வள்ளத்திலேந்திச் சிற்றுண்டி யடிசிலோ டளித்தாள்.

இ-ள். எந்தவேடத்தினாலாவது சோமவாரதினத்தில் வந்தவர்களெல்லாரும் பரமசிவனும் பார்வதியுமேயென்று (தனக்குள்பாவித்து)பாணமொத்த கண்களையுடையவள் வேதமுறையையும் ஆகம முறைமையினையுந்தழுவிப் பத்திவிளையத்தக்க பூசையை விதிதவறாமல்செய்து பால்பழம் தேன் மதுரமுள்ள கருப்பஞ்சாறு என்னு மிவைகளைத் தனித்தனியாகச் சித்திரமமைந்த பொற்கிண்ணத்தி லேந்திச் சிற்றுண்டியைச்சாதத்துடன் கொடுத்தாள்-எ-று. (உச)

நறுமலர்மாலை சந்தனத்தேய்வை நவையறு மாடையாபரணம்
பிறையெனவொளிருங் கருப்புரநறிய பிளவுவெள்ளிலையிவையுதவி
மறையவர்தம்மை வரதனோடுமையை வழுத்துவபோலநின் றேத்தி
நெறியிடைப்படர்தி ரெனவருள்செய்தா ணிடததேசாதிபன்மனையாள்.

இ-ள். வாசனைதங்கிய பூமாலைசந்தனக்குழம்பு நல்லவஸ்திரம் ஆபரணம் பிறைபோல்விளங்கும் பச்சைக்கருப்பூரம் மணமுள்ள பாக்குப் பிளவுவெற்றிலையென்னு மிவைகளைக்கொடுத்துப் பிராமணர்களைப் பரமசிவனையும், பார்வதிதேவியாரையும், தோத்திரஞ்செய்தல்போல அவ

ர்களெதிரில்நின்று துதிசெய்து நீங்கள்மார்க்கத்திற்செல்லுங்களென்று உத்தரவுகொடுத்தருளினள் நிடததேசத்தரசன்மனைவி-எ-று. (உ௫)

அன்னவளுமையு மீசனுமென்ன வருச்சனைபுரிந்த பாவனையாற்
றன்னிகரிலாத சாமவானெடுத்த கோலம்போய்த் தனிரியருறுப்
முன்னைநாண்மைந்த னென்பதுமறந்து மொய்குழலாமெனமுயங்கத்
தன்னொடுநெறியிற்போதருஞ்சுமேதாத்தனைமுகநோக்கிநின்றுரைக்கும்

இ-ள். அத்தன்மையுள்ள சீமந்தனியானவள்பார்வதியும் பரமசிவனுமாகப் பாவனைசெய்து பூசித்தநன்மையினாலே கல்வியால் தனக்கொப்பில்லாத சாமவானென்பவன் தான்கொண்ட கோலம்போலவே பெண்ணுருவமைந்து முன்னம்தான் ஆண்மகனென்பதையுமறந்து மாதர்போலவேபுணரவிரும்பித் தன்னுடன்மார்க்கத்தில்வருகின்ற சுமேதாவென்பவன் முகத்தைப்பார்த்துச் சொல்லுகிறான்-எ-று. (உ௬)

துணைவநீபோத லொழிந்திந்தவனத்திற் றுணர்க்கொடிகுலாயமண்டபத்தென், பணைமுலையினது மணிப்புயத்தழுந்தப் பவளவாயிதழ்முறைபருகி, யணைகுதியலது மறுத்தியேலின்னே யாருயிர்முடிக்குவனன்றிக், கணைபுரைகண்ணார் விரும்பிடமறுத்தல் காளையர்க்கறனலகண்டாய்.

இ-ள். துணைவனே நீபோவதைவிட்டு இந்தவனத்தில் பூங்கொத்துக்களையுடைய கொடிகள் பிரகாசித்துக்கொண்டிருக்கும் மண்டபத்தில் என்னுடைய பருத்ததனங்கள் உன்னுடைய அழகியபுயங்களில் அழுந்தும்படி பவளம்போன்ற வாயதரத்தைமுறையாகப் பருகிப்புணர்ச்சிசெய் அல்லதுதடுப்பையேயானல் இப்பொழுதே நானிறந்துபோவேன் இதுவுமல்லாமல் பாணமொத்த கண்களையுடையமாதர்கள் விரும்பினல் சம்மதியால் தடுப்பது ஆடவர்க்குத்தருமமல்ல-எ-று. (உ௭)

என்றிவைமொழிந்து காமநோய்தலைக்கொண் டிரத்தலுமேகிடுஞ் சுமேதா, தன்றுணைத்தோழன் விநோதவாய்மையினாற் சாற்றியதிதுவெனவெண்ணி, யொன்றெடுத்துரையான் வழிச்செலக்கண்ட வுற்பலவிழியிணைமீட்டும், பொன்றிணிதோளா யெனையணைந்தன்றிப் போகலையெனச்சென்றுதடுத்தாள்.

இ-ள். இந்த மாதானவள் இவ்வாறுதொடர்ந்து காமநோயதிகரித்து இரந்துசொல்லுதலும் செல்லுகின்ற சுமேதாவானவன் அந்தவார்த்தையைக்கேட்டுத் தன்சினேகிதன் விநோதவார்த்தையினலேப்படிச் சொல்லுகிறானென்று நினைத்துப் பிரதியுத்தரவு வேறொன்றுஞ்சொல்லாமல் நடக்கக்கண்ட நீலோற்பலம்போன்ற கண்களையுடைய அந்த மாது மறுபடியும் அழகுநிறைந்ததோளனே யென்னை யணைந்தல்லது நீபோகக்கூடாதென்று சொல்லித்தடுத்தாள்-எ-று. (உ௮)

வளைப்புறுபெண்மை மருவியதறியா மறையவனெடுத்தவள்வதனங், தனைப்பிரியாத தோழனென்றெண்ணித் தருக்கொடுபொருக்கென நோக்கித், தினைத்துணையெனுமாண் வடிவின்றிச்செயற்கைசெய் வடிவமுங்கரந்து கனத்தடிபரந்த முலையிளங்கொடியாய் நிற்றலுங்கண்டதிசயித்தான்.

இ-ள். பெண்ணுருவமைந்த சாமவானிவ்வாறு தடுக்கவே, தன்றோழன் அழகுள்ளபெண்ணுருவமானதை அறியாதசுமேதாவென்னும்பிராமணன் இவன்நம்முடைய தோழனன்றோ இப்போ திவ்வண்ணஞ்சொல்லுகிறானே யிதென்னகாரணமென்று தன்மனதிலெண்ணித் தருக்குடன்விரைவாகச் சமீபத்திற்போ யவள்முகத்தைப்பார்த்துத் தினையளவும் ஆண்வடிவமென்பதில்லாமல் சோலஞ்செய்யும் அவயவங்களுமமைந்து கனமுள்ளதாயடிபரந்த தனங்களையுடைய இளங்கொடிபோன்ற பெண்ணுருவுக்குள்ள அடையாளத்துடனிருக்கவே அதனைப்பார்த்து அதிசயித்தான்-எ-று. (௨௬)

குங்குமமெழுதிக் கதிர்த்தடிபரந்த குலவிளங்கொங்கையோ மலர்சூழ், கங்குலிற்சிறந்து நெறித்துநெய்த்திருண்ட கருங்குழற்கற்றையோ கலைசேர் திங்களிற்பொலிந்த திருமுகத்தழகோ திங்களிற்கிடந்தசேலெனப் பங்கயமலருங் காவியுங்கடந்த படைநெடுந்துணைவிழிவடிவோ.

இ-ள். அப்படி அதிசயித்தவன் குங்குமப்பூக்குழம்பினால் ரேகைகளெழுதப்பட்டுப்பூரித்து அடிபரந்து மேலேகுவிந்திருக்கும் தனங்களின்அழகினையோ இருளைப்போலக் கருமைநிறஞ்சிறந்து நெறிப்பாகி நெய்த்துக்கறுத்த அளகபாரத்தின் அழகினையோ பதினாறுகலைகளும்நிறைந்துள்ள பூரணசந்திரன்போலப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் முகத்தினழகினையோ சந்திரனிடத்தி லிரண்டு சேற்கண்டையிருக்கின்றதென்று சொல்லும்படி (முகத்தினிடத்திருக்கும்) செந்தாமரை மலரையும் நீலோற்பலமலரையும்வென்ற வாட்படைபோல நெடியதாகிய இரண்டுகண்ணின் அழகினையோ-எ-று. (௨௭)

மாந்தளிரனைய மேனியின்வனப்போ வரிவளைமுன் கையிற்கவினோ, காந்தளஞ்செங்கை மெல்விரலணியோ கதிர்மணிமேகலையொளியோ, ஏந்தெழிலல்குற் றெவ்வியோவிவற்று ளேதையான்புகழ்ந்தெடுத்துரைக்கேன், பூந்தவிசுறையுந் திருமகளன்றிப் புவியில்வேறாரிவள் போல்வார்.

இ-ள். மாந்தளிரையொத்த மேனியினழகினையோ வரிவளையணிந்த முன்கை அழகினையோ செங்காந்தள்மலர்போன்ற மெல்லியகைவிரல அழகினையோ ஒளிபொருந்திய மணிவடமாகிய மேகலாபரணத்தின் ஒளியினையோ அழகுபொருந்திய அல்குலினழகினையோ இவைகளுக்குள் எதனைப்பெரிதென்று நான் தனித்தனியாகப் புகழ்ந்து சொல்லுவேன் செந்தாமரைமலராகிய ஆசனத்தில்வீற்றிருக்கும் திருமகளையல்

லது இவ்வுலகத்திருக்கும் மாதர்களில் இவளுக்கொப்பாநின்றவர்கள் யாரிருக்கின்ருர்கள்-எ-று. (௩௧)

எனமனத்தெண்ணி மடந்தையேநானென் ருேழிஞ்டிவ்வனத்த டைந்தே, னனேயவன்றன்னைக் காண்கிலேனின்னே யருகுகண்டதிசய முற்றேன், புனேமலர்த்திருவே யாரைநீயிங்குப் புகுந்தவாறென்புகில னச், சுனேமலர்க்குழலாண் முறுவலித்தெனது துணைவகேளென்றிது சொன்னாள்.

இ-ள். இவ்வாருக மனதிலெண்ணி மாதேகேளு நானென்சிநேகிதனுடன் இவ்வனத்திலடைந்தேன் இப்போது அவனேக்காணேன் அருகிலுன்னைக்கண் டதிசயம் அடைந்தேன் அலங்கரித்துச் சொல்லத்தக்க செந்தாமரைமலரில் வீற்றிருக்கும் திருமகள்போல்பவளே நீயாவள் இவ்விடத்தில் வந்தகாரணம்யாது சொல்லென்னவே சுனேப்பூவணிந்த அளகத்தையுடைய அந்தமாதானவள் நகைத்து என்துணைவனேஎன் வார்த்தையைக்கேளென்று சொல்லுகிருள்-எ-று. (௩௨)

முன்னேநின்றுணைவன் சாமவான்சாம வதியெனுமாய்குழலாகி, நின்னுடைமனேயாய் நின்னேயேபுணரு நேயத்தானினேத்துதிசெய்தேன், பொன்னவிர்சுணங்கென் முலேயுருவண்ணம் புணருதிபொருபண்டமாரன், கன்னலான்மெலிந்தே னென்றவளிரப்பக் காளேவேதியனிஃதுரைத்தான்,

இ-ள். முன்னம்நான் உன்துணைவனுகிய சாமவானென்பவனே இப்போது சாமவதியென்னு மாதாகினேன் உன்மனேயவளாயுன்னேப் புணரவேண்டுமென்கிற இச்சையினுல் நினேந்து உன்னேத்தடுத்தேன் பொன்போல்விளங்கும்தேமல் என்தனங்களில் பொருந்தாதவண்ணம் புணர்வாயாகப் பொருபடையையுடைய மன்மதன் கரும்புவில்லில்பூட்டியெய்யும் பாணங்களால்வருந்தினேனென் றவளிரந்துகூற வாலிபனுகிய அந்தவேதியன் இந்தவார்த்தையைச் சொல்லுகிருன்-எ-று (௩௩)

தீக்குரைசெய்தாய் பாவிநீபொல்லாய் தெருண்டசாரச்சுதன்றந்தோ
யோங்கியமரபுநின் திருக்குலமுமுயர்தவப் பெருமையுமறந்து
பூங்கணிகையர் போற்றீயுரைநவின்று பொற்புமத்திறத்தவாய்வேதந்
தாங்கியநீதி நூலிவையெல்லாந் தணக்கவென் சமைந்தவாறென்ருன்.

இ-ள். பாவியே கொடியவார்த்தைசொன்னாய் நீபொல்லாதவள் வேதமுதலானவைகளே யோதியுணர்ந்த சாரச்சுதனுற்பெறப்பட்ட நீமேலான உன்மரபினேயும் சிறந்தகுலத்தினேயும் உயர்ந்த தவப்பெருமையினேயுமறந்து அழகுள்ளவேசையர்போல் கொடியவார்த்தைசொல்லிக் குணமுமதற்குத்தக்கதாய் வேதத்திற்சொல்லப்பட்ட நீதிசாஸ்திர முறையினவையெல்லாம்நீக்கும்படி யிவ்வாருனகாரணம்யாதோவென்ருன்-எ-று.

விரிகடலுலகின் மாதருக்கெல்லாம் வேண்டுவ கலவியேயன்றே
புரியநூன்மார்பவென் றுணேக் கொழுநபுந்தியினேய யின்ருெழிக

அரிவையையாண் மற்ருணலேலெனப்பதமர்ந்துநின்றிருக்கனூஞ்சாணென் றெரிபசும்பூணளவயவமனைத்து மெந்தன்முன் புலப்படுத்தினளால்.

இ-ள், பரந்தகடலாற்சூழப்பட்ட உலகத்தில்வாழு மாதர்களுக்கெல்லாம் வேண்டியபொருள் கலவியல்லவோ? முறுக்கிய முப்புரிநூலணிந்த மார்பனே! என்துணைக்கணவனே! உன்மனதிலிருக்குஞ் சந்தேகத்தையிப்போ தொழியக்கடவை நான்பெண்மகளேயல்லது ஆண்மகனல்லேன் என்பதைஉன்கண்ணால் துரிதப்படாமல் பாரென்று விளங்குகின்றபூணணிந்திருப்பவள் தன் அவயவங்களையெல்லாம் அந்தப்பிராமணனுக்கெதிரில் தெரியும்படிசெய்தாள்-எ-று. பசும்பொன் பசியபொன்னுற் செய்யப்பட்டபூண். (௩௫)

கண்டனன்மகிழா வதிசயித்திந்தக் காரிகைதன்னவயவம்போல், மண்டுநீர்சுலாய வையகத்தெந்த மடந்தையரவயவமுடையார், அண்டர்நாயகன்றன் சோமவாரத்தி னமர்ந்தசீமந்தனியகத்திற், கொண்டபாவனையில் விளைந்தவாறென்னக் குழைந்தனனுரைமறந்திருந்தான்.

இ-ள். அவள் தன் அவயவத்தைக்காட்டவே கண்டுமகிழ்ந்து அதிசயமுற்று இம்மாதின் அவயவம்போல அவயவமுடையவர்கள் இவ்வுலகத்திலிருக்கு மாதர்களில்யாருமில்லை பரமசிவனுடைய சோமவாரதினத்தில்வருகிற (பிராமணர்களையும் அவர்கள்பத்தினிமார்களையும் சீமந்தனிமனதில் சத்திசிவரூபமாகப் பாவனைசெய்யுந் தன்மையினுல்வாறு விளைந்ததென்றெண்ணி மனக்குழைந்து வசனிப்பதுமின்றித் தன்னை மறந்திருந்தான்-எ-று. (௩௬)

காளைவேதியநீ யவயவமுற்றுங் கண்டனையையமுங்கடிந்தாய் தோளையேவிரும்பி யணைகெனவிரந்தேன் றுயர்விடாய்கெடவணைசென்ன, வாளனோர்விழியா ளுரைத்தலுங்கேட்ட மறைவலான்மனத்துயரெய்திப் பாளைசேர்கமுகின்கழுத்தினுய்கேட்டியெனவவன்பற்பலமொழிந்தான்

இ-ள். கட்டிளமையனுகிய பிராமணனே என்னவயவமெல்லாங் கண்டனை சந்தேகமுநீங்கினை இனி என்னுடையதோளை விருப்பங்கொண்டுபுணரென்று இரக்கின்றேன் ஆதலால் தடைசொல்லாமல் துயரமுள்ள காமவிடாய்கெடும்படி அணையென்று வாளையொத்தகண்களையுடையவள் சொல்லலும் அந்தவார்த்தையைக்கேட்ட பிராமணன் மனதில்துயரமுற்றுப் பாளைகள்பொருந்திய கமுகமரத்தின் கழுத்தினைப்போலப் பசியநிறமுந் திரட்சியுமுள்ள கண்டத்தையுடையவளே கேளென்று பலமொழிகள்சொன்னுன்-எ-று. (௩௭)

வேறு,

வேதமும்பல மேதகுநூல்களும்
ஓதிநன்கலை முற்றுமுணர்ந்தேஞ்

சாதியுந்தரு மத்தையும்விட்டிப
பாதகந்தரு பண்பையிழைத்தேம்.

இ-ள். வேதங்களும் மேன்மைபொருந்திய பலசாஸ்திரங்களும் சொல்லுகின்ற நல்லகலைகள்முழுவதையும் உணர்ந்தோம் (இப்படிக் கொத்ததன்மையுள்ள நாம் இப்போது) குலாசாரத்தையுந் தருமநெறியையும்விட்டுப் பாவத்தைத்தரும்படியான இந்தச் செய்கையைச்செய்தோம்-எ-று. சாஸ்திரங்களாவன வேதாந்தம் வைசேடிகம் பாட்டம் பிரபாகரம் பூருவமீமாஞ்சை உத்தரமீமாஞ்சை என்னும் ஆறுமாம் ()

உற்றதாதைய ரோடுமுணர்த்தேம்
வெற்றிவேலிறை வஞ்சம்விளைப்பான்
சொற்றலாதவஞ் சூழ்ந்தனமாகி
நற்றவக்கொடி பானணுகுற்றேம்.

இ-ள். நாம் அரசனிடத்துக்குப் போனபோது அவன்சொன்னதை, நம்முடையபிதாக்களுடன் சொல்லாமற்போனேம் கெடுதிநேரிடும்படி அரசன்சொன்ன வஞ்சனைக் குடன்பட்டவர்களாய் நல்லதவமுள்ள சீமந்தனியிடத்துக்குப் போனோம்-எ-று. (௩௯)

கைதவத்தை யறிந்துமக்கற்பினள்
செய்தவத்திற் சிவனோடுமையென
ஐயமற்றங் கருச்சனைசெய்தலிற்
றையலித்துயர் தன்னொடுசார்ந்தனம்.

இ-ள். கற்பினையுடைய அந்தச்சீமந்தனி நம்முடைய வஞ்சகத்தை அறிந்துகொண்டும் அவள் தவத்தினால் பார்வதியும் பரமசிவனுமாக நம்மைப்பாவித்து உண்மையாகப் பூசித்ததினால் பெண்ணே இந்தத்துயரம் அடைந்துவந்தோம்-எ-று. (௪0)

புன்மைநெஞ்சிற் பொறியறுபாதக
வன்மைவஞ்சர் வருவதெண்ணமலே
நன்மையோர்க்கு நவைகளியற்றிடுந்
தன்மைதங்களுக் கேவந்துசாருமால்.

இ-ள். சாஸ்திரவிசாரணையில்லாமல் பாதகங்களைச் செய்யும்படியான விவேகமற்ற வலியமனதுள்ள வஞ்சகர்கள் மேல்வருவதையெண்ணாமல் பெரியோர்களுக்குச்செய்யுங் குற்றமானது தங்களுக்கேவந்து சாரும்-எ-று. (௪௧)

ஆதலாலிவ் விடரையருந்தவ
மாதவத்தினின் மாற்றுவமாற்றிடாப்
போதுநின்னைப் புணர்வதுதிண்ணமென்
றோதிநான்மறுத் தாள்பின்னுமோதினன்.

இ-ள். ஆகையாலிப்போது நமக்குநேரிட்ட துன்பத்தை அரியதவத்தினால் நீக்கிக்கொள்ளுவோம் மாற்றக்கூடாதபோது நிச்சயமாக உன்னைப்புணருகிறேனென்றுசொன்னான் அப்படிக்கூடாதென்று அவள் மறுத்தாள் பின்னுஞ்சொல்லுகிறான்-எ-று. (௪௨)

வேழமின்பிடி போலும்விள்ங்கிழா
யாழிஞோர்மண நங்குலக்கேற்பதோ
சூழியானைய மன்னர்தொழிலென்றான்
மாழைமான்விழி மாதுமிதுசெய்தாள்.

இ-ள். பிடியானையினடைபோன்ற நடையையுடைய பெண்ணே? காந்தருவவிவாகம் நம்முடையகுலத்துக்கேற்றதோ அதுமுகபடாமணிந்த யானைகளையுடையஅரசர்க்குரிய தொழிலாமென்றான் (அவனப்படிச்) சொல்லியும் அவளிவ்வாறுசெய்தாள் என்னவெனில்-எ-று. ()

காமபாணங் கலக்கக்கருத்தழிந்
தாமதல்ல விதென்பதறிவுறுள்
வாமமுன்கை வலிவினிற்பற்றியே
தூமமென்குழ றோய்ந்திடர்நீங்கினாள்.

இ-ள். காமபாணமானது கலக்குவதினாலே இந்தக்காரியஞ் செய்யலாமென்றுஞ் செய்யலாகாதென்றும் யோசியாமல் அவனுடைய அழகியமுன்கையைப்பற்றி யிழுத்துப் பலாத்காரமாகப்புணர்ந்து துன்[illegible] நீங்கினாள்-எ-று. தூமமென்குழல் அகிற்புகையூட்டிய குழலாள். [illegible]

வன்பிலன்னவள் புல்லவுமைந்தனு
மின்பமுற்றில னின்னலுற்றிருதுவா[illegible]
முன்பயந்தநந் தாதையர்முன்[illegible]
துன்பமுற்ற தொடர்பையு[illegible]

இ-ள். அவளிவ்[illegible]செய்யவே அவனின்பமுறாமல் [illegible]றான் முன்னம்நம்மிருவரையும் [illegible] துன்பமடைந்த இந்தச்சங்கதி[illegible] (௪௫)

[illegible]வழிக்கொளா
[illegible]கர்
[illegible]னதக[illegible]பான்மரீஇச்
[illegible]வல்[illegible]ல்சொன்னனரோ.

இ-ள். [illegible]னவாவென்றுநடந்து ஆரியமார்க்கத்தைக்கடந்து[illegible]நகரத்திற்சேர்ந்து சூரியன்போன்ற தன்தகப்பன்[illegible]ந்தப்பிராமணன் சொல்லுகிறான்-எ-று. [illegible]ல் வேதங்களுணர்ந்தபிள்ளை. (௪௬)

நஞ்சையொத்த விதர்ப்பத்திறைநவில்
வஞ்சகத்தாற் வஞ்சமரீயதும்
பஞ்சினிற்றிகழ் சீறடிப்பாவைகண்
டஞ்சலித்தலி லாயிழையானதும்.

இ-ள். விஷத்தையொத்த விதர்ப்பதேசத்து அரசன்சொல்லிய வஞ்சகத்தினால் வஞ்சவேஷங்கொண்டு தாங்கள்சென்றதையும் சீமந்தனிதங்களைக்கண்டு பூசைசெய்தலினால் தன் துணைவன் பெண்ணானதும்-எ-று. பஞ்சினிற்றிகழ் சீறடிப்பாவை செம்பஞ்சுக்குழம்புடன் விளங்கும் பாதத்தையுடைய சீமந்தனி-எ-று. (௪௭)

அழுதுகூறின னன்னவையாவையும்
பழுதிலாதவன் றாதைபப்பாவையாந்
தொழுகுலத்தவன் றாதைக்குச்சொல்லலு
முழுதுங்கேட்டவன் மொய்ம்பொடுசீறியே.

இ-ள். அழுதுகொண்டுசொன்னான் அவன்சொன்னதையெல்லாம் குற்றமில்லாத தகப்பன்கேட்டுப் பெண்ணுருவாகிய பிராமணனுடைய தகப்பனிடத்திற் போய்ச்சொன்னான் அந்தச்சங்கதியெல்லாங்கேட்டவன்மிகுந்த கோபங்கொண்டு-எ-று. (௪௮)

காய்ந்தவஞ்சின மோடுகனன்றெழா
ஆய்ந்தசிந்தைய னல்லவைசெய்திடும்
வேந்தன்முன்னர் விரைந்துசென்றேமைந்தன்
போந்தவாறும் புகுந்ததுமோதியே.

இ-ள். வெதும்பிய வஞ்சினத்துடன் மனங்கொதித்தெழுந்து அந்தப்பிராமணன் தகாதகாரியத்தைச்செய்த அரசனிடத்துக்கு அதிவிரைவாகச்சென்று தன்புத்திரன் சீமந்தனியிடத்துக்குப்போன முறைமையும் அதன்பின்னேரிட்ட முறைமையினையுஞ்சொல்லி-எ-று *ஆய்ந்தசிந்தையன் வேதங்களை யாராய்ந்த மனத்தினன். (௪௯)

வேறு.

ஆதுலரரும்பொருள் விரும்பினரடைந்தா
லீதலதுவன்றிநிதி யில்லையகல்வீரெனா
ரோதலிவையன்றியுனு லோபகபடத்தால்
மாதுயருழப்பவிடன் மன்னவவழக்கோ.

இ-ள். அரசனே! இரப்பவர்கள் பொருளைவிரும்பிவந்தால் கொடுக்கவேண்டும் அப்படியில்லாவிட்டால் என்னிடத்தில் பொருளில்லையென்றுசொல்லவேண்டும் இவ்விரண்டுசெய்கையுமில்லாமல் உலோபத்தன்மையுள்ளகபடத்தினால் இரப்பவர்கள் மிகுந்ததுயரத்தை யடையவிடுதல் மன்னவர்கள் முறைமையோ-எ-று. (௫0)

ஈசன்விரதத்தினை யியற்றுமவடன்பா
னீசர்புரிதீமைசெயு நீதுயருறாமே
மாசின்மறையோதிய மகற்கிதுவிளைத்தால்
சீசிநினைமன்னவர் சிரிக்கவசைகொண்டாய்.

இ-ள். சிவவிரதம் அனுஷ்டிப்பவளிடத்தில் நீசர்செய்கின்ற பாப ச்செய்கையைச்செய்த நீ துன்பம்அடையாமல் குற்றமில்லாத வேதங் களை யோதியுணர்ந்த என்புத்திரனுக்கு இப்படிக்கொத்த தீமையை உண்டாக்கினாய் சீ சீ உன்னை அரசர்கள்சிரிக்கும்படி வசைதேடிக்கொ ண்டாய் எ-று, (௫க)

புத்திரனில்லாதவர்கள் பொன்னுலகெய்தாரென்
றித்தகைய புத்திரனை யீன்றினி நமக்கே
யுத்தமவரும்பதமு முண்டெனமதித்தேன்
சித்தமுமழித்துநர கச்சிறையிலிட்டாய்.

இ-ள். புத்திரனில்லாதவர்கள் சுவர்க்கலோகத்தை யடையார்கள் கல்விகேள்விகளால் பெருமையுடைய இந்தப்புத்திரனை நாம்பெற்றமை யால் இனிநமக்கே அரியதாகியநல்லபதமுமுண்டென்று மதித்துக்கொ ண்டிருந்த என்னுடைய எண்ணத்தைக்கெடுத்து நரகமாகிய சிறையி னிடத்தி லிட்டனையே-எ-று. (௫உ)

மைந்தன்மணநல்லணிகள் கண்டுமகிழ்வெய்து
மிந்தவிழியாலிவன திவ்வுருவுகாண
முந்தைவினையோவிது முடித்ததுகொலென்னுச்
சிந்தையலமந்தலறி மீட்டுமுரைசெய்தான்.

இ-ள், புத்திரனுடைய நல்லமணக்கோலத்தைக்கண்டு மகிழ்ச்சிய டையத்தக்க கண்களாலிவனுடைய இந்தப் பெண்ணுருவைக் காணுதற் குப் பழையவினைநேரிட்டதோ, அல்லது இப்பிறப்பிற்செய்த விதிதா னிப்படி முடித்ததோவென்று மனமானது சுழலும்படி அழுது மறு படியுஞ் சொல்லுகின்றான் எ-று, (௫ங)

இவ்வுருவெடுத்திவ னிருப்பவினியானும்
அவ்வையுமனத்துயர் பொருத்தலரிதம்மா
கவ்வையுலடத்திலுயி ரித்தலைகழிப்போம்
பவ்வவுலகத்தவர் பழிக்கவுனையென்றான்.

இ-ள் இந்தப்பெண்ணுருவெடுத்து இவனிருப்பதினா லினிநானு மிவனுடைய தாயுமாகிய நாங்களிருவரும் மனவியாகூலத்தைச் சகிப்ப தரிது (ஆதலினால்) சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தி லுள்ளவர்கள் உன்னைப்பழிக்கும்படி துன்பத்துக்கிடமாகிய சரீரத்திலிருக்கு முயிரை உனக்கெதிரிலேயொழித்து விடுகிறோமென்று சொன்னான்-எ-று. ()

சொல்லியமொழிக்கனல் செவித்துளைவெதுப்ப
நல்லுரைகொடுக்கவறி யானடுநடுங்கிச்
சல்லியமுறைதப்பமரு ளங்கிழிதரச்சாய்
வல்லியமெனப்புவியின் மன்னவன்விழுந்தான்.

இ-ள், இவ்வாறு அந்தப்பிராமணன்சொல்லிய சொல்லாகியதீயானது தன்காதின்துளையைச் சுடுதலினால் பிராமணனுக்குநல்லவார்த்தை சொல்லத்தெரியாதவனாய் நடுக்கங்கொண்டு முள்ளமபன்றிகிழிக்க மார்பிளந்து விழுகின்ற புலியைப்போல் அந்தராசன் மண்ணில்விழுந்தான்-எ-று. (௫௫)

வீழ்ந்தவன்மனத்தையிது வெய்யசுடர்வேல்போற்
போழ்ந்திடவெருக்கொடு பொருக்கெனவெழுந்தாங்
காழ்ந்தவிரதத்திருவி னற்புதம்வழுத்தாத்
தாழ்ந்தனன்முனித்தலைவர் தம்மொடிதுசொன்னான்.

இ-ள். அப்படி விழுந்தவனுடைய மனதைப் பிராமணன்சொன்னவார்த்தையானது கொடிய சுடர்வேல்போலப் பிளப்பதினால் அச்சங்கொண்டு விரைவில்எழுந்து முதிர்ந்த விரதத்தையுடைய சீமந்தனியின் அற்புதமான செய்கையைப்புகழ்ந்து வணங்கி முனிவர்களிற்சிரேஷ்டர்களாகிய முனிவர்களுடனிந்தச்செதியைச் சொல்லுகிறான்-எ-று.

கேட்டயலிருந்தமுனி வீரிஃதுகேண்மி
னாட்டமொருமூன்றுடைய நற்பனைவழுத்தும்
வாட்டமிலவத்தினன் மதித்தபடிமாதாய்க்
காட்டியதுபாவமொரு கட்டுரையுமுண்டோ.

இ-ள். வந்தபிராமணன் சொல்லியதைக்கேட்டுக்கொண்டு என்னருகிலிருக்கும் முனிவர்களே, நான்சொல்லுமிந்த மொழியைக்கேளுங்கள் திரிநேத்திரங்களையுடைய பரமசிவனைத் துதிசெய்கின்ற தவறுதலில்லாத தவநெறியையுடைய சீமந்தனி தன்மனதில்நினைத்தபடி இந்தப் பிராமணன்மகன் பெண்ணுருவமானது என்பாவமல்லது வேறுசொல்ல ஒருகட்டுரையுமுண்டோ-எ-று. (௫௭)

வந்தமறைமாணிபெறு வல்லுருவொழிப்பான்
எந்தவழிமாதவ மியற்றிடுவன்யானீர்
அந்தவகையோதுகென வாங்கரசுரைப்பப்
பந்தமில்பரத்துவச மாமுனிபகர்ந்தான்.

இ-ள். வேதங்களுணர்ந்த பிரமசாரியாகிய பிராமணன்புத்திரன் அடைந்த (எளிதிலொழித்தற்கரிய) பெண்ணுருவத்தையொழிக்கநான் எந்தமுறைமையினால் பெரியதவத்தைச் செய்குவேன் நீங்கள் அந்தவகையைச் சொல்லுங்களென்று அரசன்சொல்ல பாசங்களையொழித்த பாரத்துவாசமுனிவர் சொல்லுகின்றார்-எ-று, (௫அ)

கண்ணுதல்கழற்றுணை கருத்துறவருத்தும்
புண்ணியர்தருக்கும்விர தத்தினதுபொற்பு
விண்ணுலகினிற்பழ விரிஞ்சன்முதலோருன
மண்ணுலகினிற்சிறிய மானிடர்கொறோர்வார்.

இ-ள். பரமசிவனுடைய உபயதிருவடிகளுஞ் சித்தத்திற்பொருந் தும்படித்துதிசெய்யத்தக்கதாய்ப் புண்ணியவான்கள் களிப்புகொள்ளு ம் விரதத்தின்பெருமையைப் பழமையான பிரமன்முதலாகிய தேவர் களும் அறியமாட்டார்கள்என்றால் இம்மண்ணுலகிலிருக்கு மானிடர்க ளோ அறியத்தக்கவர்கள்-எ-று, (ருகூ)

வேறு.

எப்பாதகஞ்செய்துபி னெப்பரிசுற்றுளோருஞ்
செப்பாரிளங்கொங்கை மனோன்மணியீசன்றேவி
துப்பார்மலர்ச்சேவடி போற்றித்துதிப்பராயிற்
றப்பாமலெய்துங்கதி தீமைதணந்துபோமால்.

இ-ள். எவ்விதமான பாதகங்களைச்செய்து பின்புஎந்தத் தன்மை யை அடைந்தவர்களும் மனோன்மணியாய்ப் பரமசிவன் தேவியாகிய பார்வதியின்திருவடிகளைத் துதிசெய்வார்களானால் தவறுபடாமல் நல்ல கதிகிடைக்கும் தீமையானது நீங்கிவிடும்-எ-று. * செப்பாரிளங்கொங் கை பொற்செப்பினையொத்த இளங்கொங்கைஎனவும், துப்பார்மலர் சேவடி செம்மைநிறந்தங்கிய தாமரைமலர்போன்ற திருவடிக்ள்எனவு ம் பொருள்கொள்க. (கூய)

வெங்காரிருள்பானு விளங்கவொதுங்குமாபோற்
கொங்கார்குழற்பார்வதி யேழுலகுங்கொடுத்தாண்
மங்காதவன்பின் வழிபட்டவர்தங்கண்மாட்டுத்
தங்காதுதீமை யிதற்கேமறைசான்றுவேந்தே.

இ-ள். சூரியன் உதயமானால் மிகுந்தகருமைநிறமுள்ள இருள்நீங் கிவிடுதல்போலப் பதினான்குலோகங்களையுமீன்றஇயற்கையானவாசனை யுள்ள அளகத்தையுடைய பார்வதிதேவியாரைக் கெடுதலில்லாத அன் புடன் பூசைசெய்தவர்களிடத்தில் யாதொரு பொல்லாங்குந்தங்காது அரசனே யிதற்கே வேதஞ்சாட்சியாயிருக்கின்றது-எ-று. (கூக)

ஆனாததுன்பமனக்கோட்டமகற்றிஞானக்
கானார்குழலம்மையை நாடிக்கருத்தின்வைத்துப்
பானாளிரவினிம் மந்திரம்பற்றியோதி
நானாவிதமாம் வழிபாடுநயந்துசெய்வாய்.

இ-ள். அரசனே? தேவிபூசை (யித்தன்மை யுடையதாதலால்)நீங் காத துன்பமுள்ளமனதிற் பற்றியிருக்குங்காமமுதலாகிய குற்றங்களை

நீக்கி ஞானமாகியவாசனைதங்கிய அளகபாரத்தையுடைய உமையம்மை யைப் பாவனைசெய்து சித்தத்தில்வைத்துப் பாதிராத்திரிப்பொழுதிலிந் தமந்திரத்தை யிடைவிடாது உச்சரித்துப் பலவிதமானபூசையும் அன் புடன்செய்வாயாக-எ-று, (௯௨)

என்னாமுனிவனு மைமந்திர மீதென்றீந்து
நன்னாயகிதன் திருக்கோயிலி னாளும்வைகிப்
பொன்னாரமார்ப புரிபூசனை யென்னலோடுங்
கொன்னாரும்வேலா னிமவான்மகள் கோயில்புக்கான்.

இ-ள், பாரத்துவாசமுனிவ ரிவ்வாறுசொல்லி உமையம்மைமந் திரத்தையும் உபதேசித்துப் பொன்னாரமணிந்தமார்பனே பார்வதிதே வியாருடைய ஆலயத்திற்போயிருந்து நாள்தோறும்பூசைசெய்யென்று சொல்லவும் அவ்வரசன் பார்வதியார்கோயிலிற்போனான்-எ-று, * கொ ன்னாரும்வேலான் பகைவர்க்கு அச்சத்தைத்தருதற்கேதுவாகப்பொருந் தியவேல் என்றுபொருள்கொள்க. (௯௩)

பொறியைந்துமாற்றிப் புலனும்மவையோடுபோக்கி
நெறிநின்றசிந்தை நிருபனருட்டொண்டுபூண்டு
மறியொன்றுசெங்கை வரதன்றிருத்தேவிபூசை
பிறிதன்றிக்கங்கு லொருமூன்றவன்பேணலோடும்.

இ-ள். ஐம்பொறிகளைமாற்றி அவற்றுடன் ஐம்புலன்களையு மொ ழித்து நல்லநெறியில்நின்ற சிந்தையையுடைய அரசன் வரம்பெறுதற் கேதுவான அடிமைத்திறம்பூண்டு மான்பொருந்திய திருக்கரமுள்ள பரமசிவனுடைய சிறந்ததேவியாராகிய உமாதேவிபூசை யாதொருகு றைவுமில்லாமல் அந்தஆலயத்தில் மூன்றுநாள்செய்யவும்-எ-று. (௯௪)

அற்றைப்படுகங் குலினம்மையு முள்ளமகிழ்ந்து
கொற்றச்சுடர் வேலிறைவன் முனங்கோடிகோடி
கற்றைக்கதிர் வெண்மதிபோ னிழன்மேனிகாட்டப்
பொற்றைத்திருக் கோயிலுணின்றும் புறம்புவந்தாள்.

இ-ள், அந்த மூன்றாநாளிராத்திரியில் பார்வதியார் திருவுள்ளமகி ழ்ந்து அவ்வரசனுக்கெதிரில்நிறைந்த வெண்கதிரையுடைய அநந்தங் கோடிசந்திரர்கள்போல ஒளிவிளங்கும் திருமேனி தரிசனங்கொடுக்கப் பொன்மலைபோன்ற திருக்கோயின்புறத்துவந்தாள்-எ-று. † கொற்றச் சுடர்வேலிறை வெற்றியையும் ஒளியையுமுடைய வேலேந்தும் அரச னென்று பொருள்கொள்க. (௯௫)

வந்தாளைவணங்கி வழுத்தியமன்னர்மன்னன்
முந்தாகுலந்தீர்ந்தன மென்றுளமுன்னிநின்று

னந்தாவிளக்கே யன்பர்கணயந்தபொன்னே
சிந்தாமணியே சிறியேன்றுயர்தீர்த்தியென்றான்

(இ-ள்) அந்தராசன் தனக்குத் தரிசனங்கொடுத்த பார்வதி தேவியைத் தொழுது நம்முடைய துயரந்தீர்ந்தோமென்பதாகஎண்ணங்கொண்டுநின்றுகெடாத ரத்தினதீபமே. பரமசிவனுடைய இடப்பாகத்தை விரும்பிய தாயே? அடியார்க்குச்சிந்தாமணிபோன்றவளே? எளியேனுடைய துயரத்தைத்தீர்த்தருளென்றான், (௬௯)

அன்புன்றிரக்கு மரசேயினி யஞ்சனெஞ்சி
னின்புற்ற தேதுபுகலா யென்றிறைவிகேட்பத்
துன்புற்றவிந்த மறையோன்சிறு தோன்றல்வேட
முன்பிற்றிகழ வருளென்றனன் மூரிவேலோன்

(இ-ள்) இவ்வாறுவரங்கேட்பவனைநோக்கி அன்புடையவனுப்த்துதிசெய்கின்ற அரசனே? இனிபயப்படாதே உன்மனதிலுண்டான விருப்பம் யாதென்று பார்வதிதேவியார்கேட்க துன்பம் அடைந்திருக்கும்இந்தப் பிராமணப்பிள்ளையானவன் முன்போல ஆணுருவம் அடையும்படிதாயே அருள்செய்யென்று விண்ணப்பம் பண்ணினான்-எ-று. (௬௭)

பருவத்தொருகோடி தவத்துளம்பற்றினாலும்
தீருபற்கிறைகேளை தன்பர் நினைந்தபான்மை
யொருவர்க்குமெம்மீசர் தமக்குமொழிக்கலாமோ
தருகுற்றனம்வேறுளகே ளனத்தையல்சொன்னாள்

(இ-ள்) அரசனேகேள் ஒருகோடிவருஷம் தவத்தில்மனதைவைத்தாலும் என்னன்பர்கள் நினைத்ததன்மையை எம்மிறைவருக்கும்மற்ற யாவருக்கும் ஒழிக்கக்கூடாது ஆகலால் வேறேவரங்கேள்தருகிறேமென்று பார்வதிதேவியார்சொன்னாள்-எ-று. (௬அ)

நல்லாயிவன் மைந்தனேயின்றி நவையுறும
வில்லாள்வயிற் றின்னுமோர்மைந்தனை யீறியென்று
சொல்லாமுனந் தந்தனமென்றனை சொல்லிக்கோல
வில்லார்நுதலா ளிதுமீட்டும் விளம்பலுற்றாள்

(இ-ள்) தாயே யிவன்புத்திரரின்றித் துன்பப்படாமல்இவன்மனைவிவயிற்றினிடமாக இன்னுமொருபுத்திரனை அருள்செய்யென்றுஅரசன்விண்ணப்பஞ் செய்வதற்குமுன் அப்படியேகிருபைசெய்கிறேமென்றுசொல்லி அழகிய வில்லையொத்தநெற்றியையுடையபார்வதிதேவியாமறு படியும் இந்தவார்த்தைசொன்னாள்-எ-று. (௬௯)

மயிலொத்தசாமவதி தன்னையிம்மைந்தனுக்கே
பயில்வுற்றவேதவிதியே மணம்பண்ணுவிப்பாய்

வெயிலொத்தவேலாயெனச் சொல்லிவிளைவிமேனகிக்
குயிலொத்தமென்சொல் லுமையாடிருக்கோயில்புக்காள்

(இ-ள்) அரசனே! மயிலையொத்தசாயலையுடையசாமவதியென்னு மிந்தமதினை வழங்கப்படுகின்ற வேதவிதிப்படி இந்தப்பிராமணப் பிள்ளைக்கே விவாகஞ் செய்விக்கக்கடவையென்று சொல்லியுடனேபார்வதிதேவியார் திருக்கோயிலுக் கெழுந்தருளினாள்-எ-று ✻வெயிலொத்த வேலோய் பகலவராகிய இருளைக் கெடுக்குஞ் செய்கையால் சூரியனை யொக்கும் வேலாயுதத்தையுடைய அரசனேயென்றும் குயிலொத்தமென்சொலுமையாள்-குயிலை யொத்த சொல்லினாள் என்றும் பொருள் கொள்க. (எ௰)

வெங்கோபயானை விறன்மன்னன்வியந்துசாலப்
பொங்கோதவேலைப் புவிபோற்றவிப் பூவைதன்னை
சங்கோதவிம்ம மறைமாணி தனக்குநல்கிக்
கொங்கோதியோடு மனைவாழ்க்கைகுறித்துவாழ்ந்தான்

(இ-ள்) இவ்வாறுசொல்லியபார்வதிதேவியாருடையதிருவாக்கைக்கேட்ட அவ்வரசன் மிகவும் சந்தோஷித்து இவ்வுலகத்தி லுள்ளவர்கள் வாழ்த்தவும் சங்கநாதம்பொங்கவும் சாமவதியென்பவளைப் பிரமசாரியாகிய பிராமணனுக்குவிவாகஞ்செய்வித்துத்தன்மனைவியினுடன் இல்லறம் வழுவாமல் வாழ்ந்தான்-எ-று✻வெங்கோபயானை விறன் மன்னன் கொடியதாகிய கோபத்தினையுடைய யானைப்படையும் வெற்றியு முள்ள அரசனெனப் பொருள்கொள்க சாலப்பொங்கோத வேலைப்புவிமிகவும் பொங்குகின்ற அலையினையுடைய இவ்வுலகம் எனப்பொருள்கொள்க ()

துயருற்றதாதைமனையாளொடுசோகநீங்கி
மயர்வற்றகேள்வி மகப்பேற்றினி தூழிவாழ்ந்தான்
அயர்வுற்றமன்னன் மகிழ்வோங்கியனந்தகாலம்
உயர்வுற்றசெங்கோ லினிதோச்சியுலகையாண்டான்

(இ-ள்) அதன்பின்பு தன்புத்திரனைக்குறித்துத்துன்பம்அடைந்த தகப்பனாகிய பிராமணனும் அவன்மனைவியும் துயரம்நீங்கி மயக்கமில்லாத கேள்வியையுடைய புத்திரனைப்பெற்று நெடுங்காலம் இனிதாகவாழ்ந்தார்கள் கோர்வுற்ற அரசன் மிகுந்த மகிழ்ச்சிகொண்டுமேன்மைதங்கிய செங்கோ லினிதாகச்செலுத்தி அநந்தங்காலம் உலகத்தை யாண்டான்-எ-று. (எஉ)

மாயாதஞான வாதனடிவாழ்த்துமன்பர்க்
கேயாதனவு முளவோவென்றியம்பியேத்தித்
தேயாதசைவ நெறிச்சூதன்றெறிந்துகூற
ஓயாதுவாழ்த்து முனிவோர் நெஞ்சுவகை பூத்தார்.

இ-ள். நிலைபெற்ற ஞானசொரூபியாகிய பரமசிவனுடைய திருவடிகளைத்துதிசெய்யும் அடியார்களுக்குக் கிடையாத பொருள்களுமுண்டோவென்று சொல்லித்துதித்து அழிவுபடாத சைவசமய நெறியையுடையசூதமுனிவர் தெரிந்துசொல்ல அதைக்கேட்ட நைமிசாரணிய முனிவர்கள் இடைவிடாமல்வாழ்த்தி மனமகிழ்ந்தார்கள்-எ-று. (௭௩)

ஒன்பதாவது சீமந்தனிபாவனைசெய்த அத்தியாய

முற்றியது.

ஆக திருவிருத்தம்-௩௱௯௭.



உ

சிவமயம்.

பத்தாவது

# சிவயோகிமகிமையுரைத்த

# அத்தியாயம்.



சீர்பெறுசித்திர வேள்விமுனித்தவர் தீவினையற்றிட—நீள்
கார்விடமுற்றணி யானகளத்திறை காலன்வெருக்கொளவே
பாரினுதைத்தவர் தாளைவழுத்திய பான்மையர்பெற்றவெலாஞ்
சோர்வறவுத்தம கூறுகெனக்கதை சூதனுரைத்தனனே.

இ-ள். சீர்பொருந்திய சிறந்தயாகஞ்செய்யும் தவசிகளாகிய முனிவர்கள் (சூதமுனிவரைவணங்கி) உத்தமரே! எங்கள் தீவினைகளெல்லாம் நீங்கும்படி மிகுந்தகருமைநிறந்தங்கி யழகுள்ளதானகண்டத்தையுடையஇறையவரும் யமன்பயங்கொண்டு பூமியில்விழும்படியுதைத்தவருமாகிய பரமசிவனுடைய திருவடிகளைத்துதிசெய்த அன்பினையுடையவர்கள் அடைந்தபேறுகளையெல்லாம் சோர்வில்லாமல் அருளிச்செய்ய வேண்டுமென்ன அந்தச் சிவசரித்திரத்தைச் சூதமுனிவர் சொல்லுகின்றார்-எ-று (க)

நாதனுருத்திர ஞானியினித்திரன் ஞாலம்வியத்ததுவும்
மேதினியிற்சிறு மானிடர்முத்தியின் மேவமறைப்பொருளா
லோதியுதத்துவ நீதிவிகற்பமு மோனைகொள்பத்தர்கள்பால்
ஏதமில்சித்திர லீலைவிளைந்ததும் யாவருரைக்கவலார்.

இ-ள். நாதனாகிய ருத்திரமூர்த்தியானவர் ஆதியிலே யிந்தச் சிறந்த
வுலகத்தைச் சிருட்டித்ததுவும் இவ்வுலகத்திலிருக்கும் சிறியமானிடர்
கள் மோகநத்திற்பொருந்த வேதப்பொருளாகிய சாம்பவமூர்த்தி வேத
நூல்களிற்சொல்லிய தத்துவநீதியின் விகற்பமும் மகிழ்ச்சிகொள் அன்
பர்களிடத்தில் குற்றமில்லாத விநோதமான திருவிளையாடல் செய்தது
ம்யாவர்தெரிந்து சொல்லத்தக்கவர்கள்-எ-று. (௨)

ஆயினுமெற்றுவி யாதனுரைத்தமை யாதரவத்துடனே
பேயமுனித்தலை வோர்கள்செவிப்புலன் மேவவுரைக்குவனாற்
றூயனவிக்கதை பாவவனத்திரள் சூறைபடச்சுடவே
காயவனற்சிகை போல்வனவற்புத காரணமுற்றிடுமால்.

இ-ள். முனிசிரேஷ்டர்களே! சிவசரித்திரம் அருமையுள்ளதாயிருந்
தாலும் வியாசமுனிவர் எனக்குச்சொன்னவைகளை யுங்கள் காதுகளிற்
பொருந்தும்படி சொல்லுகிறேன் தூயவைகளாகியஇந்தச் சிவசரித்திர
ம்விருப்பமுள்ளவர்களுடைய பாவமாகியகாடுகள் அழியும்படி சுட்டுக்
காயத் தீச்சிகைபோல்பவைகளாகிய அற்புதமுள்ள காரணம்பொருந்தி
யவைகள்-எ-று. (௩)

மந்தியினஞ்செறி பொங்கவரந்தியின் மந்தரனென்றொருபே
ரந்தணன்முன்புளன் வண்கனகங்கள னந்தமிகுந்தமைபாற்
சந்தியும்வந்தனை யுஞ்சபமுங்குல தந்திரமும்பிறவுஞ்
சிந்தைமறந்திழி யுங்குலமங்கையர் கொங்கைதினம்புணர்வான்.

இ-ள். வானரக்கூட்டமிருந்துள்ள சோலைசூழ்ந்த அவந்தி தேசத்தி
ல் மந்தரனென்கிறபெயருள்ள ஒருபிராமணன் முன்னமிருந்தான் அவ
னுக்கு) வளப்பம்பொருந்திய திரவியங்கள் அனந்தமாக மிகுதியானதி
னால் சந்தியாவந்தனத்தையும் சிவார்ச்சனையையும் ஜபத்தையும் தன்கு
லத்துக்குரிய கருமங்களையும் மற்றுமுள்ளவைகளையும் மனதிலும்நினை
யாமல்மறந்து இழிவானசாதியிலுள்ள குலமாதரைத் தினந்தோறும்
புணருவான்-எ-று. (௪)

எக்குலமங்கைய ரெத்தொழினின்ற விழிப்பினரென்றுணரான்
மைக்கண்மடந்தைய ருற்றனரென்ற மகிழ்ச்சியினங்கவர்பாற்
றுய்க்குமருந்பத மட்டினறுந்தசை தொப்பிகள்கண்டவெலா
மொக்கவிருந்துக ளிப்பினருந்தி யுளத்தின்மகிழ்ந்திடுவான்.

இ-ள். இவர்கள் எந்தச்சாதிமாதரோ எவ்விதத்தொழில் செய்கின்ற
இழிவுள்ளவர்களோவென்று ஆராய்ந்துபாராதவனாய் மையணிந்தகண்
களையுடையமாதர்கள் கிடைத்தார்களென்கிற மகிழ்ச்சியினால் அவர்க
ளிடத்தில் உண்ணுகின்றஅரியசாதமும் அளவிலாத மாமிசமும் பல

மங்கையிளங்கொடி பிங்கலையென்று மடந்தையுடன்புணரா
வங்கவள்குங்கும கொங்கைமுயங்கி யழிந்தவசம்பெறலா
மிங்கிதுநன்செய லன்றிதுபுன்செய லென்பதுளங்கருதான்
கங்குலுநண்பக லுங்களிகொண்டு கலந்துமயங்குறுவான்

(இ-ள்) மங்கைப்பருவமுள்ளவளாயிளங்கொடிபோன்ற பிங்கலையென்கிற பெயரையுடைய மாதுடன்சேர்ந்து அவளுடையகுங்குமமணிந்துள்ள ஸ்தனத்திற்புணர்ந்து அந்தவின்பத்தினால் அறிவழிந்துபரவசப்படுவதினால் இதுநல்லசெய்கையென்றும் இதுகெடுதியுள்ளசெய்கையென்றும் மனதில் அறியாமல் இரவும்பகலும் களிப்புள்ளவனாய்ச் சேர்ந்து மயங்கிக்கொண்டிருப்பான்-எ-று. (௬)

வேறு.

கலைவெண்டிரை வருநஞ்சணி களகந்தரன்றனருள்
புனையுஞ்சிவ தவமொன்றிய புனிதன்பவ வறவே
நினைவொன்றிய துரியந்தனி னிருந்தனி மதியால்
வினையொன்றற நிலைநின்றிடு விரதன்பெயர் விடபன்

(இ-ள்) ஒலிக்குங்கடலிலுண்டானவிஷத்தைத்தரித்த கண்டத்தையுடைய பரமசிவனது கிருபையைப்பெற்ற சிவதவம்பொருந்தியபரிசுத்தனும் பிறவிநீக்கும்படி அறிவடங்கிய துரியாவஸ்தைபோல சாக்கிராவஸ்தையிற்பொருந்திய மதியினால் கர்மசெயலென்பதொன்றுமில்லாமல் நீங்கத்தக்கதாக நிலைதவறாமலிருக்கின்ற விடபனென்னும்பெயருள்ளவனுமாகியவொருசிவயோகியானவர்-எ-று. துரியாவஸ்தையில் ஆன்மாதன்னினைப்பொன்றுந்தோன்றாமலிருப்பதுபோல சாக்கிராவஸ்தையிலும் தத்துவவியாபகமின்றிச்சிவத்துடன்கலந்திருத்தலால் வினையொன்றறநிலைநின்றிடுவிரதனெனக் கூறினார் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என அவஸ்தை-ரு. (௭)

வந்தானிவ னுறையுந்திரு மனைமுன்றிலின் வரலுங்
கொந்தார்குழ லவளோடுமிம் மறையோனெதிர் குறுகி
முந்தாவுப சாரங்களு முறையின்படி யுதவிச்
சந்தார்துகண் மலரொன்றிய சயனத்திடை வையா

(இ-ள்,) மேற்சொல்லிய பிராமணனும் அவனுடைய மனைவியும் வாழும் வீட்டின்முற்றத்தில்வந்தார் அவ்வாறுவரலும் கொத்தாகியமலர்களணிந்த அளகபாரத்தையுடைய தன்மனைவியுடன் இந்தப்பிராமணன்சிவயோகிக்கெதிற்சென்று முறையின்படி உபசாரங்கள்செய்து அழகுபொருந்திய மகரந்தம்நிறைந்த மலர்பரப்பியஆசனத்திலிருக்கச்செய்து

எ-று. உபசாரங்களுமுதவியென்றது அருக்கியம் பாத்தியம் ஆசனம் கொடுத்து எனக்கொள்க. (அ)

சேதாவி னறும்பாலொடு தேமாங்கனி பழனும்
நாதாநுக ருதியென்றவர் நளிநீரொடு நல்கிப்
போதார் மலர் தூவிக்குளிர்சந்தம் புனைவித்தங்
கோதாமுக மனகூறி வெள்ளிலைபாக்குட னுதவி

(இ-ள்.) அவர்கள் நல்லபசுவின் பாலும் மதுரமுள்ளமாம் பழமும் நாதனே உண்ணென்றுகொடுத்தபின்பு குளிர்ச்சிதங்கிய சலமுங்கொடுத்துமலரால் அருச்சித்துச் சீதளமுள்ள சந்தனம் அணிந்து கொள்ளும்படிபிரார்த்தித்து நல்ல உபசாரவார்த்தைகளுஞ்சொல்லிப் பின்பு தாம்பூலமுங்கொடுத்து-எ-று. (கூ)

அற்றைப்படு கங்குற்பொழு தகலுந்துணை யளவுங்
கற்றைக்குழன் மடவாளொடு கலைமாமறை யவனுப்
பற்றற்ற முனித்தேவிரு பாதத்துணை வருடச்
சிற்றச்சிறு காலைமுனி சென்றானிவர் நின்றார்

(இ-ள்) அன்றுராத்திரிமுதல் விடியற்காலவரையில் அந்தப்பிராமணனும் அவன்மனைவியும் தம்முடைய இரண்டுபாதங்களையும்வருடிக்கொண்டிருக்கும்படி (சயனித்துக்கொண்டிருந்த) இருவகைப்பற்றும் நீங்கினவராகிய அம்முனிவர்உதயகாலத்துக்குமுன்னமேயெழுந்துபோய்விட்டார் அவர்களிருவருந் தங்களிடத்திலேதானேயிருந்தார்கள்-எ-று இருவகைப்பற்றாவது உட்பற்று புறப்பற்று * கற்றைக்குழல்மடவாள் கற்றையாகிய அளகத்தையுடையவள்கலைமாமறையவன் சாஸ்திரங்களுடன் வேதமுமுணரத்தக்க பிராமணகுலத்தன். (ய)

புன்னும்மறை யவனுஞ்சிறு புறைவாணுத லவளு
மன்னுங்கழை மதலுந்துணை வியமென்ன யணந்தே
துன்னுஞ்சில நாள்சென்றன தொடரிம்பழ வினையான்
முன்னும்பினு மாயங்கவ ரிருவோரு முடிந்தார்

(இ-ள்) பின்னும் அவர்களிருவரும் மன்மதனும் ரதியும்போல இன்கம் அனுபவித்துக்கொண்டிருந்து சிலநாள்சென்றபின்பு பழவினைர்தொடர்ச்சியினால் முன்னும்பின்னுமாக அந்த இருவருமிறந்துபோனார்கள்-எ-று. * பிறைவாணுதலவள் சிறியபிறைபோன்ற ஒளிதங்கிய நெற்றியையுடையவள் கழைமதன் கரும்புவில்லையுடையமன்மதன். (யக)

வேறு.

முடிந்தவேதியன்றரும்முநீதியுமுறைமையும்பிறழாது
தடிந்துமாமுகில்பொழிதரவளம்படுதகானனந்தனியாளும்

கடிந்ததீவினைவச்சிரவாகுவின்காதலியுரதிதி
லடைந்துநல்லுருத்தங்கியகருப்பமாயமர்ந்திடுமமையதிரல்

(இ-ள்.) இவ்வாறு இறந்தபிராமணன்தருமமுழம்நீதியும்முறைமையும மாறுபடாமல் மேகங்கள்மிளி மழைபொழியும்படி வளம்பமுள்ளதசாலை நரகத்தையாளுகின்ற வச்சிரவாகுவென்னும் அரசனுடையமனைவியின் கருப்பத்திலடைந்து நல்லுருவந்தங்கியகருப்பமாய்ப் பொருந்தியகாலத்தில்-எ-று. () தலியாளுதல் ஐம்பத்தாறுதேசங்களையுந் தானொருவனேயாளுதல் தீவினைகடிந்த பாபத்தைநீக்கிய. (௧௨)

கருப்பமுற்றவள்பின்வருந்தேவிய ரனைவருங்கனன்றீண்டு
விருப்பமாயவள் கட்டுறைகுழவியைவிளிவுசெய்குவமென்ன
உருப்பவல்விட முணவினோடளித்தனளுண்டனளுதரத்தின்
நெருப்பையொத்துமின் றெரிதந்துகரிந்தது நிகரிலாளுருவம்மா

(இ-ள்) கருப்பம் அடைந்தவளுக்குப் பின்வந்ததேவிமார்கள் (மனப்பொறாமையினால்)கோபங்கொண்டு எல்லாருமொன்றாகச்சேர்ந்து மூத்தவள் வயிற்றிற்பொருந்தியசிசுவைக்கொன்றுபோடுவோமென்று (ஆலோசனைசெய்து)அவளுக்குவிருப்பமாயாகாரங்கொண்டுப்பவர்கள்போல விஷத்தைக்கலந்துகொடுத்தார்கள் அவளதையறியாமல் உண்டாள் அந்தவிஷம்அவள்வயிற்றிற்போனவுடன் நெருப்பையொத்து எரிந்ததுஅதனால் அவளுருவங்கரிந்தது -எ-று. ※ உருப்பவல்விடம் வெப்பமுள்ளகொடியவிடம் நிகரில்லாள் தனக்கு ஓம்பில்லாதவள். (௧௩)

உண்டவல்விடவெம்மையாற்பிணிபல வுதரத்துமுடன்முற்றுங்
கொண்டுமூழ்வினைப்பகுதியான்முடிந்திலள்குழவியும்விளியாம
லண்டர்நாயக னருளினாலீன்றன ளீன்றலுமழிநோயின்
புண்டனுன்னெலிந்தரற்றினர்சுமதியும்புதல்வனும்பொறாதந்தோ

(இ-ள்.) உண்டவிஷத்தின் வெப்பத்தினால் வயிற்றிலும் உடல்முழுவதும்பலவகையாகிய வியாதிகொண்டும் ஊழ்வினைப்பிரிவினால்இறந்திலளாய்ப் பரமசிவனுடையாகிருபையினால் இறவாமலிருந்தசிசுவைப்பெற்றாள் பெற்றபின்பு சுமதியென்னுந்தாயும்அவள்புதல்வனும் அழிநோயுள்ளபுண்ணினால்வருந்திச் சகிக்கமாட்டாமல் அழுதார்கள்-எ-று. அந்தோ இரக்கச்சொல். (௧௪)

இடைவிடாதிவ ராற்றிடுமோதைகேட்டிறைவவனயர்வெய்தில்
யடையும்வாகடர் தங்களையிப்பிணி யகற்றுதிரெனலோடு
மிடையுமாயுனூற்கல்வியான்வழிக்குலவிஞ்சையான்வினையத்தால்
உடையநன்மருந் தளம்பிலசெய்தலுமுறுபிணிதணியாதால்

(இ-ள்) இவ்வண்ணமிவர்கள் இடைவிடாமல் அழுகிறவோசையைவச்சிரவாகுவென்னும் அரசன்கேட்டுத்துயரமடைந்துவருகின்ற வயித்தியர்களைநோக்கி யிந்தவியாதியைநீக்குங்களென்றுசொல்லத் தாங்கள் ஆராய்ச்சிசெய்திருக்கின்றவயித்தியசாஸ்திரப்பயிற்சியின்திறத்தினு

லும் தங்கள் முன்னோர்கள் கற்பித்திருக்கும் கல்வியினாலும் உத்தியினாலும் செய்யப்பட்டிருக்கும் நல்ல அவுஷதங்கள் பலபலவாகச்செய்து கொடுத்தும் தங்கியபிணிதீர்ந்ததில்லை-எ-று. * வாகடரென்னுமொருமுனிவரால் செய்யப்பட்ட வயித்தியசாஸ்த்திரத்துக்கு வாகடமெனறுபெயர் வயித்தியர்கள் அந்தசாஸ்த்திரத்தைவாசித்துணர்ந்தவர்களாதலால் அவர்களுக்குப் வாகடரென ஒருபெயர்வழங்கப்படுகின்றது. (௯௫)

பிணிமுதிர்ந்திடவாகடரெங்காளாற்பெயர்க்கரிதரிதென்ன
மணிபுணைந்ததார்மன்னவற்குரைத்தலுமன்னவன்மனக்கொள்வா
னணிகொண்மேகலைமடவரலழுகையுமரும்பெறற்புதல்வன்றன்
றணிவிலாதாற்றோதையுங்கேட்டியார்தணிவிழுதுயில்கிற்பார்.

(இ-ள்.) வயித்தியர்கள் தங்கவாற்கூடியமட்டும்பார்த்தும் பிணிதீராமல் அதிகரித்ததினால் ரத்தினமாலைதரித்திருக்கும் அரசனை நோக்கி யிந்நோயைத்தீர்க்கஎங்களாலாகாதென்று சொல்ல அதைக்கேட்ட அவ்வரசன் நம்முடைய புத்திரன் ஓயாமலழுகிற ஓசையையும் அதைக்குறித்து நம்முடையமனைவியானவளழுகிறஓசையையும் கேட்டு யார்தான்நித்திரைசெய்வார்களென்றுகருதி-எ-று. அணிகொள்மேகலைமடவரல் அழகுபொருந்திய மேகலாபரணமணிந்தமாது. அரும்பெற்றபுதல்வன் பெறுதற்கரியபுத்திரன்எனப் பொருளுரைத்துக்கொள்க தணிவிழி ஒப்பில்லாதகண். (௯௬)

நோயினாலுயிரிறப்பரோவிறக்கில ரன்றியிந்நோய்நீங்கி
மேவுநலனுப்பெறுவரோபெறுகிலர் வினையயார்விலக்கிற்பார்
பாவாகாரியரிவர்நமலயப் பழநகராற்றுது
நாவினாலெடுத்தோதொணாநகரற நாணிலந்தனில்வந்தார்.

(இ-ள்.) நோயினாலுயிரிறப்பார்களோவென்றால்இறக்கிறதுமில்லை அல்லது இந்நோய்நீங்கி நல்லுருவத்தைபடைவ்பார்களோவென்றாலடைவதுமில்லை அடைக்கூடாதவினையை எவர்கள்நீக்கிக்கொள்ளத் தக்கவர்கள் இவர்கள்மகாபாவிகள். நமதுடைய ஆலயத்திலிருக்கும்பழமையகனகரத்தில்வைத்தாளதுவுஞ்சகிக்கமாட்டாது ஆகையால்நாவினாலெடுத்துச் சொல்லவொண்ணாத கொடியநகரம் ஒன்றுண்டாகி அதில்விழும்படி யிவ்வுலகத்தில்வந்தார்கள்-எ-று. (௯௭)

என்றுசிந்தையினவர்களை யிழந்துமற்றிளையாமனையார்மாட
டொன்றுமன்பினொடுமற்றவர்நல னுண்டுவாழிகல்வேந்தன்
குன்றுநெஞ்சினன்குதலைக்கூவியிக்கயத்தியைமகவோடும் (ன்
இன்றுமதுமப்பசமக்காண்டுபோய்க்காட்டகத் திடைவிட்டுமீள்கென்று

(இ-ள்.) இவ்வாறுமனதிலெண்ணி இளைய மனைவியர்களிடத்தில் ஆசைபொருந்தி அவர்களுடைய இன்பம் அனுபவித்துக்கொண்டிருக்கும் அவ்வரசன் மூத்தமனைவியையும்புத்திரனையும்வெறுத்து வெம்பிய மனத்தையுடையவனாய்த் தேர்ப்பாகனை அழைத்து இந்தப்பாவியையும் இவள்புத்திரனையும்இன்றுதேரேற்றிக்கொண்டுபோய்க் காட்டிலேவிட்டுத் திரும்பிவா [illegible] (௯௮)

விட்டுமீறியென் றுரைத்தலும்வலவனும் வேந்தர்வேந்துரைபேணிக்
கட்டுவாம்பரிக்கொடிநெடுந்தேர்மிசைக் கன்னியைமசவவாடும்
இட்டுநன்னெறிநீந்திமுட்கானகத் திறக்கிவிட்டனன்மீண்டு
வட்டவாழிசூழ்புவனிகாவலன்முன் வந்தடியிணைதாழ்ந்தான்

(இ-ள்,) இவர்களைக்காட்டில்விட்டுவாவென்று அரசன்சொல்லிய வார்த்தையைத் தேர்ப்பாகன் ஏற்றுக்கொண்டு அவர்களிருவரையும் தேரின்மேலேற்றிக்கொண்டுபோய் நல்லமார்க்கத்தைக்கடந்துமுள்ளுகளையுடையகாட்டிலிறக்கிவிட்டுவந்து அவ்வரசன்பாதத்தில் வணங்கினான் -எ-று வாம்பரிக்கொடிநெடுந்தேர்தாவுகின்றகுதிரை கட்டியபெரியகொடித்தேர் வட்டவாழிசூழ்புவனிகாவலன் வட்டமாயேசமுத்திரஞ்சூழ்ந்தஉலகத்தரசன். (௧௯)

அம்புறத்துவெங்கானிடைத்தமியளாயருந்தெறன்மகவோடும்
வெப்புறத்துநோய்முதிர்வினாலினன்பதிர் வெதுப்பலாவிடரெய்தி
யெப்புறத்தினுமலகையுமுழுவையு மேனமிடர்செய்யச்
செப்பெனத்திரண்முலையினாலொருசிறை செல்லவும்வழிகாணாள்.

(இ-ள்.) தேர்ப்பாகன்போய்விட்டபின் ராஜஸ்திரியானவள் அந்த வெளிக்காட்டில் தனித்தவளாய் வருத்தப்படுத்துகிற நோயின்மிகுதியினாலும் சூரியகிரணவெப்பத்தினாலும்தானும்தன்புத்திரனும்துன்பமடைந்துநாலுபுறத்திலும் பேய்களும் புலிகளும்பன்றிகளும் துன்பப்படுத்தஒரு இடத்துக்குப்போகவும்வழிகாணமல்-எ-று.செப்பெனத்திரண்முலை-பொற்செப்புப்போலத்திரண்டகொங்கை, (௨௰)

அரியதாகியவிதியினைவெறுக்குநொந் தயர்வுறுமழுதெங்கும்
உரியகாதலன்கொடுமையைநினைந்துகண் ணுறுபுனலிடைதோயும்
விரியுநோயபெருதாற்றியகுழவிவாய் மென்முலையுணத்தூட்டும்
எரியினின்றுதன்னுடல்சுடுபசியினு விடருழந்திதுசெய்தாள்,

(இ-ள்) அரியதாகிய விதியைவெறுப்பாள் நொந்து சோர்வுறுவாள் தனக்குரியகணவனுடையகொடுமையைநினைந்து கண்கள்பொழிகின்றநீரில்தோய்வாள் மிகுந்தநோயைச்சகிக்கமாட்டாமல் அழுகிற தன்பிள்ளையின்வாயில் முலையைவைத்து பால் ஊட்டுவாள் தீயையொத்து இடைவிடாமலிருந்து தன் உடலைச்சுடுகின்ற பசியினால்துன்பங்கொண்டு ஒருகாரியஞ்செய்தாள்-எ-று. அதென்னவெனில், (௨௧)

வெஞ்சினக்கொலைமாய்பயில்கானகம்விலங்கியோர்புடையேகிப்பஞ்சின் மெல்லதருநதிகாற்றி...த்தனிப் பயப்பயச்செல்லுங்கால் அஞ்சிலோ

ஞியோரணிநகர்கண்டதனிடைப்புகுந்தனளந்த. இஞ்சிமாநகர் தலைக்கிறையாகிய வெறுழ்வலிவணிகேசன்.

(இ-ள்,) கொடியகோபங்கொண்டு கொல்லுந்தொழிலையுடையமிருகங்கள்சஞ்சரிக்கிற காட்டைவிட்டுநீங்கி ஒரு புரத்தில்சென்றுபஞ்சினுமெல்லியதாகிய தன்பாதத்தில் உதிரம்பெருகும்படி மிருதுவாகநடந்துபோம்போது அந்தராஜஸ்திரியானவள்அழகுள்ளதாகியஒருநகரத்தைக்கண்டு அதனிடத்திற்போனாள் (அப்போதுமதில்சூழ்ந்த அந்தநகரத்திற்குத் தலைவனாகிய சிறப்புள்ளவர்த்தகன்-எ-று,) அஞ்சிலோதி அழகிய மிருதுவாகிய அளத்தையுடையவள் ஏறுழ்வலி மிகுந்தபலம். (௨௨)

மல்குமாநிதியுடைப்பதுமாகரன்மனையினிலொருகோடிப்
பல்கியேவல்செய் சிலதியர்தம்மினோர் பாவைமற்றவட்கண்டு
செல்வமைந்தனுந்திருமகணீயுமித் தெருவினுதுலர்போல
ஒல்கியொல்கிவந்தடைந்தவாறேதெனக் குணர்த்திநீயெனச்சொன்னாள்

(இ-ள்.)மிகுந்தநித்வியத்தையுடையபதுமாகரனென்னும் பெயரையுடைய அந்தவர்த்தகன்வீட்டில் தோழியானவள்அந்தராஜஸ்திரீயைப் பார்த்து நீராஜஸ்திரீபோலிருக்கின்றனை அப்படியிருக்கநீயும் இந்தப்புத்திரனும் ஏழைகள்போலச் சோர்வடைந்து இந்தத்தெருவில்வந்ததற்குக்காரணமெனக்குச்சொல்லென்றாள்-எ-று. (௨௩)

விம்மிவிம்மிநெஞ்சழிந்து வாய்புலர்ந்திடவிழிவழிநீர்சோர
அம்மவம்மவோவூழ்வினைவினைந் தமையார்க்குரைக்குவனென்று
வெம்மைநெஞ்சுடைத்தலைமகனிழைத்ததுமேதிலார்வினையீட்ட
இம்மையில்விடருற்றிவண்புகுந்ததுமிற்றெனவுரைசெய்தாள்

(இ-ள்) அவ்வாறுதோழிகேட்டவுடன்மனம் அழிந்துஅழுதுகொண்டுகண்களில் நீர்தாரைதாரையாகப்பெருகவும் வாயுலரவும் தாயேஊழ்வினைநேரிட்டதை எவர்களுக்குச்சொல்லுவேனென்று இரக்கமில்லாததன்கணவன்செய்ததையும் அயலவர் களாகியசக்களத்திமார் கொடியசெய்கைசெய்ய (அதனால்) இப்பிறப்பிலேதானே இப்படிக்கொத்ததுன்பம் அடைந்து இவ்விடத்திலடைந்ததும்இவ்வாறுமென்றுசொன்னாள்.

கேட்டுவல்விரைந்தோடினள்சென்றனள்கெழுமுசீர்வணிகேசன்
றாட்டிணைத்தொழுதையநய்கடிநகர்சார்ந்தொருகுலத்தையல்
வாட்டடங்கண்ணுளேந்தியமகவினுள் வருந்தியமுதுநோயாள்
காட்டின்மன்னவன்விடுத்திடவந்துநங்கடையடைந்தனளென்றாள்

(இ-ள்,) அந்தராஜஸ்ரீசொன்னதைக்கேட்டு அதிகவினாவாகவோடிச்சென்றுவணிகேசனிடயிரண்டுபாதங்களையுந்தொழுதுஐயனேஒருராஜஸ்திரீயானவள்நம்மிடநகரத்தையடைந்து ஒருகுழந்தையையேந்திக்கொண்டுவருந்தியமிவந்த நோயையுடையவளாயவள்கணகுறு கியஅரசன் காட்டிலனுப்பிவிட வந்துநம்மிடவீட்டிக்கடைத்தலைசார்ந்திருக்கிறாளென்றுசொன்னாள்-எ-று. வாட்டடங்கணாள் வாள்போன்றதாயநீண்ட கண்களையுடையவள் கடிநகர்காவலையுடையநகர். (௨௫)

தருமசிந்தையினீதியிற் கொடையினிற் றயவினினிகரில்லான்
கருமமங்கதுகேட்டலுங்குழைவுறுங்கருத்தினன்புறம்போந்தாப்
கருமருந்தனமகவைந்தாயையுங் கண்டதிசயித்திங்கண்
வருதியென்றொருவேதியன்மனையினின் மற்றவர்தமைவைத்தே.

(இ-ள்) தருமசிந்தையிலும் தியாகத்திலும்நீதியிலும்தயையிலும் தனக்கொப்பில்லாதவனாகிய அந்தவணிகேசன அவள்சொன்னகாரியத்தைக் கேட்டமாத்திரத்தில் வருந்துகின்றமனதையுடையனாய்வெளியில்வந்து அவ்விடத்திலிருக்கும் அருமருந்தை ஒக்க குழந்தையையுந் தாயையும்பார்த்து அதிசயித்து இங்கேவாருங்களென்றழைத்துக் கொண்டுபோய்ஒருபிராமணன்வீட்டிலவர்களைவைத்து-எ-று. (௨௬)

உற்றவாயுள்வேதியரெலாம்வருகவென்றுறுநிதிமழைசிந்தி
முற்றும்வல்விடநோயினைமருந்தினான்முரித்திர்மற்றிவனெனளைப்
பெற்றதாயிவண்மகவுமேன்பெருந்துணையென்றவன்பலபேசக்
கற்றநூல்புகன்மருந்தெலாமருத்தவுங் கன்றதுமுழுதுநோயே.

(இ-ள்.) அவ்விடத்திலிருக்கும் வயித்தியர்களையெல்லாம்வரவழைத்துமிகுந்ததிரவியங்கொடுத்து இந்தராஜஸ்திரீ என்னைப்பெற்றதாய்இவள்குழந்தை என்னுடையசகோதரன் ஆகலாலிவர்களுக்குப்பொருந்தியகொடியவிஷநோயை அவுஷதங்களால்முரித்துவிடுங்களென்று அவர்களுக்குஞ்சொல்ல அதைக்கேட்டவயித்தியர்கள் தாங்கள்கற்றுணர்ந்தவயித்தியசாஸ்திரத்திற்சொல்லும் அவுஷதங்களைஎல்லாம் இன்னதினால்தீருமென்று வகையறிந்துகொடுததார்கள் அப்படியவர்கள் கொடுக்கப்பழமையாகிய வியாதியானது கொடுமையுடனதிகரித்தது-எ-று. (௨௭)

இழுதுபெய்குடமெரிதலுங்கனற்சிகையெழுவ பா லெண்ணில்லாப், பழுதினன்மருந்திடுதொறுமுதிர்ந்துநோய்படர்செயப்பலகாலும் அழுதுமாழ்கியபாலகனிலத்தலுமளவிலாத்துயர்பொங்கப்புழுதிணிலத்துருண்டனளுருநுதவிழ் புற்றுறையரவென்ன.

(இ-ள்) நெய்நிறைந்தகுடத்தை எறிந்தமாத்திரத்தில் அக்கினியானது சிகைவிட்டெழுந்தன்மைபோல அளவில்லாத நல்ல மருந்துகளை

க்கொடுக்குந்தோறும் அந்தவியாதிமேலிட்டு த்துன்பஞ்செய் தலினால் இடைவிடாமல் அழுதுசோர்ந்த்புத்திரனிறந்தனன் அவனிறக்கவேயள வில்லாததுயரம்உண்டாகப் புற்றிலிருக்குஞ் சர்ப்பமானது இடிவிழுந்தால் பூமியில்துடிப்பதுபோலப் பூமியில்விழுந்து புரண்டாள் எ-று.

வீழுமெய்பதைத்தெழுமழும்வெதும்பிடும் விம்மும்வெந்துயருள்ளித், தாழுங்கைகளான் முலைமுகட்டெற்றிடுந்தளர்வொடுநனிசோரும் போழுமம்புபாய்மயிலெனமாழ்குறும் பொருமும்புத்திரசோபத், தாழ் நின்றுநின்றுருகும்வெய்துயிர்த்திடுமெலக்கணுற்றிடுமன்னே

(இ-ள்) பூமியில்விழுவள் உடல்பதைத்து எழுந்திருப்பள் அழுவள் வெதும்புவள்விம்முவள் தனக்குநேரிட்ட துயரத்தைநினைத்துச்சோர்வள் இரண்டுகைகளாலும் முலைமுகட்டில் மோதிக்கொள்வள் மிகுந்த மெலிவோடு சோர்வள் அம்புபாய்ந்த மயிலைப்போலச் சோர்வள்தேம்புவள்புத்திரசோகத்தில் அமிழ்ந்துவள் நின்று நின்றுருகுவள் பெருமூச்சு விடுவள் துன்பம் அடைவள் எ-று. (உகூ)

வேறு.

அயலகத்துறை யந்தண மாதருந்
மயலகத்து வணிக மகளிருங்
கயலையொத்தகட் காரிகைபாலெய்திச்
செயலுணர்த்தித் தெருட்டவுந் தேறலாள்.

(இ-ள்) இவ்வாறு துயரப்படுகிறவளைப்பார்த்து அயல்வீட்டி லிருக்கும் பிராமணஸ்திரீகளும் மபக்கத்தைநீக்கத்தக்க வைசியமாதர்களும் சேல்மீனையொத்தகண்களையுடைய அந்தராசஸ்திரீயினிடத்திற்சென்று இவ்வுடலநித்தியமேயல்லாமல் நித்தியமல்லவென்பது அநேகதிருஷ்டாந்தங்களைச்சொல்லித் தெளிவிக்கவுமவள் துக்கம் நீங்கிலளாய்-எ-று.

ஐயனேநம் மரசன்விடுத்தலிற்
கையறத்தளாவேனைநீகைவிடும்
வெய்யகேண்மை வெதுப்பமெலிந்துளேன்
உய்யலேனினி யுன்னைவிடுத்துமே.

(இ-ள்,) அப்பனே நம்முடைய அரசன் நீங்கிவிட்டபடியால் ஆதரவுயில்லாமல்தளருகின்றஎன்னை நீயுங்கைவிட்டகொடிய தன்மையானது வருத்துவதினால் மெலிவடைந்தேன் உன்னைப் பிரிந்தும் இனிப்பிழைத்திருக்கமாட்டேன்-எ-று. (௩க

என்றுபன்னி யிரங்குஞ்சுமதிதான்
சென்றுநாயகன் றெருட்டவுந்தேறலான்

இ-ள். இவ்வாறு சொல்லிச்சொல்லி அழுகின்ற சுமதியென்பவள் தன்னையாதரிக்கும் வர்த்தகன்வந்து தேற்றரவான வார்த்தைகளைச்சொல்லித் தேற்றவுந்தேறாமல் மனம்வருந்திச் சோபமுறும்போது முன்னடந்தவைகளையெல்லாம் அறியத்தக்க விடபன்என்னும் ஒருசிவயோகி அவ்விடத்தில்வந்தார்-எ-று (௩௨)

வந்தயோகி மலரடி தாழ்ந்தெழுந்
தெந்தைநீயிவ ளித்துயர் தீர்த்தியென்
றந்தநாயக னுரைப்ப வருந்தவன்
கொந்துலாங்குழ லிக்கிவை கூறினான்.

இ-ள். வந்தசிவயோகியை அந்தவர்த்தகன்கண்டு பாதங்களில் வணங்கி என்னையனே, இந்த ஸ்திரீயின் அரியதுயரத்தைத் தீருமென்றுசொல்ல அவனைப்பார்த்துச் சிவயோகி யிந்தவார்த்தை சொல்லுகிறார் என்றவாறு. (௩௩)

என்னைமாழ்கி யிரங்குவ தேழைநீ
பொன்னுமாவி பொருந்தியகாயமு
மின்னுமொக்குளும் போனணி வீந்திடும்
அன்னதுள்ளி யறிஞ ரழிவுறார்

இ-ள். தாயே நீயிரங்கித் துயரப்படுவதில் என்னபிரயோசனம் திரவியமும் உயிர்பொருந்திய இவ்வுடலமும் மின்னலைப்போலவும்நீர்க்குமிழியைப்போலவும் விரைவில் இறந்துபோய்விடும்(ஆகையால்)அதைக்கருதி அறிவுள்ளவர்கள் வருந்தார்கள்-எ-று. (௩௪)

கூறுசாத்திகங் கூடிடிற்றேவரா
மாறிராசதஞ் சேர்ந்திடின்மாந்தராம்
வேறுதாமத மேவில்விலங்கதாம்
ஊறுதோற்றங்கண் முக்குணத்துற்றிடும்

இ-ள். சொல்லுகின்ற சத்துவகுணம் கூடுமேல் தேவர்களாவார்கள் அக்குணத்துக்கு மாறாகிய இராசதகுணங்கூடினால் மனிதராவார்கள் அதிலும்வேறாகிய தாமதகுணங்கூடினால் மிருகமாவார்கள் இவ்வாறுமுக்குணத்தினால் பிறப்புண்டாகும்-எ-று. (௩௫)

முக்குணத்தின் முயற்சியிலோரொன்று
தொக்கவாறு துவன்றுங் குறியினன்
மக்கடேவர் விலங்கென வந்தவை
துய்க்கும்போகந் தொலையத்தொலையுமே

இ-ள். மூன்றுவிதகுணத்தின்முயற்சியில் ஒவ்வொருகுணஞ் சேர்ந்தமுறைமைப்படி உண்டாகும்குறியினால் மனிதர்களென்றும் தேவர்க

ளென்றும் மிருகங்களென்றும் வந்து அவைகள் அனுபவிக்கவேண்டிய போகங்களை அனுபவித்துத் தொலைந்தபின் உடலும் அழிந்துபோமென்றவாறு (௩௬)

பண்டைவாசனை தொக்கபயிற்சியாற்
கொண்டகாய நிலையெனக்கொள்வரோ
அண்டரேனும் பிறப்புளதாமெனின்
விண்டுகாய மிறப்பதுமெய்யரோ

இ-ள். பூர்வவாசனைசேர்ந்த பயிற்சியினால் உண்டான சரீரத்தை நிலைமையென்று எண்ணுவார்களோ தேவர்களேயானாலும் மறுபிறப்புண்டென்றால் உயிரானது சரீரத்தைவிட்டு நீங்கிப்போவதுஉண்மையாகும் என்றவாறு. (௩௭)

அங்கமொன்றி னருந்தியவற்றினாற்
றங்குதீமல நாளுந்தணந்திடு
மங்கைதீயதற் கித்துயர்வைத்திலை
யிங்குமாண்ட மலத்துக்கெனேங்குவாய்.

இ-ள். ஒருசரீரத்தில்உண்ட புசிப்பினாற்பொருந்திய தீயமலமானது நாள்தோறும் நீங்கிவிடும்தாயே நீ அதைக்குறித்து உன்மனதில் இப்படிக்கொத்த துயரத்தைவைக்காதே இப்போது நீங்கியமலத்தைக்குறித்து ஏனேங்குகிறாய் எ-று. (௩௮)

சாவதும்பிறப் பும்மெனுந்தன்மையைத்
தேவருங்கட வாரிதுதிண்ணமே
பாவைநீதுயர் பட்டிடிற்றீருமோ
யாவர்முன்னழு தின்னுயிர்மீட்டுளார்.

இ-ள். இறப்பதும் பிறப்பதுமாகிய தன்மையைத் தேவர்களுங்கடக்கமாட்டார்கள் இது உறுதியாம் தாயே-நீதுயரப்படுவதினால் வந்தது நீங்குமோ முன்னிருந்தவர்களில் போனவுயிரை அழுது மீட்டுவார்கள் யாராவதுண்டோ-எ-று. (௩௯)

படர்கிரித்தலைப் பான்மதிபோற்கரிப்
பிடர்நிழற்று கவிகையிற்போந்தவர்
கடனிலத்திற் கவிழ்ந்தினரன்றிமற்
றுடலெடுத்தெவர் சாவையொருவினர்

இ-ள். பெரியமலையனுச்சியில் சந்திரோதயமானதுபோலயானையின்பிடரியிலேறிக்கொண்டு நிழலைச்செய்கின்றகுடையின்கீழாகப்பவனிவந்தஅரசர்களும் கடல்சூழ்ந்தவுலகத்தில் விழுந்திறந்து போனார்களேயல்லது உடலையெடுத்து எவர்கள் இறப்பைநீக்கினவர்கள்-எ-று (௪௰)

உற்றுறும்விருப் பானுத்தானலன்
மற்றுறும்வெறுப் பான்மடிந்தானலன்
சுற்றுங்கட்சி யொழியத்துறந்துவ
னுற்றபுள்ளி னுடல்விட்டொளித்துளான்

இ-ள். இறந்துபோனபுத்திரன் பொருந்திய உங்கள்விருப்பத்தினு ல்பிறந்தவனல்லன் மேலும் உங்கள்வெறுப்பினல் மடிந்தவனு மல்லன் பின்னைப்பட்ட கூட்டைவிட்டு நீங்கி யாகாயத்தில்பறந்துபோகின்ற பட்சியைப்போல் உடலைவிட்டு மறைந்துபோனான்-எ-று. (௬௪)

தாயர்தந்தைய ரின்பத்தருக்கினு
லாயசுக்கில சோணிதமங்கொரு
காயமாகக் கருக்கொளுமுன்னமே
மாயுமங்கவர் நொந்துவருந்தவே.

இ-ள். தாய் தகப்பன்மார்களுடைய இன்பச்செருக்கினுல் உண்டாகிய சுக்கிலசோணிதமானது தாய்வயிற்றிலொரு கருவாகத்தரிப்பதுக்குமுன்னமே அவர்கள்நொந்து வருந்தும்படிமாய்ந்துபோம்-எ-று.

அங்குமாய்ந்ததின் றென்னினவயவங்
தங்கியையிரு திங்கடணந்தபின்
வங்கவாரிசூழ் மண்ணிடைத்தோன்றியே
பொங்குநற்கிளை கண்டெழப்பொன்றுமே

இ-ள். கருப்பத்திலேகானே இறக்காவிட்டாலும் உறுப்புகளெல்லாம்பொருந்திப் பத்துமாதமுமானபின்பு இவ்வுலகத்திற்பிறந்து பந்துசனங்கள் கண்டழும்படி இறந்துபோம்-எ-று-வங்கவாரி கப்பலோடும்படியான சமுத்திரஞ்சூழ்ந்தஉலகம் (௬௫)

பொன்றறீந்திடிற் பொற்பிறைபோல்வளர்ந்
தொன்றுகேள்வி யுணரவமையுநாட்
டுன்றுபூங்குழ றுஞ்சினுந்துஞ்சுமத்
தன்றுவீத லொழிந்தெழிலாகிய

இ-ள். பூவையணிந்த அளகத்தையுடையவளே பிறந்தவுடன்இறவாமலிருந்தால் அழகிய பிறைபோல்வளர்ந்து சொன்னகல்விகளைப்பகுத்தறிந்து கொள்ளும்படியான பருவத்திலிறந்தாலுமிறக்கும் அல்லது அப்போது இறத்தலின்றி அழகுடன்வளர்ந்து-எ-று (௬௬)

காமனேயெனக் கண்டவர்கண்கவர்
வாமநல்லுரு வோடுமரீஇயபின்
சேமநல்விடை போன்மணஞ்செய்வுழித்
தூமவார்குழ றுஞ்சினுந்துஞ்சுமே

(இ-ள்) அகிற்புகையூட்டத்தக்க அளகத்தையுடையவளே மன்மத னைப்போலக்கண்டவர்கள் பார்வையைக் கிரக்கும்படியான சௌந்தரிய முள்ள உருவத்துடன் வளர்ந்தபின்பு இன்பமுள்ள நல்லரிஷபம் போல க் காளைப்பருவம்பொருந்திய விவாகஞ்செய்யுங் காலத்தில் இறந்தாலும் இறந்துவிடும்-எ-று. (சடு)

கல்விமைந்தர் களிப்புந்திருவொடு
செல்வவூக்கமுந் துய்த்துச்செழிக்குநாட்
பல்குபாவப் பயப்புலிபற்றலு
மொல்கிவரவு முறைமையெனமாயுமே.

(இ-ள்) கல்விநிறைந்த வாலிபர்கள் சந்தோஷத்தையுஞ்செல்வச்செ ருக்கையும் அனுபவித்துச் செழுமையாக வாழுமையாக வாழுநாளில் மிகுந்தபாவமாகிய அஞ்சத்தக்கபுலி பற்றினமாத்திரத்தில் சேர்ந்துமா ணிறப்பதுபோலஇறந்துவிடுவார்கள்-எ,று,வாவுமுறைதாவுகின்றமான்

கூனிமூத்த குரங்கெனக்கோல்பிடித்
தேனையோரு மிகழவிருமலர்
தானையோடு சரிந்திடச்சாவது
மானினோக்கினல் லாயொருவண்ணமே,

(இ-ள்) மான்பார்வைபோல் மருண்டபார்வையையுடையவளே கிழ க்குரங்குபோலஉடல்வளைந்து கையிற்கோல்பிடித்தூன்றிக் கொண்டுமெ ற்றயாவரும் இகழும்படி மலசலங்கள் வஸ்த்திரத்திலேதானே கழலும் படி ஒன்றுந்தெரியாமலிருந்து இறந்துபோவதும்ஒருபிரகாரமாம்-எ-று

காலமென்பர் சிலர்சிலர்கன்மமே
மூலமென்பர் சிலர்முக்குணமென்பர்
ஞாலமென்புன லாதியநல்லுட
லேலுமூன்றிற்கு மேற்றதென்பார்சிலர்

(இ-ள்,) இறப்பதற்குக்காலந்தான் காரணமென்று சிலர்சொல்லுவா ர்கள் அவனுடைய கர்மந்தான் காரணமென்று சிலர் சொல்லுவார்கள் முக்குணங்காரணமென்பார்சிலர் பிருதிவி அப்பு முதலாகிய பஞ்சபூத சம்பந்தமான இவ்வுடல்மேற்சொல்லிய மூன்றுக்குமேற்றதென்று சில ர்சொல்லுவார்கள்-எ-று, (சஅ)

ஆதலானித் திறமுடையாக்கையைப்
போதமுற்றவர் பொய்யெனக்கொண்டுபின்
சாதலுக்கும் பிறத்தற்குந்தம்மனத்
தேதமோவெப் பின்றியிருப்பரோ.

(இ-ள்.) ஆகையினாலே இப்படிப்பட்ட சரீரத்தை ஞானமுள்ளவர்கள் பொய்யென எண்ணிச்சாவதற்கும் பிறப்பதற்கும் துக்கமுஞ்சந்தோஷமு மில்லாமலிருப்பார்கள்-எ-று! (௪௯)

எவ்விகற்பத்த வெவ்வுடலெங்களு
மவ்வியத்தத்திற் றோன்றியடங்கிடும்
பவ்வமுற்றிய பாரினெழுந்துகள்
கொவ்வைவாய்க்கொடி மீண்டதிற்கூடல்போல்.

(இ-ள்.) கோவைக்கனியொத்த வாயையுடைய கொடிபோன்றவளே பூமியில் எழுகின்ற துகள் மறுபடியும் அந்தப்பூமியிலேதானே கூடுவதுபோலே எவ்விதமாகிய விகற்பங்களையுடைய எவ்விதச்சரீரங்களும் மாயையில்தோன்றி அதிலேதானே ஒடுங்கும்-எ-று. (௫௰)

உன்னையீன்றவ ருன்னாலுதித்தவர்
மன்னுமுற்பவந் தோறுமணந்தவ
ரன்னமேதிரை யாழியினுண்மண
றன்னையெண்ணினு மெண்ணுந்தரந்தரோ.

(இ-ள்) அன்னம்போல்பவளே பொருந்திய பூர்வஜன்மத்தில் உன்னைப் பெற்றவர்களையும் உன்னாற் பெறப்பட்டவர்களையும்உன்னை விவாகஞ்செய்துகொண்டவர்களையும் அலைகளையுடைய சமுத்திரத்திலின்சிறிய மணலை யெண்ணினாலும் எண்ணும் அளவை யுடையவர்களோ-எ-

பாகெனுஞ்சொலினாய் படர்காலமா
நாகவாயினி னனிலந்தன்னில்வாழ்
போகமானிடத் தேரைபொருந்தியு
மோகையுஞ்சிறி துற்றிடுமோசொலாய்

(இ-ள்.) பாகுபோல மதுரமுள்ளவசனத்தையுடையவளேகாலமாகிய பாம்பின்வாயில் அகப்பட்டுக்கொண்டிருக்கிற மனிதர்களாகிய தேரைகளுக்குச் சந்தோஷமுஞ் சிறிதுஉண்டாகுமோசொல்லு-எ-று. இவ்வுலகத்தில் போகங்களை யனுபவித்துக்கொண்டுவாழ்கின்ற மனிதர்களாகிய தேரையெனக்கூட்டுக, (௫௧)

முந்தைநான்முகன் முன்னம்படைத்துட
றந்தநாளிற் றனுகரணங்களும்
புந்திசேர்புவ னத்தொடுபோகமும்
பந்தமாமிடை வேறொன்றுபற்றுமோ

(இ-ள்) பழமையாகிய பிரமதேவன் ஆதியிலிந்த உடலைச்சிருட்டித்துத் தந்தநாளில் தனுகரணங்களும் நினைக்கும்படியாகிய புவனபோகங்களும் தொடர்ச்சியாயிருக்கின்றமையால்மத்தியில் நூதனமாயொன்றும்வராது-எ-று. (௫௨)

தோலுமென்பு நரம்புமிறைச்சியு
மேலுமீரலுக் பித்துமிரத்தமும்

சிலுமிட்ட குழிசில்சிதைந்தது
போலுநீயிதற் கென்கொல்புலம்பவே

(இ-ள்.) தோலும் எலும்பும் நரம்பும்மாமிசமும் பொருந்திய சாலு
ம் பித்தநீரும்சீழும் நிறைத்துவைத்த கடம்உடைந்துபோய்விட்டது இ
தற்காக நீபுலம்புவது என்னகாரணம்-எ-று, போலும்முன்னிலையசை

முக்கணாயகன் முப்புரந்தீயெழ
நக்கநாயக னுண்மலர்த்தாடொழு
மக்களன்றி மறலியைவென்றிடத்
தக்கதன்மையர் யாரெனச்சாற்றினன்,

(இ-ள்.) சரீரம் இத்தன்மைத்தா யிருப்பதினால் திரிநேத்திரங்களையு
டையவரும் திரிபுரங்களில் தீபற்றநகைத்தவருமாகியபரமசிவனுடைய
பாதங்களைவணங்கும்அன்பர்கள் நமனை வெல்லலாமேயல்லது மற்றவர்க
ள்யார்வெல்லத் தக்கவர்களென்று சிவயோகிசொன்னார்-எ-று- நாண்ம
லர் அன்றுமலர்ந்த தாமரை மலர்போன்றபாதம்,

வேறு,

கேட்டாளெழுந்தாள் கிளியென்னமிழற்றுசொல்லாள்
வாட்டாரைகாந்தண்மலர் கொண்டெதிர்நீயுமாபோற்
றீட்டாதமைக்கண் பொழியாளிசிறந்தசங்கம்
பூட்டாதகையாற்றுடைத்தின்னபுகல்வதானாள்

(இ-ள்) கிளிபோல்வசனிக்குஞ் சொல்லையுடைய ராசஸ்திரியானவள்
சிவயோகி சொன்னதையெல்லாங் கேட்டு உடனேயெழுந்து வானிலு
ண்டாகும்நீர்த்தாரையைக் காந்தண்மலரால் துடைப்பதுபோலமைதீட்
டாத கண்பொழிகின்ற நீர்த்துளியை வளையணியாமலிருக்கின்றகையா
ல் துடைத்து இந்தவார்த்தைசொல்லுகிறாள்-எ-று-காட்டில்வந்துவிட்
டமையால் மைதிட்டாத கண்ணென்றும் சங்கம்பூட்டாத கையென்றுங்
கூறினார், (௫௬)

கள்ளாருமாலை முடிவேந்துகனன்றுநீக்க
வுள்ளாவிவாட்டு முதுநோயினுணக்குமெற்குத்
தள்ளாவிழுச்சீர்ப்புதல் வன்னெடுசாதருமே
விள்ளாதுன்பத் துழலாதவிரதமென்னா

(இ-ள்.) தேனிறைந்த பூமாலையணிந்த மகுடந்தரித்த அரசன்கோப
ங்கொண்டுநீக்கிவிட்டதினாலும் உள்ளுயிரைவருத்தும்கர்ம்மரோகத்தினால்
மெலிகின்றஎனக்கு இறந்துபோன என்புத்திரனுடன்நானும் இறந்து
போவதே நீங்காத துன்பத்தில் விழாத விரதமென்று சொல்லி-எ-று
தள்ளாவிழுச்சீர் நீங்காத மேன்மையானசிறப்புடைய புத்திரன் (௫௭)

அளிகொண்டசிந்தையறத் தோய்ந்தன்னருட்கணோக்கம்
விளிகின்றகாலத் தெதிர்ந்தேன்வினை வெம்மைதீர்ந்தேன்
முளிகொண்டபைங்கூழ்த் தெறுகோடைமுதிர்ச்சிதீரத்
தளிகொண்டல்சிந்திப் புரந்தாற்றிதன்மைபோலும்

(இ-ள்,) தீயுந் தன்மைகொண்ட பசியபயிரை வாட்டுகின்ற கோடைவெப்பந் தீரும்படி மேகங்கள் நீர்த்துளியைச்சிந்தி வெப்பத்தையாற்றுந்தன்மைபோலக் கிருபைபொருந்திய மனதையுடையமுனிவரே தேவரீர்வந்தருளியகிருபாநோக்கத்தைநானிறக்குஞ்சமையத்தில்பெற்றுக்கொண்டு தீவினைக் கொடுமையை நீங்கினேன்-எ-று; (௫அ)

என்னுவிவள் சாதற்கியைந்துளவெய்ம்மையுள்ள
முன்னுமுரணுவழிபாடு புரிந்ததுமுற்பவத்தில்
பொன்னாரமார்பின் மகவென்பதுந்தேர்ந்துபூவை
தன்னார்வமைந்தனுயிர் மீட்குந்தகைமைசெய்தான்

(இ-ள்) இவ்வாறுசொல்லி அந்த ராசஸ்திரி இறப்பதற்குத் துணிந்த நிச்சயத்தையறிந்து இந்தம்புத்திரன் முப்பிறப்பில் தனக்கு'உபசாரஞ்செய்தவனென்பதையும் எண்ணி அவளுடைய ஆசைப் புத்திரனுயிரைமீட்கும் வகையை அம்முனிவர்செய்தார்-எ-று, பொன்னாரம்பொன்மாலையணிந்த மார்புடையபுத்திரன் (௫௯)

பாலொத்திலகுந் திருநீறுபரிந்தெடுத்து
வாலப்பிறைபோல்பவ னெற்றிவயங்கச்சாத்தி
பாலத்திருண்டகளத்தான் பொன்னடியையேத்தி
மூலத்திருமந்திரங்காதின் மொழியலோடும்

(இ-ள்) பால்போன்ற வெண்மைநிறங்கொண்டு விளங்காநின்ற திருநீற்றினைப் பரிவுடனெடுத்து பாலசந்திரன் போல்பவனாகிய அந்தப்புத்திரனுடைய நெற்றியில் பிரகாசிக்கும்படித்தரித்து விஷத்தினால் கறுத்த கண்டத்தனாகிய பரமசிவனுடைய திருவடிகளைத் துதிசெய்து பஞ்சாக்ஷரத்தைக் காதில் உபதேசித்த அளவின்-எ-று, (௬௰)

பைந்தாட்கமலங்கண்மலர்ந்தெனப்பாலன்செங்க
ணந்தாதுவிழித்திட நற்றுயினீங்கினான்போன்
முந்தாவெழுந்தே முலையுண்ணமுயலும்வேலை
செந்தாமரைமேற் றிருவன்னவள்சேர்ந்துபுல்லி

(இ-ள்) பசியதாளையுடைய தாமரைமலர்கள் மலர்ந்ததுபோல இறந்திருக்கும் புத்திரன் கண்களைத்திறந்து நித்திரைநீங்கினவன்போலெழுந்து முந்திமுலையுண்ணத்தாவினபோது திருமகளையொத்த அந்தராசஸ்திரி தன்புத்திரனைக்கிட்டி அணைத்துக்கொண்டு-எ-று, (௬௧)

பொல்லாவறுமைத் துயர்பூண்டபொறியிலாள
னில்லாதசெம்பொன் கிடைத்தாங்கணிழந்துமீள
நல்லாதரவொத்தொடு பெற்றெனநங்கையோகை
ரில்லாதுபொங்கக்களி பெய்தினணின்றகாலே

(இ-ள்) கொடியவறுமைத் துயரத்தைக்கொண்டிருந்த அங்கப் பழுது முள்ளவனாகிய ஒருவன்தனக்கில்லாததிரவியத்தைப்பெற்றுஉடனே யிழந்துமறுபடியும் அந்ததிரவியத்தை மிகுந்த ஆசையுடன் பெற்றுக் கொண்டதுபோல அந்தராசஸ்த்திரியானவள் சந்தோஷந்தனக்குள்ளடங்காமல் பொங்கக்களிப்பை அடைந்துநின்றபோது-எ-று, (சுஉ)

மீட்டுங்கருணைக்கடல்போல விளங்கும்யோகி
தோட்டங் கமலத்துகட்டாது சொரியதேபோல்
வாட்டங்குழையான்மகன் மேலுமனைவிமேலுங்
காட்டுந்தளிர்ச்செங்கையினீறு கவினவிட்டான்

(இ-ள்) கிருபைக்கடல்போல் விளங்குகன்ற அந்தச் சிவயோகியானவர் இதழ்களையுடைய தாமரை மலரானதுமகரந்தப்பொடியைச் சிந்துவதுபோலத் தம்முடைய கையினால் விபூதியைராச குமாரன் மேலும் ராசன்மனை மேலுந்தரித்தான்-எ-று-வாட்டங்குழையான் வாளாயுதம் பொருந்திய கையையுடையஅரசன் மாட்டுந்தளிர்ச்செங்கைதளிரியலைக்காட்டுகின்றசெங்கை, (சுங)

வெண்ணீறவனன் பொடுசாற்றறும்வெற்றிரும்பு
தெண்ணீரிரதத்துளி குத்தச்செழும்பொனாகி
மண்ணீர்மைபெற்று லெனமற்றவர்ரமணிநோயின்
புண்ணீர்மைநீங்கிப் பசும்பொன்னுருவெய்தினின்றார்

(இ-ள்) அவர்விபூதி தரித்தமாத்திரத்தில் வெறுவிய இரும்பில்தெளிவான தன்மையுள்ள ரசத்துளியைக் குத்தினவுடன் அவ்விரும்புநல்லபொன்னாகி அலங்காரமுள்ளதன்மையைப்பெற்றதுபோலநோயினாலுண்டாகிய புண்தன்மை நீங்கி அவர்கள்சரீரம்பொன்னிறம்பொருந்தினார்கள்-எ-று, (சுச)

கங்காதரனன் புறுதொண்டன்கழிந்தவாவி
மங்காதுமீட்க வுயிர்வந்தபின்மைந்தனோடு
கொங்கார்குழலாடிருமேனியிற் கொண்டபுண்ணோய்
தங்காதுநீங்கத் திருநீறவண் சாற்றலோடும்

(இ-ள்) இறந்துபோனவுயிர் அப்படியேபோகாமல் பரமசிவனிடத்தில் அன்புள்ள தொண்டராகிய சிவயோகியானவர் மீட்க உயிர்பெற்றபுத்திரனுடைய சரீரத்திலும் தாயின்சரீரத்திலும் பொருந்திய புண்ணானதுகொஞ்சமுமிராமல் நீங்கும்படி விபூதிதரித்த அளவில்-எ-று (சுரு).

தண்டாதவேள்வி மறையோர்குலக்கையலாரும்
வண்டாதரிக்குந்தொடை நாயகன்மடந்தைமாருங்
கண்டார்மகிழ்ந்தார்வியந்தார் களித்தார்கடனஞ்
சுண்டான்றிருத்தாடொழு தேத்தெடுத்தோதினின்றார்

இ-பு, எப்போதும் யாகஞ்செய்துகொண்டிருக்கும் பிராமணகுல மாதர்களும் அங்கவர்த்தகனுடைய வீட்டுமாதர்களும்பார்த்துச் சந்தோஷித்து அதிசயமடைந்து களிப்புற்றுப்பரமசிவனுடையதிருவடிகளைத்தொழுது தோத்திரஞ்செய்தார்கள்-எ-று. ௬௬

வாவுந்திரையார்கலி சூழும்வளாகங்காக்குங்
கோவின்பெருந்தேவியு மைந்தனுங்கோதிலாத
தேவின்கழற்றாள்பணி யோகிதன்செய்யபொற்றா
ளாவின்புறதவத்தி வணங்கிவிலலுற்றார்

இ-பு, தாவிமேலெழுகின்ற அலையையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த பூமியைக்காக்கும் அரசன்மனைவியும் புத்திரனும்பரமசிவனுடைய திருவடியைப்பணிகின்றசிவயோகியின்பாதங்களை நாவினால்துதிசெய்து பணிந்து சொல்லுகின்றார்கள்-எ-று-கோதிலாததே-குற்றமில்லாத கடவுள் கழற்றாள்-வீரகண்டையணிந்ததிருவடி செய்யப்பொற்றாள்-செம்மைநிறத்துடன் அழகியபாதம்-இன்புற-இன்பம்பொருந்த, ௬௭

துஞ்சுஞ்சிறுவனுயிரீந்துந் தொடர்ந்தநோயா
லஞ்சுந்துயரங்களைக் காத்துமளிமைகின்றாய்
வஞ்சம்புணர்மானிடரேது கைம்மாறுசெய்வேந்
தஞ்சந்திருத்தாளென யோகிதன்றாளில்வீழ்ந்தார்

இ-பு, இறந்தபுத்திரனுடைய பிராணனைக்கொடுக்கும் எங்களுக்கு நேரிட்ட நோயினால்அஞ்சுகின்ற துயரந்தீர்ந்தும்கிருபையுள்ளவராயிருக்கின்றதேவரீருக்குசிறியமானிடர்களாகியநாங்கள் என்னபிரிதுஉபகாரஞ்சேய்வோம் எங்களுக்கு உம்முடைய திருவடியே ஆதாரவென்றுசிவயோகிதன்பாதத்தைவணங்கினார்கள்-எ-று, ௬௮

வேறு,

இறைஞ்சிவீழ்ந்தி மிருவர்தம்மையுஞ்
சிறந்தகைகளா லெடுத்துச்சீரியோ
னிறைந்தவோகையா னிகழ்த்துமாசிக
ளறைந்துநாமமு மறியக்கூறினான்

இ-பு, இவ்வாறுசொல்லிவணங்கிய அவ்விருவரையும் சிவயோகியானவர் தம்முடைய திருக்கைகளால்எடுத்துநிறைந்த சந்தோஷத்து

டன் சொல்வதான ஆசிர்வாதஞ்செய்து அந்தப்புத்திரனுக்குப்பெய ருங்கொடுத்தார்-எ-று, கூகூ

பத்திராயுவிப்பாலனுமமென்
றெத்தலங்களு மிசைக்கநின்மகன்
மைத்தடங்கணாய் வளருங்காறுமில்
லுய்த்துநீணிதி வணிகனேம்பவே

இ-பு, இந்தப்புத்திரன்பெயர்பத்திராயுஎன்றுஎவ்விடத்துமெல்லா ருஞ்சொல்லக்கடவது மைதீட்டுங்கண்களை யுடையவளே உன்புத்திர ன் வளர்கிறவரைக்கும் தன்வீட்டில் இவ்வர்த்தகன் ஆதரிக்கக்கடவ ன்-எ-று, எா

இங்குவைகுநின் னெழில்கொள்பாலகன்
பொங்குநற்கலைப் புணரிநீந்தினன்
மங்கில்செல்வமு மாசிலாட்சியு
மெங்கணுயகனருளினெய்தியே

இ-பு, இவ்விடத்திலிருக்கும் உன்புத்திரன் சாஸ்திரங்களை யெல் லாமோதி யுணர்ந்துஎம்மிறைவன் கிருபையால் கெடாதசெலவமும் நல்ல அரசாட்சியும் அடையக்கடவன்-எ-று,பொங்குமிகுந்தநல்லசா ஸ்திரமாகிய சமுத்திரத்தை நீந்தினவனாய் எக

வனைந்தநீண்முடி மன்னனாகியே
யனந்தகாலமு மவனிகாத்திடு
மினைந்தமூப்புநோ யிகந்ததேவர்போற்
கனைந்துவண்டலாங் கண்ணிமைந்தனே

இ-பு, வண்டுகள் இசைபாடிக்கொண்டிருக்கும்படியான பூமாலைய ணிந்தஉன்புத்திரன்மகுடந்தரித்துக்கொண்டுமன்னவனாகியவருந்து கின்ற மூப்புப்பருவமும்வியாதியுமில்லாமலிருக்கிறதேவர்களைப்போ லஇவ்வுலகத்தைக் காத்துக்கொண்டு நெடுநாலிருப்பான்-எ-று. எஉ

என்றுபாலனுக் கெதிர்பயாவையு
மன்றல்வார்குழற் கியம்பிமாதவன்
சென்றனன்னெனத் தெளியக்கூறினன்
றென்றுமாக்கதை சூதனென்பவே

இ-பு, இவ்வாறுசொல்லியதுமன்றி அந்தப்புத்ரனுக்கு மேல்வர த்தக்கவைகளையும் அவன்தாயுடன்சொல்லிச்சிவயோகிபோய்விட்டா ரென்று சூதமுனிவரானவர் மகத்துவமுள்ள பழமையான இந்தசரி த்திரத்தை நைமிசாரணியமுனிவர்களுக்குத் தெளியும்படிச் சொன் னார்-எ-று, எங

சிவயோகிமகிமையுரைத்த-அத்தியாயமுற்றிற்று,
ஆ திருவிருத்தம் கூாஎ0,



உ

சிவமயம்,

## பதினொன்றாவது,

# பத்திராயுவுக்கு அரசியலளித்த அத்தியாயம்,

ஐந்துமுகத்தானடியாற் செயல்கேட்டிங்
குய்ந்தனம்யாமென்னு முனிவோருளங்களிக்க
மைந்துடலம்பெற்றார்க்கு முத்திவழிகாட்டும்
பாதமற்றஞானமுனி மீட்டும்பகர்ந்தனனே

இ-பு- ஐந்துதிருமுகங்களுள்ள பரமசிவனுடைய அடியார் செய்கையைக்கேட்டு நாங்கள்உய்ந்தோமென்று சொல்லியநைமிசாரணிய முனிவர்கள் மனஞ்சந்தோஷிக்க வன்மையுடன் உடல்பெற்றவர்களுக்குமோக்ஷவழியைக்காட்டுகின்ற ஞானவானாகியசூதமுனிவர் மறுபடியுஞ்சொல்லுகிறார்-எ-று, ஐந்துதிருமுகங்களின் திருநாமம்-ஈசானம் தற்புருஷம்,வாமம்,அகோரம் சத்தியோசாதம்,என்பவைகளாம்ஈசானமுகம் படிகநிறமுள்ளதாகமேல்நோக்கியபார்வையாயிருக்கும். தற்புருஷமுகம் பொன்னிறமுள்ளதாய்க் கிழக்குதிசைநோக்கியிருக்கும், அகோரமுகம் தெற்குநோக்கிநீலநிறமுள்ளதாயிருக்கும், வாமமுகம் பொன்னிறமுடன் வடக்குநோக்கியிருக்கும்.சத்தியோசாதமுகம் வெண்மைநிறமுள்ளதாய் மேற்குநோக்கியிருக்கும்-சிவாலயங்களில்தீபாராதனைசெய்யும்போது நாலுதீபத்தட்டுநாலுதிக்கிலும் அந்நாலின் மத்தியில் ஒருதட்டுமாக அஞ்சுதட்டுவைத்துத் தீபாராதனைசெய்வது, பரமசிவனுடைய பஞ்சமுகங்களுக்கும் தீபாராதனைசேய்கிறபாவனையாம் மத்தியில்வைத்திருக்கிற ஈசானமுகத்தட்டு முதலிலும்பின்புதற்புருடமுகத்தட்டுமுதல் நான்குதட்டும் மேற்சொல்லிய திருமுகக்கிரமப்படியெடுத்துத் தீபாராதனைசெய்வது-சிவலிங்கப்பெருமான் மேற்நோக்கிய சந்நிதியாயிருந்தால் அந்தத்திக்குநோக்கிய திருமுகமேதற்புருஷமுகமாகத் தற்புருஷத்தட்டுவைத்துத் தீபாராதனைசெய்யும்படி ஆகமவிதியாம்-தெற்கு வடக்குநோக்கியசந்நிதிகளாயிருந்தால் அந்தந்தத்திசையே தற்புருஷமாகக்கொள்ளவேண்டும் இன்னும் உண்டு அவையெல்லாம் எழுதினாற்பெருகும்,

பிங்கலைஎன்றோதும் பெருங்கணிகையோரிராத்
துங்கமிகுத்தவத்துத் தொல்லோன்விடபனுக்குச்
செங்கமலத்தாள்வருடிச் செய்தவழிபாட்டினா
லங்கவளுஞாலத் தலர்மடந்தைபோலவே

இ-பு, பிங்கலையென்று சொல்லப்படுகிற ஒருகன்னிகைமாதானவள்விடபனென்னுஞ் சிவயோகிக்கு ஒருநாளிராத்திரி திருவடிகள் வருடிச்செய்தஉபசாரத்தினால் அந்தப்பிங்கலையானவள் இவ்வுலகத்தில் திருமகள்வந்துற்பவித்ததுபோல-எ-று, துங்கம் பரிசுத்தமுள்ளதவத்தையுடைய பழமையானசிவயோகி, ௨

போர்கெழுவேல்வேந்தன் புகழ்ச்சந்திராங்கதற்குச்
சீர்கெழுமுதாரமாஞ் சீமந்தனிவயிற்றினி
வார்பெய்முலைக்கீர்த்தி மாலினியென்னுமமொடுந்
தார்புனைமெல்லோதித் தளிரியலாய்த்தோன்றினாள்

இ-பு, போர்செய்வதற்கேதுவாகப்பொருந்திய வேலாயுதத்தையுடையவனும்புகழ்பெற்ற சந்திராங்கதனென்னும் அரசனுக்குக்கற்புள்ளமனைவியாகிய சீமந்தனிவயற்றில் புத்திரியாய்ப்பிறந்துகீர்த்திமாலினியென்னும்பேர்பெற்றாள்-எ-று. வார்பெய்முலைகச்சணிந்தமுலை தார்புனைபூமாலையணிந்த மிருதுவாகிய அளகத்தையுடையதளிர்போன்றசாயல்உள்ளவளாய்த் தோன்றினாள், ௩

வானமிருடீர வளருமதிப்பிள்ளையைப்போற்
றேனமருந்தாரவேந்தன் செல்வக்குலமோங்கக்
கானமருங்கூந்தற் கனிவாய்க்கழைமென்றோட்
பானல்விழியாள்வளர்நா ளுற்றசெயல்பன்னுவாம்

இ-பு, ஆகாயத்தில் இருள்நீங்கவளர்கின்ற இளஞ்சந்திரனைப்போல்சந்திராங்கதனுடைய குலமானது ஓங்கும்படி கீர்த்திமாலினியென்னும்பெண்ணானவள்வளருகிறநாளில் பொருந்தியசெய்கையைச்சொல்லுகிறோம்-எ-று, தேனமரும் தேன்பொருந்திய பூமாலையணிந்த அரசன், கானமரும்வாசனைதங்கிய அளகமும் கோவைகனியொத்த வாயும் மூங்கிலையொத்த மெல்லியதோளும் நீலோற்பலம்போன்ற கண்களுமுள்ளபெண். ௪

விஞ்சையரினல்யாழ் விதம்பயன்றுவேதமுதல்
வஞ்சமிலாவாறங்க நீதிமனுவாராய்ந்து
கொஞ்சுகரிபரிதே ரூர்ந்துகொலைபடைக
ணெஞ்சங்களிக்க நிகரில்லார்கற்றுணர்ந்தாள்

இ-பு, தங்களுக்குழப்பில்லாதபத்திராயுசுனேயன்என்பவர்கள்வித்தியாதரரைப்போல வீணையின் வகைகளைக் கற்றும்வேதமுதலாகஆறங்கங்களும் மனுவிக்கியானமென்னும் நீதிசாஸ்திரமும்கற்றுணர்ந்தும்மெதுவாக அடிபெயர்த்துவைத்து நடக்கு யானே யேற்றம்குதிரையேற்றம் தேரேற்றம் இவைகளெல்லாங் கற்றுணர்ந்தும் தனுமுதலாகிய ஆயுதபயற்சியும் மனங்களிக்கக்கற்றுணர்ந்தார்கள்-எ-று. ௫

மாறநிருபன்மகன் பத்திராயுவெனுஞ்
சிற்றச்சிறுகுடிமிச் செவ்வாய்மழகளிறுஞ்
சொற்றவணிகன்ற நயன்சுனேயனுமா
யுற்றுமருவியுட லுயிர்போல்வைக்கினர்

இ-பு, ராசபுத்திரனுகிய பத்திராயுவென்பவனும் இவர்களையாதரிக்கும் வணிகனுடைய புத்திரனுகிய சுனேயன்என்பவனும்ஒருவனைவிட்டொருவன் பிரியாகில் உடலுமுயிரும்போல இருந்தார்கள்-எ-று. சிற்றச்சிறகுடுமி சிறியகுடுமியும் செவ்வாயுமுள்ள இளமையான யானேக்கன்றினையொத்த ராசபுத்திரன் ௬

தக்கமறையோர் தழன்மாட்டவிசொரிந்து
மிக்கசடங்கியற்ற நாய்கன்விழைவோடுந்
தொக்கவிரவலர்பாற் சொன்னமழைபொழிய
வொக்கவிருவோரு முந்நூலுவந்தனிந்தார்

இ-பு, தகுதியுள்ளபிராமணர்கள் ஓமாக்னியினிடத்தில் அவிர்ப்பாகங்கொடுத்துச் சடங்குகள்செய்ய அந்தவணிகன்வந்திருக்கிற இரவலர்களுக்கு மழைபொழிவதுபோலதிரவியங்கொடுக்கவும் அந்தஇரண்டுபுத்திரர்களும்ஏககாலத்தில்உபநயனஞ்செய்துகொண்டார்கள்-எ-று உவந்துசந்தோஷித்து, ௭

ஞானநூலாதிபல விஞ்சைநயந்தளித்த
வானவர்தந்தேசிகனே போல்வான்மனமகிழ
ஊனமில்சீரொண்மணியும் பொன்னுமுவந்தளித்துத்
தேனமாதார்மைந்தர் திருவயதிரெட்டடைந்தார்

இ-பு, ஞானசாஸ்திரமுதலாகிய பலகலைகளை விருப்பத்துடன்அருள்செய்த தேவகுருவையொத்த ஆசாரியர் மகிழும்படி காணிக்கையாக ரத்தினங்களும் பொன்னுமகிழ்ந்துகொடுத்துப்பதினறுவயதுள்ளவர்களானர்கள்-எ-று. பழுதில்லாத சீரும் ஒளியுமுள்ளமணிதேனமர் தேன்பொருந்திய மாலையணிந்தபுத்திரர்கள். ௮

மண்டுபுருவச்சிலே குனித்துவாட்கண்ணை
கொண்டகொடுங்கணையா யெய்வான்குழுக்கொண்டு

கண்டமகளிர்கடற் பார்முழுதாளுந்
திண்டிறல்மேவற்காற்காளை திருமார்பத்தெய்யுநாள்

இ-பு. கண்டமாதர்கள் கூட்டங்கொண்டு நெருங்கிய புருவமாகிய வில்லைவளைத்து வாள்போன்றகண்களை கொடியபாணமாக எய்யக்குறித்து ராசபுத்திரனுடைய மார்பினிடத்தில்ஏவுமபடியானபருவம்அடைந்தநாளில்-எ-று. சமுத்திரஞ்சூழ்ந்த உலகமுழுவதும் ஆளத்தக்கபராக்கிரமமுள்ள வேளேந்திய ராசபுத்திரன், ௬

தீர்ந்தவுயிர்முன் னளித்தசிவயோகி
வார்ந்தசடிலஞ்சுவற்புரளவந்தெய்த
சேர்ந்துசுமதியெனு சேரிழையுநெஞ்சமருள்
கூர்ந்தகுமரனுங் கோதிலான்றொழுதார்

இ-பு.நீங்கியஉயிரை முன்னங்கொடுத்த சிவயோகியானவர் நீண்டசடையானது பிடரியினிடத்துப்புரண் டசையும்படிவா நேரிற்கண்டு அந்தராஜஸ்திரியும் மனதில்மிகுந்தகிருபையுள்ள அவள்புத்திரனும் பரிசுத்தரான அந்தச்சிவயோகியின் பாதத்தில்வணங்கினார்கள்-எ-று.

மாண்டபெருந்தவத்தோன் சிந்தைமகிழ்வெய்தப்
பூண்டபரிவினராயப் பொன்னுண்மலர்தூவிக்
காண்டகுபால்செந்தேன் கனிபொற்கலத்தேந்தி
யாண்டுமிகும்பூசைவழி பாட்டெனளிற்தார்

இ-பு. மாட்சிமைதங்கிய சிவயோகி மனமகிழ்ச்சியடையத்தக்கதாக அன்புள்ளவர்களாய் நல்லமலர்கள்தூவிப் பார்வைக்குமினிய மதுமுள்ளபால்தேன்பழங்கள்பொற்கலத்தில் வைத்து ஆராதனைசெய்து அமுதுகொள்ளச்செய்தார்கள்-எ-று.

கோடும்பவளக் குறுஞ்செடிலமாவிரதி
வாடுஞ்சிறுமருடிற செல்வியையுமைந்தனையு
நாடுங்கருணையுரிந் துநகைமுகத்தாற்
றேடும்பொருலனையீர் தீதிலவேயென்றுரையா

இ-பு, வளைவாகத் தொங்குகின்ற சடையையுடைய சிவயோகியானவர் தம்மைவணங்கிய அவ்விருவருக்கும் ஆசீர்வசனஞ்சொல்லிச்சுகமாயிருக்கிறீர்களா என்றுவினவினர்-எ-று பவளம்-பவள நிறமுள்ள சிறியசடை-வாடும்-மெலிவாகிய சிறியவிடையையுடையவுள்மகிழ்ச்சியுள்ளமுகம்-தேடும்பொருளனையீர்-தேடுகின்ற பொருளை யொத்தவளேக்ஷேமமா

வாவுபரிதேர்வேந்தன் மைந்தன்முகநோக்கி
மேவுகலையுள்ள விகற்பமெல்லாங்கற்றனையோ
தேவனெனத்தேசிகனைச் சிந்தைமகிழ்வித்தனையோ
வேவுசுடர்வெலோ யெமையுநினைப்பாயோ

இ-பு, தாவிவசெல்லுகின்ற குதிரைகட்டிய தேரினையுடையராசகுமாரன் முகத்தைப்பார்த்து யாவரும் விரும்புகின்ற அறுபத்துநான்குகலைகளுங் கற்றுக்கொண்டனையா, ஆசாரியரைக்கடவுளாகப்பாவனைசெய்து அவர்மனசுசந்தோஷிக்கும்படிசெய்தனையா. பகைவர்மேற்செலுத்தும்படியான வேலையுடையபுத்திரனே எம்மையும் எப்போதாவதுநினைத்திருப்பையா-எ-று. ௰௩

சொல்லாயெனமுனிவன் சொல்லுமுறைகேட்டு
நல்லாளடிதொழுது நானிலத்துமாய்க்கவர்போற்
புல்லார்புறங்காட்டிற் போடாதுயிரளித்த
வல்லாய்நினையு மறந்திருக்கவல்லோமே

இ-பு, சொல்லென்று சியயோகிசொல்லிய வார்த்தையை ராஜஸ்திரிகேட்டு அவர்பாதத்தையணங்கி சுவாமி இவ்வுலகத்தில் இறந்தவர்களைக்கொண்டுபோய்ப் போடுவதுபோல முன்னிறந்திருந்த புத்திரனைப்புற்கள்நிறைந்த சுடலையிற் போட்டுவிடாமற்படிக்கு உயிர்கொடுத்தவல்லவரே உம்மையும் நாங்கள் மறந்திருக்கவல்லமா-எ-று ௰௪

நீணிலமேல்வீந்தவுயிர் நீயளிக்கப்பெற்றேனை
மாணவகனுக மறைமுனியேகொண்டருளிக்
காணரியசெய்யகோற் காவலாநீதிபகன்
றுணவமீடாத வறிவுமளிப்பாயென்றாள்

இ-பு, சிவயோகியே இந்தபெரியவுலகில் இறந்தவுயிரை தேவரீர்கொடுக்கப் புழைத்திருக்கும் என்புத்திரனைச்சிஷனுகக்கொண்டு இத்தன்மைத்தென்று எளிதில் அறியக்கூடாத செங்கோல்செலுத்தும்அரசர்களுக்குரிய நீதிகளைச்சொல்லி ஆணவம்மேலிடாத வண்ணம்ஞானமும் அருள்செய்யுமென்று சொன்னாள்-எ-று, ௰௫

இத்தகையமாற்ற மிவளுரைப்பக்கேட்டமுனி
சித்தமுவந்து சிறுவன்முகநோக்கிக்
கொத்தவிழும்பைந்தார்க் குமரநீகேட்டியென
உத்தமநன்னீதிமனு நூலுணர்த்தினன்

இ-பு, இத்தன்மையுள்ள வசனங்களை அந்தராஜஸ்திரி சொல்லக்கேட்ட சிவயோகியானவர் மனஞ்சந்தோஷித்துப் புத்திரன்முகத்தைப்பார்த்துப் பூங்கொத்துகள்மலர்ந்திருக்கும்மாலையணிந்தகுமரனே நீ

கேளென்று நல்லநீதிகளைச்சொல்லும்மனுவிக்கியானேஸ்தரத்தைஅ
ருளிச்செயதார்-எ-று, ௰௬

ஆழியுலகத்தி னந்தனரேயாதியாய்
வாழுமொருநான்கு வருணத்தோர்தம்மையெல்லா
மூழிமுதல்வ னுருவெடுத்துச்செங்கோலாற்
சூழிமதயானைத் தொல்வேந்தாய்க்காக்குமே

இ-பு, சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தில் வாழுகின்ற பிராமணர்
களாகிய நான்குவருணத்தாரையெல்லாம் ஊழிமுதல்வனுகியபரமசி
வனெற்றிப்பட்டங்கட்டிய மதத்தயானையையுடைய மழமையாகிஅ
ரசர்களாகத் திருமேனிகொண்டு நீதியினுற்காப்பன்-எ-று. ௰௭

வேந்தன்முறைதிறம்பின் வேதவிதிதிறம்பு
மேந்திழையார்தங்கற்பு மில்லறமுமில்லாவா
மாந்தர்பசியா லுணங்கமழைவறந்து
பாந்தள்முடிகிடந்த பாரின்விளைவஃகுமால்

இ-பு, அரசன்நீதிதவறினல் வேதவிதிகளதவறும்மாதர்களுடைய
கற்பும் இல்லறமுமாறிபோம் மனிதர்கள்பசியால்வருந்தும்படிமழை
பெய்யாமல் ஆதிசேடன்முடியிலிருக்கும் பூமியினிடத்தில் பயிர்வி
ளைவுங் குறைந்துவிடும், ௰அ

தீயூட்டித்தாமுண்ணுஞ் செய்தவத்தோரானினங்க
ளூட்டுகாய மிகழ்ந்தியற்றுநோன்பினோர்
வேயூட்டுதோளார விருத்தர்சிறபாலதமைத்
தாயூட்டிப்பொற்றுதல் போற்றூர்வேந்தன்காக்குமால்

இ-பு, அக்கினிதேவனுககு அவிர்ப்பாகங்கொடுத்துத் தாங்கள் ஆ
காரங்கொளளுகின்றபிராமணர்கள் பசுக்கள்நோயைத்தருகின்றஉடலை
வெறுத்துத்தவஞ்செய்கிற முனிவர்கள்-பசியமூங்கிலையொத்ததோ
ளையுடைய ஸ்திரிகள் விருத்தர்கள்-இவர்களைத் தாயானவள் சிறுபிள்
ளைகளை யூட்டிவளர்ப்பதுபோல வெற்றிமாலையணிந்த அரசன்காப்ப
ன்-எ-று,

தேவர்நிலைகடவார் மேலோர்திறம்பிழையார்
நாவுனிரண்டுரையார் நனகல்லவைபுரியார்
காவன்முறைதிறம்பார் காமச்செயலபெருக்கார்
பூவலயக்காவல் புரியும்புரவலரே.

இ-பு, இவ்வுலகத்தைக்காக்கும் அரசரானவர்கள் தேவர்கள் நிலை
மையைக்கடவார்கள் பெரியோரிடத்துக் குற்றஞ்செய்யார்கள் நாவினு
லிரண்டுசொல்லார்கள் நன்றல்லாதகாரியங்களைசெய்யார்கள் காவலின்
முறைமைமாறூர்கள் காமச்செய்கை அதிகப்படுத்தார்கள்-எ-று உ௰

உற்றவூறஞ்சாப் படையுமுயர்குடியு
முற்றுலவாப்பைங்கூழு முன்வருதல்சேமிக்கும்
பெற்றியமைச்சு முதவும்பெருந்துணையுங்
கொற்ற வரணு முடையானேகோமகனே.

இ-பு. ஆயுதங்களால் தங்கள்சரீரத்தில் பொருந்திய காயங்களுக்குப்பயப்படாதசேனையும் உயர்வானகுடியும் முழுவதுங் கெடாதபசியபயிரும்மேல்வருவதையறிந்து முன்னதாகக்காத்துக்கொள்ளுகிறதன்மையுள்ள மந்திரிகளும் உதவிசெய்யத்தக்கபெரியதுணையும் வெற்றிபொருந்திய மதில்அரண் முதலிய நால்வகையரணுமுள்ளவனே அரசனுவன்-எ-று. நால்வகைஅரணுவது-மதில்-அகழ்-காடு-மலை - என்பவைகளாம்-எ-று. உ௧

ஏடவிழ்பைந்தாரோ யிமையோர்பதம்பெறினு
நாடுநடுங்க நன்கல்லன புரியார்
வேடரபரிவேட்டஞ் செய்யார்வினைதருஞ்சூ
தாடநினையார் மட்டுண்ணுரரசரே

இ-பு- இதழ்விரிந்தமாலையணியும் ராசகுமாரனே அரசர்கள்தேவர்பதவிபெற்றாலும் தேசத்திலுள்ளவர் நடுங்கும்படி நன்மையல்லாதகாரியங்களைச்செய்யார்கள்- வேடர்களைப்போல வேட்டைத்தொழில்செய்யார்கள், பாபத்தைத்தருகின்ற சூதாடலைநினையார்கள். மதுபானஞ்செய்யார்கள்-எ-று, உ௨

குரவர்தமைக்காப்பர் செய்ந்நன்றிசொல்லார்
கரவடரைக்காய்வர் பழிகண்ணோட்டஞ்செய்யா
ரிரவலருக்கீவ ரெதிர்ந்தோர்முனையின
விரவுதமதுயிரு மெண்ணுர்கள்வேந்தரே

இ-பு, அரசர்கள் பெரியோரைக் காப்பார்கள், ஒருவர்செய்த உதவியைமறவார்கள், திருடரைக்கோபிப்பார்கள்,பழிசெய்யார்கள்தாக்ஷணியம்பாரார்கள், இரப்பவர்களுக்குக் கொடுப்பார்கள் பகைவர்நேரிட்டசண்டையில் தங்களுயிரைப் பெரிதாகஎண்ணுர்கள்-எ-று. வழக்குமுன்னிலையில் வந்தவர்களிலாவது குற்றவாளிகளாய் வந்தவர்களிலாவது தங்களுக்கு நட்பினராயிருந்தாலும் பகைவரா யிருந்தாலும் இவ்விரண்டுமல்லாதவர்களாயிருந்தாலும் தாக்ஷணியமில்லாமல்நீதிப்படிவிசாரித்தல் உ௩

வேறு

வைகறையெழுந்துபுனிதநீராடி வரன்முறையீசனைவணங்கித்
தெய்வவேதியருக்கான்குலநிதியந் தெளிபுனற்பழனமோடுதவீ

மைதவழ்கண்டனடியவர்பகவ ரதிதியர்மருவினரெவர்க்குங்
கைதவிருநெய்தீம்பயமுன்பால் கன்னனமுப்பழத்தொடுங்கலந்து

இ-பு. உதயகாலத்தில் நித்திரைதெளிந்து எழுந்து பரிசுத்தமுள்ளநீரில் ஸ்நானஞ்செய்து ஆகமவிதிப்படி பரமசிவனைப் பணிந்துதெய்வத்தன்மையுள்ள பிராமணர்களுக்குப் பசுக்களுந்திரவியமுந்தெளிவாகியநீர்நிறைந்த விளைநிலங்களுந் தானமாகக்கொடுத்துப் பரமசிவனுடைய அடியார்களுக்கும்முனிவர்களுக்கும் யதிகளுக்குங்கையிற்பற்றிக்கொள்ளத்தக்க வாசனையுள்ளநெய் மதுரமுள்ளபருப்புபசுவின்பால்வெல்லக்கட்டி முப்பழங்கள் இவைகளுடன்சேர்த்து-எ-று, உசு

வாசநன்கருணையடிசிலுமருத்தி மருவியவிருந்தொடுந்துய்த்துப்
பாசிலைப்பிளவுகருப்புரமருந்திப் பரிமளக்கலவைதண்சந்தம்
யோசனைகமழவணிந்துநல்லணிக ளொளிமுடியாதியபுனைந்து
நேசகத்தடைக்குமாவியந்தானை நிளரொளிமருங்குறச்சாத்தி

இ-பு, வாசனைதங்கிய நல்லபொரியலுடன் அன்னம் உண்பித்துவந்திருக்கிறவிருந்தாளிகளுடன்தாமுமுண்டு பச்சைக்கருப்பூரமுதலாகிய வாசனையுடன்தாம்பூலம்தரித்துககொண்டும் வாசனையுள்ளகூட்டுவர்க்கஞ்சேர்ந்தசந்தனக்குழம்பு யோசனைதூரம் பரிமளிக்கும்படி பூசிக்கொண்டும் மகுடமுதலாகிய நல்ல ஆபரணங்களணிந்துகொண்டும் மூக்கிற்குழையில் அடைக்கத்தக்கதாகப் பாலின்புகையையொத்து அதிகமெல்லியவஸ்திரத்தை இடையில்உடுத்துக் கொண்டும்-எ-று,

அண்டர்கள்சூழப்புரந்தரனிருந்த வவையெனவருமணிகுயின்ற
திண்டிறன்மடங்கற் றவிசின்வீற்றிருந்து வேந்தர்வந்திடுந் திறையளப்பக் - கொண்டலின்முரசமுன்றிலின்முழங்க வரசிளங்குமரருங்கதிர்
வேன்-மண்டலாதிபருஞ்சேனைகாவலரு மந்திரத்தலைவரும்வணங்க

இ-பு, தேவர்கள் தன்னைச்சூழ்ந்துகொண்டிருக்கும்படி தேவேந்திரன்வீற்றிருக்கும் சபையைப்போல் கிடைப்பதற்கரிய ரத்தினங்கள்பதித்தமிகுந்த பலமுள்ள சிங்காசநத்தில் வீற்றிருந்து பகைவர்கள்வந்துதாங்கள்கட்டுகிற திறைஙய அளந்துகொடுக்கவும் அரண்மனைமுகப்பில்மேகம்போல் பேரிகைமுழங்கவும் ராசகுமாரர்களும்ஒளிதங்கியவேலையுடைய மண்டலாதிபரும சேனுதிபதிகளும் மந்திரிமார்களும் வணங்கவும்-எ-று, உகூ

நீதியுமொற்றுநிகரிலாக்கண்ணு நீணிலத்தல்லவையொழித்தும்
வேதியர்தேவர்மெலிந்தவோர்வறிஞர்மெலிவறக்குறைத்திறம்வினவு
மோதருங்குடியுமுலப்பிலாநிதியு முயர்ந்திடவனுதினங்காத்துஞ்
சூதினிற்பகைவர்திருவினைக்கவருஞ் சூட்சியும்வினையமுஞ்சூழ்ந்து

இ-பு, நீதியும் தூதர்களுமே தமக்குக்கண்களாக இவ்வுலகில் பாவத்தையொழித்தும் பிராமணர்கள் தேவர்கள் மெலிவடைந்தவர்கள் வறுமையாளர் இவர்கள்வருத்தம் நீங்கும்படி குறைப்பாட்டை வினவியும் சொல்லுதற்கரிய குடிகளும் அழியாதநிதியும் அங்கரிக்கும்படி அனுதினங்காத்தும் குதிரைமேலபகைவருடையசெல்வத்தை அபகரிக்கும்படியான தந்திரத்தையும் அதற்கேற்றமுயற்சியையும் ஆலோசித்தும்-எ-று, ௨௭

தருமநூலாய்ந்துமடைந்தவர்ப்புரந்துந் தடுப்பருங்காலங்களுணர்ந்து
மெரிபசும்பூணுநடத்தொழில்கண்டு மியாழினோரின்னிசைகேட்டும்
விரிமிருண்மாலைப்பொழுதெலாமனங்கன்விழாவணிநடத்துதல்போ
லப் - புரிகுழன்மடவார் கல்விபிற்றிளைத்தும் போக்குவர்புரவலர்
பொழுதே.

இ-பு, பகற்பொழுதில் தருமசாஸ்திரங்களை ஆராய்ந்தும் தம்மை அடைந்தவர்களைக் காப்பாற்றியும் தடுப்பதற்கரியகாலங்களை அறிந்தும்பிரகாசிக்கும் பொன்னாபரணமணிந்த நடனப்பெண்கள் ஆடும்நாடகத்தைப்பார்த்தும் வீணைவாசிப்பவர்கள் இனியஇசையைக்கேட்டும் இராப்பொழுதில்மன்மதனுக்குத் திருவிழாச்செய்வதுபோல்தங்களுக்குரிய மனைவியரிடத்தில் கலவித்தொழில்புரிந்தும் அரசர்கள்பொழுதுபோக்குவார்கள்-எ-று, காலங்களுணர்தல் தனக்குஜயம்வரத்தக்ககாலங்களையறிதல், ௨௮

இத்திறமவனிபுரந்தவேலிறைவ ரெண்ணிலவெண்ணிலகாலஞ்
சத்திரமொன்றிற்றரைமுழுதாண்டு தமனியநெடும்பரியாள (மேற்
உத்தமவேள்விக்கனற்றுறைமுடித்தில் வுருவொழிததும்பராய்வான்
சித்திரவிமானத்தரம்பையரோடும் வைகுநாசிறுவகேளின்னும்

இ-பு, இத்தன்மையாகப் பூமியைக்காத்த அனேகம்அரசர்கள் அனேகங்காலம் ஒருகுடையின் கீழ்உலகமுழுவதையும் ஆண்டுபொன்னுலகமாகிய சுவர்க்கத்தை யாள்வதற்காக யாகங்கள்செய்துநிறைவேற்றிஇவ்வுருவத்தையொழித்துத் தேவர்களாய்வானுலகத்தில் சித்திரவிமானமேறிச்சென்று ரம்பாஸ்திரீகளுடன் இருக்கின்றார்கள்புத்திரனே இன்னமுஞ்சொல்லுகிறேன்கேள்-எ-று, ௨௯

அவ்வணநீயுங்கடைப்பிடித்தொழுகி யரனடிக்கமலமேயரணாய்
பவ்வநீருலகமுழுவதுந்தனிவெண்பனிமதிக்கவிகையிற்புரப்பாய் வெ
வ்வினையகற்றுஞ்சிவகவசமும்யான்விளம்புகேனுனக்கதுவிரவாத் தெ
வ்வினையொறுக்குஞ்சயந்தரும்பாவ மறுத்திடுமென்றுசெப்பினனால்

இ-பு. அந்தத்தன்மையை நீயுமனங்கொண்டு நடந்து பரமசிவனுடையதிருவடித்தாமரையேதுணையாகச்சமுத்திரஞ்சூழ்ந்தபூலோகமு

மூவதையும் ஒப்பில்லாததாய்க் குளிர்ச்சிதங்கிய சந்திரவட்டக்குடையின்கீழ் ஆளுவாயாக அன்றியுங்கொடியவினைகளை நீக்கத்தக்கதான சிவகவசமும் உனக்குநான் சொல்லுகிறேன் அந்தச்சிவகவச மானது உன்னைக்கூடியிராதபகைகளை அறுக்கும்வெற்றியைக்கொடுக்கும்பாவங்களை நீக்கிவிடும் என்றுசிவயோகிசொன்னார்-எ-று, ௬௰

சிவயோகிபத்திராயுவுக்கு அரசியலளித்த அத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௭௱

திருச்சிற்றம்பலம்.

ஞானத்தினால் அறியத்தக்கதான அதிகபரமரகசியமாயிருப்பதினால் சிற்றம்பலமென்று சொல்லப்படுகின்றது இதனைச்சிதம்பரபுராணத்தில் கண்டுகொள்க,



உ

சிவமயம்,

பன்னிரண்டாவது,

## சிவகவசமுரைத்த அத்தியாயம்.

பங்கயத்தவிசின்மேவி யிருந்துடற்பற்றுநீக்கி
யங்குநற்பூதசுத்தி யடைவுடன்செய்தபின்னர்
கங்கையைத்தரித்தசென்னிக்கற்பகத்தருவைச்செம்பொற்
கொங்கைவெற்பனையபச்சைக் கொடியொடுமுளத்தின்வைத்தே

இ-பு, பத்மாசனத்திலிருந்து சரீரப்பற்றினையொழித்துப் பூதசுத்திகிரமப்படி செய்தபிற்பாடு கங்கையைத்தரித்த திருமுடியுடையகற்பகவிருக்ஷம்போன்ற பரமசிவத்தையும் பொன்மலைபோன்ற தனங்களையுடைய பச்சைக்கொடியொத்த பார்வதிதேவியாரையும் மனதில் தியானித்து-எ-று, பரமசிவன் அடியார்கள்கேட்கும் வரங்களைத்தருகின்றவராதலால் கற்பகவிருக்ஷமென்றார் பத்மாசனமாவது இரண்டு தொடைமேலும் இரண்டு உள்ளங்காலையுமாறித்தோன்றவைத்தல்,

அகிலநாயகனுய்ஞான வானந்தரூபியாகித்
தகைடருமணுவாய்வெற்பின் றோற்றமாயுயிரையெல்லாந்
தகவுடனவனியாகித் தரிப்பவனெம்மையிந்த
மகிதலமதனிற்றீமை மருவிடாதருளிக்காக்க

இ-பு. எல்லாவற்றிற்குந் தலைவனாகியும் ஞானனந்தசொரூபியாகியும் அணுவாகிய அணுத்தன்மையாகியும் மலைபோலப்பெரியதாகியும்பூமியுமாகித்தகுதியுடன் ஆத்துமகோடிகளைத் தாங்குகின்றகடவுள் இந்தவுலகத்தில் தீங்குநேரிடாவண்ணம் அருள்செய்துஎங்களைக்காக்கக்கடவர்=எ-று. உ

குரைபுனலுருவங்கொண்டு கூழ்தொறும்பயன்கணல்கித்
தரையிடையுயிர்கள்யாவுந் தளர்ந்திடாவண்ணங்காப்போ
னிரைநிரைமுகில்களீண்டி நெடுவரைமுகட்டிற்பெய்ய
விரைபுனலதனுள்வீழ்ந்து விளிந்திடாதெம்மைக்காக்க

இ-பு. ஒலிக்காநின்ற ஜலரூபங்கொண்டு பயிர்கள்தோறும் பயன் கொடுத்துஇவ்வுலகத்திலிருக்கும் உயிர்களெல்லாந் தளர்ச்சியடையாதபடிகாப்பவனாகியகடவுள் வரிசைவரிசையாய் வருகின்ற மேகங்கள் சேர்ந்துபெரியமலைகளில் மழைபொழியப்பெருக்கெடுத்தோடும் சலத்தில்விழுந்து இறவாதவண்ணம் எங்களைக்காக்கக்கடவர்=எ -று. ௩

கடையுகந்தன்னிலெல்லா வுலகமுங்கடவுட்டீயா
லடலைசெய்தமலைதாள மறைதரநடிக்குமீச
னிடைநெறிவளைதாயத்தி லெறிதருசூறைக்காற்றிற்
றடைபடாதெம்மையிந்தத் தடங்கடலுலகிற்காக்க

இ-பு, யுகத்தில்இறுதியில்எல்லாவுலகத்தையும் தெய்வத்தன்மையுள்ளதீயினல் சாம்பலாகச்செய்து பார்வதிதேவியார்தாளம்போடநடனஞ்செய்யும்பரமசிவன் மார்க்கத்தின்மத்தியில்வளைத்துக்கொள்ளுந்தீவெப்பத்துடன் வீசுகின்றசூறைக்காற்றினல் தடைபடாமல்பெரியசமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தில்எம்மைக்காக்கக்கடவர்=எ-று.()

தூயகண்மூன்றினேடு சுடரும்பொன்வதனநான்கும்
பாயுமான்மழுவினேடும் பகர்வரதாபயங்கண்
மேயதின்புயங்கணன்கு மிளிருமின்னனையதேசு
மாயதற்புருடனெம்மைக் குணதிசையதனிற்காக்க

இ-பு, பரிசுத்தமுள்ளதிரிநேத்திரங்களும்பிரகாசியாநின்ற பொன்னிறமுள்ள நான்குதிருமுகங்களும்பாய்கின்றமான்மழுவினுடன்சொல்லுகின்றவரதமும் அபயமும்பொருந்திய திண்ணியநான்குபுயங்களும்விளங்குகின்ற மின்னலையொத்த திருமேனிக்காந்தியுமுள்ளதற்புருடமூர்த்தியானவர் கிழக்குத்திசையில் எம்மைக்காக்கக்கடவர்=எ-று, வாதம்வரங்கள்கொடுக்கிறது-அபயம் அச்சமில்லாமை, ரு

•மான்மழுசூலங்கோட்டி வணைதருநயனமாலை
கூன்மலியங்குசந்தீத் தமருகங்கொண்டசெங்கை

நான்முகமுக்கணீல நள்ளிருள்வருணக்கொண்டே
யான்வருமகோரமூர்த்தி தென்றிசையதனிற்காக்க

இ-பு. மான்-மழு-சூலம்-அங்குசம் புனையப்பட்ட உருத்திராக்ஷமாலை வளைவாகிய அங்குசம்- தீ- மருகம் என்னுமிவைகளைத்தாங்கிய செங்கைகளும் நான்குதிருமுகங்களும் திரிநேத்திரங்களும் நீலம்போலச்செறிந்த இருள்நிறமுங்கொண்டு ரிஷபத்திலேறிவருகின்ற அகோரமூர்த்தியானவர் தெற்குத்திசையில் எம்மைக்காக்கக்கடவர்=எ-று. சு

திவண்மறியக்கமாலை செங்கையோரிரண்டுந்தாங்க
அவிர்தருமிரண்டுசெங்கை வரதத்தோடபயந்தாங்கக்
கவினிறைவதனநான்குங் கண்ணொருமூன்றுங்காட்டுந்
தவளமாமேனிச்சத்தியோ சாதன்மேற்றிசையிற்காக்க

இ-பு. தாவுகின்றமானையும் உருத்திராட்சமாலையினையும் இரண்டு திருக்கரங்கள் தாங்கவும் பிரகாசியாநின்ற இரண்டுதிருக்கரங்கள் அபயவரதந்தாங்கவும் அழகுநிறைந்த நான்குமுகங்களும் மூன்றுகண்களும்விளங்குகின்ற வெண்மைநிறமுமுள்ள சத்தியோசாதமூர்த்தியானவர் மேற்குத்திசையில் எம்மைக்காக்கக்கடவர்=எ-று. எ

கறைகெழுமழுவுமானு மபயமுங்கண்ணிணும
மறைதருந்தொடையுஞ்செய்ய வங்கைகணான்குமேந்திப்
பொறைகொணான்முகத்துமுக்கட் பொன்னிறமேனியோடு
மறைபுகழ்வாமதேவன் வடதிசையதனிற்காக்க

இ-பு. உதிரந்தோயும்படியானமழுவாயுதத்தையும் மானையும் அபயவரதங்களையும் உருத்திராட்சமாலையினையும் சிவந்தநான்குதிருஅத்தங்களிலும்தாங்கிச் சாந்தந்தங்கியநான்கு திருமுகங்களிலுமும்மூன்றுகண்களும் பொன்னிறமேனியுமுள்ள வேதங்களாற்புகழத்தக்கவாமதேவமூர்த்திவடக்குத்திசையிற் காக்கக்கடவர்= எ-று. அபயவரதங்களாவன-அஞ்சவேண்டுவதில்லை- வரங்கள்தருகிறோமென்று தெரிவிக்குங்குறிப்பு-அபயம் வலக்கரம்-வரதம் இடக்கரம், அ

அங்குசங்கபாலஞ்சூல மணிவரதாபயங்கள்
சங்குமான்பாசமக்கந் தமருகங்கரங்களேந்தித்
திங்களிற்றவளமேனித் திருமுகமைந்தும்பெற்ற
வெங்களீசானதேவ னிருவிசும்பெங்குங்காக்க

இ-பு. அங்குசம் கபாலஞ்சூலம் அழகியவரதாப ங்கள் சங்கம்மாகம் ருத்திராட்சம் தமருகமென்னு மிவைகளைப்பத்துத்திருக்கரங்களிலுமேந்திசந்திரனைப்போல வெண்மைநிறங்கொண்ட திருமேனியும்

ஐந்துதிருமுகங்களும்பெற்றுள்ள எங்கள்ஈசானமூர்த்தியானவர் பெரியஆகாயமெங்கும் காக்கக்கடவர்=எ-று. (௯

சந்திரமவுலிசென்னி தனிநுதற்கண்ணனெற்றி
மைந்துறுபகன்கண்டொட்டோன் வரிவிழியகிலநாதன்
கொந்துணர்நாசிவேதங் கூறுவோன்செவிகபாலி
யைந்தில்செங்கபோலந்தூய வைமுகன்வதனமுற்றும்

இ-பு. சந்திரசேகரமூர்த்தியானவர் எங்கள்சிரசினையும் தீப்பற்றநெற்றிக்கண்ணையுடையவரான பாலலோசன மூர்த்தியானவர் நெற்றியினையும்வலிபொருந்திய பகனென்னுஞ்சூரியனுடைய கண்ணைப்பறித்தமூர்த்தியானவர் நீண்டகண்களையும் விசுவநாதரானவர் பூங்கொத்தின்வாசனையைஅறியத்தக்க நாசியினையும் வேதமருளிச்செய்தமூர்த்தியானவர்காதுகளையும் கபாலியென்பவர் செவ்விதாகியகபோலத்தையும்பரிசுத்தமுள்ள பஞ்சானனமூர்த்தியானவர்முகத்தினையும்=எ-று அந்தில் அசை, பன்னிரண்டுசூரியரில் பகன்ஒருசூரியன்இச்சூரியன் கண் தக்கன்யாகத்தில் யறிக்கப்பட்டது, ௰

வளமறைபயிலுநாவ னுமணிநீலகண்டன்
கடமெடுபினாகபாணி கையிணைதருமவாகு
கிளர்புயந்தக்கன்யாகங் கொடுத்தவன்மார்புதூய
வொளிதருமேருவில்லி யுதரமன்மதனைக்காய்ந்தோன்

இ-பு, வளப்பமுள்ள வேதங்களைப்பயில்கின்ற நாவுள்ளமூர்த்தியானவர் நாவினையும் நீலகண்டமூர்த்தியானவர் கழுத்தினையும்போர்செய்யத்தக்க பினாகமென்னும்வில்லேந்திய பினாகபாணியானவர்கைகளையும்தர்மவாகுஎன்பவர் விளங்குகின்ற புயங்களையும்தக்கனுடைய யாகத்தைஅழித்தமூர்த்தியானவர் மார்பினையும் நல்லஒளியைத்தருகின்றமேருவில்லியென்னு மூர்த்தியானவர் வயிற்றினையும்காமதகனமூர்த்தியானவர்=எ-று. ௰௧

இடையிபமுகத்தோன்றாதை யுந்திநம்மீசன்மன்னும்
புடைவளரரைகுபேர மித்திரன்பொருவில்வாமம்
படர்சகதீசன்சானு பாய்தருமிடபகேது
விடைநெறிகணைக்காலேய்ந்த விமலன்செம்பாதங்காக்க

இ-பு,இடையினையும் கணபதிபிதாவாகிய மூர்த்தியானவர் நாபியினையும் நம்முடைய ஈசுவரனானவர் புடைபரந்த அரையினையும்,குபேரன்தோழனாகியமூர்த்தியானவர் ஒப்பில்லாததொடையினையும் பரந்தசகதீசன்முழங்காலையும் பாய்கின்றரிஷபகேதுவானவர் ரிஷபமுசிப்

பௌத்தகணக்காலையும்பொருந்திய விமலமூர்த்தியானவர் செவ்விய பாதத்தையுந் தனித்தனிகாக்கக்கடவர்கள்=எ-று, ௰உ

வருபவன்முதல்யாமத்து மகேசன்பின்னிரண்டாம்யாமம்
பொருவருவாமதேவன் புகன்றிடுமூன்றும்யாமஞ்
செருமலிமழுவாளங்கைத் திரியம்பகனுலாம்யாமம்
பெருவலியிடபவூர்தி பிணியறவினிதுகாக்க

இ-பு, வேதங்களில்வழங்கப்படுகிற பகவன்என்னும் திருப்பெயருள்ளமூர்த்தியானவர் முதற்சாமத்திலும் - மகேசுரன்பின்னிரண்டாஞ்சாமத்தும்- ஒப்பில்லாதவாமதேவர் மூன்றுஞ்சாமத்தும்போருக்கேற்றமழுவாயுதமேந்திய திருக்கரத்தையுடைய திரியம்பகர்நாலாஞ்சாமத்தும் மிகுந்த சரீரவன்மையைப் பிணியால்சோர்வுறாதபடி ரிஷபவாகனமூர்த்தியானவருமாகத் தனித்தனிகாக்கக்கடவர்கள்=எ-று ௰௩

கங்குலின்முதலியாமத்துக் கலைமதிமுடித்தோன்காக்க
தங்கியவிரண்டாமியாமஞ் சானவிதரித்தோன்காக்க
பொங்கியமூன்றும்யாமம் புரிசடையண்ணல்காக்க
பங்கமினாலாம்யாமங் கவுரிதன்பதியேகாக்க

இ-பு இராத்திரியின் முதற்சாமத்தில் கலாதரமூர்த்திகாக்கக்கடவர்இரண்டாஞ்சாமத்தில் கங்காதரமூர்த்தி காக்கக்கடவர் மூன்றுஞ்சாமத்தில்சடாமகுடமூர்த்தியானவர் காக்கக்கடவர் - கெடுதலில்லாதநாலாஞ்சாமத்தில் உமாபதிகாக்கக்கடவர்=எ-று ௰௪

அனைத்துளகாலமெல்லா மந்தகற்கடிந்தோனுள்ளூந்
தனிப்பெருமுதலாயுள்ள சங்கரன்புரமுந்தாணு
வனைப்புறுநடுவுந்தூய பசுபதிமற்றுமெங்கு
நினைத்திடற்கரியதொன்மைச் சதாசிவநிமலன்காக்க

இ-பு எல்லாக்காலங்களிலும் காலசங்காரமூர்த்தியும் உட்புறத்தில்ஒப்பற்ற முதற்காரணகர்த்தாவாகிய சங்கரமூர்த்தியும் வெளிப்புறத்து ஸ்தாணுமூர்த்தியும் நடுப்புறத்துத் தூயபசுபதியும் மற்றவிடமெங்கும்நினைப்பதற்கரிய சதாசிவமூர்த்தியுமாகத்தனித்தனிகாக்கக்கடவர்கள்=எ-று ௰௫

நிற்புழிபுவனநாத னேகுழிநிமலன்மேனி
பொற்புறுமாதிநாத னிருப்புழிபொருவிலாத
வற்புதவேதவேத்தி யனுந்துயில்கொள்ளுமாங்கண்
டற்பரசிவன்விழிக்கிற் சாமளருத்திரன்காக்க

னுக்குருதியணி தோழன்சூதனு
மாகந்துறந்த மழகதிர்போற் றோன்றினன்

இ-பு. காக்கைக்கூட்டம்வந்து நிறைந்திருக்கும்போர்க்களத்தைக்கடந்து தன்பிதாவின்சோகத்தைநீக்கும் பத்திராயுவானவன்தன்சரீரத்தில்உதிரம்பொருந்தியதோழன்தேர்ப்பாகனுக அமைத்துக்கொண்டு ஒளிதங்கியதேரிலேறி ஆகாயத்தைவிட்டுவந்த இளஞ்சூரியனைப்போலத்தோன்றினன்-எ-று. உ௨

பாறுதாழ்செவ்வேற் படைப்பத்திராயுவினுன்
மாறிலாவெம்போர் மகதர்கோன்வாட்டானை
சீறிபோர்கானி லடுஞ்சிங்கந்தெறவெருவி
யாறலரவாறுபட ரான்குலம்போலாயினவே.

இ-பு. இவ்வாறுதேரிலேறிய பருந்துகள்வந்துவட்டமிடும்வேலையுடையபத்திராயுவினுல் மாறுபடாதவெம்போர்செய்யும் மகதர்கோன் சேனையெல்லாம் மிருகங்களைக்கொன்று காட்டில்சஞ்சரிக்கும் ஒருசிங்கம்வந்துகொல்லப்பயந்து மார்க்கமல்லாதமார்க்கத்தில் ஓடிப்போகிறபசுக்கூட்டம்போலாயின-எ-று, உ௩

கண்டான்படையுடைத லேமரதன்கண்டுபயங்
கொண்டானிவனுமொரு கூற்றமோவென்றுனாயாத்
திண்டேர்திரித்துப்புறங் கொடுப்பத்தேர்ந்திடலும
வண்டாமரைமுகத்தான் வண்சங்கம்வாய்வைத்தான்

இ-பு, தன்சேனைகள்தோற்று ஓடிப்போவதை எமரதனென்னும் அரசன்பார்த்தான்அப்படிப்பார்த்தவன் பயங்கொண்டு இவனுமொரு யமனேவென்றுசொல்லித் தன்னுடையதேரைத்திருப்பி முதுகுகாட்டியோடயத்தனித்தஅளவில்அதைஅறிந்த நல்லசெந்தாமரைபோன்றமுகத்தையுடைய பத்திராயுவானவன் தன்சங்கத்தை வாயினிடமாக வைத்துநாதமுண்டாக்கினுன்-எ-று, உ௪

முற்றுமிடி முழக்கங் கேட்டுமுழைபொடுங்கிப்
புற்றரவமஞ்சிப் புரளுந்தகைமைபோல்
வெற்றியுறுவேல்வேந்தன் வெண்சங்கவோசையினுற்
கொற்றமுறுஞ்சேனையொடு கோவேந்தன்வீழ்ந்தயர்ந்தான்

இ-பு, மிகுந்தஇடியின் முழக்கதைக்கேட்டுச் சர்ப்பங்கள்பயந்து புற்றுகளில்ஒடுங்கிப் புரளுந்தன்மைபோல் ஜயந்தங்கியவேல்வேந்தனுகியபத்திராயுதொனிசெய்த ஜயசங்கநாதத்தினுல்மகததேசத்தான் கீழேவிழுந்து மூர்ச்சையடைந்தான் அவன்சேனையிலுள்ளவர்களும் அவ்வாறே மூர்ச்சையடைந்தார்கள்-எ-று, உரு

கோதைபுனைவேன்மகதர் கோமானையும்வன்றன்
காதலுருமைந்தரையுங் காவற்றனைப்படுத்தித்
தாதைசிறைநீக்கியவன் றாடொழுதுதங்குலத்துக்
கோதுபழிதீர்த்தா னுயர்வெண்குடையோனே

இ-பு. வெற்றிமாலையணிந்தவேலையுடைய மகததேசத்தானையும்அவனுடைய ஆசைபொருந்திய புத்திரர்களையும் காவலாகிய விலங்குபூட்டும்பிதாவின்சிறையைநீக்கிஅவன்பாதத்தில் வணங்கித்தங்கள குலத்துக்குநேரிட்டபழியைத்தீர்த்தான் உயர்ந்த வெண்குடையோனாகியபத்திராயு-எ-று. உ௬

தந்நிகரில்சேனாபதிகடமைவிடுத்து
மன்னுடனேநீவிர்வளநகர்த்தெய்துகெனச்
சொன்னமொழிகேட்டுத்துயர்தீர்தசாணனர்கோ
னந்நிலையேயார்வநிறைந்தாங்கவனைப்பார்த்துரைத்தான்

இ-பு. தங்களுக்கு ஒப்பில்லாத சேனாதிபதிகளையும்விடுவித்துநம்முடைய அரசனுடன்வளப்பம்பொருந்தியநகரத்துக்குச் செல்லுங்களென்று பத்திராயுசொன்னவார்த்தையைக்கேட்டுத்துயரநீங்கியதசாணதேசத்தரசன் மிகுந்த அன்புள்ளவனாய் அப்பொழுதே பத்திராயுவைப்பார்த்துச்சொல்லுகிறான்-எ-று. உ௭

எங்கள்குலவேந்தர் தவப்பயன்போலிங்கெதிர்ந்து
பங்கமுமென்றுயரும் பழியுந்தவிர்த்தோனே
சிங்கமனையாய்நினக்குச்செய்யுங்கைம்மாறுண்டோ
மங்குலுக்குக்கைம்மாறு மன்னுயிருஞ்செய்திடுமே

இ-பு. எங்கள்குலத்தரசர்செய்த தவப்பயன்வந்து உதவியதுபோலவந்துஎனக்குநேரிட்டபங்கத்தையுந்துயரத்தையும்இழிவையும்நீக்கியபுண்ணியவானே சிங்கத்தையொத்தவனே நான்உனக்குச்செய்யத்தக்கபிரதிஉபகாரமுண்டாயிருக்குமானால் மழைபெய்துகாக்கு மேகத்துக்குஇவ்வுலகத்தில்நிலைபெற்றிருக்கும்உயிர்களும் கைம்மாறுசெய்யும்-எ-று. உ௮

நின்றமர்யார்நிற்பயந்தார்யாவர்நினதூரேது
வன்றிறலாய்நின்பெயரென்வந்தவாறேதுரையாய
யொன்றொழியப்பத்தக்குரோணி சேனையொருங்கவிய
வென்றுருத்துவொள்வாள்விதிர்த்தவிறலோனே

இ-பு. மிகுந்தபலமுள்ளவனே உன்னுடையசுற்றத்தார்யார்உன்னைப்பெற்றவர்கள்யார்உன்னுடைய ஊரெது உன்பெயரென்னநீயிங்கேவந்ததற்குக்காரணமென்ன நம்முடைய ஒன்பதக்குரோணியெல்லாம் ஒழிந்துபோம்படிவென்று சினந்து ஒள்ளியவாளை விதிர்த்தவீரனே

வில்லாயெனதுபெயர்வீறுபத்திராயுமற்ற
வெல்லாமுணர வியம்புகேன்மேலென்று
சொல்லாவென்றோழன் சுனதனிவன்றாதை
நல்லாதரவணிக னனகிபற்றவாழ்கின்றோம்

இ-பு, வில்லையுடைய மகாராசனே என்பெயர்பத்திராயு மற்றவையெல்லாம்உனக்குத்தெரியும்படி பின்னாலே சொல்லுகிறேனென்று சொல்லிஇந்தச்சுனதனென்பவன்என் துணைவன் இவன்பிதாவாகியமிகுந்தஅன்புள்ள வணிகேசனென்பவர் எங்களை ஆதரிக்கவாழ்ந்துகொண்டிருக்கிறோம்-எ-று, ௫௰

என்றுவிறைஞ்சியிகல் வேந்தன்வெஞ்சிறையை
மன்றுவிடேல்யான் வருந்துணையுமென்றுரைத்துத்
தன்னாடுதோழனொடுஞ் சார்ந்தானற்றாயடைந்து
பொன்னாரமார்பீர்புகுந்ததுரையீரென்றாள்

இ-பு. என்றிவ்வாறு சொல்லிப்பணிந்து மகாராசாவே இந்தப்பகைமன்னவன்சிறையை மறுபடிநான்வருகிறவரையில் விடாதேயென்றுசொல்லித்தோழனைக்கூட்டிக்கொண்டு தன்னாட்டிற்போய்ச்சேர்ந்தான்தாயானவள் அவர்களைக்கண்டு பொன்னாரமணிந்த மார்புடையவர்களே நடந்தசெதியென்ன சொல்லுங்களென்றாள்-எ-று ௫௧

மாறுபடும்போரின் மகதர்கோன்வாகைகொண்டு
சாறயருமூதூர்த்த சானன்முந்தீமடுத்து
நீறுசெய்துமெந்தை நெடுஞ்சிறையிற்கொண்டேகச்
சீறியமர்வென்றுசிறைவிடுத்தோமென்றுரைத்தான்

இ-பு, பகைகொண் - யுத்தமுகத்தில்மகததேசத்தன்வெற்றியடைந்து விழாக்கள்நடந்துகொண்டிருக்கும் பழமையான தசானன்மெய்லும்ஊரைக்கொளுத்தி நீறாக்கிஎன்பிதாவைவிடாத காவற்படுத்திக்கொண்டுபோனான் அதையறிந்துசீறி நாங்கள்போர்செய்து வென்று சிறையைமீட்டோமென்று சொன்னான்-எ-று, ௫௨

வேறு

கேட்டாளரசன்பெருந் தேவிதன்கேள்வனின்னல்
வாட்டாரைக்கண்ணீர் முலைமுன்றில்வாரககலுழ்ந்தாள்
கோட்டானைவீரர்குலையச் செருச்செய்துமைந்தன்
மீட்டானெனலுங்குளிர்ந்தா ளறனவேண்டநின்றாள்.

இ-பு, அவர்கள்சொல்ல அக்காராசன்மனைவிதன் கணவனுக்கு[illegible]ட்டதுன்பத்தைக்கேட்டு வாளையொத்த கண்ணீர் தனங்கள் [illegible]

விழும்படி அழுதாள்வலிதங்கியபகைவராகியசேனைவீரர் அணிகுலைந்தோடும்படி உன்மகன்போர்செய்து உன்கணவனை மீட்டானென்று சொன்னஅளவில் சந்தோஷமுடையவளானாள் தருமதேவதையை வேண்டும்படிக்குநிற்பவள்-எ-று தருமம்நமக்குவேண்டியதென்றுஅவள் விரும்பாமல் அவளிடத்திலிருக்கத் தருமம்வேண்டுமென்பதுகருத்து மாதராரகற்பினின்றன அறங்களென்பதனாலுமுணர்க, ௩௩

துணிவுற்றவேந்தின் சிறைதீர்த்தனன் றோன்றலென்னத்
கணிவுற்றதொல்சீர் வணிகேசனுந்தக்கதென்றான்
மணிமொய்த்தமாலைப் புயன்வச்சிரவாகுவொன்னார்
பணியத்திருநாடடைந் தேபகையின்றிவாழ்ந்தான்

இ-பு. துணிவுபொருந்திய வச்சிரவாகுவென்னும் அரசனைப்பத்திராயுசிறைமீட்டானென்று பழமையாகவிருந்தசெல்வமுள்ளவணிகன்கேள்விப்பட்டு இதுபுத்திரன் செய்யத்தக்கதன்மையான காரியந்தானென்றான்-ரத்தினமாலைபணிந்த புயங்களையுடைய வச்சிரவாகுவானவன் பகைவர்வந்துதன்னை வணங்கும்படிதன்னாட்டிற்சேர்ந்துபகையில்லாமல் வாழ்ந்துகொண்டிருந்தான்-எ-று. ௩௪

வேதப்பொருளினடி பேணும்விடபனென்னுஞ்
சீதப்புயலற்றையிராவினிற்சிந்தையெண்ணி
நீதிப்பயிருக் கறநீர்பெய்நிடதராசன்
கோதற்றகேள்விக் குலபூபதிகோயில்சார்ந்தான்

இ-பு. பரமசிவனுடைய திருவடியையேவிரும்பிக் கொண்டிருக்கும்குளிர்ச்சியுள்ள மேகம்போன்ற விடபனென்னுஞ்சிவயோகியானவர்அன்றுராத்திரி தமதுமனதில்ஆலோசித்துத் தருமமாகிய பயிருக்குநீதியாகியநீர்ப்பாய்ச்சும் குற்றமற்றகேள்விகளையுடைய நிடததேசத்துஅரசன் அரண்மனைக்குப்போனார்-எ-று. கிருபையைப்பொழிவதினால் சீதப்புயலென்றார் ௩௫

வந்தமுனிக்குமகிழ் சீமந்தனியும் வேந்துஞ்
சிந்தைகுளிர்ந்துவழி பாடுகள்செய்துபோற்றி
யந்தத்தருமா ரணந்தேருமடிகள்பாத
நொந்துசிவப்பவரு மாறுநுவறியென்றான்

இ-பு, அவ்வாறுவந்தவிடபன் என்னுஞ்சிவயோகிக்கு சீமந்தனியும்அவள்கணவனும் மனமகிழ்ந்து ஆராதனைசெய்துதுதித்து வேதங்கள்உணர்ந்த சுவாமிகளுடைய திருவடிகள்வருந்திச் சிவக்கும்படிநடந்துவந்தருளியதற்குக் காரணங்கட்டளையிடவேண்டுமென்றான்-எ-று,

வந்தாமிறைவமகப் பேசவயற்கண்வாளை
நந்தோவிடப்பாயுந்தசாணநாட்டின்மன்னன்

கந்தார்களிற்றனவன் காதலிமைந்தனேடுஞ்
சிந்தாகுலத்தாற் சடுங்கானகஞ்செல்லநீத்தான்

இ-பு, அரசனே பெண்பேச வந்தோம் சங்குகள் ஒலிக்கும்படி வயல்களில்வாளைமீன்கள் பாயும்படியான நீர்வளப்பத்தையுடைய தசாணன்நாட்டிற்கு அரசனாகிய யானைப்படைகளுடன் வச்சிரவாகு என்னும் அரசன்தன்மனைவியைப்புத்திரனுடன் வியாகுலங்கொண்டு காட்டுக்குப்போகும்படி நீக்கிவிட்டான்-எ-று, கந்தார்களிறு கட்டுத்தம்பத்தில் கட்டப்படும்யானை * சமஸ்கிருதத்தில் தசார்னன் மென்னப்படுகின்றது, ௩௭

பொம்மன்முலையாள்கடுங் கானிற்புகுந்துவேறோர்
மைம்மனனுசோலைநகர் வைகிடமாதுகாத
லம்மைந்தனையாமளித்தோ மவனன்புபூண்டு
தெம்மன்னர்தாதைக்கிடர் செய்யச்செகுத்துமீட்டான்

இ-பு, பொலிவுள்ள தனத்தையுடைய அந்த ராஜஸ்திரி யானவள் கொடியகாட்டிற்போய் மேகங்கள்வந்துதவழ்கின்ற சோலைசூழ்ந்தவொருநகரத்திற்சேர்ந்திருந்தாள் அவ்விடத்தில் அவள்புத்திரன் இறந்துபோனன் அவனைநாம்பிழைப்பித்து வாளாயுதமுதலானவைகொடுத்துரட்சித்தோம் அப்படியிருக்கமறுதேசத்தரசன் யுத்தஞ்செய்துவென்று அவன்பிதாவைத் தேரிற்கட்டிக்கொண்டுபோவதை அந்தப்புத்திரன்கேள்விப்பட்டுப்பிதாவென்கிற அன்புகொண்டுபோய் போர்செய்துபகைவனைவென்று பிதாவைமீட்டுவிட்டான-எ-று, ௩௮

வேறு,

அன்னவன்றனக்கருளவேண்டுகின்
கன்னிகீர்த்திமா லினியைக்கற்புடைப்
பொன்னையென்றவன் புகழ்ந்துகூறலு
மன்னன்சந்திராங் கதன்வழங்குவான்

இ-பு, அந்தப்புத்திரனுக்கு உன் குமாரத்தியாகிய கற்புள்ளகீர்த்திமாலினியைக்கொடுக்கவேண்டுமென்றுசிவயோகிபுகழ்ந்துசொன்னர் அதற்குச்சந்திராங்கதன் என்னும் அரசன்மகிழ்ந்துசொல்லுகிறான்

கோசிகன்னென வுலகங்கூறிடுந்
தேசிகாவினிச் செப்பவேண்டுமோ
காசுலாமுலைக் காமர்கன்னியை
மாசிலானுக்கேவழங்குகேனென

இ-பு. கெளசிகனேயென்று பெரியோர்கள் சொல்லத்தக்க தேசிகனே நான்வேறே சொல்லவேண்டுமோ ரத்தினவடம்பொருந்தியதன

கடங்கணீங்கியே காணவம்மென
முடங்கல்போக்கினன் முழவுத்தோளினன்

இ-பு, இவ்வாறுயோசனைசெய்த நிடதராசன்தன்ன தேசத்தரசனுவ
க்குஓலையெழுதி யனுப்பினன் எழுதினவகையாவது சிங்கம் போன்ற
ஒப்பற்றவச்சிரவாகுமகாராசாவே உம்மைப்பார்க்க வேண்டுமென்று
என்மனதில் விருப்பமுண்டாயிருக்கின்றமையால்நீர் உம்முடையதே
சம்விட்டுப்புறப்பட்டு வழிகளைக்கடந்துநான்பார்க்கும்படி வரவேண்
டுமென்று ஓலையெழுதியனுப்பினன் மத்தளம்போலத் திரண்டதோ
ளையுடைய நிடதராசன்-எ-று, சக

வேறு,

தன்னிகரினிடதர்பிரான்றருந்தூதர் தசான்னர்கோன்றன் மாட்
டெய்திப்,பொன்னியலுங்கனைகழலான் வரவிடுத்தவோலை யெனப்புக
ன்றுாட்ட, மின்னியலுங்கதிர்வேலான் குறிப்புணர்ந்துவேறொருவ
ன்விரைந்துவாங்கிப், பன்னுவனேயெனக்கேட்டாங் கிறைபணிப்ப
ப்பாசுரத்தைப்பகரலுற்றான,

இ-பு, தனக்கொப்பில்லாதவனாகிய நிடததேசத்தரசன் இவ்வாறு
ஓலையெழுதிக்கொடுத்து அனுப்பியதூதர்கள்தசானனதேசத்தரசனி
டத்திற்போய்ப்பொன்னாற்செய்யப்பட்டு ஒலிக்காநின்றவீரகண்டைய
ணிந்தகாலையுடைய நிடதமகாராசன்வரவிடுத்தஓலைகொண்டுவந்தோ
மென்று சொல்லிஅதைக்காண்பித்தவளவில் அங்கிருந்த ஒரு கர்ன்
னன் அரசன்குறிப்பறிந்து காண்பித்தவோலையைத் தன்கையில்வாங்
கிவாசிக்கும்படி கட்டளையிடவேண்டுமென்றுகேட்டு அரசன்உத்தர
வுகொடுக்கப்பெற்றுக்கொண்டு அவ்வோலையைவாசிக்கின்றான்-எ-று

போராண்மையிலவேந்தர்முடியுழுதுசிவந்தபொற்றாட்புகழோ
ய்காண்க, நீராருநிடதத்தோனவரவிடுத்த வோலையெனறு நினைக்
காணும், பேராசைமிகவுடையேனாகலினு னின்னகரம் பெயர்ந்துவந்
தென்,சீராருநகரடைந்து பினனினதுதிருநகர்நீசேறல்வேண்டும்

இ-பு, மிகுந்தபராக்கிரமமுள்ள மறுதேசத்தரசர்கள் மகுடங்கள்
பட்டுச்சிவந்த வீரகண்டையணிந்த காலையுடைய வச்சிரவாகுமகாரா
சாவேநிடததேசத்தரசனாகியநாம்உமக்குஎழுதியனுப்பியஓலையைவா
சித்துக்காண்பீராக என்னவெனில், உம்மைக்காணவேண்டுமென்று
நான அதிகஅபேக்ஷைகொண்டிருக்கிறேனாதலால் உம்முடையநகா
ம்விட்டுப்புறப்பட்டுவந்து-சிறப்புள்ளஎனதேசத்திற் சேர்ந்திருந்துபி
னபு உம்முடையநகரத்திற்குப்போகவேண்டும்-எ-று. ருக

என்றரசன்வரவிடுத்த ஓலையிற்பா சுரமுழுதுநயம்பக்கேட்டுக், குன்றெனவான்முகடணவுங் குடுமிநெடுங்குருமணித்தேர் கொணர்கென்றேறி, மின்றிகழும்படைவேந்தற்சூழ முரசதிர வெண்சங்கார்ப்பத், தொன்றுவரும்படைநடுங்க வெழுந்தனன் மன்னவனோடுந் தொடர்புகொள்வான்,

இ-பு, இவ்வண்ணமெழுதி நிடதராசன்அனுப்பியஓலையிலிருந்தவாக்கியங்களைச்சொல்லக்கேட்டு அவ்வரசனுடனட்புகொள்ளமேருமலைபோல்வான்முகட்டையளாவுஞ் சிகரத்தையுடையநிறமுள்ள ரத்தினங்கள்பதித்த தேரைக்கொண்டுவரச்சொல்லி அதிலேறிக்கொண்டு ஒளிவிளங்கும் ஆயுதங்களையுடையஅரசர்கள் தன்னைச்சூழ்ந்துவரவும் பேரிசொலிக்கவும்தவளச்சங்கம் ஆரவாரிக்கவும்பழமையாய்வருகின்றஎதிரிகள்படைநடுங்கவும் புறப்பட்டான்=எ-று, ௫௨

பாறிலாப்பெருங்குணத்தான் வருகின்றானெனக்கேட்டமன்னர்மன்னனறியோசனையளவாயணிபரப்பி எதிர்ந்தவனையன்பிற்புல்லி வீறினுயர்ந்தபெருந் தன்பதியினமைவித்துவியப்பினோடுந் தாறினெடும்பூகந்தலைவணங்குந் தசானனர்க்குத்தக்கசெய்தான்

இ-பு எக்காலத்திலுமாறுபடாத பெருங்குணத்தையுடைய வச்சிரவாகுமகாராசன் வருகின்றானெனக் கேள்விப்பட்ட நிடதராசன் ஆறுயோசனைதூரவளவில் தன்சேனைகள்பரந்திருக்கும்படி அனுப்பித்தானும்புறப்பட்டுப்போய் அந்தராசனைக்கண்டு அன்புடன்அளவளாவி எல்லாச்செல்வத்தினாலும் உயர்ந்ததானதன்னகரத்துக்கு அழைத்துக்கொண்டுபோய்ச்சேர்த்துச் சந்தோஷத்துடன் குலைகளின்மிகுதியால்கமுகமரங்கள் தலைவளைந்திருக்கும்படியான தசானனதேசத்தரசனுக்குத்தக்கபடி உபசாரஞ்செய்தான்=எ-று, ௫௩

காவலவன்றனக்களித்த சிறப்பெவையுங்கண்டுநெடுங் கதிர்வேன்மன்னன், பூவலயந்தனினிவன் போனடபினர்வேறிலரென்னப்புகழ்ந்துவேலை, மாவலவன்பலகலையும்பயில்பத்திராயுவெனு மைந்தனெய்தி, யாவலுடன்றிருத்தாதையடிபணிந்தருவாய்புதைத்தங்கருகுநின்றான

இ-பு, நிடதேசத்தரசன் தனக்குச்செய்த உபசாரங்களையெல்லாம்மிகுந்த ஒளியுள்ளவேலையுடைய வச்சிரவாகுஎன்னும் அரசன்பார்த்துச்சந்தோஷித்துப் பூலோகத்திலிவனைப்போல் நம்மிடத்தில்நட்புள்ளவர்கள்வேறொருவருமில்லையென்று புகழ்ச்சிசெய்யும்போது குதிரையேறிப்பொருந்துவதில் வல்லவனும் பலசாஸ்திரங்களை யுணர்ந்தவனுமாகியபத்திராயுவந்து அன்புடன்தன்தகப்பன்பாதத்திற்பணிந்து அவனுக்குச்சமீபமாகநின்றான், ௫௪

கண்டவுடன்வச்சிரவாகென்னு மடல்வேந்தனகங் களித்துநோக்கித், திண்டிறலாய்வடிவாட்கைச்சேவகனேயிவணவருகவருகவென்று, வண்டமர்தார்நிடதர்பிரான் றனைமுகம்பார்த் திவன்கொடியமகதன்றன்னை, யொண்டிறலும்படைச்செருக்கு மழித்தெனைக்காத்துயிரளித்தவுரவோனென்றான்,

இ-பு, அவனைப்பார்த்தவுடன் வச்சிரவாகுஎன்கிறபராக்கிரமமுள்ள அரசன்மனக்களிப்புடனேநோக்கி மிகுந்தபலமுள்ளவனே வடிவாளேந்தியகையையுடையவீரனே என்சமீபத்தில்வாசமீபத்தில்வாவென்றுசொல்லி வண்டுகள்பொருந்திய மாலையணிந்தநிடதராசன்முகத்தைப்பார்த்து இந்தப்பிள்ளை கொடியவனாகிய மகததேசத்தான் பலத்தையும்அவன்சேனையின் இறுமாப்பையும்அழித்து என்னைக்காத்து உயிர்கொடுத்த புண்ணியவானென்றுசொன்னான்=எ-று, ருரு

பின்னுமிஃதுரைக்கின்றா னிவனைபருந்தவப்பயன்போற் பெற்றோன்யாவன், மன்னுமிவன்பதியேது மாபேதெற்குதவிசெயவந்ததேது, பொன்னமரும்புயத்தோய்நின் மருகனிலையெனக்கடைவே புகறியென்னப், பன்னினனங்கதுகேட்ட நிடதர்பிரான்முறுவலித்துப்பகரலுற்றான்,

இ-பு, மேலுஞ்சொல்லுகிறான் இந்தப்பிள்ளையை அரியதவப்பயன்போலப்பெற்றவன்யாவன் இவனிருக்கும்பதிஎது (மாபென்ன) எனக்குஉதவிசெய்யும்படிவந்த காரணமென்ன ஜயலட்சுமிவாசமாயிருக்கும்புயத்தையுடைய அரசனேஉன்மருமகனுடைய வரலாறெல்லாமெனக்குவிவரமாகச் சொல்லவேண்டுமென்றான் அதைக்கேட்ட நிடததேசத்துஅரசன் நகைத்துச்சொல்லுகிறான்-எ-று, ருசு

திங்களெனப்பொலிகாமவெண்குடையோ யொருகதையான்செப்பக்கேட்டி, மங்குல்வளமுறுகதொரு திருநாடுடைதுபுரக்கு மன்னர்மன்ன, னங்கவன்றன்மனைவியையும் பாலனையும்பழிகருதா தகற்றிவிட்டான், சங்கணிவார்குழைப்பரம னருளினொரு வணிகன்வர்தம்மைக்காத்தான்,

இ-பு, சந்திரனைப்போல விளங்கும் முத்துமாலை அலங்கரித்தவெண்குடையையுடையராசனே நான் ஒரு கதைசொல்லுகிறேன் அதை நீகேள் மேகங்கள் காலந்தப்பாமல்மழைபொழிகின்றவளப்பந்தங்கிய ஒருநகரமுண்டு அதை ஆளுகின்றஅரசன் ஒருவனுண்டு அவன் பழியையெண்ணாமல் தன்மனைவியையும் புத்திரனையும்நீக்கிவிட்டான் சங்குக்குழையணிந்த பரமசிவனுடைய கிருபையினால் ஒருவணிகன் அவர்களைக்காப்பாற்றினான்,எ-று, ருஎ

குலநாயகன்றான்கருதிப்புரந்தளிக்கு நாளினங்கக்குமரன்மாய்ந்தான்
நிலமானுந்திருப்புருவத்தேவியழக் கண்டெடுத்ததெய்வயோகி

யலையாமலின்னுயிர்பெற்றெழுக வெனவெழுந்தவனுக்கறமுங்கூறித் தொலையாதவலியுமொருசங்கமும்வாளுங்கொடுத்துத்துயரந்தீர்த்தான்

இ-பு, உத்தமகுலத்தானாகிய அந்தவணிகன் ஆதரிக்கும்நாளில்புத்திரனிறந்துவிட்டான் அந்தத்துப்பாத்தினால்வில்லையொத்தபுருவத்தையுடையராஜஸ்திரிஅழுதுகொண்டிருந்தாள்- அப்போது அவ்விடத்தில்வந்தஒருசிவயோகிஅவள்அழுகையைக்கண்டு-மனமிரங்கி-வருந்தாமலிருக்கும்படி இறந்தவன்உயிரைக்கொடுத்தெழுப்பிஅதன்பின்பு அந்தப்புத்திரனுக்கு ராசநீதிபோதித்துமாறாதமிகுந்த பலமும்வாளுஞ்சங்கமுங்கொடுத்துத் துயரத்தைநீக்கினான்-எ-று, ருஅ

நற்றவத்தோன்றிருவருளர் விறைமகனுமெழுந்துபெருகநாளுநாளுங்கற்றிரளிற்பொலிந்திணிதோட் காளையாயிளமையெழில் கனியநாளிற்பற்றலர்தன்றாதையைவெவ் விருந்தளையிட்டுடன்கொடும்போம்படிகேட்டெய்திச், செற்றவரைத்தளைப்படுத்தித்தாதைசிறைமீட்டனன்போர்ச்சிங்கமன்னான்,

இ-பு, இவ்வாறாகியயோகிஅருளினால்ராசபுத்திரன்நாளுக்குநாள் பலம்அதிகரிக்கக் கிரண்டகல்லைப்போலப்பருத்ததோளை யுடையகாளைப்பருவமா யிளமையுமசௌந்தரியமும்மிகுகியாகுக்காலத்தில்பகைவாவந்துபோர்செய்துஜயம்பெற்றுத் தன்தகப்பனைச் சிறைப்படுத்திக்கொண்டுபோகக்கேள்விப்பட்டு அழகியசிங்கத்தையொத்த அந்தப்புத்திரன்அவ்விடத்திற்போய் அவர்களைவென்றுசிறைப்படுத்தித்தன்தகப்பன்சிறையைநீக்கிவிட்டான்-எ-று, ருக

இக்கதைபோலொருகதைமுன் கேட்டதுண்டேலியம்புகெனவியம்பிவிறு,தக்கபெரும்புகழாவோயுரைத்தகதைக்குரியரையுஞ்சாற்றக்கேட்டி-செக்கமலச்செங்கனிவாய்ச்சேயுமிவன்றாதையுநீ சிறந்தகற்பான்-மிக்ககுலக்கொடியுமின் மனையென்றான்மதிமயங்கி வேந்தன்வீழ்ந்தான்,

இ-பு, இந்தக்கதைபோல-நீ- ஒருகதைகேள்விப்பட்டதுண்டாயிருந்தால்சொல்லென்றுசொல்லி விளங்குகின்றதகுதியுள்ளபெரும்புகழ்பெற்றமகாராசனே இப்போதுநான்சொல்லியகதைக்கு உரியவர்களையுஞ்சொல்லக்கேட்பாயாகசெந்தாமரைமலர்போன்ற செவ்வாயையுடைய அந்தப்புத்திரனும் இந்தப்புத்திரன்றன்தகப்பன்நீதான்கற்பினால்சிறந்த தாயானவள் உன்மனைவிதான்என்றுசொன்னான் அதைக்கேட்டஅரசன் அறிவுமயங்கிக்கீழ்விழுந்துவிட்டான்-எ-று, சுய

வீழ்ந்தமன்னன்தனையெடுத்துவியர்புலராமுகம்விளங்கிவேந்தேயெம்மை-யாழ்ந்தவிதிசெய்ததுயர்யாமுழுந்தோநீங்கனு லழுங்கவேண்டாங்,காழ்ந்தமனந்தனைத்தெளிவித்தெழுகவெனத்தான் புரிந்ததவ

றுநெஞ்சைப்போழ்ந் துணர்வையழிக்கவிருந் தயர்வுயிர்த்து மகனையுறப்புல்லிச்சொன்னான்,

இ-பு, அப்படிவிழுந்தஅரசனையெடுத்துவியர்வைமாற்றி முகந்துடைத்து மூர்ச்சைநீக்கி என்னையனே எங்களைப்பற்றிய வினை செய்த துன்பத்தைநாங்கள்அநுபவித்தோம் அதற்காகநீவருந்தவேண்டியதில்லையென்று மனதைத்தெளிவித்து எழுந்திருவென்றுசொல்லஎழுந்துஅவ்வரசன் தான்செய்தகுற்றந் தன்மனதைப்பிளந்துஅறிவைக்கலக்கிவிடஒன்றுந்தோன்றாமலிருந்து பின்புதேறி மகனைஅணைத்துக்கொண்டுசொல்லுகிறான்-எ-று, ௬௧

கடுங்கானத்திடைதனியேயுமைவிடுத்துவரப்பணித் தாடியனெஞ்சக்கொடும்பாவிதனைமகதன் கொல்லாமலுயிரளித்த குமராவீண்டுநடுங்காமலுயிர்பொருந்தப்புல்லவுநீகருணைசெய்தாய் ஞாலமென்னை-யடுங்காலனென்பதாலரசனென்றுசொலத்தகுமோ வந்தோவந்தோ

இ-பு, கடுமையாகியகாட்டில் உங்களைவிட்டுவரும்படி உத்தரவுசெய்தவலியநெஞ்சையுடைய கொடும்பாவியாகியஎன்னை மகத்தேசத்தான்கொல்லாமல் உயிர்கொடுத்தபுத்திரனே இப்போதுநான்அஞ்சாமல் உயிரோடுயிர்பொருந்தும்படி புல்லிக்கொள்ளவும் கிருபைசெய்தாய் இதையறிந்தஉலகத்தார் என்னையமனென்றுசொல்வார்களேயல்லது அரசனென்றுசொல்லமாட்டார்கள் ஐய்யையோ-எ-று, ௬௨

அறத்தினெறிகருதாம லரிவையையும்புதல்வனையு மகன்கானத்தின் மறத்தின்வழிவிடுத்தேனுமன்னவனேநீசர்தொழின்மருவியின்றேனிறப்பதுவேதருமமெனத்துணிந்ததசானனர்கோன்சூட்சிறாலோ,திறக்கதிர்வேனிடதர்பிரான் றெருட்டவருந்துயர்சிறிது நீங்கிச்சின்னாள்,

இ-பு. தர்மநெறியைஎண்ணாமல்-மனைவியையும்புத்திரனையும்காட்டினிடத்திலனுப்பிவிட்டநானும்அரசனா,புலையர்செய்யுந்தொழிலுள்ளவனாயிருந்தேனே ஆதலாலினிஇவ்வாழ்க்கைநீங்கிவிடுவதேதருமமென்று துணிவுகொண்டெழுந்ததசானனதேசத்துராசன் அங்கிருந்தமந்திரிகளும் ஒளிதங்கியவேலாயுதத்தையுடையநிடததேசத்தரசனும்சமாதானஞ்சொன்னதினால் துன்பஞ்சற்றுநீங்கிச்சிறிதுநாள்-எ

சந்திராங்கதனன்புகூரவேதங்கிநீக்கருந்தொடர்புகொண்டுபின்
சிந்துராணனச்சுமதிதன்னொடுஞ்செம்பொனீள்கொடித்தேரிலேறியே
மைந்தன்வீரவேற்பத்திராயுவுமருகிகீர்த்திமாலினியும்பின்வரக்
கொத்துலாமலர்க்கானுமாறுநீள்குன்றுநீத்தியோகராக்கூடினான்

இ-பு, நிடதேசத்துஅரசனாகிய சந்திராங்கதன் அன்புடன் வைத்துக்கொண்டிருக்கவிருந்து அவ்வரசன்சினேகமிகுதியாகப் பெற்றுக்கொண்டுபின்பு சிந்தூரத் திலதம் அணிந்தமுகத்தையுடையதன்மனைவியுடன்செம்பொன்மயமாய்ப் பெரிய கொடிகட்டப்பட்டதேரின்மேலேறிக்கொண்டு தன்புத்திரனாகிய பத்திராயுவும் மருமகளாகிய கீர்த்திமாலினியும் பின்னேவரக் கொத்தாகியமலரையுடைய காடும் நதிகளும் உயர்ந்தமலைகளும் நீங்கித்தன்னகரத்திறபோய்ச் சேர்ந்தான்-எ-று,

நகரின்வாழுநர்கண்டுமைந்தனை நறியமாமலர்சிதறியேத்துவார்
புகர்செயானையாயூழிகாறுநீ பூமிகாத்தெமைப்புரத்தியாலென்பார்
தகாவார்குழல்வனிதைசெல்விசாரங்கபாணியேயிவனென்றோதுவார்
நகரின்மைந்தனுக்காவதாகயா நெடிதுவாழுநாளெனவாழ்த்துவார் (ர்

இ-பு, அங்கநகரத்தில் வாழ்கின்றவர்கள் பத்திராயுவைப் பார்த்து வாசனைதங்கியமலர்கள் தூவித்துதிசெய்வார்கள், சிலர் புகர்முகயானைப்படையையுடைய அரசனே ஊழிகாலவரையில் இவ்வுலகத்தைக்காத்து எம்மைரட்சிக்கக்கடவையென்று சொல்வார்கள், சிலர் பத்திராயு மகாவிஷ்ணுவே மயிர்ச்சாந்தணிந்த நீண்டகுழலையுடையஇவன்மனைவிமகாலட்சுமி யென்பார்கள்.சிலர்நாம்வாழுநாளாகியநம்முடையஆயுசுஇந்தப்புத்திரனுக்கேயாகக்கடவதென்று வாழ்த்துவார்கள்-எ-று,

பகைஞரஞ்சவேபொருதுதந்தைதன்படர்கவலைதீர்ந்ததோள்பார்த்திலீரென்பார், புகைசெய்வேலினனிறைமைபூண்டிவண்புகுதமெய்த்தவம்புரிந்துளோமென்பார், மகதராசன்றன்வல்லியிற்படவாகைகொண்டகூர்வாளிதேரென்பார்,சகரநீர்சூழும் புவியிவன் றிருத்தாணிழற்றேணதங்குமாலென்பார்,

இ-பு, சத்துருக்கள் பயப்படத்தக்கதாகப்போர்செய்து தகப்பனுக்கேரிட்டமனவருத்தத்தை நீக்கியபுயத்தைப் பாருங்களென்பார்கள்சிலர்,பகையைத்தருவதாகிய வேலாயுதத்தையுடைய இவன் அரசாட்சிபெற்றுக்கொண்டு இவ்விடத்தில்வரநாம் உண்மையாகதவஞ்செய்தோமென்பார்கள்சிலர்- மகதராசன்விலங்கில்அகப்பட்டுக்கொள்ளும்படிவெற்றிகொண்ட கூரியவாள்இதுதான் பாருங்களென்பார்கள் சிலர்சமுத்திரஞ் சூழ்ந்தஉலகமெல்லாம்இவன்காலின்கீழேதங்குமென்பார்கள்சிலர் -எ-று, சுசு

என்றுகூறியமாந்தரின்புறமேவந்தமேலோடும் போயெழில் கொண்மன்னவன்- குன்றுபோலுயர்கோயில்வைகியோர் குடைநிழற்புவிகாத்தனந்தநாட்-சென்றபின்னரோமகதன்றன்னை யுந்திறையளக்கெனச்செப்பிவிட்டபின்-பொன்றிவானுலகாடன்மேயினன் புதல்வன்பூதலம்புரப்பதாயினன்,

இ-பு, என்றுசொல்லிய நகர்ச்சனங்கள்இன்பம்பொருந்தத்தக்கதா கத்தன்புத்திரனுடன்போயவச்சிரவாகுமகாராசன் மகமேருவையொ த்தவன் அரண்மனையிலிருந்து ஒருகுடைநிழலில்பூமியைக்காத்துநெ டிதுநாள்சென்றபின்பு மகதராசனைச்சிறைநீக்கி யினி நீதிறைகட்டிக் கொண்டிருவென்றுசொல்லி அனுப்பிவிட்டபின் இந்தத்தேகத்தைவி ட்டுநீக்கிச்சுவர்க்கபதம்பெற்றான் பத்திராயுஅரசுசெய்துகொண்டிருந் தான்-எ-று, கூஎ

பத்திராயுவின்கதையுரைத்த-அத்தியாயம்

முற்றிற்று,

ஆ. திருவிருத்த-எ௱சுய



உ

சிவமயம்,

மதிஞன்காவது,

பத்திராயுமுத்திபெற்ற - அத்தியாயம்,

——(※)——

திருந்தலர்வணங்கநீடு நிதிமல்கச்செங்கோலோச்சிப்
புரந்தனனுலகமெல்லாம் பொதுவறவென்றுசூத
னிருந்தவமுனிவர்க்கெல்லா மியல்பினினியம்பிமீட்டு
மருந்தவனனையபத்தி ராயுவின்சரிதஞ்சொன்னான்

இ-பு, சத்துருக்கள்வந்து பணியவும் மிகுந்தநிதிகள்வந்து சேரவு ம்-செங்கோல்செலுத்திப் பொதுவில்லாமல் உலகத்தைக்காத்து அர சுசெய்து கொண்டிருந்தானென்று சூதமுனிவர் நைமிசாரணியமுனி வர்களுக்குச்சொல்லிப்பின்னும் அம்முனிவர்பத்திராயு வின்சரித்திர ஞ்செல்லுகிறார்-எ-று, க

கன்னவிறிரண்டோண்முத்தக் கதிர்மணிக்கவிகைச்செங்கோன்
மன்னவன்மைச்சரோடு மலிகடற்றானையாடும்
பொன்னணிந்திரிமன்னும் புரவியந்தேர்போற்றொண்டு
மின்னிடைத்துணைவியோடு விரைமலர்க்கானம்புக்கான

இ-பு, மலைக்கொப்பாகச் சொல்லுகின்ற இரண்டவடிவாயிருக்கும் தோள்களையும் முத்துகளால் அலங்கரித்த குடையினையும்உடையவ னாய்ச்செங்கோல்நடத்தும் பத்திராயு என்னும்அரசன் மந்திரிகளும் மிகுதியாயுள்ளசேனையுஞ்சூழ்ந்துவரப்பொன்னாற் செய்யப்பட்ட உ ரு

ளைபூண்டதேரில் தானும் தன்மனைவியுமாக ஏறிக்கொண்டு வாசனை யுள்ளகானகத்திற்சென்றான்-எ-று, உ

சண்பகம்பனசம்பூகஞ் சந்தனங்கமாலங்தேமா
விண்பகநிமிருங்கொக்கு வெள்ளின்மந்தாரந்துற்றுக்
கண்புகவரிதாய்வாசங் காவதங்கமழுஞ்சோலை
பண்பயில்வண்டுந்தேனுங் கிள்ளையும்படிவதம்மா

இ-பு, அந்தவனத்திலிருக்கும்-சண்பகம்-பலா-கமுகு-சந்தனம்தேமா-பச்சிலை-அண்டமுகடு பிளக்கும்படி உயர்ந்திருக்கும் கோங்கு-விளாமந்தாரம்-என்னும்விருக்ஷங்களால்பார்ப்பவர்கள் பார்வைநுழைவதற்கிடமில்லாமல நெருங்கப்பட்டு ஒருகாததூரமட்டும்வாசனைபரிமளிக்குஞ்சோலையானது இசைபாடும வண்டும்தேனென்கிற வண்டுகளுங்கிள்ளைகளும் வாசமாயிருக்கத்தக்கது-எ-று, ந

மவ்வலங்குழலாள்கீர்த்தி மாலிணியணங்கினோடு
மவ்வனந்தன்னின்மன்ன னயர்வுயிர்த்திருந்தகாலை
கொவ்வையங்கனிவாயக்கற்பிற் கொடியொடோரந்தணாளன்
கவ்வையால்முறையிட்டெய்திக் காவலற்கிதனைச்சொன்னான்

இ-பு, இத்தன்மையுள்ள வனத்தில் பத்திராயுஎன்னும் அரசன்கீர்த்திமாலினியென்னும் மனைவியுடன்வழிவந்தஇளைப்புநீங்கி யிருக்குமபோதுஒருபிராமணன் தன்பத்தினியாகிய கோவைப்பழத்தையொத்தசெவ்வாயினையுடையமாதுடன் துயரமுள்ளவனாய் முறையிட்டுக்கொண்டுவந்து அரசனுக்குஇந்தவார்த்தை சொல்லுகிறான்-எ-று, ச

அறத்தினிலுலகங்காக்கு மரசனேயரசரேறே
மறப்புலிதொடர்ந்துகொல்வான்வருகின்றதத்தனைநீயுன்
திறப்படையேருயாங்கே செகுத்துயிர்கவர்ந்துயாங்க
ளிறப்பதுதவிர்த்துளாவி யீய்ந்தெமைப்புரப்பாயென்றான்

இ-பு, தர்ம்மத்துடன் உலகத்தைக்காக்கும் அரசனே அரசர்களாகிய-யானைகளுக்குச்சிங்கம்போ லிருப்பவனேகொடிதானஒருபுலியெங்களைக்கொல்லத் தொடர்ந்துவருகின்றது அதனைஉன்கையிலிருக்கும்வலியபாணத்தையேவி அவ்விடத்திலேவிழுந்து சாவும்படிகொன்றுநாங்களிறப்பதைநீக்கிஎங்கள்பிராணனைக்கொடுத்துக்காப்பாற்றவேண்டுமென்றுசொன்னான்-எ-று, ரு

வேறு,

மறையவனோதிய வாசகம்வந்தே
யறைகழனமன்னவ னஞ்செவியெய்தப்

பிறைநிகர்வார்சிலை வாளிபிடித்துக்
கறுவுகொள்வெம்புலி யைக்கடிதெய்வான்

இ-பு, இவ்வாறு-பிராமணன்சொல்லிய வார்த்தையானது வந்து ஒலிக்கும் வீரகண்டைகாலிற்கட்டியஅவ்வரசன்-காதில்கேட்டவுடன்-க் பிறைபோல்வளைந்த,பெரியவில்லையும் பாணத்தையும் கையிலேந்தி, கோபங்கொண்டுவருகிறவெய்யபுலியைவிரைவினிற்கொல்லுவதற்கு

உற்றனனுற்றவ னென்றுதன்முன்னம்
பற்றியவெம்புலி பார்ப்பினிதன்னை
யெற்றியணைந்து பிடித்தலுமேங்கு
முற்றிழையாளர சன்முகநோக்கி

இ-பு, எத்தனப்பட்டான் - அப்படி-யெத்தனித்தவன் வருவதற்கு முன்தொடர்ந்துவந்தபுலியானது அந்தப்பிராமணத்தியைஅடித்துப் பிடித்துக்கொள்ளவே அழுகிற அந்தப்பிராமணஸ்திரியானவள் அரசன்முகத்தைப்பார்த்து-எ-று, ௭

மன்னவனேபுலிவாயிடையுற்றே
னென்னுயிர்நின்பரமென்றிதுகூறி
மின்னவிர்செஞ்சடைமெய்ப்பொருணமம்
பன்னினளாவிநடந்ததுபாவம்

இ-பு, அரசனே-நான்புலிவாயிலகப்பட்டுக்கொண்டேன் என்உயிரைக்காப்பது உன்பாரம்என்றுசொல்லிமின்னலைப்போல விளங்கும் செஞ்சடையையுடைய உண்மைப்பொருளாகியசிவநாமத்தையுச்சரித்தாள் பிராணனீங்கிவிட்டது இதுபாவமானகாரியம்-எ-று, ௮

வேதியன்மாது விளம்பியசொல்லான்
மாதுயரெய்திய மன்னன்வெகுண்டே
காதவிடுத்தகடுங்கணைசென்றே
போதெனவீழ்ந்துபுண்டரிகத்தின்

இ-பு, அந்தப்பிராமணன் சொல்லியசொல்லால்மகத்தாகிய துயரங்கொண்டஅவ்வரசன்கோபமுள்ளவனாய்க் கொல்லும்படிவிடுத்தபாணமானதுபோயப்புலியின்மேல்பூவைப்போலவிழுந்தது-எ-று, ௯

கண்டுபொறுமைகருத்தைவெதுப்பத்
திண்டிறல்வேலவனின்றுநிகைத்தான்
புண்டரிகந்தெறுபூவையையுங்கொண்
டுண்டிடவெம்முழைதேடியொதுங்க

இ-பு, தன்பாணம்பூவைப்போல விழுந்ததைக்கண்டு உண்டான பொறுமையானது மனதைவருத்தயிருந்தபலமுள்ளவேலேந்தும்அ

வ்வரசனுக்கு ஒன்றுந்தோன்றமல்திகைத்து நின்றுவிட்டான் புலியானது தன்னாற்கொல்லப்பட்டவளை யுண்ணக்கவ்விககொண்டுமலேக்குகையை நாடிச்சென்றது-எ-று, (௰)

அச்சமுறுத வரும்புலிபோக
வச்சிரவாகு மகன்றுபருற்றான்
விச்சையுணர்ந்தறி வேதியன்மாதை
யிச்சகமீதி லிழந்தனனென்றான்

(இ-பு)எவ்வளவும்பயமில்லாமல்அந்தப்பெரும்புலியானதுபோய்விடவே வச்சிரவாகுபுத்திரனுகியபத்திராயுஎன்பவன் துயரம்அடைந்தான் வேதசாஸ்திரங்களுணர்ந்த பிராமணனுனவன் என்மனைவியை யிவ்வுலகத்திலிழந்துவிட்டேனேயென்றுசொல்லி-எ-று. (கக)

(வேறு)

அருந்ததியுமொவ்வாதகற்புடைய மனையவளேயந்தோவந்தோ, பெருமபுலியின் பகுவாயினுயிரிழககமுற்பவத்திற்பிழைத்ததுணடோ குரும்பைமுலேத்தாளநகைக் கொடியிடையாய்நீவிளிந்தகொடுமைகண்டு, மிரும்பனையகொடுமனங்கொண் டின்னமுநானிறவாமலிருக்கின்றேனே.

(இ-பு.) பதிவிரதாதருமத்தில் அருந்ததியும் நிகராகாத மனைவியே ஐயையோபெரும்புலியின்பிளப்பாகியவாயில் அகப்பட்டுக்கொள்ளும்படி முன்ஜன்மத்திற்செய்தவினையுண்டோதென்னங்குரும்பையையொத்த தனங்களும் முத்துகளையொத்த தந்தங்களும் பூங்கொடியையொத்த இடையினேயும் உடையவளே நீயிறந்தகொடுமையைக் கண்டும் இரும்பையொத்தவன் னெஞ்சங்கொண்டு இன்னமுநானிறவாமலிருக்கின்றேனே-எ-று. (கஉ)

என்றென்றுபற்பலவும்பன்னியெடுத்தழைத்துமனமிடரின்மூழ்கிக் கன்றீன்றுதனையிழந்தகறவைபோ னெடிதுயிர்த்துக்கவன்றுமாழ்கியின்றென்றுதுணிகுவன்யானிங்கென்ன நினைந்துகதெழுந்துநின்றுகுன்றென்றதிரள்புயத்துக்கோமன்மேல்வெகுண்டினையகூறினனே

(இ-பு) என்றென்று பலபலவாக தன்மனைவியினகுணசெயங்களையெடுத்து அழைத்துச்சொல்லி துன்பத்தில்மனதுஅழுந்திடக்கன்றினையிழந்த பசுவைப்போலபபெருமூச்சுவிட்டுக்கவலையுடன்சோர்ந்துஇப்போது ஒருகாரியஞ்செய்யத் துணிகுவனென்று தனமனதில் நிச்சயித்துக்கொண் டெழுந்துநின்று மலையையொத்ததிரண்ட புயத்தையுடையபத்திராயுவாகிய அரசன்மேல்கோபித்துக்கொண்டு இந்த வார்த்தைகளைச்சொல்லுகிறன்-எ-று, (கங)

மறையவருக்கிறுதிவந்தா லவருயிருக்குதவிசெய்யாமன்னரேறே
கறையிருக்குந்தீவாய்வெங் கனற்றறுக்கட்கொடுவரிநின்கண் முன்னாகப்
பிறைநுதற்குப்பாடரியற்றியுயிர்கவர்ந்துபிலம்புகுதப்பிடித்தவில்லோ
டுறைகழித்தகணையேந்திநின்றனை நின்னரசியலுக்குவமையுண்டோ

(இ-பு) பிராமணர்களுக்குத் துன்பம்நேரிட்டவிடத்தில் உதவி
செய்யாதமன்னவர்கள்சிங்கமே உதிரம்பொருந்தியிருக்கும்பொல்லா
தவாயும்வெவ்விய தீப்பொறியைக்கக்கும் கண்களுமுள்ளஒருபுலியா
னது உன்கண்ணுக்கெதிராக என்மனைவிக்குவருத்தத்தைச்செய்து உ
யிரைவாங்கிக்குகையிற்போகவும் பிடித்தவில்லும் தூணியிலிருந்தெ
டுத்தஅம்பும் ஏந்திக்கொண்டுநின்றாய் ஆதலால் உனரசியலுக்கொ
ப்பான அரசியல்வேறொன்றுமில்லை-எ-று. (௧௪)

ஆறிரட்டியா யிரம்வெங்களி யானைபலமுனக்குண்டதனைவேந்
தே, பாறிரட்டுங்கதிர்வடிவேற்பகைவரிடத் தீந்தவாற்பயங்கொண்
டாயோ, நூறிரட்டித்தெழுந்தமரக்கானகத்திலென்றுணையைத்தொ
டர்ந்துநெய்த்தோர்ச், சேறிரட்டித்திரும்பிலவாய்ப்புலிகவரமீட்டிலை
நீசெய்ததென்னே.

(இ-பு,)பன்னீராயிரம்யானைபலம்உனக்குஇருக்கின்றதுஅரசனே
அந்தப்பலத்தினைப் பருந்துகளைக்கூட்டமாய்ச்சேர்க்கும்ஒளிதங்கியவ
டிவேலையுடையபகைமன்னரிடத்தில்கொடுத்துவிட்டுப்பயம்பெற்றுக்
கொண்டனையோசிறுசெடிகளால் நெருங்கப்பட்டுமரங்கள்மேலோங்கி
யிருக்கும்இந்தப்பெரியகாட்டில்உதிரஞ்சேறுபடும்படிபிலம்போன்ற
வாயையுடையபுலியானதுதொடர்ந்துஎன்மனையாளைப்பிடித்துக்கொ
ண்டுபோய்விட்டதே அதனைத்தடுக்காமல் என்னசெய்தாய்-எ-று ()

கடுங்கானிற் புலியெனது கனங்குழையைக்குருதியுண்ணக் கரு
தின்றூ, நெடுங்காலத்ததனையுயிரழித்திலை நின்னுயிர்ப்புறங்காத்தஞ்
சின்றாய், கொடுங்காலதூதரடுகளத்தினிற்பப் பகைவர்வந்துகொடு
ம்போர்செய்யி, நடுங்காதுபகைதுரந்துன்னரசுநிலைநிறுத்துவையோ
காமவேலோய்.

(இ-பு) பகைவர்அஞ்சத்தக்க வேலாயுதமேந்தியஅரசனேகொ
டுமையுள்ள இந்தக்காட்டில்உனக்கெதிரில் உதிரமுண்ணப்புலியான
து என்மனையவளைக்கொல்லும்போது அந்தப்புலியைக்கொல்லாமல்
உன்னுயிரைக்காத்துக்கொள்ளும்பொருட்டுப்பயந்துநின்றனைகொடு
மையுள்ளயமதூதர்வந்து போர்க்களத்திலிருக்கும்படிஉன்எதிரிகள்
வந்துவெவ்வியதானயுத்தஞ்செய்தால் அந்தச்சமயத்தில்நடுங்காமல்ப
கைவரைத்துரத்தி உன்னரசாட்சியைநிலைநிறுத்துவையோ-எ-று. ()

பெண்ணாகியந்தணர்தம் பேதையுமாய்நினக்கபயம் பேசினாளை,
யெண்ணாதுகொலுமவேங்கைக் குணவளித்து னுயிர்காத்த வேழை
வேந்தே, மண்ணாளவெண்ணுதியோ வின்னமுமாருயிர்சுமந்து வலி
யிற்றாழ்ந்து, கண்ணார்தமிழிபுரைக்குநாணாயோ வென்றுபலநடுங்கச்
சொன்னான்.

(இ-பு) பெண்பிறப்பாகியும் அந்தப் பிறப்பிலும் பிராமணத்தியாகியும் உனக்குஅபயமென்று முறையிட்டவளைக்காக்கவேண்டுமென்றுஉன்மனதில்எண்ணாமல் கொலலும்புலிக்குஆகாரமாகக்கொடுத்துவிட்டு உன்னுயிரைக்காத்துக்கொண்ட ஏழ்மையுள்ளஅரசனே பலத்தினிற்குறைந்தும் இன்னமும்பிராமணனை வைத்துக்கொண்டுஊராளஎண்ணுகிறாயோ பகைவர்கள் இழிவாகப்பேசுவார்களே அதற்கும்நாணமுறாயோ என்றிவ்வாறு பலபலதூஷணமான வார்த்தைகளை அவனடுங்கும்படிசொன்னான்-எ-று. (கஎ)

என்னலுமேமதிமயங்கிவடி.வேல்கொண்ட கன்மார்பத் தெறிந்த
தென்னக், கன்னியைவெம் புலிகவர்ந்தகொடும்பழியு நான்மறையோ
ன்கடியசொல்லு, மன்னிலையேயகம்வெதுப்பவருந்துயரக் கடலிடை
யாழ்ந்தழுங்குதோறு, மன்னர்பிரானரசியலுஞ் செல்வமுநீத்திறப்ப
னெனுமனததனானான்.

(இ-பு) இவ்வாறு அந்தப்பிராமணன்சொல்லவேஅரசன்மதிமயங்கிவடிவேலைப்பாந்தமார்பில் எறிந்ததுபோலப்பிராமணஸ்திரியைப்புலிகொன்றகொடும்பழியும் பிராமணன் சொல்லுங்கடுமையான வார்த்தையும் அப்போதேமனதைவெதுப்ப நீங்குதற்கரிய துக்கசாகரத்தில் அழுந்தவருந்துந்தோறும் அவ்வரசன்இந்த அரசாட்சியையும்செலவத்தையும் ஒழித்துவிட்டிறக்கவேண்டுமென்கிற எண்ணமுள்ளவனானான்-எ-று. (கஅ)

வேதியருக்கிடாகளையாவேந்தனொரு விலங்கெனவேவேதங்கூற
லாதியினிற்கேட்டிருந்துமவர்க் கிறுதிவந்தவிடத்தஞ்சிநின்றேன்
போதுமினியுயிர்சுமத்தல் சுமந்தாலும்பழியலதுபுகழுமுண்டோ
தீதுதரும்வாழ்க்கையினுஞ் கீர்த்தியுறப்பொன்றுவதேசீரிதென்றான்

(இ-பு) பிராமணர்களுக்குநேரிட்ட இடரைநீக்காதஅரசனொருமிருகமேயல்லதுஅரசனாகானென்று வேதஞ்சொல்லுவதை ஆதியிலேகேட்டிருந்தும் இப்போதுபிராமணனுக்குநேரிட்டவிடத்தில் பயந்துநின்றேன்உயிரைத் தாங்கிக்கொண்டிருப்பது இம்மட்டிற்போதும்அல்லது உயிரைச்சுமந்துகொண்டிருந்தாலும் பழிவருமேயல்லதுபுகழுண்டாவதில்லைஆதலால்தீங்கைத்தருகிறஇந்தவாழ்விலிருப்பதைப்பார்க்கிலும் உயிரை விடுவதே நன்மையாகும் புகழுமுண்டாகும்-எ-று. (௰௯)

மடமாதைப்புலிக்குணவாவழங்கி நெடுந்துயருழக்கு மறையோ ன்ருளிற், றடமார்புமணிமுடியுநிலம்படிய வீழ்ந்துதுயர்தவிர்தியெ ன்று, மிடலானதொன்றுமிலாத் தமியேன்றீநரகத்தின் வீழ்கின்றே னென், னுடைநாடுமென்குலமுநிதியமுநின் வயத்தவென்றுனுரவுத் தோளான்.

(இ-பு) என்றிவ்வாறெண்ணித் தன்மனைவியைப்புலிக்குஆகார மாகக்கொடுத்துவிட்டுத் துயரப்பட்டுக்கொண்டிருக்கிற பிராமணனு டையபாதத்தில் அகன்றமாபும் ரத்தினங்கள்பதித்தமகுடமும் பூமி யில்படும்படிபத்திராயுவெனனும் அரசன்பணிந்துஐயரேதுன்பப் பட வேண்டாமென்றுசொல்லிப்பலமென்பதொன்றுமில்லாத தமியேன் றீநரகத்தில்விழுகின்றேன் என்னுடையதேசமுங்குலமுந்திரவியமு ம்தேவரீர்வசமாக ஒப்பித்தேனென்றுசொன்னன்-எ-று. (உ௰)

மாறிலாத்திறல்வேந்தன் வாய்மொழிகேட்டருமறையோன்வழ ங்குங்கண்ணின், வீறிலான்விறலிழந்தான் பலியெடுத்தான் சுகமிழந் தான்வினையினமூங்கைப், பேறுளானலிழந்தான்மனையிழந்தா னுரி மைதருங்பேறுநீத்தா, னுநினுரைப்பதென்னே வரசனெனக்கூறி யிஃதறையலுற்றன்.

(இ-பு)மாறுதவெற்றியையுடையஅரசன்சொன்னவார்த்தையை க்கேட்டுஅந்தப்பிராமணன்சொல்லுகிறான் கண்ணினொளியிழந்தவனு ம்வன்மையிழந்தவனும் பிச்சையெடுப்பவனுமசுகமிழந்தவனும்பாவ த்தினல்ஊமைத்தன்மையுடையவனும்பூணநூலிழந்தவனும் மனைவி யையிழந்தவனும் இம்மைப்பயனிழந்தவனுமாயிருப்பவன்விசனம்நீங் கிச்சொல்லத்தக்கதென்னிருக்கின்றது அரசனேயென்றுசொல்லிப்பி ன்னும் அந்தப்பிராமணன் இந்தவார்த்தைசொல்லத் தொடங்கினன் —எ-று. (உக)

என்னுடையதுயரமுந்தீர்ந்தாவியுங்கொண்டிருந்தவங்க ளியற்ற வேண்டி, நின்னுடையகுலவனிதை கீர்த்திமாலினியையெனக்குதவ ல்வேண்டு, மன்னவவென்றலுங்கொடிய வடிவுரைவேல்போ லரசன் மருமத்தூனற், நன்னெறிதீரிழிபுரைநீ யிங்குரைத்தா யிவ்வுரையை நவிலற்பாற்றே

(இ-பு) அரசனேஎன்னுடையதுயரம்நீங்கிப் பிராணனைவைத்து க்கொண்டுநான் தவங்கள்செய்யவேண்டுமென்கிறஎண்ணம்உனக்கிரு க்குமானல்உன்னுடைய தர்மபத்தினியாகியகீர்த்திமாலினியையென க்குக்கொடுக்கவேண்டுமென்றுசொன்னன்அப்படிசொன்னவுடன் அ ந்தக்கொடியவார்த்தையானது அரசனுடையமார்பில்வேல்தைத்தது போலிருந்ததினல் ஐயரே- தர்மத்துக்குமாறுன இழிவுள்ள வசனஞ் சொன்னீர் இந்தவார்த்தைசொல்லலாமோஎன்றுராசனசொல்லிப்பி ன்னுஞ்சொல்லுகிறன்-எ-று. (உஉ)

கனைகுரற்றெண்கடலுடுத்தகாசினியின் மறைவல்லோய் கலைவல்லோர்க்கு, முனையிடத்தினுயிர்கொடுப்பார்மூழுநிதியத்தொகைகொடுப்பர்முகமன்சொல்வர், துனைபரித்தேர்கொடுப்பர்கரி கொடுப்பர்பரிகொடுப்பரன்றித்துணையாயுள்ள, மனைகொடுத்துப் புகழ்படைத்த மன்னருண்டேலுரையென்ருன்மன்னர்கோமான்.

(இ-பு,) பிராமணச்சிரேஷ்டரே ஒலிக்கும் ஓசையுடையதாய்த் தெளிவுள்ள கடல்சூழ்ந்த இவ்வுலகில் அரசர்களாயிருப்பவர்கள்பிராமணர்கள் பொருட்டுத்தங்களுயிரைக்கொடுப்பார்கள் மிகுந்ததிரவியங்கொடுப்பார்கள்உபசாரவார்த்தைசொல்வார்கள விரைவாகச்செல்லுங் குதிரைகட்டியதேர்கொடுப்பார்குதிரைகள்-யானைகள் கொடுப்பார்கள்இவ்வளவேயல்லாது இல்லறத்துக்குத்துணையாகியமனைவியைக்கொடுத்துப்புகழ்படைத்த அரசர்களுண்டாயிருந்தால் சொல்லுமென்ருன்பத்திராயுஎன்னும் அரசன்-எ-று (உக)

செங்கோன்மையரசர்பிரான்செப்பியசொல்செவிபுகுதச்சிவந்துநோக்கி, வெங்கோன்மையரசியற்றும்விறல்வேந்தே பழியிதனுன்மேவினுலும், தங்காதவகையியற்றுஞ் சாந்தியறிவேனணங்கைத்தருகியின்றே, னுங்காருந்தழனரகம்புகுதியெனச் சபிப்பனினிநுவறி யென்ருன்.

(இ-பு) செங்கோல்மாருதஅரசனிவ்வாறுசொல்லியசொல்லானதுகாதிற்பட்டமாத்திரத்தில்பிராமணன் கோபத்துடன்பார்த்துக்கொடுங்கோல்செலுத்திராசாங்கஞ்செய்யும்அரசனே இதனுலேயெனக்குப்பாவஞ்சம்பவிப்பதாயிருந்தாலும் அதுதொடராதவண்ணம் சாந்திசெய்துகொள்ள என்னுலாகும்ஆதலால்உன்மனையாளைக்கண்டுகொடாவிட்டால்பாவிகளாயுண்ணத்தக்கதிநரகில்விழும்படிஉனக்குச்சாபங்கொடுப்பேன்இனிஎன்னசொல்லுகிருய்சொல்என்ருன்-எ-று (உஉ)

(வேறு)

ஆழ்ந்தகேள்விமறை யொன்றைஞ்சுடுசொல்வாளாற்
போழ்ந்தநெஞ்சங்கருகப் பொருமிப்பொருமிப்புவிமேல்
வீழ்ந்துவீழ்ந்தாங்கெழுந்து விழிநீர்க்கடலுள்ளழியா
தாழ்ந்தநெஞ்சங்கூர்ந்து தகைவேந்திவைகணினையும்

(இ-பு) வேதசாஸ்திரப்பயிற்சிநிறைந்துள்ளஅந்தப்பிராமணன்சொல்லுஞ்சுடுசொல்லாகிய வாளினுல்பிளக்கப்பட்டமனம்வெதும்பிஅழுதழுதுபூமியில் விழுந்துவிழுந்து பின்னுமெழுந்துகண்ணீர்த்தாரைகடல்போற்பெருக அதிலாழ்ந்தழிந்து ஒன்றுந்தோன்ருதமனமுள்ளவனுய்ப்பெருமைப்பாடுள்ள அரசனிவைகளையெண்ணுகிருன்-எ-று()

மாறுக்கற்பினிவளை மறையோற்களிக்கினவசையாம்
வேறாய்மறுத்தின்றுரைத்தால் வினையேபுரியுமறையோன்
கூறாய்வளரும்பிறையுங் கொன்றைத்தொடருஞ்சொருகி
யாராதரிக்குஞ்சடையோ னருளேதெனவுமறியேன்

(இ-பு) அழியாதகற்புநிலையுள்ள இவளைப்பிராமணனுக்குக்கொடுத்தால்வசைவந்துநேரிடும் அல்லதுமறுத்துவேறாகச்சொன்னால்பிராமண சாபங்கொடுப்பான் ஒருகலையுடனிருக்கும்பிறையினையுங்கொன்றைமாலையினையுந்தரித்துக்கொண்டு ஆததிமாலையினையும் தரிக்கவிரும்பும்சடைமுடியையுடைய பரமசிவத்தின் திருவருள்எவ்வாறிருக்கின்றதோதெரிந்திலன்-எ-று. (உகூ)

பொல்லாநரகத்திடையே புகுமாறுயிருக்கெளிதோ
நல்லாடனையுமிங்ங னயந்தவறையோற்குதவி
வில்லார்மணிப்பூண்வேந்தர் வினையங்கேட்டுவியப்பக்
கல்லாமாந்தரிழிப்பக் கனல்வாய்ப்புகுவேனென்று

(இ-பு,) பொல்லாத நரகத்தில் உயிர் விழுகிறதென்றால்அது எளிதானதல்லவே ஆதலால்மனையவளைவிரும்பிக்கேட்கிற பிராமணனுக்குக்கொடுத்து ஒளியுள்ளரத்தினாபரணங்களணிந்தமன்னவர்கள் இந்தச் சேதியைக்கேள்விப்பட்டுச் சந்தோஷிக்கவும் கல்வியுணராதமாந்தர்கள் இழிவுசொல்லவும் தீயில்விழுவேனென்று-எ-று (உஎ)

இருந்தமறையோய்நினக்கே யீந்தேனிவளையிந்தேன்
பொருந்தும்பதியிற்கொடு நீபோவாயென்றேபுகலாத்
திருந்துமனையாடன்னைத் தாயேசெல்கென்றேத்தி
யருந்துமமிர்தம்போல் வான்னலைக்கடிதினமைத்தே

(இ-பு.) தனக்குள் எண்ணிக் கொண்டு கோபங் கொண்டிருக்கும் வேதப் பிராமணரே இவளையுமக்குக்கொடுத்தேன்கொடுத்தேன்நீர்வாசமராயிருக்கும்நகரத்துக்குக்கொண்டுபோமென்று சொல்லிக்கற்புள்ளமனைவியைப் பார்த்துத்தாயே இந்தப்பிராமணனுடன் போவென்று சொல்லித்துதித்து உண்ணும் அமிர்தம்போன்ற அரசன்விளாவாசுததிவள்ர்த்து-எ-று. (உஅ)

கண்ணீர்கலுழ்தன்மாற்றிக் கருத்துமொருபானிறுவித்
தெண்ணீர்மூழ்கியெழுந்து சிவமந்திரமூட்கருதி
விண்ணூருலவிக்கதிருந் வெதுமபச்சிகைகொள்கனல்வா
யுண்ணீர்மையினான்விழ்வா னொருப்பட்டுலவுங்காலை

(இ-பு.) கண்ணிலிருந்து நீர்வருதலைமாற்றி மனதையொருவழிப் படுத்தித்தெளிவுள்ளநீரில்ஸ்நானஞ்செய்துவந்து பஞ்சாக்ஷரத்தையுள்ளே யுச்சரித்துக்கொண்டு ஆகாயத்திற் செல்லுஞ்சூரியனும் வெப்பங்கொள்ளச் சிகைவிட்டெழுமிறதீயில் அன்புடன்விழலுருமைம்பட்டுத்திக்குண்டத்தைப்பிரதக்ஷணஞ்செய்யும்போது-எ-று, (உக)

ஐந்துமுகமுமொளிர வவிர்செஞ்சடையின்மீதே
யிந்துமொளிகொண்டிலக விடையேயிடையேயிதழிக்
கொந்தின்றுணர்நின்றசையக் கொக்கின்சிறகுமறுகுஞ்
சிந்தும்பனிதுண்டிவலைச் செழுநீர்மகளுந்திகழ்

(இ-பு.) ஐந்துதிருமுகங்களும்பிரகாசிக்கவும் விளங்குகின்றசெஞ்சடையில இளந்திகைள்ஒளியுடன்பிரகாசிக்கவும் அசன்மத்திகளில் கொன்றைப்பூங்கொத்து கனிருந்தசையவும கொக்கினிறகுமஅற்கும் சிந்துகின்ற குளிர்ச்சியுள்ள துளியையுடைய கங்காதேவியும் பிரகாசிககவும்-எ-று. (கஎ)

மூன்றுகண்ணுஞ்சுடர் முரலுஞ்சங்கந்தடல்வாய்
கான்றவிடமுண்டிருண்ட கண்டமணியிற்கனிய
வான்றவீரேழுலகு மல்லாப்புவனத்தடுக்கு
மீன்றுங்கன்னியென்ன விருந்தாள்வாமத்திலக

(இ-பு) திரினேத்திரங்களும் பிரகாசிக்கவும்ஒலிக்குஞ்சங்கந்தவழுங்கடலினிடத்துவாசுகிகக்கிய விஷபானஞ்செய்து கறுத்தகால கண்டம்நீலரத்தினம்போலவிளங்கவும் நிறைந்துள்ள பதினான்குலோகங்களும்அவைகளேயன்றி மற்றப்புவனகோடிகளை எல்லாம்பெற்றும்கன்னியாயிருக்கும்உமையவள் இடப்பாகத்தில்விளங்கவும்-எ-று ()

பவளவரையிற்றூழ்ந்து படியுநீலப்புயல்போற்
கவளயானையுரியைக் கவினுருவம்போர்ப்பத்
திவளும்புலியின்தலைச் சேர்த்திப்புயங்கநீவி
துவளநீற்றின்றவளச் சுடர்ப்புண்டரமுந்தோற்ற

(இ-பு) பவளமலையில்கருமேகம்படிந்திருப்பதுபோலயானைத்தோற்போர்வை திருமேனிபோர்ப்பவும் விளங்குகின்றபுலித்தோலை யுடுத்துஅதன்மேல்சர்ப்பக்கச்சணியப்பட்டுத்தொங்கி அசையவும்தாவள்ளியமானவிபூதித்திரிபுண்டரங்களும் பிரகாசிக்கவும்-எ-று. (கஉ)

தெய்வமகளிர்நடிக்கச் சிறந்தமுழவங்கறங்க
வையம்றுங்கநடிக்கு மழவெள்விடையினேறிக்

கொய்யுமலர்கொண்டடியிற் குளிரப்புனைவார்க்கேளிதிற்
கைவல்லியமின்றருளுங் கருணைக்கடல்வந்தெதிர்த்தான்

(இ-பு) அரம்பாஸ்திரிகள்நடனஞ்செய்யவும் சிறந்ததாகியகுடமுழாஒலிக்கவும்திரிபுர தகனஞ்செய்யும்போதமைந்ததேரிலைச்சுமுறியக்கண்டுஎதிரில்வந்துநடித்ததாகிய இளமையும்வெண்மைநிறமுமுள்ளதிருமாலாகிய ரிஷபவாகனத்தின்மேல் ஆரோகணித்துக்கொண்டுகொய்த்திருப்பள்ளித் தாமங்கொண்டுகுளிரும்படிதிருவடியில் அருச்சிப்பவர்களுக்கு எளிதாதமோக்ஷம்அருளுங்கிருபைக்கடலாகியபரமசிவன் தரிசனங்கொடுத்தார்-எ,று வையம்நுங்கநடிக்கும்என்றுபாடமாயின் இவ்வுலகத்தையுண்ணநடித்த மால்விடையெனப்பொருள் உரைத்துக்கொள்க-வையம் என்பது- தேர்- பூமி. (கக)

கண்ணுமனமுங்குளிரக் கண்டானரசர்க்கரசன்
றிண்ணம்பிறவிப்பகை யைச்செற்றேமென்றுகருதி
யுண்ணுமமிர்தமுண்டா னொருவனென்னக்களித்து
விண்ணுமண்ணும்பிறவு மானோனடியில்வீழ்ந்தான்

(இ-பு) அரசனானவன் தன்கண்களும்மனமுங்குளிரும்படி தரிசித்துநிச்சயமாகப் பிறவிப்பகையாயுள்ள நம்முடையவினையை ஒழித்தோமென்றுஎண்ணித் தேவர்களுண்ணும் அமிர்தம்உண்ட ஒருவன் களிப்பதுபோற்களித்து ஆகாயமும்பூமியும் மற்றவைகளுமாய்நிறைந்துள்ளபரமசிவத்தின் திருவடியிற் பணிந்தான்-எ-று. (கச)

வேறு.

தேவாதிதேவனுபச் சிற்குணனயற்புதனு
மூவாமுதலாய் முழுப்பொருளாய்நின்றாயை
காவாய்பிறவிக் கடனீந்திக்கையிளைத்தே
னாவாயெனவேநின் றண்மலர்த்தாள்பெற்றேனே

(இ-பு) தேவர்களுக்கெல்லாம்முதலாகியதேவனுகியும் சிற்குணனுகியும்அற்புதனுகியும் -மூவாமுதலாகியும்- கடவுள்தன்மை நிறைந்தபொருளாகியும் வீற்றிருக்குங்கடவுளே அடியேனைக்காத்தருளவேண்டும் பிறவிச்சமுத்திரத்தைநீந்திக் கரையேறமாட்டாமல்கையிளைத்தேன் அந்தக்கடலைநீந்துவதற்குக் கப்பலைப்போல உன்னுடையதிருவடித்தாமரைமலரைஇப்போது பெற்றுக்கொண்டேன்-எ-று- மூவாமுதல்,என்பது- சிலகாலம்இளமையும்அதற்குமேல் கிழத்தன்மையும் அடையாமலிருக்குதல் முழுப்பொருளென்றதனுல்சில தேவர்க்குக்கடவுள்தன்மைகுறைந்திருக்குமென்பதாகக்கொள்க. (கடு)

உண்ணுநரையாயு வட்டாகமெள்ளமுகாய்
மண்ணுமணியாய் மறைப்பொருளாய்நின்றுயை
யெண்ணலளவுபடாத் துன்பத்திடருழந்தேன்
கண்ணுறநோக்கிக் கையாற்றொழுகின்றேன்

(இ-பு) உண்ணப்படாததேனுகியும் தெவிட்டாகமதுரமுள்ள அமிர்தாகியும் கழுவப்படாத மாணிக்கமணியாகியும் வேதப்பொருளாகியுமிருக்குங்கடவுளே உன்னை இலக்கத்தினுல் அளவுபடாத துன்பத்தினுல்வருத்தங்கொண்ட அடியேன்கண்ணினுல் தரிசித்துக்கைகளால் தொழுகின்றேன் -எ-று- மண்ணுமணி எக்காலத்தும் ஒளிமாறுமணி—எ-று. (௩௬)

அன்புக்கோரன்பா யறத்துக்குநல்லறமாய்
வன்புக்குவன்பாய் வடிவொருவிநின்றுயை
முன்புக்குணர்விலனுய் மூங்கைத்தொழில்புரிந்தே
னென்புக்குருக வெளிநிற்பணிகின்றேன்

(இ பு) அன்புக்கு அன்பாகியும் தர்மத்துக்குத் தர்மமாகியும் கடினத்துக்குக கடினமாகியும் உருவமின்றிநின்ற உன்னை முன்புசேரத்தககஞானமில்லாதவனுப் ஊமைத்தன்மையுள்ளவன்போலிருந்தேன் இப்போது எலும்புகள் நெக்குவிட்டுருகும்படி வெளியில் பணிகின்றேன்—எ-று. (௩எ)

என்றேயரசன்களி பெருகியேத்தெடுப்பக்
குன்றுவிமயக்குலக் கொழுந்தின்கோமானும்
பின்றுதகாடசிப் பெரியோயெழுகவெனக
தன்றுளில்வீழ்நதானைத் தன்றிருக்கையாலெடுத்தான்

(இ-பு) பத்திராயுஎன்னும் அரசன்இவ்வாறுசொல்லி ஆனந்தபரவசனுய்த்தோத்திரஞ்செய்ய குன்றுகவிலாசமலையரையன் புத்திரியாகிய உமையவள் கணவர் மாறாத அன்புடைகிர்த்தவனே யெழுந்திரு வென்று தன்திருவடியில் பணிந்தவனைத் திருக்கரங்களால் எடுத்தருளினுர்—எ-று. (௩அ)

எந்நிலையுந்தானு மிறைவனெடுத்தனது
மன்னுநிலைதேர்வான் மறையவனுப்வந்ததுநாம்
பொன்னவிர்மாமேனிப் பொருப்பரையன்றன்மகள்காண்
டன்னிகரில்பார்ப்பணியாய்ச் சார்ந்ததளிரியலே

(இ-பு) எப்பொருளுந் தானுகிய இறைவன் எடுத்தருளி அன்பனே உன்னுடைய பத்திநிலைஎல்லாரும் அறியத்தக்ககாக நாமேபிராமணனுக வந்தோம் தனக்குநிகரில்லாத பிராமணஸ்திரியாக வந்தது பொன்மயமான மேனியையுடைய மலையரையன் புத்திரியாகிய பார்வதிதேவியாம்-எ-று. (௩௯)

வந்துமறஞ்செய்த மறப்புலியுமாயைகாண
சிந்தைகவலாதொழி நீயுன்தேவியுமா
யிந்தைவுமையுடனே யெம்மையும்பூசித்தகனற்
புந்திமகிழ்ந்தேன் பொருந்துவரங்கேளென்றான்

(இ-பு) இங்கேவந்து பிராமணஸ்திரியை அடித்துத்தூக்கிக்கொண்டுபோனவீரமுள்ள புலியோவென்றால் மாயையாகும் நீயுன்மனதிற்கவலைப்படவேண்டுதில்லைநீயும் உன்மனைவியும் எம்மையும்உமையவளையும் பூசித்ததினால் உள்ளத்தின்மகிழ்ந்தேன் உனக்கு வேண்டியவரங்கேளென்றார் எ-று (௩௰)

வேந்தர்பிரானுமது கேட்டுமெய்பனிப்ப
வேந்துமுலைமென்றோளி மயத்திற்றேவியொடும்
போந்தபரிசெளிதோ வேறோர்பொருளுமுண்டோ
நீந்துதுயரக்கடலை நீந்தினேற்கென்றுரைத்தான்

(இ-பு) பரமசிவன் அருளிச்செய்த திருவாக்கைக்கேட்ட பத்திராயு உடல்கம்பிதங்கொண்டுஉயர்ந்ததனங்களும் மென்மையாந்தோளுமுடையபார்வதிதேவியாருடன் சுவாமிகள் எழுந்தருளியதுஎளிதானதோ துயரக்கடலைநீந்திய அடியேற்குக்கேட்கவேண்டிய வரமும் வேறேயிருக்கிறதோ-எ-று, (௩௧)

நீதிவரம்பிகந்து நின்றேனுமென்மனையுந்
தாதையுமென்யாயுந் தமியேம்படருழந்த
வேதமறக்காத்த விளங்கோவுமைந்தனுநின்
பாதமலர்சேரப் பணிப்பாயெனலோடும்

(இ-பு) நீதிவரம்பைக்கடந்துநின்ற அடியேனும்என்மனைவியும் அடியேன் தாயுந்தகப்பனும் எங்களைக்காத்துரக்ஷித்தவணிகேசனும் அவன்புத்திரனும் தேவரீருடைய திருவடிமலரைச்சேரும்படி அருள்செய்யவேண்டுமென்னவளவில்-எ-று. (௩௨)

காவலவன்றேவியுமெங் காரணனேயேற்பயந்த
மாவலவன்வண்புகழான் மன்னுசந்திராங்கதனு
மேவலருங்கண்ணுளி லங்கிழைசீமந்தனியாம்
பூவையுநின்பாதம் புகுதப்பணியென்றாள்

(இ-பு) அந்தராசன்தேவியானவள் சுவாமியைநோக்கிஎங்கள் ஆண்டவனே அடியாளைப்பெற்ற குதிரைச்சேவகத்தில் வல்லவனும் புகழுள்ளவனுமான சந்திராங்கதனும் பாணங்களையொத்தபார்வையையுடைய கண்ணுளான சீமந்தனியும் தேவரீர்திருவடிகளை அடையும்படி அருள்செய்யவேண்டுமென்றாள்-எ-று. (௩௩)

இயானவுந்தானண விறையோன்றனது திருத்
தேவியொடுமாங்கவர்கள் செப்பும்வரமீந்தகன்றான்
மாவியலுந்தேர்தூண்டி மானவேன்மன்னவனுங்
காவிநெடுங்கண்ணியொடுங் காமர்பதிபுகுந்தான்

(இ-பு) எல்லாப்பொருளும் தாமாயிருக்கும் கயிலாசபதி யானவர் அவர்கள்சொல்லியவரம் அருளிச்செய்து பார்வதிதேவியாருடன் எழுந்தருளிவிட்டார் பத்திராயுநீலோற்பலமலர்போன்ற கண்களையுடைய தன்மனைவியுடன் தேரிலேறிக்கொண்டு தன்அழகியபதியிற்சேர்ந்தான்-எ-று. (சுஅ)

வையம்பொதுநீங்க மன்னர்திறையளப்பச்
செய்யதனியாணை செல்லவொருகோலோச்சிப்
பொய்யில்பதிறுயிரம் பருவம்பூதலங்காத்
தெய்யும்வரிசிலையா னேந்தற்கரசளித்தான்

(இ-பு) தன்பதியிற்சேர்ந்த அவ்வரசன் இவ்வுலகம்பொதுவின்றித்தன ஒருவனுடைய தேயாகவும் மறுதேசத்தரசர்கள் திறைகொண்டுவந்து அளக்கவும் நன்மையுள்ள தன் ஆக்கினைசக்கரம் நிகன்றின்றி நடக்கும் செங்கோல்செலுத்தி சரியாகப்பதினாயிரம்வருஷம் பூமியைக்காத்து அரசுசெய்து தன்புத்திரனுக்கு அரசாட்சியைக்கொடுத்துவிட்டு-எ-று-எய்யும்அம்புகளை வைத்தெய்யும் நீண்டவில்லினன்-எ-று.()

வேயனையமென்றோள் விளங்கிழையினேடெதிர்ந்த
பாயும்விடையோன் வரமளித்தபான்மையினன்
மாயனுநான்முகனுந் தேராமறைமுடியின்
சேயபதந்தேவியொடு தேர்வேந்தன்சேர்ந்தானே

(இ-பு) பாயாநின்ற ரிஷபவாகனமுடைய சாம்பசிவ மூர்த்தியானவர்முன்னம் பசியமூங்கிலையொத்ததோள்களையுடைய பார்வதிதேவியாருடன்எழுந்தருளிவந்துவரம்அருளிச்செய்ததன்மையினல்பத்திராயுவென்னும்அரசன் தன்மனையாளுடன்திருமாலும் பிரமதேவனுங்காணுதவேதாந்தப்பொருளாகிய மோக்ஷத்தையடைந்தான்-எ-று.()

மன்னர்பரவவருஞ் சந்திராங்கதனுந்
தன்னிகரிறேவியொடுஞ் சார்ந்தான்சிவலோக
மென்னமுனிசூத னியம்பவதுகேளாமு
னன்னெறிசோமாமுனிவர் நாதனிசைபாடினர்

(இ-பு) அரசர்களெல்லாரும்புகழும்படி ராசாங்கஞ்செலுத்திய சந்திராங்கதராசன் தன்தேவியுடன்சிவலோகஞ்சேர்ந்தானென்றுசூ

முனிவர்சொல்ல நல்லொழுக்கமுள்ள நைமிசாரணியமுனிவர்கள் அந்தச்சரித்திரங்கேட்டவுடன் பரமசிவன் அருளின் பெருமையைப்புகழ்ந்து பாடினார்கள்-எ-று. (சஎ)

பதினான்காவது-பத்திராயுமுத்திபெற்றஅத்தியாயம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - அ௱கஎ.



சிவமயம்.

பதினைந்தாவது.

விபூதிமகிமையுரைத்தஅத்தியாயம்.

மற்றுமோர்கதைவிளம் பெனவருந்தவர்வழங்கச்
செற்றமில்குணவாம தேவன்புரிசெயலுங்
கற்றைய்ஞ்சடைக்கடவுள் வெண்ணீற்றின்மாக்கதையுஞ்
சொற்றதன்மைநூற்சூத மாமுனிவரன்சொல்வான்

(இ-பு.) இன்னமுஞ்சிவசரித்திரம் அருளிச்செய்யவேண்டுமென்று நைமிசாரணியமுனிவர்கள்கேட்க நற்குணங்களையுடைய வாமதேவனென்னும் ஒருமுனிவர்செய்தசெய்கையும் செஞ்சடையையுடைய கயிலாசபதியின் பரிசுத்தமானநிறமுள்ளதாய்ப் பெருமைதங்கியவிபூதிமான்மியமும் சொல்லுகின்ற தன்மையுடைய வேதமுதலான சாத்திரங்களுணர்ந்த சூதமுனிவர்சொன்னார்-எ-று. (க)

கொலைபெருக்கியகொடுந் தொழில்வாழ்க்கையரேனுந்
தலைமைபெற்றவிக்கதையினைக் கேட்டதன்மையினோர்
நிலைமைபற்றிய பவத்தொடுமும்மலநீங்கி
யலைவறப்பரசிவ பதமுத்தியேயடைவார்

(இ-பு. எப்போதும் உயிர்க்கொலைசெய்கின்றகொடியதொழிலையுடையபாதகரேயானாலும் முதன்மையாகிய இந்தச்சரிதையைக்கேட்குந்தன்மையர்கள் தொடர்ந்துவருகின்ற பிறவியும் மும்மலமும்நீங்கிஅலைவற்றிருக்கும்படிசிவபதமாகியமுத்தியைஅடைவார்கள்-எ-று()

காமதேவனை முருக்கிய கடவுளைக்கடுக்கைத்
தாமதேவனைவழிபடு தகுதியன்றவத்தாற்
றூமதேவனும்புனித நற்றுறவினர்துதிக்கும்
வாமதேவனென்றுள னொருமாசிலாக்குணத்தோன்

(இ-பு.) மன்மதனை நெற்றிக்கண்ணினாலெரித்தவரும்கொன்றைப்பூமாலையணிந்தவருமாகிய பரமசிவனை ஆராதிக்கும்அன்பினையுடையவனும்தவத்தினால் அக்கினிதேவனு முனிவர்களும புகழும்படியாகிய பரிசுத்தமான குணமுள்ளவனுமாகிய வாமதேவனென்னும் ஒரு முனிவனுளன்-எ-று. (௧)

கருத்துகேவலத்துற்றவன் புறத்துறைக்கருமத்
தருத்தியில்லவனீற்றினால் விளங்குமெய்யணியன்
விரித்தவேணியசிரையன் விளங்குவெண்கடாலத்
தரித்தசெங்கையனையமேற்குமெனச்சமையா

(இ-பு,) மோக்ஷத்தில் கருத்தைவைத்திருப்பவன் உலகசம்பந்தமான காரியத்தில் விருப்பமில்லாதவன் விபூதியேபூஷணமாகத்தரித்துக்கொண்டுவிளங்குந் திருமேனியையுள்ளவன் பரந்தசடையினையுடையவன் அரையில் மரவுரிதரித்திருப்பவன் விளங்குகிறவெண்கபாலந்தரித்தசெங்கையன் இவ்வண்ணம் பிக்ஷைவாங்குகிற வர்கள் போல வேஷங்கொண்டு-எ-று. (௨)

புவனிமாந்தருக்கின்னருள் சுரந்திடும்பொறையாற்
கவனமோடுலகெங்க ணுந்திரிந்திடுகழலான்
சிவனைநேர்பவன்செய் தொழில்கந்தவனொருநாள்
றவனியோர்புகழன் றிலப்பெருவனமடைந்தான்

(இ-பு) இவ்வுலகத்தி லிருப்பவர்களுக்கு இனியஅருள்பொழியுஞ்சாந்தகுணத்தினால் விரைவாகத்தேசமெங்குஞ்சஞ்சரிக்கும் பாதத்தையுடையவன் சிவனுக்கொப்பானவன் செய்யுந்தொழிலை நீங்கினவன் ஒருநாள் இவ்வுலகத்தார் புகழும் அன்றில் வனத்தையடைந்தான்-எ-று. (௩)

அரியமாமுனியடைதலு மயிலெயிற்கல்வாய்க்
கரியமாசுணக்கச் சின்னுரக்கங்கணத்தா
னெரியுநீள்கடற்றிரை யெனநெளிபுருவத்தான்
பெரியமால்வரைமுழை யெனவிரிந்தபேழ்வாயான

(இ-பு)அருமையாகிய தவமுள்ள வாமதேவமுனிவர்அந்தவனத்தில் அடைந்தவளவில் வேலையொத்தபற்களும் அகன்றவாயுமுள்ளவனும் கருநாகமாகியஅரைக்கச்சு அணிந்தவனும்சர்ப்பகங்கணத்தையுடைய

லுனும் நெருங்கிய நீண்டகல்லின் அலைபோல்மேலேறிட்ட புருவமு டையவனும் பெரியமலையின் குகைபோலிருக்கும் ஆழ்ந்தவாயினையு டையவனும்-எ-று. (சு)

நெட்டைவெண்பிறை யிரண்டெனாநிணப்புலால்கமழுந்
தட்டமென்றுமென்றரக்கி யவதரத்தன்றழலாய்
வட்டமிட்டுழல்கண்ணி னன்வடவையஞ்சிகைபோல்
விட்டெழுந்தசெங்குஞ் சியன்வெடிகுரனகையான்

(இ-பு) நீண்டுவெண்மையாகிய இரண்டுபிறையைவைத்திருப்பது போன்றுநிணங்கள் நாறிக்கொண்டிருக்கும் பற்களால்மென்றுமென்று அரக்கிக்கொண்டிருக்கும் உதட்டினையுடையவனும் அக்கினிமயமாய்வட்டமிட்டுச் சுழன்றுகொண்டிருக்கும் கண்களையுடையவனுமவடவாமுகாக்கினியின் சிகைபோலக்கொழுந்துவிட்டுமேலெழுந்த செம்மயிரையினையுடையவனும் இடிபோலஒலிக்கும் குரலோசையுடனகைசெய்கின்றவனுமாய்-எ-று. (எ)

அஞ்சனக்கிரிதாள்கொடு நடந்தெனவடைந்து
வஞ்சகத்துவல்லரக்கன் மாமுனிவனைவதைப்பான்
நெஞ்சுரித்துநீபோகலை நிற்றியென்றுரையா
வெஞ்சினத்தொடுதழீ இயதன்கரங்களால்விசித்தான்

(இ-பு)வஞ்சகத்தையுடையவலியவொருராக்ஷதன் நீலமலையானது கால்பெற்றுக்கொண்டுநடந்துவருவதுபோலவந்துபெருமைபொருந்தியவாமதேவமுனிவனைக்கொல்லமனதிற்கோபங்கொண்டு (அம்முனிவனைப்பார்த்து) நீபோகாதேநில் ஒருநிலையென்றுசொல்லிக் கொடியதானகோபத்துடன்பிடித்துக்கொண்டதன்கைகளால்இறுக்கினான்-எ-று ()

நீள்பனைக்கையாற் றழுவினனிறுக்கவந்நிமலன்
றோள்களிற்றிருநீறு மெய்படுதலாற்றுடலான்
வாளரக்கன்வல் லுருவமும்பாவமுமாய
வேளெனத்திகழுரு வொடுநின்றனன்விளங்க

(இ-பு) பனைமரம்போலிராநின்ற நீண்டகைகளால்தழுவியிறுக்கும்பரிசுத்தனாகிய அம்முனிவனுடையதோள்களில்பூசியிருக்கும் விபூதியானதுதன்சரீரத்திற் பட்டதினாலும் அம்முனிவன் திருமேனியைப்பரிசித்ததினாலும் கொலைசெய்யும் அந்தராக்ஷதனுடைய கோரரூபமும்பாபமுந்தொலையவேமன்மதன்போலப்பிரகாசியாநின்றசௌந்தரியமுள்ள சரீரத்துடன் விளங்கும்படிநின்றான்-எ-று. (அ)

எரிசிகைத்தழற்கடவுளை யடைந்தவையாவும்
விரியுநல்லழலுருவமாய் விளங்குமாறெனனக்
கரியவல்லுருவொழிய வல்லரக்கனக்கணத்தி
னுருவப்பைம்பொனினொளியவிர் மேனிபெற்றுயர்ந்தான்

(இ-பு) எரிகின்ற சிகையையுடைய அக்கினிதேவனை அடைந்த பொருள்களெல்லாம் பரந்தநல்ல அக்கினிமயமாய்விளங்குவதுபோல்க் கருமைநிறமுள்ள வலியஉருவமொழிந்த மாத்திரத்தில் அப்பொழுதே அவ்வரக்கன் மாற்றுயர்ந்த பொன்போலவிளங்குமேனி பெற்றுயர்ந்தான்-எ-று. (ய)

தன்னுருக்கரத்தொழிந்திடத் தாகமும்பசியுந்
துன்னுதிக்குணந் தொலைந்ததுபாவங்கடொலைய
மன்னுமுற்பவத் தியற்றியதோன்றலுமனத்தான்
முன்னிமாதவகேட்டியென் றிறைஞ்சின்னமொழிந்தான்

(இ-பு) தன்உருவம் மறைந்துநீங்கவே அந்தராக்ஷதனுக்குத்தாகமும்-பசியும்- மாறாமலிருந்த தீயகுணமுந்தொலைந்தது இப்போது பாவங்கள்தொலையும்படி பூர்வசென்மத்தில்கொஞ்சம்புண்ணியஞ்செய்தஅந்தராக்ஷதனாயிருந்தவன்மனதினால் தன உண்மைநிலையையறிந்து வாமதேவமுனிவனைவணங்கி மகாதபசியாகிய முனிவரேகேளுமென்றுசொல்லுகிறான்-எ-று. (யக)

வெப்பினாலுறுபசியினான் வனத்திடைமெலிந்தே
னொப்பிலாத்தவமுனிவ நின்னுறுபெற்றதனா
லப்புலாலுடலரும் பசிகொலைத்தொழிலகலச்
செப்பலாயதன்றூய தோர்திருவுருவமைந்தேன்

(இ-பு) வெப்பத்துடன் எப்போதுமாறாமலிருக்கும்பசியினால்இக்காட்டில்வருந்தினேன் ஒப்பில்லாத தவமுனிவரேஉம்முடைய பரிசத்தை அடியேன்பெற்றதினால் அந்தராக்ஷதஉருவமும் அடக்கக் கூடாதபசியும்கொலைத்தொழிலும் நீங்கிச்சொல்லக்கூடாததூயநல்ல உருவத்தையடைந்தேன்-எ-று. (யஉ)

உற்றுநின்றிருக்கண்க ளாலொருகணநோக்கப்
பெற்றநாயடியே னுழல்பிறவிநோயகற்றப்
பற்றறுங்குணப்பரமன் வாழ்பரகதியடைய
முற்றுமென்னைநீபுரப்பது கடனென்னமொழிந்தான்

(இ-பு) ஒருக்ஷணப்போதுஉம்முடையகண்களால் என்னைப்பார்க்கும்படிபாக்கியம்பெற்ற நாயடியேன் இயல்பாகவேபற்றற்ற குணத்தையுடைய பரமசிவன் வாழ்கின்ற பதிகையைப்பெறவும் இன்னமும்

இவ்வுலகத்தில் உழலுகின்றபிறவிப்பிணி நீங்கவும் என்னைரட்சிப்பது தேவரீர்கடமையேயாமென்றுசொன்னான்-எ-று, (௰௩)

கேட்டமாமுனி யுவகையுங்கருணைகெழுமிக்
காட்டகத்தொறுந் திரிதருகடுந்தொழிலபிக்க
நாட்டுநீயெவனிங் குவந்தமைபொதுநவைபா
லீட்டுதீயுரு வெடுக்கவென்னிபற்றினையென்றான்

(இ-பு) நல்லுருவம்பெற்றவன் இப்படிசொல்லியதைக் கேட்டவாமமுனிவர் சந்தோஷமும கிருபையும்பொருந்தி அவனைப்பார்த்துக் காட்டினிடமெங்குஞ் சஞ்சரிக்கிறகொடியசெய்கையையுடையஅரக்கனே இவ்வண்ணம் பேசுகிற நீயாவன்இவிடத்தில் வந்தகாரணமென்ன பாவத்தினால்வாத்தக்க தீயதாகிய ராக்ஷதரூபம் எடுக்கும்படியென்ன பிழைசெய்தனையென்று சொன்னார்-எ-று, (௰௪)

அந்தவாசகங்கேட்டலு மகமகிழ்ந்தரக்க
னெந்தைநின்னருட்பேற்றினாலெழுமையுமுணர்ந்தேன்
வந்தவாறெலாமோதுகேன் கேளென்னவணங்கி
முந்தையுற்றதும்புகுந்ததுஞ் சோர்வறமொழிந்தான்

(இ-பு) ராக்ஷதனானவன் அந்தவார்த்தையைக் கேட்டவுடன் மனமகிழ்ந்து வணங்கி என்னையனே உன்னுடைய கிருபையைப்பெற்றதினால் எழுபிறப்பும் அறிந்தேன்நான்வந்த வரலாற்றை யெல்லாஞ் சொல்லுகிறேனகேளென்று முன்னேசம்பவிதததையும் வனத்தில்வந்ததையும் ஒழிவில்லாமல்சொன்னான்-எ-று, (௰௫)

(வேறு.)

ஐயனேகேட்டியிந்தப் பிறவிகளைந்தாந்தோற்றம்
வையகம்புகழவாழ் துச் சயனென்னும்மன்னனென்ன
வெய்யபாதகங்கள்செய்யு மிலேச்சர்க்குவேந்தனாகிச்
செய்தொழினன்கெண்ணாது சிறுதொழிலியற்றிநின்றேன்

(இ-பு) ஐயாவேகேள் இந்தச்செனனத்துக்குமுன் இருபத்தைந்தாம்பிறவியில் இவ்வுலகம் புகழும்படி வாழ்கின்ற துச்சயனென்னும் ராசனாய்க் கொடுமையானபாவங்கள் செய்யுமிலேச்சர்களுக்கு இறைவனாய் நல்லதொழிலைச்செய்ய எண்ணாமல் இழிதொழிலைச்செய்துகொண்டிருந்தேன்-எ-று, (௰௬)

வாழுநாளுலகுக்கொல்லாம்வருந்திடக்கொடுங்கோல்செய்தே
வீழிவாய்மயிலன்னார் வேண்டுகர்தமைவருத்தின்

பிறிதொருசெயலுஞ்செய்யேன் காமநோய்பிணித்தநெஞ்சி
னறிவொருசிறிதும்வையே னமைச்சர்தமொழியுங்கொள்ளேன்
சிறுதொழின்மருவிநின்றே னரசியல்சிறிதுநதேரே [ன்
னுறில்பறிப்புதல்வர்தாமு மிகழ்ந்திடநோயின்மாய்ந்தேன்

(இ-பு.) வேறொருதொழிலுஞ்செய்கிறதில்லைகாமமென்கிறநோய்பொருந்தியநெஞ்சில் கொஞ்சமேனும் அறிவைவைப்பதில்லை மந்திரிகள்சொல்லையும் ஏற்றுக்கொள்ளேன் ஈனத்தொழிலைப்பொருந்தியிருந்தேன் அரசாட்சியினதன்மை யித்தன்மையானதென்று சிறிதும்விசாரித்தறியேன் வேகமாகச்செல்லும் வெற்றிபொருந்திய குதிரையேறிச் செலுத்தும் புத்திரர்களும் இகழத்தக்கநோய்கொண்டு இறந்தேன்-எ-று, (உக)

இறந்தபின்காலதூதர் பாசத்தாலார்த்துவீக்கி
நிறைந்தொளிர்பாரப்பிரும்புத் தூண்டிலென்குறியினேரே
யறைக்கனர்பற்றியீர்த்தங் கந்தகனதிருமுன்காட்டச்
சிறந்தொளிபரந்தபூணன் சிலதரைநோக்கிச்சொன்னான்.

(இ-பு,) இவ்விதமாக இறந்தபின்பு காலதூதர்கள்பாசத்தினாலிறுக்கிக்கட்டி ஒளிநிறைந்தபாரந்தஇரும்பினாலாகிய தூண்டின்முள்ளை என்னுடையகோசத்தில் நேராகஅடித்து அதைப்பிடித்துஇழுத்துக்கொண்டுபோய் யமனதிருமுன்னேகாட்டச் சிறந்துஒளிமிகுந்தஆபரணம் அணிந்தயமன் ஏவலாளிகளைப்பார்த்துச்சொன்னான்-எ-று, ()

ஆவியந்துகின்மின்னன்ன யணைகலான்சிறையிற்செயத
பாவியையென்றுந்தீராப் படிற்றொழுக்கத்தினானை
கோவியலழியத்தாது குழம்புசேர்கும்பிதன்னுண்
மேவநீவிடுதிரென்ன வெடிபடவிளம்பினானே

(இ பு) பாலின்புகைபோல வெண்மையுமிருதுவுமுள்ள அழகியவஸ்திரம்அணிந்ததன்மனைவியனைப்புணராமல்சிறையில்வைத்தபாவியும்ஒருக்காலுந்தீராத பொய்யொழுக்கம் உள்ளவனுமாகிய இவனைப்பெருமைப்பாடுகெடும்படி இந்திரியக்குழம்புநிறைந்த நரகத்தில் பொருந்தநீங்கள் விடுங்களென்று மிகுந்தொனியுடன் சொன்னான்-எ-று, (உ௩)

கடலினும்பெரியவாய நரகிடைக்கடிதினுய்ப்ப
முடைகொளிந்திரியந்தனின் மூழ்கியுநீந்திநீந்திக்
குடவயிறகல்விலாவு நிறைசரக்குடித்துமிவ்வா
நடைவுறவருடமையா றுயிரமலக்கணுற்றேன்

(இ-பு,) சமுத்திரத்தைப்பார்க்கிலும்பெரியதாகியநரகத்தில் விரைவாகக்கொண்டுபோய்ச்சேர்க்க நாறுகின்றஇந்திரியத்தில் முழுகி

யும்நீந்தியும் குடப்போறவயிறும் பரந்தவிலாப்புறமும் நிறையும்படிகுடித்தும் இவ்வாறு அடைகின்ற முப்பதினாயிரம்வருஷந் துன்பமுற்றேன-எ-று. (உச)

அழிமுடைநரகநீங்கியாண்குறிகோடி தூங்கும்
பழியுறுமுடலங்கொண்ட பசாசுருவெடுத்துக்கானிற்
கழிவுறுந்தெய்வயாண்டு நூறவண்கழித்துமாய்ந்து
விழியழல்பொழியுஞ்சீற்ற வெங்கொலையுழுவையானேன்

(இ-பு) கெட்டநாற்றத்தையுடைய நரகத்தைவிட்டுநீங்கி ஒரு கோடிஆண்குறிபொருந்திய பழிபாவந்தங்கியபேயுருவங்கொண்டுகாட்டில்நீங்காமல் நூறுதேவவருஷம் அவிடத்திலிருந்துபின்புஇறந்து கண்களில் தீப்பொறியைச்சொரிகின்ற கொலைத்தொழிலையுடைய புலியாகப்பிறந்தேன்-எ-று (உரு)

படமலைமுழையின்வைகும் பாந்தளாய்த்தோன்றினேன்பின்
சடைமயிர்ச்செந்நாயாகத் தரணியிலுதித்துமாய்ந்தேன்
கடைமலமருந்தும்பன்றி யாயினேனகாமரூபி
யுடையதியுருவைப்பெற்றேன் ஞமலியாயுதித்துநின்றேன்

(இ-பு.) பின்பு மலைக்குகையிலிருக்கும் பாம்பாகப்பிறந்தேன் பின்பு இவ்வுலகத்தில் சடையாகிய மயிரையுடைய செந்நாயாகபூமியிற் பிறந்திருந்துமாண்டேன் அதன்பின்பு மலத்தைப்புசிக்கும்கடப்பட்ட பன்றியாகப்பிறந்தேன் பச்சோந்தியினுடைய உருவத்தைப் பெற்றேன் நாயாய்ப்பிறந்திருந்தேன்-எ-று. (உசு)

நீண்முகநரியாய்வந்தேன் விளிந்துபின்முயலாய்வந்தேன்
றாழ்வுறுமானுமானேன் றத்துவானரமுமானேன்
காழ்சிறைக்கங்கமானேன கடுநடைநகுலமானே
னூழ்வினைதுரப்பக்காகத் துருவெடுத்துழன்றுவீந்தேன்

(இ-பு,) நீண்டமுகமுள்ள நரியாய்ப்பிறந்தேன இறந்தபின்பு முசலாய்ப்பிறந்தேன் பின்புதாழ்ச்சியுற மானாய்ப்பிறந்தேன அதனபின்புதத்துகின்ற குரங்காயும்பிறந்தேன் பின்பு உறுதியான சிறகுள்ள பருந்தாய்ப்பிறந்தேன் கடுநடையுள்ள கீரியுமானேன ஊழ்வினை துரப்பக் காக்கையாய்ப்பிறந்துழன்று இறந்தேன்-எ-று, (உஎ)

வல்லுகிரெண்குமானேன் வருபுவனத்துவாழும்
பல்பொறிக்கோழியானேன பாதகக்காமுமானே
னில்லுறைபூசையானே னெறிகுரற்றவளையானேன்
கல்லிநீருண்ணுங்கூவக் கயத்துறைகமடமானேன்

(இ-பு,) வலிய நகத்தையுடைய கரடியாயும்பிறந்தேன் இந்தப்பூமியில்வாழும் பலபுள்ளிகளையுடைய கோழியானேன் பாவமுள்ளகூ

மூசையுமானேன் வீட்டுகளில்வாழும் பூனையானேன் கத்துகிறகுர
லையுடையதவளையாவேன் கல்லிநீருண்கின்றகுளத்தில் ஆமையாய்
ப்பிறந்தேன்-எ-று, (உஅ)

வரியுடைமீனுமானேன்மாய்ந்தமூடிகமுமானேன்
பரியபைங்கழலவுண்கப் படர்சிறைக்கூகையானேன்
சொரிமதத்தருவிதூங்குந் துளைக்கைமாலியானையானே
னிருபத்தோடைந்தாந் தோற்றமிவ்வனத்ரக்கனானேன்

(இ-பு,) வரிபொருந்திய உடலையுடையமீனானேன் இறந்தபெ
ருச்சாளியுமானேன் பருத்தகாலும் தீப்பொறிக்கும் கண்களும்பர
ந்தசிறகுமுள்ள கோட்டானானேன் அருவிபோல மதநீர்பொழியுந்
துதிக்கையுள்ளயானையுமானேன் இருபத்தைந்தாம் பிறப்பிலிவ்வனத்
தில் ராக்ஷதனானேன்-எ-று, (உகூ)

பரந்தவெங்கானந்தனிற் பறவைபல்லிலங்குமக்
ளிரந்தாந்தொடர்ந்துபற்றிக் கொலைசெய்துநிணங்கடித்து
மரங்கைவெம்பசிதீராமலயர்வுற்றேனமுதவாரி
சொரிந்திடும்புயலையொப்பாய்நினைக்கண்டேன்றுயரங்காணே

(இ-பு,) விசாலமாகிய இக்காட்டில் பலபட்சிகளை மிருகங்களை
ப்பலமனிதர்களைத்தேடிக்கொண்டு பிடித்துக்கொன்று மாமிசங்களை
த்தின்றும் வருத்தத்தைத்தருகிற பசியடங்காமல் துன்பங்கொண்டி
ருந்தேன் இப்படியிருக்கையில் அமிர்தமழைபொழியும் மேகம்போ
லக் கிருபைபொழியும் உம்மைக்கண்டேன கண்டவுடன் முன்னிரு
ந்த துயரத்தைக்காணேன்-எ-று, (௩௰)

படியினனெடுத்தகாயம் பற்பலவவற்றினெல்லாங்
கொடியவெம்பாவமன்றித் தருமத்தைக்குறிக்கொண்டில்லே
னடியனேனின்னைக்கண்டின் றமரனானதற்கென்செய்தே
னொடியெனவரக்கன்சொல்லத் தவமுனிநுவல்வதானான்

இ-பு,) இவ்வுலகத்தில் நானெடுத்தசரீரம் அனேகங்களாம் அ
வ்வுடலங்கள்தோறும் கொடியபாவத்தைச்செய்ததல்லது புண்ணிய
மென்பதை நினைத்ததுமில்லை அடியேன இப்போதுதேவரீரைத்தரி
சித்துத் தேவனானேன் இப்படியாவதற்கு என்னபுண்ணியஞ்செயதி
ருக்கிறேன் சொல்லும் ஐயா என்று அரசன்சொல்லத் தவமுனி
சொல்லுகிறார்-எ-று, (௩க)

முட்டெறுகானத்தென்னை முடுகிநின்கைகளாரக்
கட்டியகாலையென்மேற் கவினியதிருவெண்ணீறு
பட்டதுநினமேலந்தப் பான்மையாற்பாவநீங்கி
விட்டதவ்வளவோமுன்னைப்பிறவியும்விளங்கமேலோய்

(இ-பு.) முள்கள் தைக்கும் இந்தக்கானகத்தில் ஓடிவந்து என்னை உன் கைகளாற்கட்டிப் பிடித்தபோது என்சரீரத்தில் அழுந்தியிருந்த திருநீறானது உன்மேற்பட்டது அதனால் உன்பாவம் நீங்கிவிட்டது அவ்வளவுதானுமுன்பிறப்புகள்தெரியும்படி மேலவனே எ-று ()

நோயிலா தியன்றயாக்கைத் தேவனாய்நொய்தினின்றும்
வேயுலாந்தோளிபங்கன் விபூதியின்பெருமைமுற்றுந்
தூயநான்முகனுமாலுந் துணிதலாக்ககைமைத்தென்றாற்
காயமாறுடிச்செல்லு மனிதரோகருதற்பாலார்

(இ-பு.) எளிதாகப்பிணி என்பதில்லாமற் பொருந்தியதிவ்விய சரீரத்தையுடைய தேவனாய்நின்றனை மூங்கிலைப்பொருத்த தோளையுடைய பார்வதிபாகனாகிய பரமசிவத்தினுடைய திருநீற்றின் பெருமை முழுவதும் பரிசுத்தனான பிரம்மதேவனும் மாயவனும் நிச்சயித்து அறியக்கூடாத தன்மையையுடையதென்றால் வெவ்வேறு தேகம் எடுத்துப்பிறந்து உழலுகிறமனிதர்களோ அறியத்தக்கவர்கள் எ-று, (கக)

என்னினுந்திருநீற்றுண்மை யியம்புவன்சிறிதுகேட்டி
தென்னவன்றமிழ்நாட்டகத்தோர் தீத்தொழிலுடையவல்லான்
பன்னெடுங்காலம்பாரிற் பாவமும்பழியுமீட்டி
யந்நிலைநெறியுநீங்கி யந்தணர்திறனும்விட்டான்

(இ-பு.) மனிதர்களுக்கு அரிதென்றாலும் திருநீற்றின் பெருமையைச்சிறிதுசொல்லுகிறேன்கேள் பாண்டியனுடைய தமிழ்நாட்டினிடத்தில் கொடியசெய்கையையுடைய ஒரு பிராமணன் இவ்வுலகத்தில் பாவமும்பழியுஞ்சம்பாதித்து அதற்குச்சரியாக ஒழுங்கதிலுமாறுபட்டுப் பிராமணத்தன்மையும் விட்டான் எ-று, (கச)

பொய்க்கவறாடலானும் புன்றொழிற்களவினானுங்
கைக்கொள்வான்பொருள்களெல்லாங் கணிகையர் திறத்திலீந்து
மைக்கணார்வயத்தனாகிக் காமநோய்மலியாமன்மே [ந்து
லிக்குவெள் கணைகள்பாய நிறைபழிந்திடையுநாளில்

(இ-பு.) பொய்சொல்லத்தக்க சூதாடுதலினாலும் இழிவான செய்கையென்கிறதிருட்டினாலும் சம்பாதித்துமிகுந்ததிரவியங்களையெல்லாம் வேசையர்களுக்குக்கொடுத்து மையணிந்தகண்களையுடைய அந்தவேசையர் வசப்பட்டவனாகிக் காமநோய் வருத்துதலினாலும் காமசரம் பாய்தலினாலும் நிறையழிந்து இளைக்குநாளில் எ-று, (கரு)

ஒருபெருங்குற்போழ்தி னூன்விழைபுலையனில்லின்
மருவியமனைவிதன்னைக் காவினின் மணக்குங்கலைத்

திருகுவெஞ்சினத்திளீசன் செங்கைவாளுறையினீக்கி
வெருவரத்தோன்றியார்த்து வீசினன் விளிந்துவீழ்ந்தான்

(இ-பு.) ஒருநாள் பாதிராத்திரியில் ஊனையேவிரும்புகின்ற ஒரு நீசன் வீட்டிலிருக்கும் மனையாளைச் சோரத்தனமாகப்புணரும்போது அந்தநீசன்கண்டு மிகுந்தகோபமுள்ளவனுய்க் கைவாளை உறையினின்றுங்கழற்றி அக்கொடியன் பயப்படும்படி ஆரவாரித்து வீசினன் அவனிறந்தான்-எ-று. (௧௬)

பட்டபின்றலைப்பற்றிப் புலைமகன்படர்ந்தசேரிக்
கிட்டமுள்வேலிக்கப்பா லெறிந்திடும்பிணத்தின்மீதச்
சுட்டவெண்சாம்பறோய்காற் சுணங்கன்வெம்பசியாலேறித்
தட்டவாய்கொண்டுகல்வித் தசைபறித்தருந்துங்காலை

(இ-பு.) அந்தச்சோரன் இறந்தபின் புநீசனனவன் பிணத்தின்காலைப்பற்றிச் சேரிக்கிட்டிருக்கிற முள்வேலிக்கு அப்பால் எறிந்து விட்டான் அந்தப்பிணத்தின்மேல் வேறொருபிணத்தைக்சுட்ட வெண்சாம்பலிற்படிந்தகாலையுடைய நாயானது எறித்கணக்குள்ள பசியினல்பற்களையுடைய வாயைக்கொண்டு கல்லிமாமிசத்தைப்பிடுங்கித்தின்னும்போது-எ-று. (௧எ)

திண்டிறற்காலத்தூதர் சேர்ந்தவன்றன்னைப்பற்றிக்
கொண்டனரேகித்தீவாய் கும்பியின்வீழ்துமாங்கண்
கண்டனருமையாள்பங்கன் கணங்களக்கணத்தினெய்தித்
தண்டஞ்செய்காலதூதர் தங்களைத்தண்டஞ்செய்யா

(இ-பு,) மிகுந்தபலமுள்ள யமதூதர்கள்வந்து இறந்தவனைப்பிடித்துக்கொண்டுபோய்த்தீநரகில்தள்ளும்போதுபரமசிவனுடையகணங்கள்கண்டுஇறந்தவனைத்தண்டிக்கிறகாலதூதர்களைத்தண்டித்துஎறு.

கும்பியின்வீழ்வோன்றன்னைக் குருமணிவிமானத்தேற்றி
யும்பரினேகுவார்முன் கரியகேட்டெருமையூர்ந்து
வெம்பியமறலியெய்தி விழுத்தகவொன்றில்லானை
யம்பிகைபாகன்றன்பால் விடுவதற்கடுத்ததென்னே

(இ-பு,) நரகத்தில்விழுகின்றவனை நிறமுள்ள ரத்தினங்கள் பதித்தவிமானத்தில்ஏற்றி ஆகாயத்திற் செல்லுகின்றவர்கள் எதிரில்மணக்கொதிப்புள்ளயமன் கரியகொம்பினையுடையஎருமைக்கடாவிலேறிக்கொண்டுவந்து மேலான்தகுதி எவ்வளவுமில்லாதவனைப் பார்வதிபாகனிடத்தில் விடுப்பதற்குண்டான நிமித்தமென்ன-எ-று, (௧௯)

சொல்லுதிரென்லுமீசன் றூதுவர்சொல்வரின்னேன்
புல்லியபிரேதவங்கம் பூதியிற்பொலிதலாலே

வல்லியத்துரிவையார்த்த மறைமுதன்மறையோன்றன்பாற்
செல்லுதிர்கொணர்திரென்ன விடைதரயாங்கள்சேர்ந்தோம்

(இ-பு,) சொல்லுங்களென்ன சிவதூதர்கள் சொல்கிறார்கள்இவனுடையபிரேதசரீரம் தீயிற்படியினாலே புலித்தோல்உடைதரித்தருளியபரமசிவன் நீங்கள்போய் அந்தஉயிரைநம்மிடத்துக்இக் கொண்டுவாருங்களென்றுகட்டளையிட்டதினால்நாங்கள்வந்தோம்-எ-று, (சய)

பொன்னவிர்சடையினான்ற னேவலிற்புகுந்துநின்றே
மின்னவிர்பூணினாய்நீ விலக்குதற்கெளியமல்லே
மென்னவோர்மாற்றங்கூறி யெறிமணிவிமானத்தோடு
மன்னவன்றன்னைக்கொண்டாங் காலுலகடைந்தாரன்றே

(இ-பு,) பொன்னிறமுள்ள சடைமுடியையுடையபரமசிவன் கட்டளையினால் நாங்கள்வந்தோம் ஒளிவிளங்கும்ஆபரணம அணிந்தவனேநாங்கள்உன்னால்விலக்கததக்க எளியர்களல்லோமென்றுஒருவார்த்தைசொல்லிவிட்டு ரத்தின விமானத்துடன் அவனைச் சிவலோகங்கொண்டுபோய்ச் சேர்த்தார்கள்-எ-று, (சக)

ஆதலினிருதவண்ண லணிதிருநீற்றின்றன்மை
யோதுதற்கெளிதோபொல்லா வருவெடுத்துலகிற்றீராப்
பேதுறுமுணர்வின்பாலப் பிணியின்ரேணுக்தொட்ட
போதினேபுனிதராகிப் பொன்னுலகடைவரன்றே

(இ-பு,) ஆதலால்ராக்ஷதஅண்ணலேதிருநீற்றின்பெருமைசொல்லுதற்கெளிதானதல்ல பொல்லாதஉருவமெடுத்து உலகல்நிங்காததுன்பம் அடைகின்ற புத்திபூர்வமான பாவிகளேயானாலும் விபூதியைத்தொட்ட மாத்திரத்தில் புனிதர்களாய்ப் பொன்னுலகம் அடைவார்கள்-எ-று, (சஉ)

அந்தவெண்ணீற்றையானு மான்றிருவடியார்போல
விந்தமெய்முழுதும்பால்போ லிலங்கிடவணிந்துநின்றேன்
மந்தரச்சிகரிபோலு மணிப்புயத்தரக்கவென்று
சிந்தையிலளியவாமத் தேவன்றான்செப்பினானே

(இ-பு,) மந்தாரமலையின் சிகரத்தை யொத்திருக்கின்ற அழகியபுயமுள்ள அரக்கனே அந்தவிபூதியை நானும்சிவனடியார் தரித்துக்கொண்டிருப்பதுபோல இந்தச்சரீரமுழுவதும் பால்நிகராய் விளங்கும்படி தரித்துக்கொண்டிருக்கிறேன் என்றுமனதில் கிருபையுள்ள வாமதேவமுனிசொன்னார்-எ-று. (சங)

ஐயானேபோற்றிபோற்றி யமலனேபோற்றிபோற்றி
துய்யநீறளித்தென்பாவத் தொடர்பறுத்திட்டாய்போற்றி

யுய்யுமாறடியேனின்னை யெதிர்தரவுய்த்தகன்மை
மையறுகுணத்தாயுனறன் றிருவருள்வளத்தாற்சொல்வேன்

(இ-பு,) ஐயனே போற்றிபோற்றி நிர்மலனேபோற்றி போற்றி தூயதாகிய திருநீறுகொடுத்து அடியேன்பாவத்தொடர்ச்சியையறுத்தவனே போற்றி அடியேன்கடைத்தேறும்படி தேவரீரைத்தரிசிக்கக் கூட்டியநன்மை குற்றமற்ற குணதயையுடையவரே உம்முடைய அருளின்பெருமையென்றே சொல்லுவேன்-எ-று, (சச)

மூடங்குளைத்தவிசினேறி முந்தைமுப்பிறப்பிறுயே
னடங்கொழிம்மிலேச்சர்தேத் தரசிபண்டாத்துங்காலைத்
தொடங்கிபமறையோன்றன்பாற்றூயநீர்ப்பழனமொன்றைக்
குடங்கையிற்றெண்ணீரேந்திக்கோடியென்றுதகஞ்செய்தே

(இ-பு) நாயேன முற்பிறப்பில்சிங்காசனத்தி லிருந்துமிலேச்சதேசத்தில்அரசாட்சிசெய்யும்போதுவேதமோதியவொருபிராமணனிடத்தில் என்னுள்ளங்கையில்நீர்வார்த்துக்கொண்டு இந்தவிளைபூமியைநீதானம்வாங்கிக்கொள்ளென்றுதத்தஞ்செய்துகொடுத்தேன் எ-று. ()

பருமரத்துடைவையோடும்பருவங்கள்பலன்கள்பொய்யாதத்
திருமல்கவிளநியொன்றை யளித்தருளசெய்தநன்கா
லிருபதோடைந்தோற்றத் திருந்தவயோகியைக்கண்
டருவினைதுலைப்பாயென்ன மறலியுமன்றுசொன்னான்

(இ-பு) பருத்தமரங்களுள்ளசோலையுடைன்காலந்தோறும் பலன்தப்பாமல்கொடுக்குமவளமிகுந்தவொருவிளைநிலத்தைத்த னஞ்செய்தநன்மையால் இருபத்தைந்தாம்பிறவியில்லொருசிவயோகியைத்தரிசித்துப்பாவம்நீங்குவாயென்றுயமதர்மராசனும் அந்நாளிற்சொனனான்.()

அன்னதேவிளைந்தநன்கா லைடயனேனின்னைக்கண்டு
துன்னியபாவநீங்கித் தூயநல்லுநவமெய்தி
கன்னிலையுணர்வம்பெற்றே னையைவிலாயின்னுமொன்று
பன்னுவதுண்டுகேட்டி யென்றடிபணிந்துசொன்னான்

(இ-பு.) அத்தன்மையாகவேஇப்போதுவிளைந்தநன்மையால்அடியேன் தேவரீரைத்தரிசித்துஎன்னைப்பற்றியபாவம்நீங்கிப்பரிசுத்தமானதேவரூபம்பெற்றுநல்லநிலைமையுள்ளஉணர்ச்சியும்பெற்றேனகுற்றமில்லாதவரே இன்னமொன்றுசொல்வதுண்டுஅதையுங்கேளுமென்று அவர்பாதத்தைப்பணிந்துசொல்லுகிறான்-எ-று, (சஎ)

வெள்ளைவெண்ணீறுதன்னை மேனியிலணியுமாறுந்
தொல்லைவெம்பிறைவிநீக்கு மந்திரத்துநிக்குமாறும்

பிள்ளைவெண்பிறையானீறு பிடித்திடுங்காலுந்தானுங்
கொள்ளைவெவ்வினைகடீர்த்தாய் கூறெனமேலோன்கூறும்

(இ-ப,) வெண்மைநிறமுள்ள திருநீற்றைச் சரீரத்தில் தரித்துக் கொள்ளுகிறகிரமமும் கொடியதாகியபழையபிறவியைக்கெடுக்கத்தக்க திருமந்திரஞ்செபிக்கிறகிரமமும் இளம்பிறையணிந்தபரமசிவன்விபூதியை உண்டாக்குங்காலமுமமிகுந்தகொடுமையுள்ளஎன்வினைதீர்த்தவரேசொல்லுமென்ன முனிவர்சொல்லுகிறார்-எ-று, (சஅ)

பதினைந்தாவது-விபூதிமானமியமுரைத்த-அத்தியாயமுற்றிற்று

ஆக திருவிருத்தம்-அாஅ௫.



சிவமயம்.

# பதினாறாவது,

## திரிபுண்டரமுரைத்த அத்தியாயம்.



அந்தரத்தகடணவிய சிகரததுமகன்ற
கந்தரத்திலும் விஞ்சையர்க்டிமணமயரும்
சுந்தரத்துணர்க்கற்பகப் பொங்கர்சூழ்சாரன்
மந்தரக்கிரியெனப் பெயருடையமாலவரையின்

(இ-ப.) ஆகாயமுகட்டையளாவிய சிகரத்திலும் விசாலமாகியகுகைகளிலும் வித்தியாதரர்கள் விவாகஞ் செய்துகொள்ளத்தக்க சுந்தரமான பூங்கொத்துக்களையுடைய கற்பகச்சோலைசூழ்ந்த சாரலுள்ளமந்தர கிரியெனப்பெயர்பெற்ற பெரியமலையில்-எ-று. (க)

தேங்குகங்கையுந்திங்க ளுந்திருமுடிக்கணியா
வோங்கல்போல்வருமுருத்திர ருலப்பில்பல்கோடி
தாங்குமால்விடைப்பரி நின்றுமிழிந்தடிதாழ்ந்து
வீங்குதோளினர்மான் மழுக்காத்தினர்மிடைய

(இ-பு,) நிறைந்தநீர்வடிவமாகிய கங்கையையுஞ்சந்திரனையும் அணிந்து மலைபோல்வருகின்ற பலகோடிருத்திரர்கள் தாங்குகின்றபெரியரிஷபவாகனத்தினின்றுமிழிந்து பரமசிவனுடைய பாதத்தில்வணங்கிப்பருத்தோள் களையுடையவர்களும் மானுமழுவும் ஏந்தியகைகளையுடையவர்களுமாய் நெருங்கவும்-எ-று,

ஆழியேழுதலைம் படையங்கையினேந்தி
வாழிநாரணரெண்ணி லர்வழுத்துபுநிற்ப

ஊழிநாண்முதலுலகுயிர் யாவையும்படைக்கும்
பாழியம்புயநான் முகளரப்பிலர்பணிய

(இ-பு) சக்கர முதலாகிய பஞ்சாயுதங்களை அழகிய கைகளில் தாங்கிக்கொண்டு அளவில்லாத விஷ்ணுக்கள் துதிசெய்து கொண்டு நிற்கவும் ஊழிகாலமுதல் உலகத்துயிரை யெல்லாம் சிருஷ்டிக்கும் தாமரைப்பூவில் வீற்றிருக்கும் நான்முகங்களையுடைய அளவற்றபிர மாக்கள் பணியவும்-எ-று- சக்கரம்-சங்கு-கோதண்டம்-வாள-தண்டம்-இவை-பஞ்சாயுதம். (௩)

இந்திராதியர்வானவர் விஞ்சையரியக்கர்
சந்திராதித்தர் கின்னரர்தானவரரக்கர்
சிந்துரானனவனமுலைத தெரிவையரெழுவர்
விந்தையீன்றருளெங் கரன்வேலிளங்குமாரன்

(இ-பு) தேவேந்திரன்முதலான தேவர்கள்வித்தியாதரர்கள் இயக்கர்கள் சந்திரசூரியர்கள்கின்னரர்கள்தானவர்கள்அரக்கர்கள்சிந்தூரப்பொட்டணிந்தமுகத்தையும் அழகியதனங்களையுமுடைய சப்தமாதர்கள்பார்வதிதேவியார்பெற்றருளிய விநாயகர்-வேலாயுதமேந்தியசுப்பிரமணியக்கடவுள்-எ-று அபிராமிமகேச்சுவரி கவுமாரி நாராயணிவராகி இந்திராணிகாளி இவர்களே சப்தமாதர்கள். (௪)

நாகமன்னவர் நாரதாதியர்கவிலும்
போகமேவிய பொன்னுலகத்துமாமுனிவர்
யாகஞானெறி வசிட்டனுமிருந்தவன்முதலாச்
சோகமோகமின் மறைமுனித்தலைவர்கள்சூழ

(இ-பு) நாகராசர்கள் நாரதர்முதலாகச்சொல்லப்பட்டபோகம் பொருந்தியதேவலோகத்துமுனிவர்கள் யாகங்கள்செய்யும வேதசாஸ்திரமுறைமைதெரிந்த வசிஷ்டர்முதலாகிய காமாதிகளைநீக்கியபிரமணரிஷி சிரேஷ்டர்கள்சூழவும்-எ-று. (௫)

கருப்புவிற்றுணை யெனப்பொலிகரியநீள்புருவ
வுருப்பசித்திரு முதலியவரம்பையரோடும்
பொருப்பினிற்பிறந் திழிதருபுனிதநீர்க்கங்கைத்
திருத்தமாதிய நதிக்குலவனிதையர்செறிய

(இ-பு) இரண்டு கரும்புவில்லைவளைத்து வைத்ததுபோலிருக்கும் கரியநிறமுள்ள நீண்டபுருவமுடைய உருப்பசிமுதலாகிய ரம்பாஸ்திரிகளும் இமயமலையில் உற்பத்தியாய்வருகின்றகங்கைநதிமுதலானசல்லநதிக்குலமாதர்களும் சூழவும்-எ-று. (௬)

எண்டொகைப்படும் வசுக்களுமருத்துவரெவரு
மண்டர்வர்க்கத்தில் பிதிர்களுமாதிநின்றேத்தக்

கொண்டலொத்துநின் றிரைத்திடுவயிரவுக்குழாமு
மண்டுவேள்விசெய்தக கனுமுறைமுறைவழுத்த

(இ-பு) அஷ்டவசுக்களும் மருத்துவதேவர்களும்தேவர்வர்க்கத்திற்சேர்ந்தபிதிர்களும் ஆனந்தக்கூத்தாடிக்கொண்டுதுதிக்கவும்மேகம்போல ஒலிக்கும் வயிரவக்கூட்டமும்யாகஞ்செய்தக்களும் முறைமுறையாகநின்று துதிக்கவும் -எ-று- அனலன் அனிலன் ஆபச்சைவன்சோமன்தான் துருவன் பிரத்தியூசன் பிரபாசன்இவர்களே அஷ்டவசுக்கள்.

தமரநூபுரநெட்டை வேதாளவாகனத்துக்
குமரனாகியவீரன்வெம் படையொடுங்குறுக
வமரில்வந்தெதிர்த்தணி முறிந்தவுணர்கெட்டோடச்
சமரில்வாரணப்பிடர் வருசாத்தனுந்தழுவ

(இ-பு) ஒலியுள்ள சிலம்புஅணிந்தநெடிய வேதாளவாகனத்தையுடைய வீரபத்திரர் படையுடனவரவும் அவுணர்கள்போரில வந்தெதிர்த்துப்படைமுறிந்து கெட்டோடும்படி யுததகளத்தில் யானையின்பிடரியில் ஏறிவரும் அரிகரபுத்திரன்வரவும்-எ-று, (அ)

ஊதுலைக்கனற்புகை யெனவுயிரப்புலாந்துண்டக்
கோதினெட்டெயிற்றகல் பிலவாய்ககுறுங்கூளிப்
பூதமுற்றியகணங்க ளும்பொருவில்வெண்கங்க
நாதநற்றொழிறபானுகம் பனும்வநதுநண்ண

(இ-பு) உலைக்களத்தில் ஊதுகின்றதீப்புகைபோல பெருமூச்சுஉண்டாகும்நாசியினையும் பழுதில்லாமல்நீண்டபற்களையும் அகன்றபிலத்துவாரம்போன்ற வாயையுமுடைய குட்டையாகிய பூதகணங்களும்ஒப்பில்லாத தவளச்சங்கநாதத்தொழில்செய்யும் பானுகம்பனும்வந்துபொருநதவும்-எ-று, (௯)

சங்ககன்னனற்றனி மணிக்காத்தினன்றயவின்
மங்குல்போலருள்மாணி பத்திரனமகோதரன்சொற்
பிங்கிரீடிவிருகோதரப் பெருந்தகைப்பெரும்பூண்
பொங்குநீளொளிவிகடன் குண்டோதரன்பொருந்த

(இ-பு) சங்குகன்னனும் ஒப்பற்ற மணிக்கன்னனும் தயையில்மேகத்தையொத்து அருளும்பாணிபத்திரனும் மகோதரனும் சொல்லுகின்ற பிரிங்கிரிஷியும் மேலானதகுதியையுடைய விருகோதரனும்பெரிய ஆபரணங்களணிந்துமிருதியானஒளியையுடைய விகடனும்குண்டோதரனும் பொருந்தவும்-எ-று. (ய)

மாலையம்புயமகா காளர்புலிவயுனத்தோர
சாலும்வாரணமுகத்தின் சாளிமாமுகத்தோர்

வாலவெள்ளெயிற்றரவமு மடங்கன்மாவேறும்
போலுநீழ்வதனத் தின்றெண்ணிலர்பொருந்த

(இ-பு) மாலையணிந்தபுயமுள்ளமகாகாளரும் புலிமுகத்தரும்அசைகின்றயானைமுகத்தரும் ஆளிமுகத்தரும் வெண்மையாகியதந்தங்களையுடையசர்ப்பமுகத்தரும் சிங்கமுகத்தரும்ஆனகணத்தர் அளவில்லாதவர்களாய்வந்து பொருந்தவும்-எ-று. (௧௧)

முகடுபோழ்ந்திட நீண்டவர்மொழிவதற்கரிதாம்
விகடமாகியவேறுவே றுருவத்தர்விளங்கும்
புகடுபோலுமோர் கரதினர்பலபலகரத்தர்
தகடுவேய்பொலன் கழலினரெண்ணில தழுவ

(இ-பு) அண்டமுகடு பிளக்கும்படி உயர்ந்தவடிவமுள்ளவர்களும்சொல்லுதற்கரியவிகடமானபலபல உருவத்தையுடையவர்களும்விளங்குகின்றயானைபோல ஒருகையுடையவர்களும்பலவாகியகைகளுடையவர்களும் தகட்டுப்பொன்னாற் செய்யப்பட்ட வீரகண்டையுடையவர்களுமாக எண்ணில்லாதவர்கள் பொருந்தவும்-எ-று- ()

படர்ந்தநீணிலஞ்சுமந்த சேடனபஃறலைபோன்
மிடைந்தெழுந்ததிண் டோட்களிலார்த்தவார்விசித்துக்
குடங்கையாயிரமெடுத் துவாணசுரன்கொண்ட
லடங்குமாமுழ வாயிரமுகத்தினுமறைய

(இ-பு) பரந்துநீண்ட பூமியைத்தாங்குகின்ற ஆதிசேஷனுடையஆயிரந்தலைபோல நெருங்கி யுயர்ந்திருக்குந்திண்ணிய தோள்களில் கட்டியவாரைவிசித்துக்கொண்டு தன்ஆயிரமாகியஉள்ளங்கைகளை எடுத்துவாணசுரன் மேகத்தினிடியோசையு மறையும்படி பெரியகுடமுழாவின் ஆயிரமுகத்தினும் அறையவும்-எ-று. (௰௩)

முருகுவிண்டதார் தேவருமுறைமுறைநிறுவித
திருகுவெஞ்சினத்த வுணரையொருபுடைசேர்த்தி
யருகுபொன்னிறக்கண் களையொருவழிசெறிதது
பெருகுவான்புகழ் நந்திகைப்பிரம்பெடுத்துலவ

(இ-பு) வாசனையுடன் மலர்ந்தமாலையணிந்த தேவர்களை வரிசைவரிசையாய்நிற்கச்செய்துமாறுபடுகின்றகோபமுள்ளஅசுரர்களையொருபுறத்தில் வரிசையாகநிறுத்தி உருகியபொன்னிற முள்ள கணங்களையொருபுறத்தில்நிறுத்தி மிகுந்தசிறப்புள்ள நந்திதேவர்கையிற் பிரம்பேந்திக்கொண்டு உலாவவும்-எ-று. (௰௪)

இலகுநல்லவைநடு வணையெழிலரிசுமந்த
வுலகிலாநவமணிகளு மொளிகெடவிருந்

குலவுமாணிக்கங் குயிற்றியகொழுந்தவிசேறி
யுலகமூன்றுக்குமொரு பொருளெம்மையாளுடையான்

(இ-பு) பிரகாசிக்கும் நல்லசபையினடுவில் அழகுள்ளசிங்கங்கள் தாங்கும் அளவில்லாதநவரத்தினங்களும்ஒளிமழுங்கும்படிபிரகாசிக்கும்மாணிக்கங்கள்பதித்த செழுமையுள்ள ஆசனத்தில்வீற்றிருந்து மூன்றுலகங்களுக்கும் ஒருபொருளாகிய எம்மையடிமையாக வுடையபரமசிவன்-எ-று. (டுரு)

கோடிசெங்கதிராதபர் கோடிவெண்மதியங்
கோடியூழியின்வட வனலோரிடங்குழமி
நீடுமோருருவெடுத் தனநிரயத்திலிருளு
மோடியெங்கணு நிலை யறவலோகத்திலொதுங்க

(இ-பு) கோடிசூரியர்களும் கோடிசந்திரர்களும்கோடி வடவாமுகாக்கினியும் ஓரிடத்தில்கூடி பெரியஉருவம்எடுத்ததுபோன்றதாய்நரகத்திளிருளும் ஓடி யெவ்விடத்தும் நிலைபெறுமல் அவ்வுலோகத்தில்ஒதுங்கத்தக்கதாக-எ-று. (டுசு)

வேலையேழையு மொருகணவேலையினுகருங்
காலவூழிவெங்கன லெனச்செஞ்சடைகவினப்
பாலலோசனந்துணை விழிமுச்சுடர்பகைப்பச்
சூலமாதியபடை யொடுந்தோள்பலதுளங்க

(இ-பு·) எழுசமுத்திரத்தையும் ஒருகணப்பொழுதில் உண்ணத்தக்கதாக ஊழிக்காலத்திலுண்டாகும் கொடியஊழித்தீப்போல் செய்யசடைகள்பொலியவும் நெற்றிக்கண்ணும் மற்றஇரண்டு கண்களுமாகியசோமசூரியாக்கினிகளுடன் பகைக்கும் சூலாயுதமுதலிய ஆயுதங்களோடு பலதோள்கள்விளங்கவிம்-எ-று. (டுஎ)

அனந்தன்வாசுகி தக்ககன்முதலியவரமும்
புனைந்தபல்கலனென வடிமுடிமுதல்புனைந்து
கனைந்துவண்டுணு மிதழிவாசிகையிடைகவின
வனைந்தவிந்துவுங்கங்கை யுமமுதலைவழங்க

(இ-பு·) ஆதிசேஷன் வாசுகிதக்ஷகன்முதலானநாகங்களை ஆபரணங்களாகத் திருவடி திருமுடிமுதலான இடங்களில்அணிந்துக்கொண்டு இசைபாடும் வண்டுகள் தேனுண்ணும் கொன்றைப்பூமாலை அழகுடன்மத்தியில்விளங்கத் திருமுடியில் தரித்தசந்திரன் அமுதத்தைவழங்கவும் கங்கை அலைவீசவும்-எ-று. (டுஅ)

காய்சினக்கொடுவரி யுரிகலையினிற்பொலியப்
பூசலிட்டெழுமைக்கை மாவுரிவைமெய்போர்ப்பத்

தேசுபெற்றுடுமுத் தரீயத்தொளிதிகழ
மாசறுத்தொளிர மின்னெனமார்பினூல்வயங்க

(இ-பு) காய்கின்ற கோபத்தையுடையபுலியின்றோல்வஸ்திரமாகத்திருவரையில்விளங்கவும் போர்செய்து கொல்லுந்தன்மையையுடையயானையின்றோல் வோர்வையாகத் திருமேனியில்போர்ப்பவும் ஒளிபொருந்திய உத்தரீயத்தின்பிரகாசம்விளங்கவும் மாசுநீக்கியொளிர்கின்றமின்போல பூணநூல்திருமார்பில் விளங்கவும்-எ-று. ()

தொல்லையம்பழமறை யெலாமிறுதியிற்சொல்லு
மெல்லைகண்டவரல்ல துகாண்கிலாவிறைவ
னல்லியுந்துணர்த்தே றன்மொண்டிலகுதாதள்ளிச்
செல்லுமன்றலந்தென் றல்வந்துலவவீற்றிருந்தான்

(இ-பு) பழமையாகிய வேதங்களெல்லாமுடிவிற்சொல்லும் அளவைக்கண்டவர்கள் காணலாமேயன்றி மற்றவர்கள்காணக் கூடாத பரமசிவன் அகவிதழினையுடைய பூங்கொத்துகளி லிருக்கும் தேனை மொண்டு மகரந்தங்களை அள்ளிக்கொண்டுவரும் இளந்தென்றற் காற்றுவந்துஉலவவீற்றிருந்தான்-எ-று. (௨௰)

அந்தவேலையிலாதிநான் முகனுளத்தறிவில்
வந்துதோன்றியமவுன ஞானத்தினின்வதிந்தோன்
பந்தமற்றிடுசனற் குமாரன்பணிந்தேத்தி
முந்துநல்லிசைபணி தொறும்பணிதொறுமொழிந்தே

(இ-பு) அக்காலத்தில் ஆதியாகிய பிரமதேவனுள்ளத்தில்ஞானத்துடன்வந்தவதரித்த மவுனஞானநிலையிற் பொருந்தியவராய்ப்பாசபந்தம்நீங்கியசனற்குமாரமுனிவர்பணிந்து துதித்துப்பணியுந்தோறும் பரமசிவனுடைய முதன்மையான நல்லபுகழைக்கூறி-எ-று ().

ஐயகேட்டிநீயக விடத்தரியதாந்தரும
முய்யுமாறெனக்குரை யெனவொளிநிலாமுறுவற்
செய்யவாய்மலர்திறந்து தேன்றுளிக்குமாபோல
வையவேழுடைநாயகன் மகிழ்வாவுரைத்தான்

(இ-பு) எங்கள்ஐயனே நின்திருவுள்ளத்தில் அடியேன்விண்ணப்பத்தைக்கொண்டருள் அதாவது இவ்வுலகத்தில் அரியதாகியதருமம்அடியேன் உய்யுமாறு கட்டளையிட்டருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொள்ள ஒளியுள்ள நிலாவையொத்த நகையுடன்திருவாய்மலர்ந்து தேனைத்துளிப்பதுபோல எழுலகத்தையுமுடையபரமசிவன்மகிழ்ச்சியுண்டாக அருள்செய்கின்றார்-எ-று. (௨௨)

கேட்டஞானநூலனைத் தொக்குங்கிளத்தினேன்புவியி
லீட்டுகன்மத்தி லிருவினையியற்றியமுறைமையே
யூட்டவுண்ணுமா னிடர்களுமுத்தியையுறுவா
னாட்டுநற்சிவதருமமாய்நாடுதற்கெளிதாய்

(இ-ள்) அடியேன் விண்ணப்பம் பண்ணிக்கொண்டபடி ஞான சாஸ்திரமெல்லாம் அருளினேன் உலகத்திற் செய்கின்ற கர்மத்தினால் நல்வினை தீவினைகள் முறைமைப்பாடூட்ட உண்ணுகின்ற மானிடர்களும் மோக்ஷம் அடைய நாட்டுகின்றநல்லசிவதருமமாகியும்நாடுவதற்கெளிதாகியும்-எ-று. (உங)

வருத்தமில்லதாயிரு வினையகற்றுநன்மருந்தா
யருத்தியோடிறைப்போ தினிலறிவுறுமதாய்க்
கருத்தில்வேட்டவையிம் மையிலுதவுகற்பகமாய்
விரித்தவேதநூற்றரும மொன்றுரையெனவிளம்பி

(இ-ள்) வருத்தமில்லாததாகியும்இருவினையைநீக்குகின்ற நல்ல மருந்தாகியும் ஒருக்ஷணப்பொழுதில் அன்புடைஞானங்கொடுப்பதாகியும்மனதில்விரும்பியபொருளை இம்மையிலேகொடுக்கும் கற்பகவிருக்ஷம்போன்றதாகியும் விதிக்கப்பட்டவேதத்திற்சொல்லுவதாகியுமிருக்கிறதர்மமொன்று கட்டளையிடவேண்டுமென்றுசொல்லி-எ-று,

அஞ்சலித்தடியிணை மிசையலர்மழைதூவி
வஞ்சமொன்றிலாமறை முனிகேட்டற்குமகிழ்ந்து
கஞ்சமுண்டகாலாக் கினிருத்திரநாதன்
செஞ்சவேயவனுளங் கொண்டுதெருளுறச்செப்பும்

(இ-ள்) கைகுவித்து நமஸ்கரித்துத் திருவடிகளில்மலர்களால் அருச்சித்து உண்மைநெறியுள்ள அந்தச்சனற்குமாரமுனிவர்விண்ணப்பம்பண்ணிக்கொண்டதற்கு விஷபானஞ்செய்தகாலாக்கினிருத்திரமூர்த்தியானவர்களிகூர்ந்து அம்முனிவர்உள்ளத்தில்செவ்வையாகத்தரித்து அறிந்துகொள்ளும்படி உபதேசிக்கின்றார்-எ-று. (உரு)

அங்கமாறுடை வேதமுமாகமமுதலு
மெங்குமோதிடு முபநிடதத்தினதியலுஞ்
சங்குபோலுயர்வெண்ணீற் றினுற்றயங்குபுண்டரத்தைத்
துங்கநெற்றியிலணி வதேதருமமாச்சொல்லும்

(இ-ள்) ஆறங்கங்களையுடைய வேதங்களும் ஆகமத்தினமுதலும் எங்குமோதுகின்ற உபனிடதத்தின்உண்மையும் சங்குபோல்விளங்கும்வெண்ணீற்றினால்பிரகாசிக்கும் திரிபுண்டரத்தைப்பரிசுத்தமானநெற்றியில்தரிப்பதே தர்மமாகச்சொல்லும்-எ-று திரிபுண்டரமாவதுமூன்றுரேகையாகத்தரிப்பது மும்மலத்தையும்போக்குமென்கிற காரணந்தோன்றஅவ்வாறு தரிப்பதாம். (உசு)

(வேறு.)

என்னப்பரமன் கூறுதல்கேட் டெழுந்தவுவகைச்சனற்குமான்
முன்னைப்பொருளேயடியோமு முடியுமில்லாமுழுமுதலே
யுன்னிப்புகன்றதி நீறே துரைத்ததிரிபுண்டரமேது
பின்னர்த்தரிக்குமிடனேது பேசுந்திருமந்திரமேதோ

(இ-பு.) இவ்வாறுபரமசிவன் அருளிச்செல்தலைக்கேட்டுச் சந்தோஷமுண்டாகிய சனற்குமார முனிவர் ஆதியான பொருளே ஆதியந்தமில்லாதமுதலே திருதிச்சொல்லியருளிய விபூதியென்பதுயாது சொல்லிய திரிபுண்டரமென்பதுயாது மற்றும் அதை எந்தவிடத்தில் தரிப்பதுசொல்லும் திருமந்திரம்யாது-எ-று. (உஎ)

கால்மேதோவள்வேதோ கருதப்படுந்தெய் வதமேதோ
சீல்மேதோதிரவியமற்றேதோ தரிக்கிற்பலனேதோ
சூல்முளையாய்நெடுந்தருவாய் வித்தினடங்குமுறைமேல்
ஞாலமெல்லாமாயையின்பாலுதிப்பித்தொடுக்குநம்பரனே

(இ-பு) தரிக்குங்காலமெ அவ்வாறுதியானிக்கப்படுந்தேவதையாது ஒழுக்கமயாது அதற்குரியதிரவியம்யாது சரித்தால்வரும்பலன் யாதுவேருமுளையுமாய் நெடியவிருக்ஷமாய் விதையில்அடங்குமுறைமைபோல் உலகமெல்லாம் மாயையினிடத்து உதித்து ஒடுக்கச்செய்யும் எங்கள் பரமனே-எ-று. (உஅ)

என்றுவினவுமுனிக்கீச னியம்புமுறைத்திருநீறு
துன்றுதீம்பாற்கோமயத்தைச் சுட்டவடலையாகுங்கா
ணின்றதிரிபுண்டரமதுதான் சென்னிநெற்றிகள்கிமிர்தோ
ளென்றுமார்புநாபிபுற முருவமுதலுர்துள்ளணமாய்

(இ-பு,) என்றுவினவிய முனிவருக்குப் பரமசிவன் அருளிச்செய்கின்றார் வேதாகமத்திற் சொல்லப்பட்ட திருநீறானது பொருந்திய மதுரமுள்ள பால்கறக்கும் பசுவின்சாணத்தை ஓமாக்கினியில் பாகமாகும்படிவைத்ததிருநீறாய் திரிபுண்டரமாவது சிரசுநெற்றிகழுத்து தோள்பொருந்துமார்பு தொப்புள் பின்புறம் இவ்விடங்களில்முதலில்உத்தூளனமாய்-எ-று. (உ௯)

குழைத்துத்தைவந்தகற்பின் னர்க்குழைத்தநீற்றைவெண்ணிலவி, விழைத்ததென்னச்சொன்னவிடத் தியற்றும்போழ்தி னெற்றியின்கண், டழைத்தவிர லினடுநீக்கியத் தற்கனியாலனு மிகையாற், பிழைத்தலறவே தரித்தெதிராப் பெரியவிரலானடுவணிந்தால்,

(இ-பு,) குழைத்துத்தடவி அதன்பின்பு மூன்குழைத்த அந்தவிபூதியைவெண்மையானநிலவினைச்செய்தது போலமேற்சொன்னஇடங்களில்தரிக்கும்போது நெற்றியினிடத்தில்செழுமையுள்ளவிரல்களில் நடுவிரலைவிட்டுமோதிரமணியத்தக்கவிரலாலும் சுட்டுவிரலாலும் குற்றமறத்தரித்துப்பின்புபெரியவிரலால்நடுவேளதிராகஅணிந்தால் எ-று. ()

அதுவேதிரிபுண்டரமுரைக்க வங்கமனைவோரிடனுதும்
பதியாலுரைத்தமந்திரங்கள் பஞ்சப்பிரமமபநிடக் [ய்
விதியால்வேதத்தெடுத்துரைத்தவியன்மந்திரங்களென்றரிவா
ய்நித்ரய்நின்றகாலங்கண்மூப் போதுமெப்போதினுமாம்

(இ-பு,) அவ்வாறுதரிக்கப்படுவதேதிரிபுண்டரமாம்மன் சொன்னஅங்கங்களே திரிபுண்டரந்தரிக்குமிடமாம்பரமசிவனாலசொல்லப்பட்டமந்திரங்கள்பஞ்சப்பிர்மஉபநிடதம்வேதத்தில்முறையாகஎடுத்துரைத்தமேன்மைபொருந்திய மந்திரங்களென்று அறிவாய் தற்காகஙவமாகநின்றகாலங்கள்மூப்போதுமாதும்அன்றியும்எப்போதுமாம்-எ-று.

நீளம்புருவத்தளவாகு மிடையினீக்கமொருவிரலா
மாளுர்தெய்வமுருத்திரனே டரியமகேசன்சதாசிவனு
நாளுஞ்சிலங்கடைப்பிடியாய் நன்காயீட்டுந்திரவியங்க
ளேந்தருபால்வெண்ணீறு மூலகுக்குயிராந்தோயமுமே

(இ-பு,) நெற்றியில்தரிக்கின்றநீளம்புருவத்தின்அளவாம்திரிபுண்டரமாகியமூன்றுகீற்றுக்குள்மத்தியில்மத்தியில் ஒருவிரல்அளவுஇடம்விட்டிருக்கவேண்டுவது அதற்குறியதேவதைகள் உருத்திரன்மகேசன்சதாசிவன் என்னும்கடவுள்களாம் இந்த ஒழுங்கத்தைபொருநாளுமறவாமலிருப்பாயாக நன்மையுடன்சேர்க்கும் திரவியங்கள் தூளாய்ப்பால்நிறமுள்ளவிபூதியும்உலகுக்குயிராகியநீருமாம்-எ-று. (௯உ)

பலத்தின்பெருமைமாமுனியே பகரிலேவர்தாமறிவார்
நிலத்தின்மீதுமானிடர்க்கு ரைத்திக்கிதுபோனெறியுண்டோ
சொலற்குத்தருநால்வருணத்தோர் வருணச்சிரமத்தொழில்புரிவோர்
நலத்திற்கியையாவிழிகுருத்தோர் கலன்பூண்மகளீர்கைமையுற்றோர்

(இ-பு,) பெருமையுள்ளமுனிவனேவிபூதியைத்திரிபுண்டரமாகத்தரிப்பதினால்வரும் பலனைச்சொல்லுமிடத்தில்அவர்களறியத்தக்கவர்கள்இவ்வுலகத்தில்பிறந்தமனிதர்களுக்குமோக்ஷத்தை இதைப்போல்சொல்லலாமெனறால்வேறுபொருளில்லைபிராமணர்முதலிய நால்வருணத்தார் பிரமசரியமுதலியநான்குஆச்சிரமமுள்ளவர்கள் அபாத்திரர்களாகியஇழிகுலத்தோர்மாங்கலியஸ்திரிகள்கைம்பெண்கள்-எ-று,

இயாவரே றுமித்தரும மியன்றகாலத்தியற்றுவரேற்
பாவமாயத்தளையறுத்துப் பாரிற்பிறவிக்கடனீந்திக்
தேவர்போகம்பொன்னுலகிற் சென்றுதுய்த்துச்சிவனருள்
நாவினாலும்வழுத்தரிய முத்திபின்பநண்ணுவிரால்

(இ-பு,) இப்போது சொல்லிய இவர்களில் எவர்களேயானாலிந்தி ரிபுண்டரந்தரிப்பதாகிய தருமஞ்செய்வார்களேயானால் பாவமாகிய ப ந்தத்தையறுத்துப் பூமியில்பிறக்கும் பிறவிக்கடலை நீந்திச்சுவர்க்கலோ கத்தில் தேவபோகத்தை அநுபவித்துப்பின்பு பரமசிவனுடைய தி ருவருளினால் நாவைக்கொண்டு சொல்வதற் கரியமுத்தியின்பம் அ டையவர்கள்-எ-று. (கச)

கோறல்களவுகள்ளுண்டல் குருவைப்பிழைத்தல்கூட்டென்னத்
தேறும்பஞ்சபாதகத்தை யொழியாதியற்றுஞ்சிறியோரு
மாறிலொன்றுதாங்கொள்ளாத நீதியிற்றியற்மிகத்த
பாறுபடிவென்மன்னவரும் பயந்தோர்க்கொன்றபாதகரும்

(இ-பு,) கொலைசெய்தல திருடுதல் மதுபானஞ் செய்தல் ஆசாரி ய அபசாரஞ் செய்தல் காமமென்று சொல்லப்படுகிற பஞ்சமாபாதக த்தை எப்போதுஞ் செய்கின்ற கீழோர்களும் ஆறிலொருபாகம் வா ங்கொள்ளாமல் அநீதிபுரிந்து தர்மத்தையொழித்த் பருந்து சூழும் படியான வேலேந்தி மன்னவர்களும் மாதாபிதாக்களைக் கொன்றபா தகரும்-எ-று, (கரு)

செய்தநன்றிமறந்தோரு நீவைத்தில்லஞ்சிதைத்தோருங்
கொய்துபசுவைத்தின்றோருங்கொண்டோர்ப்பிழத்துத்திரிந்தோரும்
நொய்திற்கரிபொய்த்துரைத்தோரு நோன்பையிகழ்ந்துகொடித்தோ
வைதுபழித்துப்பொய்யென் மூன்னூலிகழ்நதவஞ்சகரும் [ரும்

(இ-பு,) செய்தநன்றி மறந்தவர்களும் வீட்டில் நெருப்புவைத்து க்கொளுத்தி விட்டவர்களும் பசுவையறுத்துத் தின்றவர்களும்கொ ண்ட கணவனுக்குத் துரோகஞ்செய்து சோரம்போகிற மாதர்களு ம் எளிதாகப் போய் சாக்ஷிசொன்னவர்களும் விரதங்களை யிகழ்ந் து சொன்னவர்களும் சாஸ்திரங்களைப் பழித்துப்பொய்யென்று இ கழ்ச்சிசெய்யும் பாதகரும்-எ-று; (கசு)

கருப்பம்வீழ்த்தித்திரிந்தோருங் கல்வாதவரைக்கலந்தோரும்
பரித்தவொருதேவினைவழுத்திப் பலதேவரையும்பழித்தோரு
மருத்திவிடத்தாற்கொன்றோரு மற்றோர்க்கறுதுலதிந்தோரும்
விருத்தர்பாலர்மடவார்க ணடுங்கவினைகள்செய்தோரும்

(இ-பு) கர்ப்பத்தையழித்துத் திரிகின்றவர்களும் சோரத்தகர்தவர்க ளுடன் சேர்ந்தவர்களும் தம்முடையஉள்ளத்திற்கொண்ட ஒருதெய்

வத்தைத்துதித்து மற்றக்கடவுளைப்பழித்தவர்களும் விஷங்கொடுத்து
க்கொன்றவர்களும் தரித்திரர்களுக்கு அதனைத்தீர்க்காமலிருப்பவர்க
ளும் கிழவர்கள்பாலர்கள் மாதர்கள் என்னுமிவர்கள் பயப்படும்படி
கொடியசெய்கைகள் செய்தவர்களும்-எ-று. (௧௭)

அடைந்தோர்க்கருளாதிருந்தோரு மமரிலரசன்படைவெருவி
யிடைந்துவெரிநிட்டோடினரும் வெறியகுறளைபகர்ந்தோரு
மிடைந்தவறியோர்க்கீயாம னிதியமீட்டியிருந்தோருங்
குடைந்துநீருண்கூவல்குளங் குட்டஞ்சிதைத்தகொடியோரும்

(இ-பு) தங்களை அடைக்கலமாகஅடைந்தவர்களுக்குஉபகாரஞ்செ
ய்யாதவர்களும் அரசன்படையிற்போய்ச்சண்டை நேரிட்டவிடத்தி
ல்பயந்துமுதுகுகாட்டி யோடினவர்களும் பலனில்லாதகோள்சொன்
னவர்களும் இடைந்திருக்கும்வறுமையுள்ளவர்களுக்குக்கொடாமல்
பொருள்சம்பாதித்து வைத்திருப்பவர்களும் மூழ்கிநீருண்ணும்படி
யான-கிணறு-குளம்-குட்டை-இவைகளையழித்தபாவிகளும்-எ-று. ()

ஆராமங்களழித்தோரு மதிதிவருந்தவயின்றோருந்
திராவிடும்பைபகைவருக்குந் தவசீலருக்குஞ்செய்தோருஞ்
சேராநிலையைச்சேர்ந்தொழுகித்தீவேட்டுண்ணுந்திறந்திறம்பிப்
பாராவாரக்கலத்தேறி நிதிவேட்டுழன்றபார்ப்பாரும்

(இ-பு) பூஞ்சோலையை அழித்தவர்களும் வந்தவிருந்தாளிகள் பசி
யால்வருந்தஅவர்களையழையாமல் உண்பவர்களும்பகைவராயிருப்ப
வர்களுக்கும்தவசீலர்களாகியமுனிவர்களுக்கும் ஒருயாதுன்பத்தை
ச்செய்கிறவர்களும் சேரத்தகாத தன்மையைப்பொருந்தியந்தவழி
யில்நடந்து கிதியாகுதிசெய்து பின்புபோசனங்கொள்ளுந் தன்மை
மாறிப்பொருளையிச்சித்துக் கப்பலேறிச்சமுத்திரத்திற்சென்று உழ
லுகிறபிராமணர்களும்-எ-று. (௧௯)

இன்னுங்கொடும்பாதகம்புரிந்தோ ரியாவரேனுமவரெல்லாம்
பின்னுஞ்சடிலமாமுனியே திருநீறணியப்பெறிலிவர்பால்
மன்னும்பிறவிமுதல்வினை முழுதுமாயும்வயங்கொளியோன்
மின்னுங்கனகவுதயவரை மேவவிருள்வீந்திடுவதுபோல்

(இ-பு) பின்னலாகிய சடையை யுடைய முனிவனே இப்போது
சொல்லியங்க பாதகங்களுமல்லாமல் மற்றுமுள்ளபாவங்கள் செய்த
வர்களேயானாலும் அவர்களெல்லாரும் திருநீறணியப்பெறுவார்களா
னால்அவர்களிடத்தில் நிலையாகியபிறவிமுதலான வினைகளெல்லாஞ்சூ
ரியன்சொர்ணமயமான உதயகிரியில் தோன்றினவளவில்இருளொழி
வதுபோல நீங்கிவிடும்-எ-று. (௨௰)

எள்ளப்படுகீழ்மக்களோ டிழிந்தகுலத்தோரென்றாலும்
வள்ளற்பரமன்றிருநீறு மணியுமணிந்தமாண்பினரை
யுள்ளத்துள்ளேயிருபொழுது முணர்ந்துதெருண்டுசிவனெனவே
கொள்ளத்தகையவறிவினரே பிறவிக்கடலிற்குளியாதார்.

(இ-பு) இகழப்படுங்கீழ்மக்களென்கிற இழிந்தகுலத்தோர்களே யானாலும்பரமசிவன் விபூதியும் ருத்திராக்ஷமுந்தரித்த பெருமையாளரை இரவும்பகலும் இருதயத்தில்தியானித்துச் சிவமெனக் கொள்ளத்தக்கஅறிவாளர்களே பிறவிக்கடல்மூழ்காதவர்கள்-எ-று- பரமசிவன்யாவருக்கும் அருள்தருகின்றவராதலால் வள்ளற்பரமனென்றார்-எ-று. (சக)

நாடிமூன்றுகாலமெண்ணா னம்பன்றிருப்பேரிசைநவிலா
மூடிவிளங்கும்பாவையென வறிவொன்றில்லாதானாலு
நேடிவெண்ணீறினிதள்ளி நெற்றிவிளங்கத்தரிப்பானேற்
கோடிபிதிர்கள்கும்பியிடை குளியாதரன்பாற்கூட்டுவனால்.

(இ-பு) பலனுண்டெனநினைத்துத்திரிகாலங்களிலுந்தியானிக்காதவனும் பரமசிவனுடைய திருநாமத்தின் பெருமையைநாவினாற்றுதியாதவனுமாய்க்கண்ணாடியிலெழுதப்பட்ட சித்திரப்பிரதமைபோலஅறிவில்லாதவனேயானாலும் விபூதியைத்தேடிச் சம்பாதித்து இனிதாகஅள்ளிநெற்றியில்விளங்கும்படி தரிப்பானானால் தன்னுடையஅனந்தம்பிதிர்களைநரகத்தில் முழுகவொட்டாமல் சாம்பசிவனிடத்தில்சேரும்படி சேர்ப்பான்-எ-று. (சஉ)

எழுகோடிமந்திரமு மெண்ணிறவுமிருநிலத்தி
லாழமுடையபங்கைமுத லனந்தநதியுமமரேசன்
வீழுந்துரகமீறுமவ் வேள்வியனைத்தும்விளம்புங்காற்
றாழுஞ்சடையான்றிருநீறு தரும்பேறொன்றுந்தாராவே.

(இ-பு) சத்தகோடி மகாமந்திரங்களும் அளவில்லாதஸ்தலங்களும் இந்தப்பெரியஉலகத்திலிருக்கும் ஆழமுள்ளகங்கைமுதலானஅனந்தநதிகளும்தேவேந்திரன் விரும்புகின்ற அசுவமேதயாகம்நூறுகியயாகங்களும் ஆகியஇவைகள்தாழ்ந்த சடையையுடையபரமசிவன் விபூதி தரும்பேறுகளில் ஒருபேற்றினையுந்தர மாட்டாதுகள்-எ-று. (சங)

பத்தியால்வெண்ணீறணிந்தோர்பாரைப்பொதுநீங்கிடப்புரந்து
துய்த்தபோகத்திறுதியினிற் சோதிவிமானத்தினிலேறி
மைத்தகுழலாரொடுமருவி பகவான்பதத்தில்வாழ்ந்துபின்னர்ச்
சத்தாயசத்தைபொருவுசிவ சாயுச்சியமேசார்வாரால்

(இ-பு) பத்தியுடன் விபூதிதரித்துக்கொள்ளுகின்றவர்கள்பொதுவில்லாமல் இவ்வுலகத்தைஆண்டு போகங்களையனுபவித்துஇறுதியில்

சோதியுள்ள தேவவிமானத்தி லேறிச்சென்று அளகத்தை யுடைய ரம்பாஸ்திரிகளுடன் தேவேந்திர னுலகத்தில் வாழ்ந்திருந்துபின்பு சீவத்தன்மைநீங்கிச் சிவத்தன்மைபெற்றுச் சிவசாயுச்சியம் அடைவார்கள்-எ-று. (சச)

இந்தவிபூதிமான்மியத்தை வேதம்பலவுமியம்புமதை
சிந்தைக்கெளிதாய்மிகச்சுருக்கிச் செப்பினேமென்றருள்புரியா
வந்தத்துடனேமுதலுமில்லா வாதிபுரமன்கன்றிடலுஞ்
சந்தக்குலநான்மறைவிரிஞ்ச னுலகத்தடைந்தான்சனற்குமரன்.

(இ-பு) இந்தவிபூதியின் மகத்துவத்தை வேதங்களெல்லாம் விஸ்தாரமாகச்சொல்லுகின்றன் உன்மனதுக்கெளிதாகத் தெரியும்படிமிகவுஞ்சுருக்கி நான்சொன்னேமென்று அருள்செய்து ஆதியந்தமில்லாதமுதற்கடவுளாகிய கயிலாசபதியானவர் சொல்லவெழுந்தருளவும்சனற்குமாரமுனிவர் சந்தமுள்ளகூட்டமாகிய நான்குவேதமுமுணர்ந்த பிரமலோகம்போய்ச்சேர்ந்தார்-எ-று. (சரு)

இன்னதாயவெண்ணீற்றின் றகைமையெம்மாற்புகலவற்றோ
வுன்னைநலியும்பசிதீர்த்தற் கொருப்பட்டெமைநீயுறப்புற்றி
மன்னுதிருநீறுனதுடல மலியப்பரிசித்ததனானி
யன்னகாலேநிருதவடி வகற்றித்தேவாயினையென்று

(இ-ம்) இத்தன்மையுள்ளவிபூதியின் மகத்துவன்எம்மாற்புகழத்தக்கதோஉன்னைவருந்தியபசிதீரஎம்மை உண்ணவேண்டுமென்றுபிடித்துநிலைபெற்றவிபூதியுன்சரீரத்திற்பொருந்தப்பரிசித்ததினாலமுன்னுள்ளராக்ஷதஉருவம்நீங்கித் தேவரூபம்பெற்றாயென்று-எ-று. (சசு)

அன்பினுணர்த்திவெண்ணீற்றை யள்ளியரக்கன்றனக்களியா
வின்பமருளுமந்திரமு மியமபிமுறைநீறிடுவித்துத்
துன்பமொழிந்தாய்பொன்னுலகிற் போகந்துய்த்துத்தொலைந்தபின்ன
வன்பரறியாச்சிவபதத்தை மருவிவாழ்த்தியெனவிடுப்ப

(இ-று) அன்புடன்சொல்லி விபூதியைஅள்ளிஅரக்கனுக்குக்கொடுத்துப் பேரின்பம்அருளும் மந்திரோபதேசமுஞ்செய்து முறையாக விபூதியைத்தரித்துக்கொள்ளும்படி தெரிவித்துத்துன்பம் நீங்கினவனேசுவர்க்கபோகஇன்பம் அநுபவித்துநீங்கினபின்பு அன்பில்லாதவர்கள் அறியாத சிவபதத்தைப்பொருந்தி வாழ்ந்துகொண்டிருவென்று விடைகொடுத்தனுப்ப-எ-று. (சஎ)

பழையமுனிவனடியிணைமேற் பணிந்தாங்கெழுந்துவிடைபெற்றுக்
குழையுமனத்தினுவகையொடும் பொன்னாட்டெல்லைகுறுகுதலும்

பிழையில்பொருளின்பதந்தெரியும் வாமதேவப்பெருந்தகையுந்
தழையுமிதழிச்சடாதரன்போற் சார்ந்தானென்றுசாற்றினான்.

(இ-பு) அரக்கன் பழமையாகிய வாமதேவ முனிவர் திருவடியினிடத்தில்பணிந்தெழுந்து விடைபெற்றுக்கொண்டு குழையுமனத்தினனாய்ச்சந்தோஷத்துடன் தேவலோகத்திற் செல்லுதலும் பிழையில்லாதபொருளின் தன்மையுணர்ந்த அம்முனிவர்தழைந்தகொன்றைமாலையணிந்த சடாமகுடமுள்ள பரமசிவன்போலிருந்ததாம் போகவேண்டிய ஸ்தானத்திற்குப்போனாரென்று சூதமுனிவர் சொன்னார் —எ-று. (சஅ).

பதினாறாவது திரிபுண்டரமுரைத்த அத்தியாயம்.

முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - கா௩௩.



உ

சிவமயம்.

## பதினேழாவது.

### வேடன்சிவபூசைகடைப்பிடித்தஅத்தியாயம்.

இவ்வண்ணம்வியந்துசூத னிறுத்தலுமதனைக்கேளா
மைவண்ணக்காளகண்டன வால்வண்ணப்பூதிநல்கு
மெய்வண்ணப்பலத்தின்பெற்றி விழைந்தனமென்னவேத்திப்
பொய்வண்ணம்புகுதாவுள்ளத் தருந்தவர்புகல்வதானார்.

(இ-பு) சூதமுனியர்மகிழ்ந்து சொல்லுதலும் இதனைக்கேட்டுமைநிறமுள்ள காளகண்டமூர்த்தியின் வெண்மைநிறமுள்ளவிபூதிதரிக்கின்றமாறாதபலத்தின் தன்மையைக்கேட்டு ஆனந்தமடைந்தோமென்று துதிசெய்து உண்மைநெறிபொருந்திய உள்ளத்தையுடைய நைமிசாரணியமுனிவர்கள் சொல்லுகின்றார்கள்-எ-று. (க).

முற்றுநான்மறைகள்கூறு முடிபொருட்டுணிபையோர்ந்து
கற்றவர்குரவராயிற் பேறுமக்கணத்திலெய்துஞ்
சிற்றியற்குரவர்தம்பால மானிடர்சிவமெய்ஞ்ஞானம்
பெற்றிடலவரெவ்வாறு பிஞ்ஞகன்பதத்தைச்சேர்வார்

(இ-பு,) நான்குவேத முழுவதுஞ் சொல்லத்தக்க முடிவான பொருளின்றிச் சயம்அறிந்து கற்றவர்கள் ஆசாரியரானல் சிவபதம் அப்பொழுதேகிடைக்கும் அவ்வாறுகற்றுணராத ஆசாரியத்தில் மாணிடர்சேர்ந்து மெய்ஞ்ஞானம் பெறுவார்களானல் சிவபதத்தை அவர்கள் எவ்வண்ணஞ்சேர்வார்கள் எ-று. (உ

அருந்தவமுனியேயிந் வினவுக்குவிடையாதன்பு
புரிந்தெமக்குரைத்தியென்று புராதனமுனிவர்கூற
விரிந்தநற்கலைகள்வல்ல வியாதனைமனத்தினேத்தித்
திருந்தியதவத்துச்சூத முனிவரன்செப்பினனே

(இ-பு,) அரியதவமுள்ள சூதமுனிவரே இந்தவினவுக்கு விடை ஆராய்ந்து அன்புகூர்ந்துஎமக்கு அருள்செய்யு மென்று புராதனர்களாகிய நைமிசாரண்யமுனிவர்கள் சொல்லவிரிவாகிய பலகலைகளிலும்வல்லவராகிய வியாசரைஇருதயத்தில்சிந்தித்துத்துதித்து நல்லதவசியாகியசூதமுனிவர் சொல்லுகின்றார்-எ-று. (௩)

பரவைசூழுலகில்வாழு மானிடப்பசுக்கட்கெல்லா
மரனறுதருமத்தோங்குங் கிரியையில்வாவொன்றுண்டேற்
குரவனறிவின்கீழ்மை மேன்மைதான்குறிப்பதென்னே
திரமுறுமனபினனே சிவகதிசேரலாமே

(இ-பு) சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகில் மனிதசீவன்களுக்கெல்லாம் சிவதருமமாக மேன்மைதங்கிப் கிரியாபாதத்தில் விருப்பமென்பதொன்றுண்டாயிருக்குமானல் ஆசாரியருடையஅறிவின்கீழ்மையும்பெருமையையும் நாங்குறிக்கவேண்டியதில்லை உறுதியாகிய அன்பினலேயேசிவகதியடையலாம்-எ-று. (௪)

உடைத்தெறிந்திட்டகல்லிற் பசுமண்ணின்மரத்திலோட்டிற்
கிடைத்தவற்றொன்றுதன்னை பரனெனக்கிரியைபேணிக்
கடைப்பிடித்துறுதிகூரு மவாவொடுகனிவனயின்
விடைக்கொடியுயர்த்ததோன்றல் கருமத்தான்முத்திமேவும

(இ-பு, உடைத்து எறிந்துவிட்டகல்லிற் ஈரமுள்ளமண்ணில்ஓட்டில் இவைகளுமல்லாமல் வேறேயெதுகிடைத்தாலும்அதுகளிலொன்றைப்பரமசிவனுகப்பாவித்துக் கிரியைவிரும்பிமறவாமற்பற்றிஉறுதிமிகுந்தஅன்புடன் ஒருவனமனங்கனிவானல்அவனுக்குரிஷபக்கொடியுள்ளபரமசிவனதுகிருபையால்முத்திகிடைக்கும்-எ-று, (ரு)

காட்டிடுங்குரவனறுனுங் கயவனுந்தகையனேனு
மீட்டுமந்திரமும்வாசார வசனமாமியல்பிற்றேனும்

கேட்டமாணுக்கன்றானு மறிவிற்கீழ்மகனுமேனு
நாட்டியவவாவென்றுண்டேற் சிவபதநணணுவானே

(இ-பு,) அறிவிக்கிறகுருவும சாஸ்திரவிசாரணை யில்லாதவரே யானுலும் உச்சரிக்கிறமந்திரமும் பயனில்லாத வசனத்தன்மை யுள்ளதேயானுலும உபதேசம்பெற்ற சிஷன் விவேகமில்லாத கீழ்மகனே யானுலும் சொல்லிய அன்பென்பது உண்டாயிருக்குமானுல் சிவபதத்தை அடைவான்-எ-று. (சு)

ஆரணநான்குமோதி யறிந்தபேரறிஞனேனும்
காரணவேள்வி நூறுங் கருத்தினின்முடித்தவனேனும்
வாரணமுரித்தவள்ளன் மலரடிதன்னின்வைதத
பூரணவேட்கையில்லான பொருந்திடான்முத்தியன்றே

(இ-பு) நான்குவேதங்களும் ஓதியுணர்ந்த ஞானவானுனுலும் ஸ்வர்க்கபதத்திற்குக்காரணமாகி நூறுயாகம் விரைவாகச்செய்துநிறைவேற்றினவனேயானுலும்யானையையுரித்தநம்மிறைவன்திருவடிமலரில்வைத்தபூரணமாகிய அன்பில்லாதவன்முத்தியடைவான்-எ-று, (எ)

ஆதலாற்கருமம்யாவு மையக்தோடியற்றிநின்ற
பேதமையுளத்தாற்பெற்ற பேறில்லையண்டோர்வேட்டன்
போதமிலாசன்சொன்னீ விநோதநற்பொரு ளென்றெண்ணி
வேதநாயகனைப்பூசித் துய்ந்தமைவிளம்புவாமே

(இ-பு.) ஆகையினுல் கிரியைகளெல்லாம் சந்தேகத்துடன்செய்திருக்கும் அறிவில்லாதவர்கள் அடைந்தபேறு ஒன்றுமில்லைபூர்வத்தில் ஒருவேடன் ஞானமில்லாத ஒரு அரசன்சொல்லியவிநோதவார்த்தைனய நல்லபொருளென்றுநம்பிப் பரமசிவனைப்பூசித்து உய்ந்தசரித்தைச் சொல்லுகிறேம்-எ-று (அ)

பண்டுமாஞ்சாலதேசப் பார்த்திவக்குமரன்மிக்க
திண்டிறற்சிங்ககேது வெனுமபெயர்ச்செங்கோல்வேந்தன்
கொண்டலொத்தவுதையான் கோதிலான்குணத்தினமிக்கா
றண்டுதலின்றிவேட்ட மாடுவானசமைந்துபோனுன் [ன்

(இ-பு,) பூர்வத்தில் பாஞ்சாலதேசத்து ராசகுமாரன் மிகுந்தபராக்கிரமமுள்ள சிங்ககேதுவென்னும்பெயர்பெற்றுச்செங்கோல்செலுத்துமன்னன மேகம்போற்கொடுக்குங்கையான் குற்றமில்லாதவன் நற்குணத்திறசிறந்தவனுனத்தகுதியுள்ள அவன் ஒருநாள்நீங்குதலில்லாமல் வேட்டையாட உத்தேசித்துபபோனுன்-எ-று (கூ)

தடிமிசைவலைவரர்காவித் தடந்தொறும்வருவார்கோடி
துடிபொருமிரலைபொக்கத் தொண்டகந்துவைப்பார்கோடி

மடிசெவிஞமலிபற்றி வருபவர்கோடிகோடி
கடிதருதொகையோர்சூழக் கட்டகம்வேட்டைசெய்தான்

(இ-பு) தடிகளின்மேல்வலைகளும் வார்களும்போட்டுச் சுமந்து கொண்டு மார்க்கந்தோறுஞ்சொல்லுகின்ற வேடர்கள்கோடிபேர் துடியுடன்கிருங்கநாதமுழங்கக் குறிஞ்சிப்பறைகள் முழக்குகிறவேடர் கோடிபேர்வளைந்த காதுகளையுடைய நாய்கள்பற்றிக்கொண்டு வருகின்றவர்கள்கோடிகோடிபேர்இவ்வாறு கணக்கில்லாதவேடர்கூட்டஞ் சூழ்ந்துவரச்சென்று காட்டினிடத்தில்வேட்டையாடினான்-எ-று. ()

அப்பெருவனத்திற்சண்ட னென்னும்பெயர்வேடனெஞ்சி
யெப்பெருநெறியுநேடி விலங்கினையெறியவெண்ணி
யொப்பருஞ்சிலையினோடுங் கணைபிடித்துருத்துச்செல்வான்
திப்பியமொழிந்துநந்தி யிடிந்தவாலயத்தைச்சேர்ந்தான்

(இ-பு) அந்தப்பெரிய ஆரணியத்தில்சண்டனென்கிறவொருவேடன் தனித்து எல்லாவழிகளையுந்தேடி மிருகங்களைக்கொல்ல நினைத்து ஒப்பில்லாத வில்லையும் பாணத்தையும் பிடித்துக் கோபத்துடன் செல்லுகின்றவன் பொலிவுமாறி இடிந்து பாழாயிருக்கும் ஒரு ஆலயத்திற்சேர்ந்தான்-எ-று. (கக)

சிதைந்துருவழிந்துவீழ்ந்து கிடந்ததோர்சிவலிங்கத்தைக்
குதைந்தவார்கழிவேடன் கண்டனன்குறித்தநெஞ்சிற்
புதைந்தபேரன்பினாலே போற்றினனெடுத்துப்போந்து
ததைந்தபூந்தெரியல்வேய்ந்த தராபதிதிருமுன்காட்டி

(இ-பு) சிதைவுபட்டு உருவம்அழிந்து விழுந்திருக்கிற சிவலிங்கத்தைக்கண்டுகுதையுள்ளநீண்டகணைகளையுடைய அந்தவேடன்அதைக்குறித்த மனதில்நிறைந்தபெரிதான அன்புடன்துதித்து எடுத்துக்கொண்டுவந்துநெருங்கிய பூமாலையணிந்தஅரசன்முன்காட்டிஎ-று. ()

அரும்புவிமுழுதுமாளு மரசனேயரசரேறே
விரும்பியவடியேன்கையின் மேவியசிவலிங்கத்தைப்
பெரும்பயன்றெரிந்துபோற்றிப் பூசிக்கும்போற்றியெல்லாந்
தரம்பெறவுரைத்தியென்னச் சாற்றினன்சாற்றலோடும்

(இ-பு) அருமையான பூமிமுழுவதுங்காக்கும் ராஜனேமன்னவர்சிங்கமே விருப்பங்கொண்ட அடியேன் கையில்பொருந்திய சிவலிங்கத்தை மிகுந்தபயனை அறிந்து துதித்துப்பூசிக்கிற முறைமையெல்லாம்கிரமமாகச் சொல்லவேண்டுமென்றான் அப்படிசொன்னவளவில்—எ-று. (கங)

மடமையினன்றேவிந்த வனசரனுரைத்தமாற்றம்
புடையமாந்தீர்கள்கேண்மி னென்றுகைபடைத்தநக்குப்

படையுலாந்தடக்கைவேட னினக்கதுபணிப்பனென்னுக்
கடலுலகாளும்வேந்த னசதியாற்கட்டுரைத்தான்

(இ-ு) இந்தவேடன் சொன்னவார்த்தை அறியாமையினாலல்லவா என் அருகிலிருப்பவர்களேகேளுங்களென்று கைதட்டிநகைத்து ஆயுதமேந்தும் பெரியகையுள்ளவேடனே பூசைசெய்கிற முறைமையைச்சொல்லுகிறேன்கேளென்று கடல்சூழ்ந்தஉலகாளும்அரசன் ஏளனமாகச்சொல்லுகிறான்-எ-று, (௰௪)

ஏந்தியசிவலிங்கத்தை 'யியல்பினமஞ்சனநீராட்டிப்
பூந்துணர்கந்தஞ்சாற்றிப் புகையொடுதீபநல்கி
மாந்தரைச்சுட்டசாம்பா கொணர்ந்துமுன்வைத்துப்போற்றி
யாய்ந்துநீதுய்க்குந்தீமபா லடிசிலோடவையுநல்கி

(இ-ு) ஏந்திய சிவலிங்கத்துக்கு விதிப்படிதிருமஞ்சனநீரால்அபிஷேகஞ்செய்து சந்தனபுஷ்பந்தரித்துத் தூபதீபங்கள்கொடுத்துஇறந்தமனிதரைச்சுட்ட சுடலைச்சாம்பலைக்கொண்டுவந்து எதிரில்வைத்துப்போற்றிசெய்து பதம்அறிந்து நீஉண்ணுகின்ற மதுரமுள்ளபால்அன்னம இன்னுமுள்ளது நிவேதித்து-எ-று, (௰௫)

நேயமோடிறைஞ்சியேத்தி நிருத்தங்கள்புரிந்துநின்று
வாயினாலமுதகானம் பாடியும்வணக்கஞ்செய்துந்
தூயநற்பூசைசெய்வா யென்றிறைசொன்னான்முற்றுங் [ன்
காயும்வெஞ்சிலைக்கைவேடன் மெய்மையாற்கருத்திற்கொண்டா

(இ-ு) அன்புடன்பணிந்துதுதித்து நடனங்கள்செய்தும்வாயினால் மதுரமுள்ளகீதங்கள்பாடியும் பவுத்திரமானநல்லபூசைசெய்யென்று அரசன்சொன்னான் பகைவரைக்கொல்லத்தக்கவேடன்அதையெல்லாம் உண்மையாகமனதில் எண்ணிக்கொண்டான்-எ-று. (௰௬)

நெஞ்சினில்வேட்கைகூரக் கடைப்பிடிநிகழ்தலாலே
வஞ்சமுற்றரசன்சொன்ன விதிமுறைவழுவாதெண்ணி
யஞ்சலித்தமலன்பூசை யனுதினமொருநாள்போல
வெஞ்சவேபுரியுங்காலத் தொருபகல்விரதவேடன்

(இ-ு) விரதங்கொண்டிருக்கும் வேடன்மனதில் அன்புமிகுதியாக அரசன்சொன்னதையெல்லாம் மறவாததன்மை உண்டானதினால் அவ்வரசன் கபடங்கொண்டுசொல்லியமுறைமையில்ஒன்றுந்தவறாமல்ஞாபகத்தில்வைத்துக்கொண்டுவணங்கிச் சிவபூசைமுதல்நாள்போலவேசெய்யுங்காலத்தில் ஒருநாள் எ-று. (௰௭)

மற்றையவெல்லாங்கொண்டு வரதனைப்பூசைசெய்வா
னுற்றனனடலைசீறு கண்டிலனெல்லையேகிச்
சுற்றியவனங்களெங்குந் துருவினனேடிக்காணான்
கற்றையங்குழலாளோடு கருத்தழிந்திதுசொன்னான்

(இ-பு) சிவபூசைக்குவேண்டிய திரவியங்களெல்லாஞ்சேகரித்துக்கொண்டு பூசைசெய்யவாரம்பித்தான்சேகரித்ததிரவியங்கள்சரியாகவிருக்கின்றதாவென்றுபார்க்கையில் சுடலைச்சாம்பலில்லாமையினால்விரைவுடன் சுடலைகளையெல்லாந்தேடிப்பார்த்து அகப்படாமல் மனமவருந்திதன்மனைவியுடன் சொல்லுகிறான்-எ-று. (கஅ)

குன்றியந்தாமநான்றகுவிமுலைக்கொடிச்சிகேட்டி
யன்றநங்குரவனை வரசர்கோன்பணித்தவாறே
யின்றளவீசன்பூசை யியற்றினேன்குறைபாடின்றி
யொன்றவற்றிலதேலண்ணல் பூசையின்றொழியுங்கண்டாய்

(இ-பு) குன்றி மணிமாலைதொங்கி அசையும்படியானகுவிந்ததனமுள்ள குறமாதாகிய என்மனைவியேகேள் நம்முடையகுருவாகிய ராஜன் அன்றுசொன்னமுறைமைப்படி யின்றுவரையில்சிவபூசைகுறைபாடில்லாமல்செய்தேன் அந்தப்பூசைத்திரவியங்களிலே இப்போதொருதிரவியமில்லாவிடில் சிவபூசைக்கிரமந்தப்பிப்போம்-எ-று. ()

பூசனைவழுவுமாயிற் புலாலுடறன்னைப்போற்றிச்
சீசியானிருக்கலாற்றே னிறப்பதேதிண்ணமென்றான்
மாசிலாவுள்ளத்தாளுங் குறையேதுவந்ததென்றாள்
தூசுலாமல்குலாய்கேள் சுடலையினடலையென்றான்

(இ-பு) சிவபூசைதவறுமானால் சீச்சீயிந்தநாற்றஉடலைவைத்துக்கொண்டிருக்கமாட்டேன் இறந்துபோவதேநிச்சயமென்றான் குற்றமில்லாதமனமுடைய அந்தக்குறமாது இப்போதுநேரிட்டகுறைபாடென்னவென்றாள் ஆடையணிந்த அல்குலையுடையபெண்ணேகேள் சுடலைச்சாம்பல்குறைபாடு என்றான்-எ-று. (உ0)

உரைத்தவத்துள்ளேயொன்றின் றாயினுமுவகைகூர்ந்து
பரித்திடார்தொண்டர்பூசை யென்றுநீபகர்ந்தயாவுங்
கருத்தினிலுணர்ந்தேனின்று கண்ணுதற்பரமன்றன்னை
யருத்தியால்வழிபட்டேத்த வறைகுவனடியனென்றாள்

(இ-பு) சொல்லியதிரவியங்களில் ஒன்றில்லாவிட்டாலும்அடியார்கள் சந்தோஷத்துடன் பூசையைத் தொடங்காரென்று நீசொன்னதையெல்லாம் மனதில் அறிந்தேன் இப்போது சிவபூசையன்புடன்செய்து துதிக்க அடியேன் ஒன்றுசொல்லுகிறேனென்றாள்-எ-று, அதாவது, (உக)

சமத்தினடலையொன்று குறைந்ததென்றிரங்கவேண்டாஞ்
சேமித்தநந்தமில்லிற் செந்தழல்கொளுவிமூத்தி
காமித்துநான்வீழ்ந்தந்தக் கனல்புகுந்தவிவேனின்னே
பூமொய்த்தமார்பவேந்த சாம்பராற்பூசைசெய்வாய்

(இ-பு) சுடலைச்சாம்பலொன்று குறைந்ததென்றுவிசனப்படவேண்டியதில்லை காவலாகக்கட்டிய நம்முடையகுறிச்சியில் தீவைத்துக்கொளுத்திவிட்டுநான்மோக்ஷத்தைவிரும்பி அந்தத்தீயில்விழுந்துஇறந்துபோகிறேன் பூமாலையணிந்திருக்கும் மார்பையுடையநாயகனே அந்தச்சாம்பலைக்கொண்டு இப்பொழுதேசிவபூசைசெய்-எ-று. (உஉ)

என்றவள்சொல்லக்கேட்ட வெயினனுமினைந்துசொல்வான்
மன்றலங்குழலாய்கேட்டி யில்லறம்வளரகின்றான்
றன்றனிமனைவியாலே தருமமேமுதலநான்கு
மொன்றிடவேண்டுமென்னுமுலகமென்றுரைத்துப்பின்னும்

(இ-பு) என்றவள்சொல்லியதைக்கேட்டவேடன்மனமிரங்கிசொல்லுகிறான்வாசனையுள்ள அளகத்தையுடையமாதே நான்சொல்வதைக்கேள் இல்லறம்வளரும்படியிருக்குமொருவன் தன்மனைவியினால்தர்மமுதலாகியநான்கும் பொருந்தவேண்டுமென்று பெரியோர்கள்சொல்லுவார்கள்என்றுசொல்லி மேலுஞ்சொல்லுகிறான்-எ-று. (உங)

பொங்கிளமுலையாய்கேண்மோ புதல்வரைப்பெற்றாயல்லை
மங்கையின்பருவத்தின்ப மாதுநீமன்னுங்காமந்
தங்கியகாதன்மேன்மேற் றழைத்திடுமிளமைதன்னி
லங்கியில்வீழ்ந்துசாதற் கடுக்குமோவடாதுகண்டாய்

(இ-பு) இளமைமிகுந்த தனமுள்ளவளேகேள் நீயிதுவரையில் புத்திரசம்பத்துஅடையவில்லை நீயோபதின்மூன்றுவயதாகிய மங்கைப்பருவமுபுளவள் காமம்பொருந்தி ஆசைமேல்தழைக்குமிளமையில்தீயில்விழுந்துசாதல் அடுப்பதோ அடுப்பதல்ல-எ-று. (உச)

மின்குலமனையவாளி வேட்டுவர்க்கரசாய்த்தோன்று
நின்குலமைந்தனில்லா நிரயம்புக்காழ்ந்துபோன
வென்குலத்தவரையெல்லா நரகினின்றேற்றிமேலென்
புன்குலந்தன்னையோம்பிப் புரப்பவர்யாவரென்றான்

(இ-பு) மின்னற்கூட்ட மொத்தபாணமேந்திய வேடர்குலத்துக்குராசனாகப்பிறக்கும் உன்னுடையவமிசபுத்திரனில்லாமல் நரகத்தில்மூழ்கிப்போன என்குலத்தாரையெல்லாம் நரகத்தில்நின்றுங்கரையேற்றிஇனியென்புல்லியகுலத்தை ஆதரித்து ரக்ஷிப்பவர்கள்யாரென்றுசொன்னான்-எ-று. (உரு)

கருங்கயல்விழியாள்கேட்டுக் கூறினள்கருப்பமென்னு
மருங்கயற்கடலுளாழ்ந்தங் கழிவுறுமறிவிலாரிற்
பெருங்கயமுரித்தோன்றொண்டு பேணியேமாயப்பெற்றாற்
பொருங்கயமனையாய்பின்னும் விழைவதோர்பொருளுமுண்டோ

(இ-ுு) கரியசேல்மீன்போன்ற கண்ணையுடையவள்தன்கணவன் சொன்னதைக்கேட்டுச்சொல்லுகிறாள் யானையையொத்த பலமுள்ள கணவனே அறிவில்லாதவர்கள் பிறவியாகியசமுத்திரத்தில்மூழ்கியிறந்துபோகிறதுபோலப் பெரியயானையையுரித்த பரமசிவனுடைய அடிமைத்திறத்தை ஆதரித்து இறந்துபோகப்பெற்றால் அதற்குமேலும்விரும்பத்தக்கபொருளொன்றிருக்கின்றதோ-எ-று, (உகூ)

புரவலமறுதியீசன் பூசனைமுடிக்கவேண்டி
விரவனல்குளித்திப்போது வீவன்யானென்னலோடு
மரவெனத்திகழுமல்கு லாயிழைதுணிவையோர்ந்து
பரவருங்கற்பினளை யெரிபுகப்பணித்தலோடும்

(இ-ுு) இறைவனே தடுக்காதேசிவபூசைநிறைவேற்றவேண்டியிப்போதுபொருந்திய தீயில்விழுந்து நானிறந்துபோகிறேனென்று சொன்ன அளவில்பாம்பின்படம்போல்விளங்குகின்ற அல்குலையுடையதன்மனைவியின்துணிவையறிந்து யாவருந்துதிக்கத்தக்க கற்புள்ளவளைத்தீயில்விழும்படி உத்தரவுசெய்தமாத்திரத்தில்-என்று, (உஎ)

வானயாறிழிந்ததென்ன வரையினின்றிழிந்துபாயுங்
கானயாறருவிபாடிக் கலன்பலவணிந்துசுண்ண
நானஞ்செய்வாசம்பூசி நறுமலர்மாலைசூடிப்
பானுரைவெண்படார்த்துக் கணவனைப்பணிந்துவாழ்த்தி

(இ-ுு) ஆகாயகங்கை யிழிவதுபோல மலையினின்றிழிந்து பாயுங்கானாறாகிய அருவியில் ஸ்நாநஞ்செய்துபலவிதஆபரணங்கள் அணிந்துகொண்டும்சுண்ணப்பொடிகஸ்தூரிஇவைகள்சேர்ந்தசந்தனக்குழம்புபூசிக்கொண்டும் வாசனையுள்ளபூமாலை தரித்துக்கொண்டும்பாலின்நுரையையொத்தபட்டுவஸ்திரந் தரித்துக்கொண்டும்தன்கணவனை வணங்கித்துதிசெய்து-எ-று, (உஅ)

மனையின்மீதங்கிசேர்த்தி வலங்கொண்டுவணங்கியேததிப்
புனைமதிக்கண்ணியான்றன் பொலன்கழறொழுது போற்றித்
தினையெனுந்துணையுநீங்கா தன்பொடுசிந்திப்போர்கள்
வினைவிலக்கறுக்குமையா விண்ணப்பங்கேளாயென்றே

(இ-ுு) வீட்டின்மேல்நெருப்பைப்போட்டுப்பிரதக்ஷிணஞ்செய்சந்திரனையணிந்ததிருமுடியையுடையபரமசிவனதுபொன்னிறமுள்ள

திருவடிகளை வணங்கித் துதிசெய்து தினையளவும்நீங்காமல் தியானிப்பவர்கள் வினையாகிய விலங்கைத் தறித்துவிடும் ஐயனே அடியேனுடையவிண்ணப்பத்தைக்கேளென்று-எ-று. (௨௯)

இந்திரியங்களைந்து மலராகவென துகாயங்
கந்தமார்புகையிற்காட்டு மகிலாகக்கருத்துநின்ற
சுந்தரத்தீபமாகப் பிராணன் றுய்ப்பனவேயாக
வந்தநாற்கரணமுற்று மருக்கியமாகக்கொண்டே

(இ-பு.) பஞ்சேந்திரியங்கள் மலராகவும் என்னுடையசரீரமானது வாசனைதங்கிய அகிற்புகையாகவும் என்னிருதயமானது மிகுந்தசுந்தரமுள்ளதீபமாகவும் பிராணனானது நிவேதனமாகவும் அந்தக்கரணமுழுவதும் அருக்கியமாகவுங்கொண்டு-எ-று. (௩௦)

அடியனேன்சிவன் பூசாபலத்தினையடையல்வேண்டுங்
கொடியன்யானமரர்வாழ்வுங் குறிக்கிலேன்பிறவிதோறுந்
தடையறத்தோன்றினாலு மாயையைத்தணந்துவெள்ளை
விடையநின்கழற்கீழன்பு வேண்டுவனென்றுவேண்டி

(இ-பு.) அடியேன் சிவன்பூசைப்பலனை யடைய வேண்டு கொடியேனாகியநான்தேவர்கள்வாழ்வையுங் குறிக்கின்றிலேன் தடையில்லாமல் எண்பத்துநான்கு லக்ஷம் யோனிகள் தோறும்பிறந்தாலும் மாயையினைநீங்கி வெள்ளைரிஷபவாகனத்தில் ஆரோகணித்துக் கொண்டெழுந்தருளுகின்ற நின்திருவடியின்கீழ் அன்புபொருந்த விரும்புகிறேனென்று வேண்டி-எ-று. (௩௧)

செங்கயலனையகண்ணாள் செழுந்தழற்பிழம்பிதன்னுட்
பங்கயமலரிற்செல்லுந் திருவெனப்பாய்ந்துமாயாப்
பொங்கியசாம்பராகக் கண்டனன்புளகமோங்கி
யங்கையின்டலையேந்தி யீசனையருச்சித்தானே

(இ-பு.) செவ்வியசேற் கெண்டையொத்தகண்ணாள் செழுமையானதீப்பிழம்பில்தாமரைமலரிற்சொல்லுந்திருமகள்போலவிழுந்து பரிசுத்தமானசாம்பலாதக்கண்டுபுளகங் கொண்டு அந்தச்சாம்பலைத்தன்னுள்ளங்கையில்எடுத்துக்கொண்டுபரமசிவனை அருச்சித்தான்-எ-று.

இறையவன்பூசைமுற்றி யிறுதியிற்கழித்தவெல்லாம்
பிறைநுதலென்றுமேற்கும் போற்றியோலற்றைப்போது
மறைமுதல்பூசைச்சேடம் வாங்குவான்வந்துதோன்றி
நிறையுடனின்றாள்கண்டு நெடுந்தகைவினவிற்றேர்வான்

(இ-பு.) சிவபூசை இவ்வாறுநிறைவேற்றி அந்தப்பூசையின்முடிவிற்கழித்துவிட்டதையெல்லாம் அவன்மனைவிநாள்தோறும்ஏற்றுக்கொ

ள்வதுபோல அன்றையதினமும் பரமசிவனுடையபூசை கிருமாலியத்தைவாங்கிக்கொள்ளவந்து வணக்கமுடனின்றாள் அதைவேடன்கண்டுதன்மனதில் ஆலோசிக்கின்றான்-எ-று. (கக)

மனைபடுதீயில்வீழ்ந்து மாண்டதுமாய்த்தாள் வெந்த
புனிதவெண்சாமலாலும் பூசனைமுடித்தவாறுங்
கனவுகொன்னவுதான்கொல கழிந்தவள்வந்துநின்றாள்
வினையினால்வெந்தவில்லும் பண்டுபோல்விளங்கிற்றென்னே

(இ-பு) வீட்டிக்பற்றிக்கொண்டதீயில் நம்முடையமனைவிபிறந்ததும் இறந்தவள்வெந்த புனிதமானவெண்சாம்பலால் நம்பூசைசெய்துவிறைவேற்றியமுறையுஞ் சொப்பனமோ அல்லது நினைவுதானோ இறந்தவளோமுன்போலவேவந்துநிற்கின்றாள் வினையினால்வெந்தவீடுமுன்போலப்பிரகாசித்துக்கொண்டிருக்கிறது இதுஎன்னகாரணம்-எ-று

உள்ளத்தினினைவினையுந்தோறு மதிசயத்துவகைதோன்றத்
துளக்கறநின்றவந்தத் துணைவிதன்முகத்தைநோக்கி
வளர்த்தசெந்தழலில்வீழ்ந்தாய் மாய்ந்திலைவந்தவாறும்
கிளர்ந்துநிவெந்துநீறுங் கிளர்மனைதழைத்ததோடும்

(இ-ள்) மனதிலிவ்வாறுநினைக்குந்தோறும் ஆச்சரியம்அடைந்து சந்தோஷம்உண்டாக நடுக்கமில்லாமலிருக்கிற தன்மனையாள் முகத்தைப்பார்த்துப்பெண்ணேவளர்ந்த அக்கினியில்விழுந்தநீ இறவாமல் வந்தவாறும்வெந்துநீறானவீடு முன்னிலும்செழுமையாயிருக்கு முறைமையுஞ்சொ-ல்எ-று. (கஉ)

(வேறு)

என்னுமொழிந்தானது கேட்டலுமீதுசொன்னாள்
மின்னார்தழலில்வைத் தாங்கதில்வீழ்ந்ததன்றிப்
பின்னான்விளைந்தபடி யீதெனப்பேசவற்றோ
பொன்னாரமார்பநுயி னிக்கினர்போலவநதேன்

(இ-பு) என்றுசொல்லலும்அதைக்கேட்ட வேடன்மனைவியானவள்பொன்மாலையணிந்த மார்பையுடையஎன்பிராணநாயகனேவீட்டில் ஒளிநிறைந்த நெருப்பைவைத்து அதில்விழுந்தது எனக்குத்தெரியுமேயல்லாமல் பின்புவிளைந்தது இவ்வாறென்று நான்சொலலத் தக்கதோ நித்திரைநீங்கின வர்கள்போல்வந்தேன்-எ-று. (கஙு)

கனையாரழலுங்க வெரிந்துகரிந்துவீழ்ந்த
மனையாலமுழியாவளை ஞெடுவயங்கல்கண்டே

னெனேயாளுடையா யெனமங்கையிறுத்தலொடு
னினையாமகிழ்வெய் தின்னி துநிகழ்ந்தகாலே

(இ-பு.) நிறைந்த தீயான்து உண்ணக் கரிந்துபோன நம்முடைய வீடு அழியாத வளப்பத்துடன் பிரகாசித்துக் கொண்டிருப்பதைக் கண்டேன் என்னுடைய நாயகனேஎன்று தன்மனைவிசொன்னவளவில் நடந்த இந்த அதிசயத்தை மனதிலெண்ணி மகிழ்ச்சியடைந்தான் இது நடந்தகாலத்தில்-எ-று, (கஎ)

(வேறு)

கோடிசெங்கதிர்குழுமிய தெனவொளிகொழிப்ப
வாடகத்தினும்மணியி னுமமைத்ததோர்விமான
மூடறுத்துவான் முகட்டிழிதரவதிலுறையுங்
கேடில்சீர்க்கணநாதர் வந்திவையனதிளந்தார்

(இ-பு,) ஒருகோடிசூரியர்கள் ஒன்றாய்க் கூடினது போலவொளிதழைக்கப்பொன்னினாலும் ரத்தினங்களினாலும் அமைக்கப்பட்டதாகிய ஒருதேவவிமானம் ஆகாயமுகட்டைப் பிளந்துகொண்டு இழிந்துவர அதில்வீற்றிருக்கும் அழிவில்லாதசிறப்புள்ள கணநாதர்கள்வந்து இந்த வார்த்தைசொல்லுகிறார்கள்-எ-று. (கஅ)

செங்கைவார்சிலைக்கி ராதநின்றேவியினோடும்
பொங்குபேரொளிமா னத்திற்பொருக்கெனவேற்றி
யெங்களுயகனேழி ஞேடேழுலகீன்றாள்
பங்களுங்குனைக்கொடு வருகென்னவேவணித்தான்

(இ-பு.) சிவந்தகையில் வில்லேந்தும் வேடனே உன்னையும் உன் மனையாளையும் அதிகரிக்கும்பெரியவொளியுள்ள இவ்விமானத்திலேற்றிக் கொண்டுஎங்களிறைவனும்பதினான்கு உலகையும்ஈன்றருளியபார்வதி தேவியார்பாகனுமாகியபரமசிவன்தம்முடையஉலகத்துக்குவிரைவுடன் கொண்டுவரும்படி யெங்களுக்குக்கட்டளையிட்டார்-எ-று. (கக)

அண்ணலேவவிளைண்டந் தனமிக்கணத்தயிலார்
கண்ணிறைளொடும் வருகநீயென்றனர்கழறி
விண்ணினோர்புகழ்விளங் கொளிவிமானத்தினேற்றி
மண்ணினோர்தொழச் சென்றனர்மங்குலவாநெறியே

(இ-பு,) பரமசிவனுடைய கட்டளையினால் நாங்கள்வந்தோம்(ஆதலால்) வேலொத்த கண்களையுடைய உன்மனைவியுடன் வாவென்று சொல்லித் தேவர்கள் புகழும்படியான விளங்கும் ஒளியையுடையவிமானத்திலேற்றிக்கொண்டு பூலோகத்தா ரெல்லாந்தொழ ஆகாயமார்க்கம் சென்றார்கள்-எ-று, (சய)

பாயும்வெம்பரிவேள் விகளனைத்தையும்பரித்த
தூயராயினுமணுகொ ணுச்சிவதுறக்கத்தி
லாயவேடனோடரிவை யைப்புகுத்தினரன்னோர்
மாயநீங்கியபேரின்ப வாழ்வினின்மகிழ்ந்தார்

(இ-பு) நூறு அசுவமேதயாகஞ் செய்தவர்களேயானாலும் சேரக்கூடாத் சிவசுவர்க்கத்தில் அந்தவேடனையும் அவன்மனைவியையுஞ் சேர்த்தார்கள் அவ்விருவரும்மாயைநீங்கியபேரின்பவாழ்வில்மகிழ்ந்திருந்தார்கள்-எ-று. (சக)

ஆதவாலரசன்பூசனைக் குரியதையறியிற்
காதலாலுறுங்கடைப் பிடியன்றிவேறில்லை
மாதுபாகனைவழிபடற் கிதுமறைப்பொருளென்
றோதினான்றொல்லை நூலுணர்சூதனுமுரவோன்

(இ-பு) ஆகையால் சிவபூசைக் குரியதை ஆராயுமிடத்தில் அன்பினாலுண்டாகும் உறுதிப்பாடேயன்றி வேறொன்றுமில்லை பார்வதிபாகனை ஆராதிப்பதற்கு இதுதான்வேதத்திற்சொல்லும் உண்மைப்பொருளுமென்று வேதசாஸ்திர புராணங்கள் அறிந்த சூதமுனிவர்சொன்னார்-எ-று. (சக)

பதினேழாவது-வேடன்சிவபூசைகடைப்பிடித்தஅத்தியாயம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கூஎ௰௫.



உ

சிவமயம்.

பதினெட்டாவது

உமாமகேசுவரபூசைமகிமையுரைத்தஅத்தியாயம்.

காதலாலொருவர்கருதுவ்யாவுங் கருதியவண்ணமேதருவ
தோதுமாகமங்கடெரிந்தெடுத்துரைத்த துமாமகேச்சுரமெனப்பகருந்
தீதிலாவிரதமெவற்றினுமேலாந் திறத்ததொன்றுளதெனவியந்து
சூதன்மாதவத்திர்யாவருங்கேண்மினென்ரதன்வரன்முறைசொன்னான்

(இ-பு) ஆசையுடன்ஒருவர்நினைக்கும் பொருளையெல்லாம்அவர்கள்நினைத்தபடிதருவதும்சொல்லும் ஆகமங்களில்ஆராய்ந்தெடுத்துச்சொல்வதுமாகிய உமாமகேசுரவிரதமென்றுசொல்லத்தக்க பழுதி

ல்லாதவிரதங்களுக்கெல்லாம் மேலாநதன்மையுள்ளதாகவென்றிருக்கின்றதுமுனிவர்களே அந்தவிரதத்தைச்சந்தோஷத்துடன்கேளுங்களென்று அதினமுறைமைகளைச் சூதமுநிவர்சொல்லத்தொடங்கினார்-எ-று.

கனைகடலுடுத்தபுவிக்கெலாமணியாய்க் கவினபெறுமானந்தநாட்டின், மனைவியும்பொறைகூர்மைந்தரும்வாழ் வாழ்பவன்மனையறங்காக்கும், வினைவலான்வேதவிரதனென்றுளனோர் வேதியனருள்கூறுங், தனையையுண்டொருத்தியின் கனித்துவர்வாய்த்தார்க் குழற்சாரதையென்பாள்.

(இ-பு) ஒலிக்கின்றசமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்துக்கெல்லாம்ஆபரணம்போல்வதாய் அழகுபொருந்திய ஆனந்தமென்னும்தேசத்தில்மனையாளும் சாந்தகுணமுள்ளபுத்திரர்களும் வாழும்படிவாழ்கின்றவனும்இல்லறம்வழுவாமல்காக்குஞ் செய்கையில்வல்லவனுமாய்வேதவிரதனென்கிறபெயருள்ள ஒருபிராமணனிருந்தான்அவன்மிகுந்தஅன்புவைத்திருக்கும் புத்திரியாகிய இநியகோவைக்கனியொத்த செவ்வாயும்தாழ்ந்த அளகபாரமுடையவளாய்சாரதையென்னும்பெயர்பெற்ற ஒருத்தியுண்டு-எ-று. (உ)

மின்னிகர்மருங்குற்பிறைநுதற்கனிவாய் வெண்ணகைக்கருங்குழலவடான், பன்னிருபருவமடைந்துபைங்கோங்கின் பனிமுகையெனமுலைமுகிழ்த்தா, ளன்னகாலையிலத்திருநகராளு மரசர்கோனின்னுயிர்த்தோழ, னன்னெறிவழாதகருணைமால்பதும நாபனென்றுரைக்குமாமறையோன்.

(இ-பு) மின்னலையொத்தஇடையும் பிறையையொத்த நெற்றியும் கோவைக்கனிபோன்றசெவ்வாயும் வெண்ணகையும்கருமைநிறமுள்ளஅளகமுமுடைய அந்தப்பெண்ணானவள் பன்னிரண்டுவயதுள்ளவளாய்ப்பசுமையுள்ள கோங்கினரும்புபோலத் தனங்கள்உண்டாகமங்கைப்பருவம்பெறலுள் அப்போதுஅந்நகரத்தையாளுகின்றஅரசனுடையஇனியஉயிர்போன்றதோழனுகிய நல்லொழுக்கந்தவறாத கிருபைமிகுந்ததிருமாலையொத்தவனுய்ப் பதுமநாபனென்னும் பெயருள்ள ஒருபிராமணன்-எ-று. (௩)

உளமலிகாதற்கிழத்திபல்காலமுறுநல நுகர்ந்துபின்னிறப்ப, விளைமைபோயடைந்தமூப்புடனிருந்து மிருநிதிமல்கியகளிப்பாற், றவளவாணமுறுவற்றுழ்குரற்கனிவாய்க் சாரதையினநலம்வேட்டு, வளநிதிதொகுநி முலைவிலைகொடுத்து மணவினைகொடிகெனவிடுத்தான.

(இ-பு) உள்ளத்தில்மிகுந்த அன்புடையஅவன்மனைவிநெடுநாள்இன்பம்அநுபவித்துக்கொண்டிருந்துஇறந்துபோனாள்அவனுக்குஇளமை

ப்பருவம்நீங்கிக் கிழத்தன்மைவந்திருக்கவும் மிகுந்ததிரவியமிருக்கிற களிப்பினால் முல்லையரும்புபோன்றவெண்ணகையும் தாழ்ந்தகுழலும்கனிவாயுமுள்ளவளாகிய சாரதையென்பவளை விரும்பிவளப்பமபொருந்தியமிகுந்த திரவியங்களைப்பரியமாகக்கொடுத்து மணத்தொழில் பேசும்படி சிலமுதியோரை அனுப்பினான்-எ-று. (௪)

ஆங்கவர்குறுகிமொழிதலுங்கேட்ட வயிரிழைப்பொலங்கொடி தாதை, யேங்கியாவெளியமகட்கொடைநேரா தின்னுரைமறுத்தகமாயிற், றேன்குநீருலக மொருகுடைநிழற்றுஞ் செய்யகோலிறைவலியானக், கோங்களமுலையாண்மணவினைமுடிப்பன கொடியனென்றுணர்ந்தனனோர்ந்தான்.

(இ பு) அந்தமுதியோர்கள்போய்த் தாங்கள்வந்தசேதியைச்சொல்லலுமபிரகாசிக்கும் ஆபரணங்களணிந்த பொற்கொடிபோன்ற சாரதையென்பவளுடைய் தகப்பன்கேட்டு நாமிப்போதுஏழையாயிருக்கின்றோம்ஆதலால்வந்தவர்களுக்கு இனியவார்த்தைசொல்லாமல் கன்னிகையைக்கொடுக்கிறதில்லையென்று மறுத்துச்சொல்வோமேயானால்அந்தப்பிராமணன் துஷ்டன் மேலும்சமுத்திரஞ்சூழ்ந்தஇவ்வுலகத்துக்கெல்லாம்தனொருகுடை நிழலைச்செய்யும்செங்கோலுள்ளராஜனுடையகன்னிகையைப்பலாத்காரமாகவிவாகஞ்செய்துகொள்வானென்றுயோசித்துப்பெண்கொடுக்கச்சம்மதித்தான்-எ-று. (௫)

கொய்யுளைமான்றேர்ப் பரிதிவான்முகட்டிற் குறுகியநண்பகற் காலைச், செய்தவக்கிழமை யந்தணர்க்கெல்லாஞ் செழுநிதிப்புனலொடும்வழங்கி. நெய்சொரிவேள்விக் கனலிசான்றாக நிரைவளைச்செங்கரம்பற்றி, மொய்குழற்கனிவாய் முகில்முலையணங்கை முறையினின் மறையவன்வேட்டான்,

(இ-பு) கத்தரித்த கழுத்துமயிரையுடைய பச்சைக்குதிரை கட்டியதேரில்வருஞ்சூரியன் ஆகாயத்தின் உச்சியிற்சேர்ந்தமதியானகாலத்தில்செவ்வையாகிய தவத்துக்குரிய பிராமணருக்கெல்லாம்மிகுந்ததிரவியங்கள் நீருடன்தானமாகக்கொடுத்து நெய்சொரியப்படும் ஓமாக்கினிசாக்ஷியாக ஒழுங்குபட வளையலணிந்தகையைப்பற்றி மொய்த்தஅளகமும் கனிவாயும்தாமரையரும்பையொத்த தனமுமுள்ள சாரதையென்பவளைப் பதுமநாபனென்னும்பிராமணன் விவாகஞ்செய்துகொண்டான்-எ-று. (௬)

வாம்பரித்தடந்தேர்ப் பரிதிவானவன்போய் மரித்திரைக்குடகடல்குளிப்ப, வாம்பல்வாயவிழுமாலையங்காலத் தந்திவந்தனைத்தொழின்முடித்துத், தீம்புனற்றுறையின் றகன்றுவன்றிருவிற் றிரும்பனுந்தீவிட

மொழுகும், தூம்புடையெயிற்று வாளராத்தீண்டச் சோர்ந்துயிர்து றந்தனன்மறையோன்.

(இ-பு) தாவிச்செல்லும் பச்சைப்புரவிகட்டிய தேரையுடையசூரியன்போய்மறித்துவரும் அலைகளையுடையமேற்றிசைச் சமுத்திரத்தில்மற்றைய அல்லிமலர்கள்முகமலரும் அந்திப்பொழுதில்மணக்கோலமுள்ளபிராமணன் சந்தியாவந்தனத்தொழில் முடித்துக்கொண்டும துரமுள்ள நீர்த்துறையினின்றும்நீங்கி இருட்பொழுதில்தன்வீட்டுக்குவரத்திரும்பினவளவில் தீயொத்தவிஷம் ஒழுகும்படியானதுவாரத்தோடுங்கூடிய பற்களையுடைய சர்ப்பந்தீண்டுதலினால் அந்தப்பிராமணன்சோர்வுடனிறந்தான்-எ-று. (எ)

தொடிமலர்ச்செங்கைபற்றுபுமணந்தோன் சூழ்வினையுருத்தொருஞான்றும், வடிமலர்க்கோதை நன்னலம்பருகான் மாய்ந்தனனென்பதுகேளாக். கொடியவெந்துயருற் றன்னவன்கிளைஞர்குழுமியாங்கவலமுற்றற்றிக். கடன்முறைகழிப்பான் பழமறைவிதியாற்கதழெரிபடுத்தினர்மீண்டார்,

(இ-பு) மனைவியின் வளையலணிந்தசெந்தாமரைமலர்போன்றகையைப்பற்றி விவாகஞ்செய்துகொண்டவன் சூழ்ந்தவினையினால் சீறப்பட்டுச் சீவிப்பினவிப் பூவணிந்தஅளகத்தையுடைய அம்மனைவியினின்பம்ஒருநாளும் அனுபவியாமல் இறந்துபோனானென்பதைக் கேட்டுக்கொடியதாகிய துயரமடைந்துஅவன்சுற்றத்தார் அவலங்கொண்டு அழுதுஉத்தரகிரியைசெய்துமுடிக்க வேதவிதிப்படிவேகமாகப் பற்றியெரியும்தீயில்சபத்தைவைத்து வந்துவிட்டார்கள்-எ-று. (அ)

மலர்தலையுலகுபரவுசாரதையை மணம்புணர்காதலன்கல்வி
நலனறக்கணிந்தமூப்பினனாகி நாளுலந்திறத்திலினாலே,
யலர்கருங்குவளைமதர்விழிபனிப்ப வருந்துயர்பனியுழந்திலளாய்க்
கலனணியொருவிக்கைமையாய்த்தநதை கடிமனையிருந்தனளன்றே.

(இ-பு) பரந்தஇடத்தையுடைய பூலோகத்தார்துதியெய்தத்தக்ககற்புள்ளசாரதையென்பவள் தன்கணவனானவன் கல்வியின்பம் அனுபவிக்குந்தன்மைநீங்கும்மடி முதிர்ந்தமூப்பையுடையவனாய்வாழும்நாள்முடிந்துஇறந்தமையால் மலர்ந்தநீலோற்பலமலர்போன்றகண்களில்நீர்பெருகமிகுந்ததுயரம் அடையாதவளாய் மங்கிலியத்தைநீக்கிவிட்டுத்தன்பிதாவின் கிரகத்திலிருந்தாள்-எ-று. (கூ)

இன்னணந்திங்கள்சிலகழிந்திடலு மெலலையில்பருவங்கள்கடந்தோன்
முன்னோனான்மறையுமாகமநூலு முழுதுணர்சாந்தனுமரவோ

நன்னெறிவழாதவருந்தவக்கிழமைமநயித்துவனென்றுமாமுநிவன், றன்
னடிதொழுமோர்வேதியன்விடுப்பசாரதைமனையின்வந்திறுத்தான்

(இ-பு.) இவ்வாறுசிலமாதஞ்செல்லு மளவில்அளவில்லாத வருஷங்கள்நீங்கினவரும் பழமையாகியநான்கு வேதங்களும-ஆகமங்களும்-சாஸ்திரங்களுமாகிய இவைகள்முழுவதையுந்தேர்ந்து சாந்த குணமுள்ளவருமாகிய நல்லொழுக்கத்தில் மாறுபாடாததவத்திற்குரிய நயித்துருவென்னும்முனிவர் தமதுபாதத்தைத்தொழும்படியானவொருரிஷியையனுப்பஅவர் சாரதைவீட்டிற்கு வந்தார்-எ-று (௪)

வருதலும்வடன்றந்தைதாய்கிளைஞர் மற்றொருவினையம்வேட்டவணின்,றொருசிறையகலத்தமியளாய்மனையி நுறைபவணங்குலத்தேவ, னரிதின்வந்தடைந்தா னென்மகிழ்ந்தெதிர்கொணடடிமலரிறைஞ்சிநின்றேத்திக், கரதலங்கூப்பியான்செயும்பணியென் கடவுளேயருள்கெனப்பின்னும்.

(இ-பு.) அந்தமுனிவர்வந்தபோது அவள்தகப்பனுந்தாயுஞ்சுற்றத்தாரும் ஏதோவொருகாரியத்தைக்குறித்துத் தங்கள்வீட்டினின்றும் புறப்பட்டுவேறிடத்துக்குப்போயிருப்பதினால் தனியாயிருக்கும்அந்தச்சாரதையானவள்கண்டு நம்முடையகுலதெய்வமே முனிவர்வடிவங்கொண்டு எழுந்தருளியதென்று மகிழ்ச்சியடைந்து எதிர்கொண்டு அவர்பாதமலரைவணங்கித் துதிசெய்து கைகளைகுவித்துக்கொண்டு நின்று சுவாமிகளே அடியேன்செய்யும்பணியாதோ கட்டளையிடவேண்டுமென்றுசொல்லிப்பின்னும்-எ-று. (௫௧)

வெறிகமழ்கமலச்சேவடி விளக்கிவியரெலாம்பலர்ந்திடவீசி
நறுமலர்வாசப்புழுகுநெய்தேய்த்து நனிபனிநீர்சொரிந்தாற்றிச்
சிறுமதிக்கண்ணியண்ணல்பூசனையின் செவ்வியிற்றவிசினிலிருத்தி
முறிமிடைபடலைச்செழுமலர்சூட்டி முருகுலாஞ்சந்தமும்புனைந்தே

(இ-பு,) வாசனைகமழுஞ்செந்தாமரை மலர்போன்றபாதங்களை நீரினலஅலம்பி மேனியிலுண்டாயிருக்கும் வியர்வையெல்லாம் நீங்கவிசறிநல்லமலரும் வாசனையுள்ள்புழுகும் சேர்ந்தஎண்ணெய்தேய்த்து, மிகுதியாகப்பனிநீர்சொரிந்து ஸ்நானஞ்செயவித்து இளந்திங்களை மாலைபோல்அணிந்திருக்கும்பரமசிவனை ஆராதிக்குமுறைபோல் ஆசனத்தில்வீற்றிருக்கச்செய்து துளிர்களுஞ்சேர்ந்தமாலைசூட்டி வாசனைமிகுந்தசந்தனமும்பூசி-எ-று. புழுகு என்பது புநகு, (௫௨)

காரகில்கமழுந்தூபத்தட்டேந்திக் காதலிற்பூசனைபுரியா
வாரவமோடினியவறுசுவையடிசி லருத்தினளருந்தின்றுதி

வார்சடைமுனிவன்பெருகியவுவகை மலிகொளுமனங்களிசிறப்பத்
தார்மணங்கமழாப்புரிகுழற்கின்பந் தழைத்திடவாசிகள்சொன்னான்.

(இ-ள்.) கருமைநிறமுள்ள அகில்கட்டைமுதலிய பொருள்சேர்ந்ததூபதீபாராதனைசெய்து அன்புடன் இனிய அறுசுவையுள்ள அன்னமும்புசிக்கும்படி பிரார்த்தித்தாள நீண்டசடையையுடையஅந்தமுனிவர் அன்னமும்புசித்து (அவள்செய்யும்பத்தியினால்) பெருகாநின்றசந்தோஷம் நிறையுந்தோறும்நிறையுந்தோறும் மனதில்களிப்பு மேலிட்டு பூமாலையின்வாசனைகமழாத அளகத்தையுடையசாரதையென்பவளுக்கு இன்பம்பெருகத்தக்கதாக ஆசீர்வசனஞ்சொன்னார்-எ-று. ()

பண்கனிகின்சொற்றெரிவையேயமரர் பதியினர்செல்வமேபோலக்
கொண்கனுநீயுமளப்பருங்காலங் கோதிலாநன்னலநுகர்ந்து
திண்கட லுலகிற்பலகலைதேருஞ் சிறுவனைப்பயந்துதிசைகெல்லாம்
வன்புகழ்நிறைந்தோர்தெய்வதங்காப்பவாழ்திரென்றகமகிழ்ந்துரைத்தான்.

(இ-ள்.) இசைபோலமுதிர்ந்தமதுரமானவசனமுள்ளமாதே தேவர்களசெல்வம்போல உன்கணவனுநீயும் அனேககாலவரையில் குறைவில்லாதஇன்பம் அனுபவித்துத்தெளிந்த கடல்சூழ்ந்தஇவ்வுலகில் பலசாஸ்திரங்களும் ஆராயத்தக்கபுத்திரனைபெற்று அஷ்டதிக்குகளிலும் புகழ்நிறைந்துஒப்பற்றகடவுள் ரக்ஷிக்கத்தக்கதாகவாழக் கடவீர்களென்று மனமகிழ்ந்துசொன்னார்-எ-று. (௰௪)

முடவரலதுகேட்டதிசயித்தந்தோ மறைவலாய்நினதுமெய்வாங்கள்
கடிமனைக்கலனித்தெவ்வமொழிருக்குங் கைம்மையேற்கனவைதாரா
தடுதொழின்ஞமலிக்குமாரதமுத மருந்துதல்போலவுமொழிந்து
படுபசுங்கூழிற்பொழிமழைபோனறும பயனிலவாயிறந்தனவே

(இ-ள்.) சாரதையென்பவள் அந்தமுனிவர்சொன்னதைக்கேட்டு ஆச்சரியப்பட்டுஐயோ முனிவரேஉம்முடைய உண்மையுள்ளவரங்கள் மங்கிலியமிழந்து துன்பத்துடனிருக்கும் கைம்பெண்ணாகியஎனக்கு இன்பங்களைத்தராமல்கொலைத் தொழிலையுடையநாய்க்குக்கிடைப்பதற்கரியதேவாமிர்தத்தை உண்பதுபோலவும உலர்ந்துபட்டுப்போன பயிரில்பொழிகின்ற மழைபோலவும் பிரயோசனமில்லாமல் வீணாகிவிட்டனகளே-எ-று. (௰௫)

கோட்டமில்குணத்தாய்தமியனேன்கணவனி கோதிலாவிளமைவீ ணிறப்ப, வீட்டுதீவினையின்பயனுழக்கின்றேனினியுனதாசியின்பயனை வேட்டவைபெறுதற்கெந்தவாறரியேன் வினையினின்னடிச்சியென்றுரைப்பக, கேட்டமாதவத்தோன்வருந்தலையிதுநீ கேட்டியென்றின்னணம்புகன்றான்.

(இ-பு.) மாறுபடுதலில்லாத நற்குணமுள்ள முனிவரே தமியேனாகிய யான் களங்கமென்பதில்லாத இளமைப்பருவம் வீணாய்க்கழிந்துவிடப் பூர்வசென்மத்தில் தேடிக்கொண்ட வினைப்பயனை அனுபவிக்கிறேன் இனியுமுடைய ஆசீர்வாதப்பயனாகிய இன்பங்களை விரும்பிப்பெறுவதற்கு எவ்வாறுரியேன் தேவரீருடைய அடிச்சியென்று சொன்னாள் அதைக்கேட்ட முனிவர் சாரதையைப்பார்த்து நீவருந்தாதே நான் சொல்லுகிறவார்த்தையைகேளென்று இந்தவார்த்தைகள் சொல்லுகிறார்-எ-று ()

கருவிழிமற்றேனளித்த நல்வார்த்தை கயற்கணுயமெய்ம்மையாக்குவனென்- னுரைமனக்கோடியுமாமகேச்சரமென் றொருதவவிரதமொன்றதனைப், புரிவையேலுள்ளங்கருதியவெல்லாய் பொருளும்வந்துறுமெனப்புகலச், சுரிகுழலணங்குகேட்டதுபுரியுந் தோன்முறையுரைக்கச்சொன்னான்.

(இ-பு.) சேற்கண்டையையொத்தகண்களையுடையவளே நேத்திரந்தெரியாதயான் சொன்ன இந்தவார்த்தை உண்மையாகும்படி செய்கிறேன் என்வார்த்தையை உன்மனதில் உறுதியாகநம்பு என்னென்றால் உமாமகேச்சுரமென்பதாக ஒருதவவிரதமுண்டு நீ அந்தவிரதத்தை அனுஷ்டித்தால் மனதில்நினைத்தபொருளெல்லாம்வந்து சித்திக்குமென்றுசொல்ல அதைக்கேட்டசாரதை அந்தவிரதம அனுஷ்டிக்கும்படியையான முறைமையைச்சொல்லுமென்றுசொன்னாள்-எ-று, (௰எ)

வளமலிவேனிற்சித்திரையணிகூர் மார்கழியிவற்றிலோர்மதியினிமதிக்கலையால்வளர்முதற்பக்கத் தியைந்தநற்றினத்திணிவ்விரதமுளமகிழ்யனபாற்றொடங்கிவெட்டிரே ழுறுதிதிபூரணையுவாவெனறளவுசேர்திதியோர்நான்கினுந்தெண்ணீராடியோர்மண்டபமமைத்தே

(இ-பு.) வளப்பங்கள்நிறைந் வசந்தகாலமாகிய சித்திரைமாதமணிமிகுந்தமார்கழிமாதம் என்னுமிந்தஇரண்டுக்குள் ஓர்மாதத்தில் இளந்திங்கட்கலையினால வளருகின்றபூர்வபக்ஷத்தில் பொருந்திய நல்லநாளில்இவ்விரதத்தை அன்புடன் ஆரம்பித்து அஷ்டமிசதுர்த்தசிபர்வம் என்றுசொல்லப்படுகிறநான்கு திதியிலும்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்துஒருமண்டபம்அமைத்து-எ-று, (௰௮)

மஞ்சரிநறுந்தண்கோதைசுற்றி வயங்குபட்டாடைகம்பலமாய் விஞ்சுபேரொளியநவமணிக்கோவை விதானஞ்செய்கனக மண்டபத்தில், செஞ்சுடர்ப்பசுமபோனெட்டறாத்தகளத் திருவுருவமைந்தநாதனையு, மஞ்சிறைக்களிவண் டிமிர்பொழில்மையத் தணங்கையுந்தாபித்துச்செய்தே.

•(இ-பு.) நுங்கொத்துகளாலாகியவாசனையுங்குளிர்ச்சியுமுள்ளமாலைகளைத்தொங்கக்கட்டி விளங்குகின்றபட்டாடைகம்பலமாய் மிகுந்த ஓ

ளியுள்ளதுகளான நவரத்தினமாலைகளுடன் மேல்விதானங் கட்டிய பொன்மயமானமண்டபத்தில் ஒளியுள்ளதாய்மாற்றுயர்ந்தபசும்பொன்னினால் திருவுருவம் அமைத்தபாசிலத்தையும் அழகியசிற்குள்ளதாய்க்கனிப்பிணையுடைய வண்டுகள்இசைபாடிக்கொண்டிருக்கும்படியான சோலைசூழ்ந்தஇமைய மலையினிடத்தில் திருவவதாரஞ்செய்தபார்வதிதேவியாரையும்ஸ்தாபிதஞ்செய்து-எ-று- (௰௧)

சதுமறைப்புகழும்பஞ்சகவ்வியத்தாற் றகவோடுப்புனிதமாக்கியபின்
புதுமலர்த்தேனுங்கன்னலுமிரதம்பொழியுமுக்கனியொடுங்கலந்து
விதிமுறைச்சாத்தியஞ்செழுத்தாகி விளங்குமந்திரத்தினேடீசன்
சுதிதருமேகாதசவுருத்திரத்தாற் கடிகமழ்பூம்புனலாட்டி

(இ-பு,) நான்குவேதங்களாலும் புகழத்தக்க பஞ்சகவ்வியத்தால் தகுதியுடன்பிமபசுத்தி செய்தபின் புதுமலர்த்தேனும் கருப்பஞ்சாறும் முப்பழச்சாறுங்கலந்து விதிப்படி சாத்திப் பஞ்சாக்ஷரஞ்சொல்லி அம்மந்திரத்துடன் சிவபெருமான் பதவியைத்தரத்தக்க ஏகாதசஉருத்திர மந்திரத்தினால் வாசனைகமழும் திருமஞ்சனநீர் அபிஷேகமசெய்து-எ-று. (௨௰)

விரிகதிர்ப்பசும்பொற்பீடமேல்வைத்துவேறொருதவிசினிற்பொருந்தி
யருமறையாதிமந்திர மோதியங்குலிநாசியில்மையா
வொருவழியுள்ளநிறுவியஞ்சலி செய்துறுபவத்தீவினைதொலைய
விருமைநற்பயனுஞ்செல்வமும்வீடுமெமக்கருள்புரிகவென்றுணர்வால்

(இ-பு-) பாந்தஒளியுள்ள பொன்னினாற்செய்யப்பட்டஆசனத்தில் எழுந்தருளப்பண்ணிதான் வேறொருஆசனத்திலிருந்துகொண்டுஅரிய வேதத்துக்குமுதலாகியபிரணவமந்திரஞ் சொலவிவிரலைநாசியினிடத்துவைத்துமனதைஒருவழியில்நிறுத்தி வந்தனைசெய்துமிகுந்தபிறவித்துயரந்தீரும்படி இம்மைமறுமையென்னும் இகபரசவுக்கியமுமோக்ஷமும்எமக்குக்கிருபைசெய்யவேண்டுமென்றுஞானத்தினால்-எ-று. ()

குளிர்கலைகெழுமியளவில்வெண்டிங்கள்குழமிவீற்றிருந்தனவெண்ணீ
றொளிர்திருமேனியினிலவெறிப்ப வுவர்படுதடங்கடற்றோன்றி
வளரிளம்பரிதிகோடியோர்வடிவாய் வாளொளிபரப்புவதேய்ப்ப
வளிமுரல்கடுக்கைபுனைசடாமகுடத் தனுசுடர்முதுவெயில்கொழிப்ப

(இ-பு,) குளிர்ச்சிதங்கியகலைகளைப்பொருந்தியஅளவில்லாசந்திரர்கள்கூட்டமாய்வீற்றிருப்பதுக்கொப்பாகவெண்மைநிறமுள்ள விபூதியாநுப்பிரகாசியாநின்ற திருமேனியினிடத்துநிலாவொளியை வீசவும்உப்புள்ளபெரியசமுத்திரத்தில்உதயமாகிவளருகின்றகோடியிளஞ்சூரியர்கள்ஒருவடிவமாகியிருந்த பிரகாசத்தைப்பரப்புவதையொ

ப்பாக வண்டுகளிசைபாடிக்கொண்டிருக்கும்படியான கொன்றைமாலையணிந்த சடாமகுடத்து அழகிய பிரகாசமானது முதிர்ந்தவெயிலைப்பரப்பவும்-எ-று (௨௨)

செங்கதிர்விரிக்குமுடிமிசையொருபாற் சிறுமதிக்கலைநிலாத்தவிழக், கங்கையம்பெயரா றெறிதிரையொருபாற் சடைக்கையஞ்செழுந்துணர்கொழிப்பக், குங்குமக்குவடுபொருவுதிண்புயத்தூக கூரெயிற்றரவணிமிளிர, வங்கைகளபய வரதமோடிளமா னணிதிகழ்மழுப்படைதழைய.

(இ-பு) செம்மைநிறமுள்ள ஒளியைவிரிக்கா நின்ற திருமுடியின் ஒருபுரத்தில் இளம்பிறையின்பிரகாசமானதுவிரியவும் ஒருபுறத்தில்கங்கையென்னும் பெயருள்ளநதி வீசுகின்றஅலைகள் செழுமையானகொன்றைப்பூங்கொத்துகளைக்கொழிக்கவும் குங்குமமலையையொத்ததிண்ணியபுயங்களில் கூர்மையானபற்களையுடைய சர்ப்பாபரணங்கள்பிரகாசிக்கவும் அழகியதிருக்கரங்கள் நான்கில்ஒன்று அபயாஸ்தமும்ஒன்று வரதாஸ்தமும் மற்றையிரண்டில் மானும்அழகுடன் பிரகாசிக்கிற மழுப்படையும் விளங்கவும்-எ-று (௨௩)

அடுகொலைமதனனெரிபடச்சிவந்த வழல்விழிதிருநுதன்முகிழ்ப்பத், தொடுகடற்றிரைவாய்ப் படுவிடமிடற்றி சுடரெறித் திருணிறங்கொழிப்பக், கொடுவரியதளினுடைபிணிவிசித்த கோளராமருங்குசிற்றுழ, வுடல்சினவுருமிற்பிளிறுமாவியானை யுரிவைபொன்மேனியைப்போர்ப்ப.

(இ-பு,) காமுகரை வருத்துகின்ற மன்மதன் எரிந்துபோம்படி சிவந்த அக்கினிநேத்திரமானது திருநெற்றியில் முகிழ்க்கவெண்ணாகவிருக்கவும்வளைந்த அலைகடலிலேஉண்டான விஷமானது திருக்கண்டத்தில்ஒளிவிட்டுக்கொண்டு கருநிறம்பொழியவும் புலித்தோலாடைபிணிப்புறக்கச்சாகக்கட்டிய வலியுள்ளசர்ப்பமானது திருஅரையில் பொருந்தவும்கோபமேயுருவங்கொண்டதுபோன்று இடிபோல்ஆர்வாரிக்கும பெரியயானைத்தோற் போர்வையானது பொன்னிறமுள்ள திருமேனியில் பொாக்கப்பட்டிருக்கவும்-எ-று. (௨௪)

தினகரனொளியில் விஞ்சாளிபரப்புஞ் செஞ்சுடர்ப்பருமணிமிமைக்குங் கனகமாமடங்கற்றவிசின்வீற்றிருக்குங்கருணையங்கடலை மெய்யடியார் நினைதொறுமின்பந்தருஞ்செழுந்தேனை நிரைமலர்க்கற்பகக்கனியை யனகனையாதித்தனிப்பெருஞ்சுடரை யமலனைநினைந்துபினன்பால்

(இ-பு,) சூரியனுடைய ஒளியினும்அதிகமான ஒளியைப்பரப் புகின்றசெஞ்சுடரையுடையபெரியரத்தினங்கள்பிரகாசியாநின்றபொன்மயமானசிங்காசனத்தில் வீற்றிருக்கும்அழகியகிருபாசமுத்திரத்தை.

உண்மையான அடியார்கள் சிந்திக்குந்தோறு இன்பம் அருளும் செழுந்தேனை மலர்நிறைந்த கற்பகவிருக்ஷக்கனியை விமலனை ஒப்பற்ற ஆதியாகிய பெரியசோதியை நிருமலனைமனதில் தியானித்துப்பின்பு அன்பினால்-எ-று, (௧௫)

வளைகடற்றிரைவாயிருள் தீரத்துரந்து வருபதினாயிரம்பரிதிக்
கிளையொருவடிவுகொண்டெனச்சோதி கிளர்திருமேனியின்றொளிர
விளையளாயபயவரதமோடன்ப ரேத்துபாசாங்குசமேந்தித்
தளையவிழ்முளரிச்செங்கைநான்கிலங்கத்தாழ்குழல்புயலைவீறழிப்ப

(இ-பு,) இருள்நீங்கும்படி துரத்திப்பூமியைச்சூழ்ந்த அலைகளையுடையசமுத்திரத்தினிடத்தில் உதயமாய்வருகின்ற பதினாயிரம் சூரியக்கூட்டம் ஒருவடிவங்கொண்டது போலச்சோதிவிளங்குந் திருமேனிபிரகாசிக்கவும் பாலையாய் அபயவரதமுடன் அன்பர்கள் துதிசெய்கின்றபாசாங்குச மேந்திய முறுக்குகள் விரியுந்தாமரைமலர்போன்ற நான்குதிருக்கரங்களும் பிரகாசிக்கவும் தாழ்ந்தஅளகபாரம்மேகத்தின்பெருமையை அழிக்கவும-எ-று, (௧௬)

துண்டவெண்பிறையுமதியமுமபோலச் சோதிவாணுதலொடுவதன
மண்டலங்கவினமல்லிகைமாலை வார்குழற்சூழியந்தழைப்பத்
தண்டளிர்ப்பிண்டிபுன்னை சண்பகம்பூந்தாரிருசெவிப்புறந்தாழக்
குண்டலமலம்பிப்பசுங்கழைத்தோளிற்குருமணியிளவெயில்கொழிப்ப

(இ-பு.) துண்டமாகியவெண்பிறைபோல்திருநெற்றியும்பூரணசந்திரன்போலத்திருமுகமண்டலமும் அழகைச்செய்யவும்மல்லிகைப்பூமாலையணிந்தஅளகத்தில் சூழியக்கொண்டைவிளங்கவும் குளிர்ச்சிபொருந்திய துளிர்களையுடைய அசோகுபுன்னைசண்பகம்இவற்றின்மலர்களால்தொடுக்கப்பட்டமாலைகள்இரண்டுகாதுகளின்புறத்தில்தொங்கவும்ரத்தினகுண்டலங்கள் பொருந்திஅசையும்பச்சைமூங்கிலையொத்ததோளில்நிறந்தங்கியமாணிக்கம் இளவெயிலைப்பரப்பவும்-எ-று()

அஞ்சுடரெறிக்குமணி செய்பொன்னூர் மலர்முலையாகத்துமிளிரச், செஞ்சுடர்விரிக்கும்பொலந்தொடிபசிய செழுங்கழைத்தோளினிலவப், வஞ்சிநுண்மருங்குல்கவினியகோவை வாமமேகலையொளிதழைப்பப், பஞ்சின்மெல்லடியிற்பருமணியிமைக்கும் பரிபுரஞ்சேயொளிபரப்ப,

(இ-பு.) அழகியபிரகாசத்தை வீசுகின்றமணிகள் பதித்தபொன்மாலைகள்அடிபரந்த தனமுள்ளமார்பில் விளங்கவும்ஒளியைவிரிக்கும் பொன்னாலாகியசெழுமை யுள்ளரத்தினங்கள் பதித்ததோளணி பச்சைமூங்கிலையொத்ததோள்களில் விளங்கவும் பூங்கொடிபோன்ற நு

ண்ணியஇடையில் அழகியமணிவடமாகிய மேகலாபரணத்தின்ஒளிததைழயவும்செம்பஞ்சினுமெல்லியவாகிய திருவடிகளில் பெரியரத்தினங்கள் பதித்தநூபுரங்கள்செவ்வியஒளியைப்பரப்பவும்-எ-று. (௨௮)

எரிமணிக்கலாபமிலங்குபட்டாடை யெழில்பொபுனைந்துசேஞ்
சாந்தும்,விரைமலர்ச்செய்யதொடையலுமணிந்துமின்னெனப்பொலி
ந்தபூங்கொம்பை, யரிமதர்மழைக்கட்கருணைநோக்கடியார்க் கருள்
செயுமணங்கையாமனையை, வரையறசளித்தபச்சைமாமணியைவன
முலையமலையைநினைந்தே.

(இ-பு.) தீயிறமுள்ள மாணிக்கங்கள்சேர்ந்த அரைப் பட்டிகையைமேலேசேர்த்த பட்டாடையை அழகுபொருந்தத்தரித்துச் செஞ்சந்தனம்வாசனை தங்கியபூமாலையுமணிந்து மின்னலைப்போல விளங்கும்பூங்கொம்பை செவ்வரிபரந்தகளிப்புற்ற மேகம்போற் கருமையுள்ள திருநேத்திரங்களினால் கிருபைநோக்கம் அடியார்க்கருளுந்தேவுமாதையாமனையை மலையரையன்பெற்ற மரகதமணியைஅழகிய தனங்களையுடைய அமலையைநினைந்து-எ-று. (௨௯)

உளக்கமலத்தினின்னணந்தியானித் துவகைகூர்ந்தகமகிழ்சிறந்து
களித்தபின்பசும்பொன்விம்பமேலன்பு கனியவாவாகனம்புரியா
வளித்திடுமுறையாலருக்கியமுதலவளித்துநன்மணங்கொள்சாந்தணிந்
துளித்திடுந்தேறல்வழிதொடைசூட்டித்துணரினலருச்சனைபுரிந்தே[து

(இ-பு.) இருதயதாமரையில் இவ்வாறுதியானித்துச் சந்தோஷமிகுந்து மனமகிழ்ச்சிகொண்டு களிப்புற்றபின் பசும்பொன்னாலாகிய விம்பத்தினிடத்தில் அன்புமுதிர ஆவாகனஞ்செய்து கொடுக்கா நின்றமுறைமைப்படி அருக்கியமுதலானதுகள்கொடுத்து நல்லவாசனையுள்ளசந்தனம் அணிந்துதேன் துளிக்கும் பெருகின்றபூமாலைசாத்தி மலர்களால் அருச்சனையுஞ்செய்து-எ-று. (௩௰)

முகையிளமுல்லையனையபாலடிசின் முதலவாமுணவினிதளியா
வகமகிழ்வெய்தக்கனலிவாய்நாற்றெட் டாகுதிநறுநெய்யாற்புரிந்து
புகைகமழ்தூபதீபத்தட்டேந்திப் பொருவனீராஞ்சன்முதவி [தே
நகைமதிக்கண்ணிபண்ணவோடிமையை நணியுறுத்தியானஞ்செய்

(இ-பு) முல்லையரும்பினையொத்தபாலன்னமுதலாகியதுகளை இனிதாகநிவேதனஞ்செய்துமனமகிழ்ச்சியடைய ஓமாக்கினியினிடத்தில் நல்லநெய்யினால் நாற்பத்தெட்டாகுதிசெய்துவாசனைப்புகைபரிமளிக்கும் தூபத்தட்டும் தீபத்தட்டுமேந்தி ஒப்பில்லாதநீராஞ்சனஞ்செய்துபிரகாசிக்குசசந்திரனை மாலைபோலஅணிந்திருக்குமபரமசிவனையும்பார்வதிதேவியாரையும் அன்புடன் உத்தியானஞ்செய்து-எ-று. (௩௧)

மறையவனொருவன்மனைவியோடிங்கு வருகவென்றழைத்தவர்
தம்மைப் பிறையணிவேணியண்ணலோடுமையப் பெண்ணமுதாக
வுட்கருதி, நறைமலர்தூவியறுசுவையடிசி லல்கிவெங்கதிர்படுகாலை
குறையறுபூசைமுடித்தநல்வேள்விக் கோதிலாசசேடமாங்கயின்றே.

(இ-பு.) ஒருபிராமணனை அவன்மனைவியுடன் வரவழைத்து அவர்களைப்பிறையணிந்த சடையையுடையபரமசிவனும்பார்வதியுமாகப்பாவனைசெய்துவாசனையுள்ளமலர்களால் அருச்சித்தும் அறுசுவையுள்ள அன்னம் அளித்தும் சூரியாஸ்தமனமாகும்போது குறைவில்லாதபூசையைநிறைவேற்றிக்குற்றமில்லாதயாகசேஷத்தைப்புசித்து-எ-று, ().

வருமதிதோறும்பக்கமோரிரண்டில் வான்மருகற்றிதிநான்கி லருமறையேத்துமாகமவிதியா லன்பொடுபூசனையியற்றிப், பருவமொன்றிறந்தபின்னர்நாண்மதியும் பைந்துணர்க்கொன்றையுமிலைந்தவொருதனிமுதலோடிமயமயிலீன்றெடுத்த வுமையையுட்களிகொளநினைந்தே,

(இ-பு.) மாதந்தோறும்வருகிற இரண்டுபக்ஷத்திலும் சிறந்ததாகிய நல்லதிதிகள்நான்கிலும் அரியவேதாகமவிதிப்படி அன்புடன்பூசைசெய்துஒருவருஷஞ்சென்றபின்பு இளம்பிறையுங் கொன்றைமாலையுமணிந்தஒப்பற்றமுதலாகியபரமசிவனையும் மலையரையன்தவத்தினாற்பெற்றபார்வதிதேவியாரையும்இருதயத்தில்தியானித்து-எ-று, (௧௩)

தூநெறிகொடியருத்திரசமக நூலன்றெடுத்தோதிவண்டிமிர்பூந் தேறலின்பாலொடிளங்கின்றூப்புடைக்காயத்தெண்புனற்றயிரொடுவாச நானநீராட்டி நறுஞ்சாந்தணிந்து நாண்மலர்ச்செழுந்தொடைசாத்திப் போனகம்பாலித்தேத்தெடுத்திறைஞ்சிப்பூசனைவான்முறைமுடித்தே,

(இ-பு.) வேதாகம விதிப்படி ருத்திரமாகிய மந்திரஞ்சொல்லி வண்டுகளின்சொல் பாடிக்கொண்டிருக்கும் நல்லதேன்மதுரமுள்ளபால் இளநீர்தயிர் வாசனையுள்ள கஸ்தூரிகலந்தநீர் இவைகளால் அபிஷேகஞ்செய்து நல்லசந்தனம் அணிந்துபூமாலைசாத்தி அன்னமநிவேதித்து ஆகமப்படி துதிசெய்து சாஷ்டாங்கமாகப்பணிந்துஇவ்வாறு பூசையைமுடித்து-எ-று, (௧௪)

தூசொடுபைம்பொன்விம்பமுமிலகுஞ்சுடர்மணிக்கும்பமுமகிழ்ந்து
தேசிகற்கருளியந்தணர்க்கெல்லாந் தீஞ்சுவைப்போனகம்வழங்கிக்
காசொடுகனகம்வேண்டுவநல்கிக் காதலாற்றமருடனயின்று
மாசறுவிரதமுடிப்பதாகத்தின் வான்முறைமதிநுதலணங்கே

(இ-பு) ஆடையாபரணங்களும்பிம்பமும்சோதியையுடையரத்நகும்பமும் மகிழ்ச்சியுடன்ஆசாரியருக்குக்கொடுத்துப்பிராமணச

ந்தர்ப்பணையுஞ்செய்து ரத்தினங்கள்சுவர்ணங்கள் இன்னமும்வேண்டி ய பொருள்களுங்கொடுத்து ஆசையுடன்பந்துகளைவைத்துக் கொண்டு போசனஞ்செய்து இவ்வாறுகுற்றமற்ற விரதமுடிப்பது ஆகமவிதியாம்பிறைபோன்ற நெற்றியையுடையமாதே-எ-று. (௫௫)

இயாவரேயெனினுமிவ்விரதத்தை யிந்தவாறியற்றினரவர்த
மேழெழுமுறையுற்றமரொலாந்தெய்வ மூருகுலாங்கற்பகநாட்டின்
மேவரச்சேர்த்தி யெல்லையில்காலம் விழைந்தநற்போகங்களுகர்ந்து
பூவுலயத்தினி னிதுவாழ்ந்ததன்பின் பொருவறுசிவபதமடைவார்

(இ-ப,) எவர்களேயானாலும்இந்த உமாமகேசுவிரதத்தைமேற்சொல்லியமுறைமைப்படிசெய்கின்றவர்கள் தங்களுடைய இருபத்தோருதலைமுறையாகியசுற்றத்தாரையெல்லாம் வாசனைவீசுகின்றகற்பகச்சோலையுள்ளதேவலோகத்தில் போகும்படிசேர்த்து அளவில்லாதஇன்பம்அனுபவித்துக் கொண்டிருந்து அதற்குமேல் ஒப்பற்றசிவபதம் பெறுவார்கள் எ-று,ஏழுதலைமுறைவரையில்ஞாதிகள் அதற்குமேற்பட்டஏழுதலைமுறைவரையில் தாயிண்டர்கள் அதற்குமேற்பட்ட ஏழுதலைமுறைவரையில்சமானோதகர்கள்-இவ்வாறுமூவேழு இருபத்தோறுதலைமுறையெனச் சொல்லப்படுகின்றது, (௫௬)

ஆதலாலணங்கே நீயுமிவ்விரதமகந்தெளித்தியற்றுதியென்றுங்
காதலால்விழைந்த பொருளெலாநினக்குக்கடிதினிலடையுமென்றமலர்
மேனுவாசகங்கேட்டன்னது தெரியுளமகிழ்காலையி லவடன்
றுகையுந்தாயுந்தமருமவந்தீண்டித் தவமுனிதாளினைதொழுதார்.

(இ-பு,) ஆகையினாலே பெண்ணேநீயும்இந்தவிரதத்தை மனதில்சந்தேகமில்லாமல் நாள்தோறும் அனுஷ்டித்தால் ஆசையுடன் விரும்பியபொருள்களெல்லாம உனக்கு விரைவில்கைகூடு மென்று அம்முனிவர் சொல்லக் கேட்டு அத்தன்மையுள்ள விரதத்தை அனுஷ்டிக்கவேண்டுமென்று, தன்மனதில் நிச்சயித்துக் கொண்டாள் அப்போது அவள் தகப்பனும் தாயும் சுற்றத்தாரும் வந்துஅவர்பாதத்தில் வணங்கினார்கள்-எ-று, (௫௭)

தொழுதவர்நின்று நனிபணிவிழ்ந்த துணர்நறும்போது கடுவி, வழிபடுமுறையா லருச்சனைபுரிந்து மாதவனடைந்தஞானநெறிரகொண் டெழிலவெறுமனங்கு புரிபணிவிடையுமிருந்தவனீந்தமெய்வாறு,முழுதுமாங்குரைப்பக் கேட்டகமகிழ்ந்து முனிவனைநோக்கியீதுரைத்தார்,

•(இ-பு.) அவ்வாறுவணங்கிநின்று அரும்புகளின்முறுக்குகள்விரிந்தகொத்தாகியமலரால்ஆராதனையெய்யுமுன்றமைப்படி அருச்சித்து

ச்செளங்சரியமுள்ள தங்கள்பெண்ணானவன் அம்முனிவர்வந்தநாளில் எதிர்கொண்டுசெய்தபணிவிடையும் அவர்கொடுத்தருளிய உண்மையான வரமுமவழுமாமல் சொல்லக்கேட்டு மனமகிழ்ந்துமுனிவரைப் பார்த்து இவ்வார்த்தைசொல்லுகின்றார்கள்-எ-று, (௯௮)

எத்தவஞ்செய்தே மித்தலையடிதவெய்தாதமகெங்களுயகனே
யத்தனேயின்று லடியமின் றுய்ந்தே மணங்களுள்கைமைநோய்தீரப்
பத்திநேடிரண்டு திங்களுமிந்தப் பதியிடையிருந்துநீபணித்த
மெய்த்தவவிரதமியற்றுவித்தேகல் வேண்டுமென்றடிதொழுதிரந்தார்,

(இ-ள்,) எங்கள் இறையவனே அய்யனேசுவாமிகள் இவ்விடத்துக்குஎழுந்தருளும்படி என்னதவஞ்செய்தோமோ தேவரீரால அடியேங்களெல்லாமுகடேறினோம எங்கள்பெண்ணுக்குநேரிட்ட கைமைத்தன்மையாகிய பிணிதீர்க்குமபடி யிரண்டுமாதமும் இந்தப்பதியிலிருந்துதேவரீர் கட்டளையிட்ட உண்மையான தவவிரதத்தை ஆனுஷ்டிப்பித்து அதன்பின்பு போகவேண்டுமென்று அவர்பாதத்தில்வணங்கி யிரந்து கேட்டுக்கொண்டார்கள்-எ-று. (௯௯)

அன்னகேபுரிவென் றுபரெப்ரிவிரெனறவவொருசாலைசென்றடைந்து
பொன்னவிர்கடுக்கைக மேனிவானைவன்றன் பூசனைபுரிந்தனனிருப்பத்
துணிகரில்லாச் சாரதைதானுந் தவமுனியாகமவிதியாற்
சொனவா நிந்த விறுயர்விரதந தொடங்கியாங்கியற்றினளன்றே

(இ-ள்.) அப்படியேசெய்கிறேனென்றுங்கள் துயரம் நீங்கியிருங்களென்றுசொல்லி அவ்வொருபன்னசாலையிலேபோயப் பொன்போலப்பிரகாசிக்கும் கொன்றைமாலையணிந்த சடைமையுடைய பரம சிவனைப் பூசித்துக்கொண்டிருந்தார் தனக்குஒப்பில்லாத சாரதையானவள தவமுனிவர் ஆகமவிதியால்சொன்னபடி மகத்துவமுள்ள அந்தவிரதத்தைத் தொடங்கி அனுஷ்டித்தாள்-எ-று. (௪௰)

என்றுமாமுனிவர்க் கின்னணஞ்சூத னியம்பியெங்கதையைக்கேட்டு, நன்றுநன்றெனவ வுவகைகூர்மனத்தர நாளுமச்சாரதைமடவா, ளொன்றியேயிழைத்துப் பெற்றவாறெல்லா முரைத்தருளெனவவு, ரைப்பத், துன்றியதவத்துமடவரல பெற்றதிற்றென சூதனன், சொன்னன்,

(இ-பு.) இவ்வாறு சூதமுனிவர்சொல்லிய உமாமகேசுவாவிரதசரித்திரத்தைக்கேள்விப்பட்டநைமிசாரணியமுனிவர் இதுமிகவும்நன்மையுள்ளதென்றுசந்தோஷங்கொண்டமன முள்ளவர்களாய்ச்சூதமுனிவரைப்பார்த்துஅந்தச்சாரதையானவள் மனமொருமித்துஇவ்விரதத்தை அனுஷ்டித்துப்பெற்ற முறைமையெல்லாம் எங்களுக்குச்சொ

ல்லியருள வேண்டுமென்று அவர்கள்சொல்ல அந்தவிரதத்தை அ
னுஷ்டித்தவள் பெற்றுக்கொண்டவாம் இன்னதென்று தொகுத்து
ச்சொன்னார்-எ-று, (௬௪)

பதினெட்டாவது.

உமாமகேசுவர பூசையுரைத்த அத்தியாய

முற்றிற்று,

ஆ திருவிருத்தம்-௲௰௪

உ

சிவமயம்,

பத்தொன்பதாவது.

உமாமகேசுவரபூசாபலமுரைத்த அத்தியாயம்.

இந்துவாண்முகத்தாள் பன்னிரும்தியுமியற்றியவிரதத்தைமுடியா
வந்தணர்க்கவினியருத்தியஞ்சுடர்ப்பொன் வருளியன்றருந்திலளாகித்
தந்தைதாய்பாதத் துணைமலரிறைஞ்சிச்சதுர்மறைமுனிவான்புகன்ற
மந்திரமுணர்ந்தாங் கிருந்தனளந்திமாலைவந்திறுத்ததுமன்னோ,

(இ-பு,)சந்திரனையொத்த முகத்தையுடையசாரதையானவள் ப
ன்னிரண்டுமாதமும் அனுஷ்டித்தவிரதத்தைநிறைவேற்றிப்பிராமண
ர்களுக்குச்சந்தர்ப்பணையும்அழகியவொளியுள்ள சுவர்ணதானமுஞ்செ
ய்துதான அன்றுபோசனஞ்செய்யாமல் தாய்தந்தையருடைய இரண்
டு திருவடிமலரையுந்தொழுதுநான்குவேதங்களுமுணர்ந்த முனிவர்
உபதேசித்த மந்திரத்தைச்செபித்துக்கொண்டிருந்தாள் (அப்படியிரு
க்கும்போது) அந்திப்பொழுதுவந்தது-எ-று, (க)

கள்ளவிழ்கடுக்கை வேணியான்வணக்காதலாற்பூசனைபுரிந்து
நள்ளிருட்கங்குல்விழித்தனளிருந்து நாவினால்வன்புகழ்கவிற்றத்
தெள்ளிதிற்பரமசிவாகமமுழுதுந்தெளிந்தஞானமறைமுனிவாஞம்[தே
வெள்ளிலைநெடுவேற் கருங்கண்மாதுமைதநவிளங்கிசைபாடிஞனுணர்

(இ-பு,) தேனுடன்மலர்ந்தகொன்றைமாலையணிந்த சடாமகுடமு
டையபரமசிவனை அன்புடன் பூசைசெய்து இருள்மிகுந்தஅன்றிராத்
திரிமுழுவதும் நித்திரைசெய்யாமல்நாவினால் பரமசிவனுடையதோத்
திரங்களைச் சொல்லிக்கொண்டிருந்தாள் சிவாகமமுழுவதையுந்தெளி

வுடனாராய்ந்துணர்ந்த அம்முனிவரும் ஒளியுள்ளதாகிய நீண்டவேல் போன்றதிருநேத்திரங்களையுடைய பார்வதியின்விளங்காநின்றபுகழைத் துதிசெய்துகொண்டிருந்தார்-எ-று, (உ)

(வேறு)

இன்னகத்தவர்வாய்க்கிள்ளை யியற்றியவிரதத்தாலுந்
தன்னிகரில்லாத்தூயோன் றங்கமைச்சாறவத்தினாலும்
பொன்னனவிர்சுணங்குவாய்ந்த புணர்முலைபொறுக்கலாற்றா
மின்னிடையிமயம்பூத்த விளங்கிழைவெளிப்பட்டாளே

(இ-பு,) இனியதாகிய நகையினையுடையவளாய்க்கிளிமொழியோன் வசனிக்காநின்றசாரதையானவள் அனுஷ்டித்தவிரதத்தினாலும்ஒப்பில்லாதமுனிவருடையமேன்மைதங்கியதவத்தினாலும்பார்வதிதேவியார்தரிசனமானார்-எ-று. பொன்னவிர்- பொன்போல் விளங்குந்தேமல் பொருந்தியதம்மிலொத்ததன்பாரத்தினைத்தாங்கமாட்டாத(மெல்லிய) மின்னலையொத்த இடையையுடையவராய் இமயமலையில் திருவவதாரஞ்செய்தருளிய விளங்கும்அணிகளணிந்தபார்வதியார்-எ-று. (௩)

வெளிவரமறைந்தசெங்கண விளங்கியமுனியமுள்ளக்
களியுடையணங்குமன்னை கமலத்தாளிறைஞ்சிவீழ
வொளிவிரிபசும்பொற்கொங்கை யுமையிருவரையுமாங்க
ணளியினாலெடுத்துநோக்கி யமுதனமுகமன்சொன்னாள்

(இ-பு.அப்படி தரிசனமாகிய வளவில் முன்தெரியாத பார்வை தெரிந்த முனிவரும் மனக்களிப்பினையுடைய சாரதையும் நம்முடையதாயாகிய பார்வதிதேவியாருடைய திருவடித்தாமரைமலரில் விழுந்து பணிந்தார்கள் அவ்வாறுபணிந்தபோது ஒளிமிகுந்த பசும்பொன்னிறம் பொருந்திய தனங்களையுடைய உமாதேவியார் கிருபையுடன் அவ்விருவரையும் பார்த்து எடுத்து அமிர்தம் ஊட்டுவது போல உபசாரவார்த்தை சொல்லி-எ-று. (௪)

கற்றுணர்முனியேகன்னிக் கற்புடையணங்கேநும்பாற்
பொற்றமகிழ்ச்சியாறும் பொலருபவாங்களென்ன
சொற்றதுதருவநீவிர் சொல்லுதுமென்றுகூற
நற்றவக்கிழவன்கேளா தயங்கிதுபுகல்வதானான்

(இ-பு.) வேதமுதலானசாஸ்திரங்கள்ஓதியுணர்ந்தமுனிவனேஅழிவில்லாதபதிவிரதாபலத்தையுடையமாதே உங்களிடத்தில்நாம் மகிழ்ச்சியடைந்தோம்எவ்விதவரங்கள்வேண்டுமென்றாலுந்தருகிறோம்

நீங்கள் சொல்லுங்களென்று பார்வதிதேவியார் மொழிந்த நளமுனிவர் அந்தத்திருவாக்கினைக்கேட்டு விருப்பத்துடன் இந்தவார்த்தைசொல்லு கிறார் எ-று. (௫)

கண்மணியிழந்தேன்மங்கை கயினியாயிருத்தல்காணே
னுண்மலியுவகையாலே யுறுதுணையிழந்தாடன்னை
வெண்மதிநுதலாய்காமம் வெறுக்குநாள்காறுநின்கேள்
வண்மலராகந்தோய்ந்து வாழ்த்தியென்றுசிசொன்னேன்

(இ-ள்.) அடியேன் பார்வையிழந்தஅந்தகனுயிருந்ததினால்இந்தமாதுகைம்பெண்ணுயிருப்பது தெரியாமல் அடியேனுக்குச்செய்த உபசாரத்தினால் மகிழ்ந்து கணவனையிழந்திருக்கும்இவளைநோக்கிவெண்மைநிறந்தங்கிய இளம்பிறைபோலிருக்கும்நெற்றியையுடையவளேநீகாமத்தைவெறுக்கும் நாளளவும் உன்கணவனுடையஅழகுபொருந்தியமாலையணிந்தமார்பில் தோய்ந்து வாழ்ந்துகொண்டிருக்கக்கடவையென்றுஆசீர்வாதஞ்சொன்னேன்-எ-று. (௬)

பூசுரர்குலத்திற்றோன்றும் பொலன்கொடிக்கடியன்சொன்ன
வாசியின்பயன்சூன்றும லருள்கவென்றிறைஞ்சியேத்தி
வாசநாண்மலரோனன்ன மறைமுனிபகரலோடும்
பாசிழைப்பணைமென்கொங்கைப் பனிவரைவாதுசொன்னாள்

(இ-ள்.) பிராமணகுலத்திற்பிறந்தபொற்கொடிபோன்றஇந்தமாதுக்கு அடியேன்சொல்லிய ஆசீர்வாதத்தின்பலன் கெடாதவண்ணம்அருள்செய்யவேண்டுமென்று பணிந்து துதித்துவாசனைபொருந்தியதாமரைப்பூவிலிருக்கும் பிரமனையொத்தமுனிவர் விண்ணப்பம் பண்ணினவளவில் பொன்னாலாகிய ஆபரணமணிந்தபருத்ததனங்களையுடையஇமயமலையிற்றோன்றிய பார்வதிதேவியார்சொல்லுகின்றார்-எ-று. (எ)

சிந்தைசால்புடையநோன்மைச் செய்தவக்கிழமையோனே
முந்தைநற்பிறப்பினிந்த மொய்குழறமிழ்நன்னாட்டோ
ரந்தணர்முன்னர்வேட்ட வணங்கன்பின்மணஞ்செய்காதற்
பைந்தொடிபன்னைநாமம் பத்மினியென்பதாமே

இ-ள். மனதில்தூய்மையுள்ள விரதத்தையுடைய முனிவனே முன்பிறப்பில் இந்தசாரதையென்பவளை தமிழ்நாட்டில் ஒரு பிராமணன் தான்முன் விவாகஞ்செய்துகொண்ட மூத்தமனைவியிருக்க இரண்டாவது விவாகஞ்செய்துகொண்டான் அப்பிறப்பிலிவளுக்குப் பத்மினியென்றுபெயர்-எ-று. (அ)

வேறு,

மாந்தளிர்மேனிவனப்பினாற்பிணியு மருந்துமாமதர்விழிநோக்காற்
சாந்திளமுலையு மகலமுமொன்றாய்த் தழுவுறக்கனியுநன்னலத்தாற்
காந்தளஞ்செய்கை பற்றியகாலை முதலவாய்க்காதலன்றன்னைத்
தேர்ந்துளிபிலிற்றுமலர்க்குழலிவடன்செயல்வழிநடப்பதேபணித்தாள்

(இ-ள்.) மாந்துளிர்போன்ற மேனியின்அழகினாலும்நோயும்அதற்குஅவுஷதமும்போலிருக்கும் களிப்புள்ள கண்பார்வையினாலும்சந்தனமணிந்த இளமுலையு மார்பமுமொன்றாய்த் தழுவிக்கொள்ளமுதிர்ந்தஇன்பத்தினாலும் காந்தள்மலர்போன்ற தன்செங்கைபற்றிய நாள்முதலாகக்கணவனைத்தன்சொல்லின்படி நடக்கத்தக்கதாகச்செய்தாள்-எ-று, தேன்துளிசிந்துகின்ற மலரணிந்த அளகத்தையுடைய இவள் தன்னிடத்திலிச்சைவைத்தவனை விருப்பமின்றிப்பார்த்தால் வருத்தமும் விருப்பத்துடன்பார்த்தால் மகிழ்ச்சியும் அவனுக்குஉண்டாக்கின்றமையால்பிணியுமருந்து மாமதர்விழியென்றார்-பிணியுமதற்கு மருந்தும் பிறழப் பிறழமின்னும்; பணியும்புரைமருங்கிற் பெருந்தோளி படைக்கண்களே,இது திருக்கோவையார். (௯)

தவளமுந்நூலுந் தாமமுந்தாழுந்தடம்புயக்கொழுநனுங்காத
லிவளிளமுலையின் போகமேநுகர்ந்தாங் கின்பமாங்கடலிடையாழத்
துவளுநுண்மருங்குற் குமுதவாயமுதத் துணைவிதன் கொண்கனைப்பெ
ருது. குவளைவாய்க்கருங்கண் மைந்துளிபிலிற்றக் கொடுந்துயர்கடலி
(டையாழ்ந்தாள்

(இ-ள்,) வெண்மைநிறமுள்ள முப்புரியாகிய பூணநூலும்பூமாலையும்பொருந்திய பெரியபுசத்தையுடைய கணவனும்ஆசையினால்இவளிடத்திலேயேபோகம் அநுபவித்துக்கொண்டுஇன்பக்கடலிற்படிந்திருப்பதினால் துவளுகின்ற மெல்லியஇடையும்செவ்வல்லிமலர்போன்றவாயுமுள்ள மூத்தமனைவியானவள் தன்கணவனுடன் சேருதற்கில்லாமல் நீலோற்பலமலர்போன்ற தன்கண்கள்நீர்சிந்தும்படி துக்கசாகரத்தில் மூழ்கியிருந்தாள்-எ-று. (௰)

தனித்துணையலதுதன் றுணைபுணராத்தண்ணறுந் தூய்மலர்க் குழலா
ளணிதுயருழந்துபுதல்வரைப்பெறாளாய்நன்னலந்தொலைதொறு மிரங்
கி. யினியுயிர்பொறைகொண் டாற்றலேன்வினையே னிம்மையுமறுமை
யுமிழந்தேன், புனிதனேயென்னுப் புலம்புகொண்டிறந்து பொன்னுலக
டைந்தனளன்றே.

(இ-ள் தனிமையாயிருக்குந் தன்மையாகியதுணையேயல்லதுதன் துணையாகியகணவனையறியாதகுளிர்ச்சியும் வாசனையுமுள்ள நல்லமலர்

அணிந்த அளகத்தையுடையமூத்தாள் மிகவுந்துயரங்கொண்டுபுத்திரர்களையும்பெறுமல் இளமைப்பருவம் நாளுக்குநாள் நீங்குந்தோறும்இரங்கி இனியிவ்வுடலைவைத்துக்கொண்டிரேன் வினையேனுகிய நான் இவ்வுலகத்தின்பத்தையும்(புத்திரனில்லாமையால்)சுவர்க்கலோக வின்பத்தையும்இழந்தேன் பரமசிவனேயென்றுசொல்லிப்புலம்பிக்கொண்டிருந்துஇறந்து பொன்னுலகம்அடைந்தாள்-எ-று, (யக)

வேறு.

இவ்வண்ணநிகழ்காலத் தயலிடத்தோரில்லுறையுமந்தணனென்
செவ்வண்ணத்துவர்வாயும்வனமுலையும்வருத்தநிறைதேய்ந்துதேய்ந்து
மைவண்ணக்கொடுங்காமங்கைமிகலுமிவண்மலர்க்கைவலிதிற்பற்றக்
கைவண்ணக்காவிகந்தாள் கற்பிகவாதனனேன்கை கடந்துபோனுள்

(இ-ள்) இவ்வாறுநடக்குங்காலத்தில் அயல்வீட்டிலிருக்குமொருபிராமணன் இவளுடையசெம்மைநிறந்தங்கியபவளம்போன்றவாயும்அழகியமுலையும் தன்னைவருத்தநிறையழிந்துமெலிந்துமெலிந்து இருள்மயமாகிய காமமானது அதிகரித்தலால் இவள்கையை வலிதிற்பற்றினன் அவ்வாறுபற்றவே தன்னைக் காப்பவர்களை யிழந்திருப்பவள்தன்கற்பினிலையையிழவாமல் அந்தப்பிராமணன்கையை நீக்கிக்கொண்டுபோய்விட்டாள்-எ-று, (யஉ

அங்கிலையேகளவொழுக்க மனக்கொள்ளாள்வெறுத்தகன்றவபலான்கற்பி
பன்னியிளமுலைகிடந்த வெக்கறவாலறிவழிந்துபையுளுற்றேன் (ற்
கன்னலடுசிலைகுழைத்து வேனிலானமராடுங் கணைகளாகஞ் (றே
சின்னபின்னஞ்செயக்காமவிடந்தலைக்கொண்டகல்வானஞ்சேர்ந்தானன்

(இ-ள்) அவ்வாறு சோரப்புணர்ச்சிக்குச் சம்மதியாமல்வெறுத்துப்போய்விட்டஅன்னிபனுடையமனைவியினிடத்திருந்தஎக்கறவால்அறிவிழந்து துன்பமடைந்துமன்மதன்கரும்புவில்லைவளைத்துப் போர்செய்யுங்கணைகள்தன்னுடையசரீரத்தைச் சின்னபின்னஞ்செய்வதினுல்காமமாகியவிஷந் தலைமட்டுக்கொண்டு இறந்துபோனுன்-எ-று, (யங)

கற்பினிலைகடவாத நிறையிருந்தும்பொறையிருந்துங்கமழ்கார்சூட்டி
முற்படத்தன்கேண்மணுந்தமுற்றிழையையொருஞான்றுமுயங்கிவொட்
டாள். பொற்புடைத்தன்புணர்முலையின்புதுநலமேநுகரும்வண்ணம்பு
ரிதலாலே. யிற்பழியில்லாவிவளு மிளமையிலேகைம்மையுற்றுங்கிருந்தா
(ளன்றே

(இ-ள்) கற்புத்தன்மைகடவாதநிலைமையிவளிடத்திருந்தும்பொறுமையிருந்தும்தனக்குமுன்தன்கணவனுக்கு மாலைசூட்டிவிவாகஞ் செய்

துகொண்டவளை யொருநாளாவது கணவனுடன் இன்பம்அனுபவிக்க வொட்டாதவளாய் அழகுள்ள தன்கொங்கையின்பத்தையே அனுபவிக்கும்படி செய்தலினாலே பதிவிரதாதர்மத்துக்குப் பழிநேரிடாமல்காத்துக்கொண்ட இவளும் கைம்பெண்ணாயிருந்தாள்-எ-று, (௰௪)

வளமலிசீர்மகளிரொடுமகிணரிளநளநுகராவண்ணமாற்றி
யுளமலியுமனக்களியாற்ற மதுவழியேயொழுகவுடல்கூருந்
தளவநகைக்கயல்விழியார் தமைக்காமவிடாயகனற் றத்தளர்ந்துமாழ்கி
யிளமையிலேநான்குபவங் கயினியாயளவிறுன்பமெய்துவாரே

(இ-ள்) வளமையுஞ் சீருமுள்ள மனைவியருடன் கணவன் இன்பம் அனுபவிய தவண்ணமாற்றி உள்ளத்திற்பொருந்தியகளிப்புடன் தங்கள் சொற்படிநடக்கும்படி ஊடல்கொள்ளுகின்றமுல்லையரும்பினையொத்த நகையினையும் சேல்மீனையொத்த கண்களையுமுடையமாதர்கள் மறுபிறப்பில்) தங்களைக்காமவிடாயானது வருத்தச் சோர்ந்து துயரமுற்றுஇளமையிலேதானே நான்குபிறப்புவரைக்கும்கைம்பெண்ணாகிஅளவில்லாத துன்பத்தைப்பொருந்துவார்கள்-எ-று, (௰௫)

அறந்தழையுந்தூயமனத் தருந்தவனேயருந்ததிகற் பனையகற்பாற்
சிறந்தமலர்க்குழலிவடன் சிந்தைகளிகூர்ந்துநறுந் தேக்கொள்போதா
லிறந்தபவத்தெனையருச்சித்தேத்துதலாலெழுபிறப்புமீட்டும்பாவம்(றே
பிறந்தவிந்தப்பவத்திலொளிர் சுடர்துரக்குமிருள்போலப் பெயர்ந்ததன்

(இ-ள்) தர்மமே குடிகொண்டிருக்கும் நல்லமனதையுடையமுனிவனே அருந்ததியின் கற்பினையொத்தகற்பினால்மேன்மைபெற்றஇவள் மனங்களிப்படைந்து நல்லமலர்களால் முன்பிறப்பில் என்னை அருச்சித்துத்துதித்தமையினால் எழுபிறப்பிலுஞ்செய்த பாவமெல்லாம் பிறந்துள்ளஇந்தப்பிறப்பிலேதானே சூரியனால்நீக்கப்பட்டஇருள்போல நீங்கிவிட்டது-எ-று. (௰௬)

ஈரமலர்ப்பூங்குழலே யென்றிரந்துகரம்பற்றியிரங்குகென்று
வார்வமுற்றுநலநுகராத்துயரானமுற்பவத்திறந்தவந்தணாளன்
றீர்விலொருதலைக்காமங் கூட்டவிந்தப்பவத்துமிவள் செங்கைபற்றி
வார்முலைதனுகமுறப் புணராமலரவொறுக்க மாய்ந்தானந்தோ

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய பூமாலையணிந்த அளகத்தையுடையவளேஇந்தவேளை உன்மனமிரங்கவேண்டுமென்றுஇவள்கையைப்பற்றிக்கொண்டுஇரந்துஆசையுற்றுமஇன்பம் அனுபவியாததுயரத்தினால்முற்பிறப்பிலிறந்துபோன பிராமணன்நீங்காத ஒருதலைக்காமமானதுகூட்டுவிக்கஇந்தப்பிறப்பில்விவாகஞ்செய்துகொண்டிவள் கையைப்பற்றியு

ம் கச்சணிந்தஇவள் தனங்கள் தன்மார்பிற்பொருந்தும்படி புணர்வதற் கில்லாமல் பாம்புகடிக்க இறந்துபோனான்-எ-று. (௰எ)

இறந்தவனேவிவள்கொழுநனல்லனுமைப்பிறப்பிலிவளிளங்குகேள்வ ன்சிறந்தசங்கத்தமிழ்கொழிக்குந்தென்கூடற்றென்னர்பிரான்கன்னிநாட் டிற், பிறந்துதொழுகுலத்தவர்க்கொர்திலகமாயளவில்செல்வம்பெற்றும ற்றோர், சிறந்தஏழை சீரணங்கைமணம் புணர்ந்துபுதுநலமார்ந்தியமர்கின் றானே.

(இ-ள்,) இப்போது இறந்தவன் இவள்கணவனல்லன் முன்பிறப்பில் இவள்கூடியகணவன் சிறப்புதங்கிய சங்கத்தமிழ் விளங்குமதுரைத்தல த்தில் அரசுசெய்துகொண்டிருக்கும் பாண்டியனுடையநாட்டில்பிறந்து பிராமணகுலத்துக்குஒருதிலகம்போல அளவில்லாதசெல்வம்பெற்றுஇ ல்லறம் வழுவாமல் நடக்கும் மற்றொரு கன்னிகையைவிவாகஞ்செய்து இன்பம் அனுபவித்துக்கொண்டிருக்கிறான் -எ-று. திலகம் முகத்துக்கு அழகுபோலஅந்தப்பிராமணன்பூசுரர்குலத்துக்கு,அழகுதருவதினால்தி லகமெனக்கூறினர். (௰அ)

அணையவன்பொற்றடமார்புமலர்முலையாகமும் பொருந்தியழிந்தக்கூடிப் புணைமலரின்பசுந்தாதுபொதுளுநறும் பூவணையின்புறத்துமேவிக் கனவிதொறுமிவள்காமக் கனிநுகர்வாளாகவந்தக்கனவிற்கூட்ட நனவிலுறுபுணர்ச்சியிலு மளவிறந்தநன்னலமேகுமன்றே

(இ-ள்.) அவனுடைய பெரியமார்பும் இவளுடைய பரந்ததனங்களு ள்ளமார்பும்பொருந்தி யழுந்தத்தக்கதாகக்கூடிப் பூந்தாதுகள்நிறைந்த வாசனையுள்ள மலரணையினிடத்திற் பொருந்திச் சொப்பனவத்தைதோ றும் இவள்காம இன்பமாகியபழத்தைஉண்பாள்அந்தக்கனவிற்கூடுதல் சாக்கிராவஸ்தையில்புணரும் புணர்ச்சியினும் அதிகமான நல்லஇன்ப த்தைக்கொடுக்கும்-எ-று. (௰௯)

அளவுறுகாவதமுந்நூற்றறுபதிற் கப்பாலகாமகழ்சூழிஞ்சி வளநகரினினிதிருக்குமகிணனுந்தன் முன்னைவினைவயக்கனாலே (று தளவநகைப்புளகமுலைத்தாழ்குழலிப்பொலங் கொடியைத்தங்குல்தோ முளமலியுங்காதலொடுகனவிற்றேய்ந் தும்பர்செல்வமுறுவன்மன்னோ

(இ-ள்.) அளவுபட்ட முந்நூற்றறுபதுகாதத்துக்கு அப்பாலிருக்கும் அகழிசூழ்ந்தமதிலையுடையவளநகரில் இன்பமுடன் வாழ்ந்துகொண்டி ருக்கும் இவள்கணவனும் முன்னைஊழ்வினைவசத்தினாலே முல்லையரு ம்பையொத்தநகையினையும் புளகம்பொருந்தியதனங்களையும்தாழ்ந்தஅ ளகத்தையுமுடைய பொற்கொம்பையொத்தவளாகிய இவளைஇராத்திரி தோறும் சொப்பனவஸ்தையில் ஆசையுடன் புணர்ந்து சுவர்க்கபோக த்தைஅடைவான்-எ-று, (௨௰)

இன்னணமுட்களிபெருகவிளநலந்துய்த் தினிதிருக்குநாளிலிந்தப்
பொன்னுனையிற்பொலிசுணங்கின்வளமுலையாளொருபுதல்வற் பெறுவ
ளாகக் கன்னவிரேற்கணவனுந்தன்சிறுவனைநன்கனவிதொறுங்காண்க
வென்னுத் தன்னிகரில்லாமுனிவற்குன்றத்துமையாள்மாதினொடுசொற்று
கின்ருள்,

(இ-ள்) இவ்வாறு உள்ளத்திற் களிப்புண்டாகி அதிகரிக்கத் தக்கதா
க இன்பம்அனுபவித்துக்கொண்டிருக்கும் நாளில் பொன்னுனைபோல
விளங்குநதேமல்படர்ந்த அழகியதனங்களுள்ளஇவள்ஒரு புத்திரனைப்
பெறுவாள் வலைக்கொப்பாகச் சொல்லத்தக்கபுஜங்களையுடைய இவள்க
ணவனுந்தன்புத்திரனைச்சொப்பனந்தோறுங்காண்பனென்று தனக்குஒ
ப்பில்லாதமுனிவனுக்குச்சொல்லிச் சாரதையைப்பார்த்துப்பார்வதிதே
வியார்சொல்லுகின்ருர், (உக)

குனிமதிவாணுதற்பசியகுவளைவிழிச் சாரதையேகோதைசூட்டி
புனைகலனின் பொறையணிந்துமுற்பவத்துன் புணர்முலைமேர் புணர்ந்
தோன்றன்னைப் பனிமதியின்கிளையெனத்தண்பணிலங்கவழுமொருப
ழனநாட்டிற் கனவினிற்கண்டறிகுறியானதுவினுங்கண்கண்டுமனங்க
ளிப்பைமாதோ,

(இ-ள்.) வளைந்த பிறையையொத்த ஒளிதங்கிய நெற்றியினையும் பசு
மைதங்கிய நீலோற்பலம்போன்ற கண்களையுமுடைய சாரதையே முற்
பிறப்பில் மணமாலைசூட்டித் திருமங்கிலியந்தரித்துஉன்னைச்சேர்ந்திரு
ந்தவனைக்குளிர்ச்சியுள்ள சந்திரனினம்போலச் சங்குகள்தவழும் வயல்
கள்சூழ்ந்தஒப்பற்றவளநாட்டில்சொப்பனத்தில்கண்டறிந்தகுறிப்படிசா
க்கிரத்திலும் கண்ணிற்கண்டு மனஞ்சந்தோஷிப்பை-எ-று. (உஉ)

கணவனுநின்னொடுகனவிற்புணர்குறி யானனவிலெதிர்காணுமுன்னந்
துணைவியெனத்தெளிவனவ்வாறறிந்தொருவர்பண்டைத்
தொடர்புபெற்ருற் புணைதனதுமதியாகக்கலைக்கடலை கரைகண்டபுதல்
வனோடே யிணையில்விரதப்பயனிற்சம்பாகக் கணவனிடத்திகமன்னே

(இ-ள்.) கணவனும் உன்னுடன் சொப்பனத்தில் புணர்குறிப்பினுல்
எதிர்காண்பதற்குமுன் மனைவியென்று உன்னை அறிந்துகொள்வன் அ
வ்வாறுஅறிந்து ஒருவர்க்கொருவர் முன்பிறப்பின் சம்பந்தத்தைப்பெற்
ருல்தன்புத்தியே தெப்பமாகச் சாஸ்த்திரமெனுஞ் சமுத்திரத்தைக்கட
க்கும் புத்திரனுடன் ஒப்பில்லாத உன்விரதபலத்தில்கணவனுக்குச் சம
பாங்கொடு-எ-று. (உங)

நின்விரதப்பயனேற்றகொழுநன் சமமாகியிருநிலத்தினிடம்
பொன்னைவயங்கவுதொறும் புணராதுகனவிலின்பம்புணர்ந்துமாகத்

தின்மதுவுண்டுளங்கெளிவிட்டுநாளி லுயிர்க்கேளிறப்பனிறந்தானென்ற
பின்முறையாலெரிமூழ்கி யிருவீருமெமதுபதம்பெறுவீரன்றே

(இ-ள்.) உன்விரதப்பயன் பெற்றுக்கொண்ட கணவன்வசமாகி இவ்வுலகத்தில் மிகுந்த பொன்மயமானவீட்டிஸ்சாக்கிராவவஸ்தைகள்தோறும்புணராமல் கனவுதோறும்புணர்ந்து இன்பம் அனுபவித்து அதனிடத்தில் மனவெறுப்புண்டாகுங்காலத்தில் உன்உயிர்போன்ற அந்தக்கணவனிறந்துவிடுவன அவ்வாறு அவனிறந்தபின்பு நீ கிரமப்படி அக்கினியில் மூழ்கி நீங்களிருவர்களும் நம்முடைய பதவியைச்சேர்வீர்கள்.

வேறு.

எனவுரைத்தெழுதாமறைபுராதனநூலியாவையுமுணர்ந்துளந்தெளிந்த
தனையனையின்னேபெறுதிநீள்செல்வந் தழைந்தினிவாழனிமற்றென்னு
வனமுலைமடந்தைமனங்களிசிறப்ப வரங்கொடுத்தாயிழையவளு
முனிவனுங்காணவிமயமீன்றெடுத்த முகிணகைகயிலையையடைந்தாள்

(இ-ள்.) இவ்வாறு பார்வதிதேவியார் அனுக்கிரகஞ்செய்துஎழுதப்படாதவேதமுதலிய பழமையான சாஸ்திரங்களையெல்லாம் உணர்ந்திருக்கும் புத்திரனையிப்பொழுதேபெறுவைமதநியிலழியாதசெல்வந்தழைய நீ வாழக்கடவையென்று அழகிய தனங்களையுடையசாரதையின்மனமானது சந்தோஷத்தினால் சிறப்படையத்தக்கதாகவரங்கொடுத்தருளிஅப்பொழுதே அவளும் அந்தமுனிவனுங்காணக் கயிலைக்கு எழுந்தருளினார்-எ-று, (உரு)

வளர்மதிகண்ணியண்ணல்பாகத்துமாதுமைவரந்தரப்பெற்ற, தளி
ரியன்மகிழ்ச்சிகூர்ந்தருந்தவன் பொற்றாளருச்சனைபுரிகாலை, முளரிநா
ண்மலரினனைதளையவிழ்ந்து முருகுகொப்பிளிற்றிடச்செங்கே, ழொளி
ர்கதிர்விரிக்கும்பரிதியஞ்செல்வ னுதயமால்வரைமிசையுதித்தான்

(இ-ள்.) வளர்ந்தபிறையாகிய மாலையணிந்த பரமேசுவரனிடப்பாகத்தில்வீற்றிருக்கும் பரமேசுவரி வரங்கொடுத்தருளப் பெற்றுக்கொண்ட சாரதைமகிழ்ச்சியடைந்து அம்முனிவனுடையபாதங்களில் அருச்சனைசெய்யும்போது தாமரைகளினரும்பு இதழ்விரிந்து தேன்சொரியும்படி செம்மைநிறந்தங்கிய ஒளிபொருந்திய கிரணங்களைப் பரப்புஞ்சூரியதேவன் உதயகிரியில் தோன்றினான்-எ-று- (உசா)

நாறுபூங்கோதைமாதுமையோடு நளிர்மதிவேணியன்மகிழ
வீறுயர்விரதமியற்றியதிறத்தால் விளைபயனேதிலரறியா
தாறறிமுனிவனன்னவட்பயந்த வத்தனுமன்னையுமறியக்
கூறினன்கூறியாயிடையகன்றோர் குளிர்புனனாட்டகமடைந்தான்

(இ-ள்.) வாசனைகமழும் பூமாலையணிந்த அளகபாரத்தையுடைய உமையம்மையுங்குளிர்ச்சியுள்ளபிறைமதியணிந்தசடையையுடைய சாம்பவமூர்த்தியும்மகிழ்ந்தருளும்படிபெருமைதங்கிய உமாமகேசுவரவிரதம்அனுஷ்டித்தன்மையினால் மேலுண்டாகும்பலனை அன்னியரறியாதவண்ணம் சாரதையின்தாயுந்தந்தையும்அறியும்படிமுனிவர்சொல்லினர் அவ்வாறுசொல்லிஅவ்விடம்விட்டுக் குளிர்ச்சியுள்ளநீர்வளந்தங்கியவேறுநாட்டிற்போய்விட்டார்-எ-று. (௨௭)

முனிவரனகலவிதிமுறைநோற்ற மொய்குழல்கங்குல்வாய்தோறு
நனையவிழ்செழுந்தார் கேள்வனுந்தானு நலனுகர்ந்தின்புறுநாளிற்
பனிவரையீன்ற கொவ்வையஞ்செவ்வாய்ப் பசுங்கிளியளித்தநல்வரத்தா
கனவுறுகலவி நலத்தினும்வளநட் களித்திடக்கருப்பமுற்றதுவே .ற்

(இ-ள்.) அந்தமுனிவர்போய்விட்டபின்பு விதிப்படி விரதம் அனுஷ்டித்த சாரதையானவள் இராத்திரிதோறும் தேனுடன்மலர்ந்திருக்கும் செழுமையுள்ள பூமாலையணிந்த கணவனுந்தானும் இன்பம் அனுபவித்துக்கொண்டிருக்கும்நாளில் மலையரையன்செய்ததவத்தினால்அவனுக்குப்புத்திரியாகிய கோவைப்பழம்போன்ற சிவந்தவாயையுடையபசுங்கிளிமொழியொத்த மொழியையுடையவராகிய பார்வதிதேவியார்அருளிச்செய்த வரப்பிரசாதத்தினால் சொப்பனத்திற் கூடுங்கலவியின்பத்திலும் அவள்மனங் களிப்பையடையும்படிகருப்பம்உண்டாகியது எ-று, (௨௮)

கருவளர்ந்திடலான் மாந்தளிர்மேனி கலைமதியுருவெனவிளப்பச்
சுரிகுழலணங்கு சூன்முறம்பெறலுந் துணிவிலாராங்கதுகண்டார்
திருகலனிதழ்ந்தாள் கற்புமிற்பிறப்புந் திறம்பினளெனப்பழிகூறி
யரவுமுன்கதுவ விறந்தகேடமர்கேட் டதிசயித்தகம்புழுங்கினரே.

(இ-ள்.) அந்தக்கருவளர்தலினால் மாந்துளிர்போன்ற மேனியானது சோடசகலைகளுள்ள சந்திரனை வடிவம்போலவெண்மைநிறம்அடையும்படிச் சாரதைகருப்பக்குறிபொருந்தவும்இதனுண்மைதெரியாதவர்கள் அதைக்கண்டு கைம்பெண்ணாகிய சாரதையானவள் பதிவிரதத்தன்மையையும் குடிப்பிறப்பையும் இழந்துவிட்டாளென்று பழிசொல்ல அந்தைப்பாம்புகடித்திறந்துபோனவன் பந்துக்கள் கேள்விப்பட்டு அதிசயித்துமனம்புழுங்கினார்கள், (௨௯)

வேறு,

அலர்மொழிபொறுதுநாணி யடுசினந்துரப்பக்கற்பின்
குலம்கடாதைபில்லிற் குழுமினர்குறுகியங்கே
புலவைசால்குணத்தின்மிக்க பூசுரரவைமுன்மாய்ந்தோன்
றலைவியைவருக வென்று ரன்னம்படாறுவந்தசார்ந்தார்

யுண்டாகச்செய்கலாத தலைமயிரையும்மூக்கையும்காதுகளையும் ஒன்றுவ ஒவிடாமல் இப்போதே அறுத்து ஊருக்கு அயலில்லா ஓரத்தி விடுங்களென்றுசொன்னார்கள் — எ-று ௩௩

கேட்டவைபுரிதுமென்றாக கிளர்ந்தெழுசினத்தராகி
யூட்டரக்கனையகண்ணர் கதுமெனவுருத்துச்சீறிச்
சேட்டிளம்பிடியைமூற்றுஞ் சிங்கவேறெனச்சூழ்ந்து
மோட்டிளமுலையினாளை முருக்குவான்குறுகுங்காலை

இ-பு அவர்கள்சொன்னதைக்கேட்டு அப்படியேசெய்கிறோமென்று மூளுகின்றகோபத்தையுடையவர்களாய் அரக்கினைப்போலக்கண்கள்சிவந்து உக்கிரத்துடன்சீறிவிரைவாகப்பெருமையுள்ளஒருபெட்டையானையைக்கொல்லத்தொடரும் ஆண்சிங்கம்போலச்சூழ்ந்துகொண்டுசாரதையென்பவளை வருத்தும்படிசென்றபோது-எ-று, ௩௪

மன்னியநிறைவழாது வயங்கிகறபினாளைப்
பொன்னளவின்பநல்கும் பொதுநலக்கணிகையென்றே
சொன்னவர்நாவற்றாழ்ந்த துயர்க்கடல்குளிப்பரென்று
மின்னெனவிசும்பினின்றோர் தெய்வதம்விளம்பிற்றன்றே

இ-பு நிலைபெற்றமுறைமைதவறாமல் விளங்குகின்றகற்புள்ள இந்தச்சாரதையைவந்த புருஷன்கொடுத்த பொன்னளவுக்குத்தக்க இன்பங்கொடுக்கும்பொதுமகளாகியவேசையென்று சொல்லுகின்றவர்கள நாக்கு அறுந்து ஆழ்ந்ததுக்கசாகரத்தில் முழுகுவார்களென்று மின்னல்மின்னியதுபோல ஆகாயத்தினின்று ஒருதெய்வமசொல்லிற்று-எ-று ௩௫

விளம்புசொற்கேட்டலோடும் வியனகர்யாந்தரெல்லா
முளங்களித்துவகைபூத்தாங் குவாக்கடலெனவார்த்தா
ரிளங்கொடிகிளைஞரோடு தந்தையுமீன்றதாயுந்
துளங்கியதுன்பநீங்கித் தொலைவிலாவின்பமுற்றார்

இ-பு அவ்வாறுசொல்லிய தெய்விகவாக்கைக்கேட்டமாத்திரத்தில்விசாலமுள்ள அந்தநகரத்திலிருக்குமனிதர்களெல்லாருமமனங்களித்துச்சந்தோஷங்கொண்டு பர்வகாலத்தில்ஒலிக்குஞ் சமுத்திரம்போல ஆரவாரித்தார்கள் சாரதையின்தாயதந்தையரும் சுற்றத்தாரும்கலங்கியதுன்பம்நீங்கி ஒழியாதஇன்பம்அடைந்தார்கள்-எ-று. ௩௬

அவ்வழியறிஞர்தாமு மலர்மொழிகூறினோரு
நவ்வியங்கண்ணிகற்பி னலனோரற்புதமென்றஞ்சிச்
செவவிதின்முகக்கிழிட்டுத் திருந்துணாயாடராகி
யிவ்வணமிரண்டுகன்ன லிருந்துளங்கலங்கினாரே

இ-பு அப்போது அறிஞர்களும் பழிகூறியவர்களும் மான்பார்வைபோன்றபார்வையுள்ளசாரதையின் கற்பின்றன்மையானது அற்புதமுள்ளதென்றுபயந்து செவ்விதாகமுகத்தைக்கீழிட்டுக் கொண்டு யாதொருபேச்சுமில்லாதவர்களாய் இவ்வாறு இரண்டுநாழிகைமட்டிலிருந்து மனக்கலங்கினார்கள்-எ-று ௩௭

வேறு,

அர்புதமிஃதசாதமென்றுணரா தகல்விசும்பிடையொலித்தெழுந்த
சொற்படிதென்று தொழுகுலத்தோரிற்சொற்றனர்சிலரவரெல்லாம்
பொற்பறுநாவற் குதிர்த்திடவாயாற்பூச்சொரிந்தனரவைகாணுத்
கற்பினடைமைபுகழ்ந்தினர்கிளைஞர் கன்னியைத்தழுவினர்மகிழ்ந்தே

இ-பு இது அற்புதமானதுசத்தியமானதென்று உணராமல் விசாலமுள்ள ஆகாசத்தில் ஒலித்தெழுந்த அசரீரியாகியவாக்குப் பொய்யென்று பிராமணர்களிற்சிலர்சொன்னார்கள் அவர்களெல்லாரும் அழகுபொருந்தியநாக்கறுந்துவிழும்படிவாயின்வழியாகப்பூக்கள்சொரிந்தார்கள் அவைகளைக்கண்டு கற்புள்ளசாரதையைப்பந்துக்கள்வந்து தழுவிக்கொண்டு அவள்கற்பின்பெருமையைப் புகழ்ந்துபேசிமகிழ்ந்தார்கள்-எ-று ௩௮

செய்தவக்கிழமைவேள்வி நான்மறையோர்சிலரவணிருந்து தெய்வசமுங்
கைதவமுனாயாதனங்களுள்வயிற்றிற் கருப்பமும்வளர்வதாலிந்த
மைதவழ்குழலிக்கெந்தவாறந்தோ வசைபறுமெனநலையுமலு
மெய்தெரிந்திலகலையுணர்ந்தநம்வதியனொருவனீதுரைத்தான்

இ-பு தவஞ்செய்தற்குத்தக்க வுரிமையும்யாகங்கள்செய்யும் உரிமையுமுள்ளபிராமணர்களில் சிலர் அக்கிருத்தியார் பொய்சொன்னாலும் தெய்வமும்பொய்சொல்லாது இவள்வயிற்றில்கருப்பமும்நாளுக்குநாள்வளர்வதினால் இவளுக்குவசைமொழியெவ்வாறுநீங்குமென்று வருந்துங்காலத்தில் உண்மைதெரிந்து சாஸ்திரங்களையெல்லாங்கற்ற ஒருபிராமணன் இந்தவார்த்தைசொல்லுகிறான்-எ-று ௩௯

கண்டுகேட்டறியப் படுவனவானகாட்சியாலாகமவளவா
லுண்டெனவுணருந்திறத்தவாறெல்லா முலகருமாயையின்வடிவே
தண்டலின்மாயைமேபக்கினல்லாராத் தக்கயனையாகையாதலினூற்
பண்டைநாளிலேதாய் நினைவதற்கரிதாம் பான்மையதொன்றெனத்தருமே

இ-பு கண்டுங்கேட்டும் அறியப்படுவதாகிய பிரத்தியட்சபிரமாணத்தினாலும் ஆகமப்பிரமாணத்தினாலும் உண்டென்று அறியத்தக்கமுறையின்படி எல்லாவுலகமும்மாயாரூபமேயொழியாத அந்தமாயையயக்கினல்லாதவேறியமையுமில்லை ஆகையால் அந்தமாயைமுன்னாளில்லாததாயி

ணைப்பதற்கு அரிதாகியபகுதியுள்ள ஒருகாரியத்தைத நானாவகை உண்டாக்கும்-எ-று ௪௰

இந்தமாமாயைதிங்களங்கண்ணி யிறைவிளையாட்டெனத் தணிந்து
சந்தநான்மறையுமாகமங்களுந் தனித்தனி யிவையேயென்று
ஓங்கிநான்மலரிலுலகெலாங்காட்டு மொருவனுமயனுமொன்றறியா
வந்தவரனவனறன் திருவிளையாட்டையார்கொலோவின்னதென்றறிவார்

இ-பு இந்தமகாமாயையானது பிறையையமாலைபோல அணிந்தருளிய பரமசிவனுடையதிருவிளையாட்டென்று நிச்சயித்துச்சந்தமுள்ளநான்குவேதங்களும் இருபத்தெட்டுஆகமங்களும் தனித்தனி முறையிடுமென்றால் நாபிக்கமலத்தில் உலகத்தைக்காட்டும்மாயவனும்பிரமனும் சிறிதும் அறிந்துகொள்ளமாட்டாத அந்தக்கடவுளுடையதிருவிளையாடலையிந்தன்மையதென்று எவர்கள் அறியத்தக்கவர்கள்—எ-று ௪௧

ஓதுநான்மறையீர்கேட்டிர்மின்வயிற்றின் யோசனைகந்திவந்துதித்தாள்
மேதியின்கட்டினமகிடனென்றுரைக்கும் வெந்திறலனவன் பிறந்தான்
றாதுதாழ்பொழில்சூழ்சத்தியபுரத்திற் றாழ்குழலியரனைவருமோ
ரோதுவாற்காலமொன்றிலவ்வயிறூர்ந்தொழில்பெறக்கருப்பமுற்றனரே

இ-பு வேதங்கள்ஓதும் பிராமணர்களே கேளுங்கள் மின்வயிற்றினிடமாகயோசனைகந்திவந்து பிறந்தாள் எருமைவயிற்றினிடமாகக்கொடியசெய்கையையுடைய மகிடாசுரன்வந்துபிறந்தான் மகரந்தங்களுடன் பூமலர்ந்திருக்குஞ்சோலைசூழ்ந்த சத்தியபுரத்திலிருந்ததாழ்ந்த கூந்தலையுடைய மாதர்களெல்லாருமொருகாரணத்தால்ஒருகாலத்திலவ்வயிறுநிறைந்ததுடை தோற்றுதல் முதலாகியபகுதிகள்தோன்றக் கருப்பம் அடைந்திருந்தார்கள் எ-று ௪௨

எரிதவழ்வடிவேலவடல்வசுதேவ னிகலிலரிதளைப்படுநாட்
கரியமெல்லோதியுரோகணிகேளின்றிக் கருப்பமுற்றனளிவையன்றி
யிருமையுமுதவுந்தெய்வதவரத்தா லிருடிகண்முனிந்தசாபத்தால்
வரன்முறையாகித்தொன்றுதொட்டிலகில் வருவனவல்லவும்வருமே

இ-பு தீயுமிழும்வடிவேலையுடைய வசுதேவன்பகைவரால் தளைபட்டிருந்தகாலத்தில் கறுத்தகூந்தலையுடைய உரோகணியென்னும அவன்மனைவிதன்கணவனில்லாமலிருந்தும் கருப்பமடைந்தாள் இவைகளும் அல்லாமலிம்மைப்பயனையும் மறுமைப்பயனையுங்கிருபைசெய்யுந் தேவவரத்தினாலும் முனிவர்கள்சபித்தசாபத்தாலும் வான்முறையாகப்பூர்வகாலந்தொடங்கிவருவனவுகள்மாறிவேறேறுதனமாகவருவதுமுண்டு-எ-று ௪௩

செய்துகொண்ட கணவன் அன்றையதினமேயிறந்துபோனான் பின்புநீபுத்திரனைப்பெற்றது என்ன அதிசயமென்று சொல்லென்றாமனை யிரும்பையொத்தகனமுள்ளவளே கணவனிறந்தபின்புநீ புத்திரனைப்பெறுவதற்குக்காரணமென்னென்றான்-எ-று ௩௬

அந்நிலைமடந்தைநாணமீதூர வலர்கதிர்மதிமுகமிறைஞ்சி
யின்னகைபுரிந்துதமியனேயிகழ்த லோற்பதோமுழுதுணர்நிறைவ
நின்னையானென்றுமறிந்துளனென்னை நீயுமிவ்வாறறிந்துளையா
லுன்னருந்தகையவிந்நிலைக்கிருவே முள்ளமேசான்றெனப்பின்னும்

இ-பு அந்தப்பிராமணன்சொன்ன வார்த்தையைக்கேட்டவுடன்சாரதையானவள் பரந்தகிரணங்களையுடையசந்திரனையொத்தமுகத்தைவணங்கிக்கொண்டு இனியநகைசெய்து தமியனாகிய என்னையிவ்வாறு இகழ்வதுஉமக்குத்தகுதியோ முழுவதும்அறிந்தகணவனே உன்னைநான்என்றும்அறிந்திருக்கிறேன் என்னைநீயும்அவ்வாறேயறிந்திருக்கின்றனை நினைக்கற்கு அரியஇந்தநிலைமைக்குநம்மிருவர்மனமே சாட்சியென்றுசொல்லிப் பின்னுஞ்சொல்கிறாள்-எ-று. ௩௭

முனிவரன்மேனாண்மொழிக்கது மன்றேனன்மொழிப்படி நோன்பியற்றியதும், பனிவரையுமையாளெதிர்நகநுமெதிர்ந்தது பவங்களோரிரண்டினுமுன்னை, வினைவழிசூழ்ந்ததொடர்பெலாமுணர்த்திமெய்வா மளித்ததுமுறையாய்த், தனயனைவிரதப்பயனினிலோர்பாதிதன்னொடும்வழங்கினளணங்கே

இ-பு முன்னாளில்முனிவர்சொன்னதும் அவர்சொற்படிதான்விரதம்அனுஷ்டித்ததும் உமையவள்பிரத்தியட்சம் ஆனதும்அவ்வாறுபிரத்தியட்சமாகிப்போன இரண்டுஜென்மத்தில்உன்னை விதிவசத்தால் தொடர்ந்துவந்தமுறைமைதெரிவித்ததுமன்றி உண்மையாகியவரங்கொடுத்துஞ் சொல்லப்புத்திரனைத்தான் அனுஷ்டித்தவிரதபலத்தில் பாதியுடன்கொடுத்தாள்—எ-று ௩௮

அறைகடலுலகிற்பெறற்கரியதாயவரும்பொருள் பெற்றெனப் பெற்றான், பொறையுடையணங்கின்றகைத்தாய்கிளைஞர் பொருந்திட வன்னவருடனே, மறையினோர்சிறுவற்கொண்டுபேருவகைமகிழ்ச்சியனாகியாங்கன்று சிறையளிபாண்செய்பொதும்பர்சூழ்வைகைச் செந்தமிழ்பாண்டிநாட்டடைந்தான்

இ-பு ஒலிக்கின்றசமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகில் பெறுதற்கரியதாகியஒருபொருளை அடைந்ததுபோல அடைந்தபிராமணன் கற்புநிலையுள்ளசாரதையின்தாய்தகப்பன்பந்துக்கள் இவர்களெல்லாருஞ் சம்மதிக்கதாகத்த

ன்புத்திரனையும் அவளையுங்கூட்டிக்கொண்டு பெரிதானசந்தோஷமும் தன்னைமறக்கும்படியான மகிழ்ச்சியுமுள்ளவனாகி அவ்விடம்விட்டுநீங்கி சிறகினையுடையவண்டுகள் இசைபாடும்பொழில்சூழ்ந்த வைகைநதிசேர்ந்தபாண்டிநாட்டிற்சேர்ந்தான்—எ-று. ௫௯

வாள்விரிபசும்பொற்புதவுயர்மாடமறுகுசூழ்வளநகர்சார்ந்து
நீள்கருங்குழலாள்புணர்முலைப்போக நீங்கருங்கனவெலாநுகர்ந்து
நாள்பலகழியவிறந்தனன்கேள்வ னலனுகர்ந்திவனையேழ்பிறப்புந்
தோள்பிரியேனென்றணங்கனாளுரு சுடர்வரிகதழெரிகுளித்தாள்

இ-பு ஒளிபரந்தபொன்னாற்செய்யப்பட்ட கதவுகளையுடைய உயர்ந்தவீடுகள்நிறைந்த வீதிகளுள்ளவளப்பமுடைய மதுரைப்பதியில் சேர்ந்து நீண்டகரியகுழலையுடையசாரதையின்போகத்தை அநேகநாள் கனவில் அனுபவித்து அதற்குமேல்இறந்துபோனான்சாரதையானவள் இந்தக்கணவனையேழுபிறப்புவரையில் பிரியாமல்இன்பம்அனுபவிப்பேனென்று சுடர்விடுகின்றதீயில்முழுகினாள்-எ-று. ௬௰

தொடுகடலுலகினலநுகர்ந்துடலந்துறந்தவரிருவரும்பின்னும்
வடிமலர்க்கண்ணிகற்பகமிலைந்து மகிணனுந்துணைவியுமாகிக்
கடிநலந்துய்ப்பான்கோடியாதவர்செங் கதிரெலாமொருவழிக்குழீஇ
நெடுவிசும்படைந்ததெனவொளிகெழுமி நிலவுசீர்மானமேவினரே

இ-பு சகரர்களால்தோண்டப்பட்ட கடல்சூழ்ந்த பூலோகத்தினிடத்தில்இன்பம்அனுபவித்து உடலையொழித்த அவ்விருவரும் ஆய்ந்தகற்பகப்பூமாலையணிந்து கணவனும்மனைவியுமாகச்சுவர்க்கபோகம்அனுபவிக்கக் கோடிசூரியபிரகாசமெல்லாம்ஒரேயிடத்தில்சேர்ந்து நெடியதாகிய ஆகாயத்தினிடத்தில்வந்ததுபோல ஒளிபொருந்தி விளங்காநின்றசிறப்பினையுடைய விமானத்திற்பொருந்தினார்கள்-எ-று. ௬௧

ஆங்கினிதமர்ந்தருங்குமக்குவட்டி னணியெனத்திரண்டதிண்புயமுங்
கோங்கிளமுகிழினழகுவீற்றிருந்த குவிமுலைத்தடங்களுநெருங்கத்
தீங்கனியனையமெய்யுறுபுணர்ச்சித் திருநலனுகர்ந்தயிதெவிட்டிப்
பூங்குழலுமையோடிளமதிக்கண்ணிப் புனிதன்வாழ்சிவபதமடைந்தார்

இ-பு இவ்வாறுவிமானத்திலேறிச் சென்றவர்கள்சுவர்க்கலோகத்தில் இன்பமுடன் அமர்ந்துகுங்குமமலையின் அழகுபோலத்திரண்ட திண்ணிய புயங்களும் இளமையாகியகோங்கின் அரும்புபோலக்குவிந்த தனங்களும் நெருங்கத்தக்கதாக மதுரமுள்ளபழவர்க்கத்தைப்போக்க இரண்டுடலும் ஒன்றுபடப்புணர்வதாகிய சிறந்தஇன்பம்அனுபவித்துக்கொண்டிருந்து

பின்பு அதனைவெறுத்துப்பூமாலையணிந்த அளகபாரமுள்ள பார்வதியுடன் பரமசிவன்வீற்றிருக்குஞ்சிவபதம்அடைந்தார்கள்-எ-று. ௬௨.

இன்னதன்மையதிக்கதையெனவிதனை யாவரோயாயினுங்கற்றோர்
பன்னினோர்கேட்டோரிருநிலத்திம்மைப்பயன்விழைந்தனர் நுகர்ந்து
பின்னருமறுமைப்பலன்சிவபதமேபெறுவர் திண்ணமீதென்னச்
சொன்னநான்மறையின் பொருண்முழுதுணர்ந்த சூதன்மாதவர்க் கெடுத்
துச்சொன்னான்

இ-பு நைமிசாரணியமுனிவர்களே இந்தஉமாமகேசுவர பூசாபலசரித்திரம் இத்தன்மையுள்ளதென்றுசொல்லி இந்தச்சரித்திரத்தைஎவர்களேயாயினும் கற்றுணர்ந்தவர்களும் பிறருக்குச்சொன்னவர்களும் கேட்டவர்களும்பெரியதாகிய இவ்வுலகத்தில் தாங்கள்விரும்பியபடியெல்லாம் இம்மைப்பயனை அனுபவித்துப்பின்புசுவர்க்கபதமும் அனுபவித்துச்சிவபதம் அடைவார்களென்பதுநிச்சயமென்று நான்குவேதங்களின் பொருள்முழுவதையும் உணர்ந்த சூதமுனிவர்சொன்னார்—எ-று ௬௩.

பத்தொன்பதாவது

உமாமகேசுர-பூசாபலமுரைத்த-அத்தியாய

முற்றிறு.

ஆ திருவிருத்தம்-௧௭௩௩.



உ

சிவமயம்

இருபதாவது,

உருத்திராட்சமகிமையுரைத்த அத்தியாயம்.



கேட்டமறைவித்தகர் கிளந்துவகைபொங்கி
நாட்டமொருமூன்றுடைய நம்மனருளடியார்
வேட்டணியுமக்கமணி மேன்மையைவிரித்தே
கோட்டமில்குணத்துமுனி கூறுகெனலோடும்

இ-பு உமாமகேசுவர பூசாபலத்தைக்கேட்டநைமிசாரணியமுனிவர்கள் சந்தோஷம்நிறைந்து இரிதத்திரமுள்ள பரமசிவன் அருளைப்பெற்றஅடியார்கள்விரும்பி அணியும்உருத்திராட்சமகிமையை விஸ்தாரமா

படுதலில்லாதகுணத்தையுடைய சூதமுனிவரோசொல்லுமென்ற அளவில் எ-று க

மக்களுணர்வைக்கொடு மதித்துணரவற்றே
முக்கணிறைவற்கடிமை முற்றினர்தரிக்கு
மக்கமணியின்பெருமை யற்புதமிதென்னாத்
தொக்கமுனிவர்க்குமுனி சூதனுரைசெய்தான்

இ-பு மனிதர்கள்உணர்ச்சியினல்மதித்துஅறியத்தக்கதோமூன்று திருநேத்திரங்களையுடைய பரமசிவனுக்கு அடிமைத்தன்மைநிறைந்தவர்கள் தரிக்கும் ருத்திராட்சத்தின்பெருமை அற்புதமானதென்று சூதமுனிவர் கூட்டமாகஇருக்கும் நைமிசாரணிய முனிவர்களுக்குச்சொன்னர்-எ-று. உ

எத்தகையரோனுமிழி வெய்துதொழில்செய்யு
மத்தகையரேனுமுமை யன்பனைவழுத்துஞ்
சித்தமிலரேனுமிறை சீர்மணிதரித்தான்
முத்தரவனென்றுமறை முற்றுமுரைசெய்யும்

இ-பு எத்தன்மையுடையவர்களானலும் இழிவான தொழில்செய்யுந்தன்மையுடையவர்களேயானலும் பார்வதிநேசனைத்துதிசெய்யும் சித்தமில்லாதவர்களேயானலும்பரமசிவனுடையசிறப்புள்ள ருத்திராட்சம்தரிப்பார்களானல் அவர்கள்சீவன்முத்தர்களென்று வேதங்களெல்லாஞ்சொல்லுகின்றது-எ-று. ௩

நம்பரமணின்பயனந்தனிலுதித்தே
யும்பர்புகழக்கமணி பூணுமறிவுள்ளோ
ரம்புவிஇடத்தில்வரு பாவமுமறுத்தே
செம்பொனுலகத்தனையொத்தினிதுசேர்வார்

இ-பு நமதுகடவுளுடைய திருநேத்திரங்களினின்றும் உண்டாகித் தேவர்களால் புகழப்பட்டருத்திராட்சத்தைத் தரித்துக்கொள்ளும் விவேகமுள்ளவர்கள் இவ்வுலகில்நேரிடும் பாவங்களை எல்லாம்நீக்கித் தேவருலகத்தில் சிவனையொத்தினிதிற்சேர்வார்கள்-எ-று ௪

எணகொணதிபற்பல வெதிர்தலைவிலமிழ்க
லென்கொல்பரிவேள்விமுத லியாவையுமியற்ற
லென்கொலெழுகோடியிது மந்திரமுமெண்ண
லென்கொறவமென்றுகலை யந்தியையிருத்தல்

இ - பு பலபல நதிகளிற் சென்று முழுகுவதினு லென்னபலன் அசுவமேத முதலாகிய யாகங்கள்செய்வதினு லென்னபலன் சத்தகோடி மகா

மந்திரங்களைச்செபித்ததினுலென்னபலன் தவமென்று பஞ்சாக்கினிமத்தியிலிருப்பதினு லென்னபலன்-எ-று. ௫

இத்துணையுநல்குபலம் யாததனிலெண்கூ
ஞுத்தபலநல்குவது ருத்திரவிழிப்பேர்
சுத்தமணியென்றுரிய தொல்லைமுனிவோரம்
வித்தகர்தரிப்பரிதில் வேறுபொருளுண்டோ

இ-பு நதிகளில் முழுகுவது முதலாகச்சொல்லப்பட்ட இவைகளெல்லாம் கொடுக்கும்பலன்யாதோ அதனிலுமெட்டுப்பங்கு அதிகமாகக்கொடுக்கத்தக்கது உருத்திராட்சமென்னும் பெயருள்ளநல்லமணியென்று தவத்துக்குரிய புராதனமுனிவர்களாகிய ஞானவான்கள் தரித்துக்கொளவார்கள் ஆதலால்அந்தமணியினுஞ் சிறந்தபொருள்வேறென்றுண்டோ இல்லை-எ-று ௬

வேறு.

ஆயமாமணியாயிரம் புனைந்திடில்வனை
மாயனுஞ்முகன்புரந்தரன் வானவர்முதலோர்
பாயுமால்விடைப் பரனெனப்பணிகுவரென்றுற்
றூயமாமணியிலந் தவர்மனிதரோசொல்வீர்

இ-பு அத்தன்மையுள்ளஉருத்திராட்சமணிஆயிரம்அணிந்துகொள்வார்களானுல் அவர்களை-விஷ்ணு-பிரமன்-தேவேந்திரன்-தேவர்கள் முதலானவாகன் தாவிச்செல்லும் ரிஷபவாகனருடராகிய பரமசிவனென்று கருதி வணங்குவார்களென்றுல் அந்தமணியைத் தரித்துக்கொள்ளுகின்றவர்கள் மனிதர்களோ சொல்லுங்கள்-எ-று. ௭

கடவுணன்மணிசிரத்தி னுங்கரத்தினுங்களத்தும்
படருமார்பினுந் தோளினுங்காதினும்பகுத்து
மிடையுநல்விரலங் குட்டமதனிலுமவிளங்க
வடைவினுலறிந் தணிபவர்சிவபதமடைவார்

இ-பு அந்தஉருத்திராட்சமணியைச் சிரசினிடத்திலும் காதுகளினிடத்தும் கழுத்தினிடத்திலும் பரந்தமார்பினிடத்திலும் தோள்களினிடத்திலும் கைகளினிடத்தும அந்தந்தஇடங்களில்தரிக்கவேண்டிய தொகைப்படிவகுத்துநன்மைதங்கிய அங்குஷ்டவிரலிலும்அணியவேண்டிய கிரமத்தையறிந்துதரித்துக்கொள்ளுகின்றவர்கள் சிவபதம்அடைவார்கள்-எ-று

பொங்குமாணிக்க மாதியமணியொடுபுணர்தடிக்
தங்கமாயறுதகட்டி லிற்குயின்றனகலத்தி

ளங்கன்மாநிலத்தர னக்கமணியினையணிவார்
யங்கயப்பதந்தொழுமவர் பவசுகடல்படியார்

இ-பு விளங்குகின்றமாணிக்கமுதலாகிய ரத்தினங்களுடன்சேர்த்து த் தங்கத்தகட்டிழைசெய்யப்பட்ட ஆபரணம்போல உருத்திராட்சமணி யை இவ்வுலகத்தில் தரித்துக்கொள்ளுகின்றவர்களுடைய திருவடித்தாம ரைகளைத் தொழுகின்றவர்கள்சென்னசாகரத்தில் அழுதார்கள்-எ-று. ௯

அரனிடத்திலன் பற்றவரவனக்கமணியுந்
திருவெண்ணீறுமெய் தரிக்கிலாப்பாதகச்சிதட
ருமியவஞ்செழுத் துணர் கிலார்சீர்பேருலகிற்
கரமெனக்குனா ருமலிதானெனப்பவங்கழிப்பார்

இ-பு பரமசிவனிடத்தில் அன்பில்லாதவர்களும் உருத்திராட்சமும் விபூதியுந் தங்கள்சரீரத்தில் தரித்துக்கொள்ளாதவர்களாகிய மூடப்பாவி களும் மோட்சமடைவதற்குரிய பஞ்சாட்சரத்தை அறியாத தன்மையுள் ளவர்களும் இந்தப்பெரிய உலகத்தில் கழுதையாகவுங்குனாக்குமாயாகவு ம்பிறந்தும் இறந்தும்செனனத்தைக்கழிப்பார்கள்-எ-று. ௰

இந்துசேகரன் மணியக்கவலத்திமேலேற்று
மந்திரந்தருபலத்தை யித்துணையெனமதித்துப்
புந்தியாற்றெரிந் துணர்வதாற்புனலிடைப்படிவோர்க்
கந்தநன்பணிப்படு புனல்சிவகங்கையாமால்

இ-பு சந்திரனைத்திருமுடியில் அணிந்தருளியபரமசிவனுடையமணி யாகிய உருத்திராட்சவடத்தினால் செபிக்கத்தக்க மந்திரந்தருகின்றபலனை இவ்வளவெனமதித்துப் புத்தியினால்தெளிந்து அறிகின்றவர்கள்யாவர்நீரி ல்முழுகுமவர்களுக்கு உருத்திராட்சத்தில் படும்நீர்சிவகங்கைத்தீர்த்தமா ம்-எ-று. ௰௧

என்னுமோர்முக மாதியாயீரேழுமுகமு
நன்னுமன்மணிய வற்றிலோர்மணியினைநாடிப்
புண்ணியோர்கடாம் பூசனைமுறையினிற்புரியிற்
றெள்ளணிலாமம வேணியான்பூசையிற்சிறக்கும்

இ-பு என்னுகின்றவொருமுகமுதலாகப் பதினான்குமுகமும் பொருந் தியிருக்கும் அம்மணிகளில்ஒருமணியினைக்கருதிப் புண்ணியவான்கள்மு றைமையி ன்பூசைசெய்தால்தெளிவாகிய நிலவினையுடையபிறைமதியணி ந்த பரமசிவனது பூசையாகவே சிறக்கும் -எ-று. ௰௨

இன்னதன்மையமணியின தியல்பெலாமெடுத்துப்
பன்னியோதிடிற்பங்கயன் முதலினோர்க்கமையா
தென்னில்யாவரோயதனினை விளம்புவாரெனினு
முன்னமந்தமாமணியினா னிகழ்ந்தமைமொழிவாம்

இ-பு இத்தன்மையுள்ள உருத்திராட்சத்தின் பெருமைகளையெல்லாம் எடுத்துவிவரமாகச்சொன்னால் பிரமன்முதலானவர்களுக்கும் அமையாதென்றால் மற்றையாவர் அதன் பெருமையைச்சொல்லத்தக்கவர்கள் ஆயினும் இந்தருத்திராட்சத்தினால் ஆதியில்நடந்தசரித்திரத்தைச் சொல்லுகிறோம்-எ-று. ௰௩

ஒல்குமாக்குயிலொளித் திடமயிலினமுவப்ப
வல்கறீர்ந்திடமழை முகிலனுதினம்பொழிந்து
மல்குசீர்கெழுகாச்சி மீரத்துக்குமன்னன்
பல்குசேனையான்பத்திர சேனனென்பவனே

இ-பு மாமரத்திலிருக்குங்குயில்கள் சேர்வடைந்தொளிக்கவும் மயிற்கூட்டங்கள் சந்தோஷிக்கவும்குறைவுகள் நீங்கவும்மேகங்கள் அனுதினமும்பொழிந்து நிறைந்தசீர்தங்கிய காஸ்மீரதேசத்துக்கு அரசனும்மிகுந்த சேனையையுடையவனுமாகிய பத்திரசேனனென்பவன்-எ-று. ௰௪

சொற்றமன்னவனளித் திடுமரசிளங்குமரன்
செற்றநீக்குநற்றரும மென்றுரைதிடுஞ்சேயுங்
கற்றபேரமைச்சன றருகானதாருகனு
முற்றவேதநான்முதலி யகலையெலாமுணர்ந்தார்

இ-பு வெற்றியுள்ளஇவ்வரசன் பெற்றருளியஇளவரசாகிய குற்றம் நீங்கிய தருமமென்றுசொல்லப்பட்ட புத்திரனும்கற்றுணர்ந்த மந்திரிபெற்ற புத்திரனாகியதாருகனென்னும் பெயரையுடையவீரனும்வேதசாஸ்திரமுதலாகிய கல்விகள்முழுவதும் ஓதியுணர்ந்தார்கள்-எ-று, ௰௫

அரசநீதியும்படைக கலவிஞ்சையினமைவும்
பொருவிலாவுருச்செல்வியு மிளமையும்பொற்புந்
தருமஞானமுங்கருணையுந் தயாவொடுமாண்பு
மிருவராகிலேறிருவிலக் கிலையெனவளர்ந்தார்

இ-பு இந்தப்புத்திரர்கள் உழிவத்தினால்இரண்டுபேராகக் காணப்பட்டாலும் ராசநீதியும்தனுர்வேதப்பயிற்சியும் ஒப்பில்லாதஉருவமும் ஆயுசும் இளமையும்அழகும் தருமமும்ஞானமும் கிருபையுந்தயாளமும் மாட்சியும் ஆகியஇவைகளில்வேற்றுமை யில்லையென்னும்படி வளர்ந்தார்கள் -எ-று. இவ்விதகுணாதிசயங்களுடன் சிநேகமுமொத்திருப்பவர்கள் இவ்

வுலகத்தில் வேறொருவருமில்லையென்னும்படியிருந்தார்கள் என்று சொல்லினுமமையும். ௰௬

அன்னமைந்தர்க ளிருவருமெல்லைவரம்பறியா
மின்னுமன்மணிக்கலன் களும்விரைநறுஞ்சாந்தும்
பொன்னின்மேனியிற் புனையலராகிவெண்பொடிய
மன்னுமக்கமாமணி களுமேமுற்றும்வனைந்தார்

இ-பு அத்தன்மையுள்ள புத்திரர்களனைவரும் எல்லையினளவு அறியப்படாதபிரகாசிக்குமகல்லரத்தினாபரணங்களும் வாசனைதங்கியசந்தனமும் சௌந்தரியமுள்ள தங்கள் சரீரத்தில்தரித்துக்கொள்ளாதவர்களாய்விபூதியும் நிலைபெற்றதாகிய ருத்திராட்சமுமேசரீரமுழுவதும் அணிந்துகொண்டார்கள்-எ-று. ௰௭

அந்தமன்னனு மமைச்சனுமரிதினிலீன்ற
தந்தமைந்தரைத் தனித்தனியழைத்தினிதுரைத்துக
கந்தநல்விரைத் தேய்வைகள்கலன்பலவளிக்கப்
புந்திவைத்திலர் மறுத்தனர்பொருவருநிலைவார்

இ-பு அவ்வரசனும் மந்திரியும் அருமையாகப்பெற்ற தங்கள் தங்கள் புத்திரர்களைத் தனித்தனியாகஅழைத்து இனிதானவசனங்களைச்சொல்லிவானை பொருந்தியநல்லகூட்டுவர்க்கஞ் சேர்ந்தசந்தனமும் ஆபரணங்களுங் கொடுத்துத் தரித்துக்கொள்ளச்சொன்னார்கள் ஒப்புச் சொல்லுதற்கரியவர்களாகிய அந்தப்புத்திரர்கள் அவைகளில்விருப்பம்வையாமல் மறுத்துவிட்டார்கள்-எ-று. ௰௮

பாலரின்னண மொழுகிடும்பருவத்திலக்கண்
ஞாலமெங்கணும்பராசரனெனப்பெயர்நவிலுஞ்
சீலமாதவனெய்தலுஞ் சென்றெதிரிறைஞ்சி
யேலவேதகும்பூசைக ளியற்றினனிறைவன்

இ-பு அந்தப்புத்திரர்கள் இவ்வாறுநடக்குங்காளில்ஒருநாள்உலகமெங்கும் பராசரரென்றுசொல்லும் பெயருள்ளதவசீலராகிய முனிவர்வரவும் அந்தராசன் எதிர்கொண்டுசென்றுபணிந்து அவர்மனதுக்குச்சந்தோஷமுண்டாகும்படி தகுதியுள்ளபூசைசெய்து-எ-று. ௰௯

அனையமாமுனி மனமகிழ்ந்தாசிகளியம்பக்
கனகவாசனத்திருந்துபுகாவலனிறைஞ்சி
யனைமைந்தனுமமைச்சர்கோன்மதலையுமிணங்கிப்
பனகமாமணி குயிற்றியபணியெலாமிகழ்ந்தே

இ-பு அந்தப்பராசரமுனிவர் மனமகிழ்ந்து ஆசீர்வசனஞ் சொல்ல அரசனவன் அந்தமுனிவனைப்பொன்மயமான ஆசனத்தில் வீற்றிருக்

கச்செய்துபணிந்து என்புதல்வனும் மந்திரிகுமாரனும் ஒருவரைவிட்டொருவர் பிரியாத சினேகமுள்ளவர்களாய் நாகரத்தினம்பதித்த ஆபரண முதலான பல ஆபரணங்களையிகழ்ந்து—எ-று ௨௰

கைதொடுக்கொடார்கண் கொடுபார்த்திடார்கடிந்து
துய்யபூதியுந்திவ் வக்கமணியுமேதுலங்கு
மெய்யிலாயணிந்திருந்தனர் வினையமேதறியேன்
ஐயனேயெனக்குரை யெனவருந்தவன்கேளா

இ-பு அந்தஆபரணங்களைக் கையினால்தொடாதவர்களாயுங் கண்களால் பாராதவர்களாயும் நீங்கிவிட்டுப் புனிதமாகிய விபூதியும் உருத்திராட்சங்களுமே சரீரத்தில் பிரகாசிக்கும்படி தரித்துக்கொண்டிருக்கிறார்கள் அதன் காரணமென்னவென்று அடியேன் அறிந்திலேன் ஐயனே எனக்குச் சொல்லுமென அந்தவார்த்தையைப் பராசரமுனிவர் கேட்டு—எ-று ௨௧

மண்டுசெய்யபோர் கடந்தவென்மன்னவரேறே
பண்டிவர்க்குறு பிறவியிற்பழகியதொடர்பே
கொண்டடைந்தவிப் பிறப்பினுமந்நெறிகொண்டா
ருண்டுமற்றதனாவரன்முறைகேளெனவுரைத்தான்

இ-பு எதிர்த்துவருகின்ற பகைவருடையசேனைக்கடந்த வேலாயுதத்தையுடைய ராசசிங்கமே பூர்வ இவர்களுக்குப் பொருந்திய பிறப்பிலே பழகிய தொடர்ச்சியைக்கொண்டு இப்போதுவந்த பிறப்பிலும் அந்தப் பழக்கத்தை விடாமலிருக்கின்றார்கள் அதற்கொருகாரணமுண்டு அதைக் கிரமத்தைக் கேளென்று சொல்லுகின்றார்—எ-று ௨௨

மாடமாளிகைக் குடுமியின்முகிறவழ்மனையி
லாடரங்கினிவார்ந்தபொற்கொடிக்குழாமாட
லோடுமாமதிக்கறை துடைத்திடுவபோலொளிருங்
கோடில்சீர்த்திகொள பெரும்பதிவளநந்திக்கிராமம்

இ-பு மாளிகைகளின் உச்சியிலும் மேகந்தவழ்கின்ற வீதிகளிலும் நாடகசாலைகளிலும் கட்டியிராநின்ற பொற்கொடி கூட்டம்மேலே அசைதலுடன் ஆகாயத்திற் செல்லுகின்ற சந்திரனுடைய களங்கத்தைத் துடைப்பது போல பிரகாசித்துக்கொண்டிராநின்ற கெடுதலில்லாத சிறப்பினையுடைய பெரும்பதியான வளப்பம்பொருந்திய நந்திக்கிராமமென்றொரு நகரமுண்டு-எ-று ௨௩

அப்பெரும்பதி தன்னின்மானங்கையென்றதையுந்
துப்பெனச்சிவந் தொளிர்கனிவாயிளந்தோகை
யொப்பருந்தவப் பொதுமகளோவியர்தீட்டுந்
திப்பியதருவா ருயிர்பெற்றெனச்சிறந்தாள்

இ-பு அந்தப்பெரியநகரத்தில் மானங்கையென்னும் பெயரினையுடைய பவளம்போலச்சிவந்துபிரகாசிக்கும் வாயினையுடையவளாய்த்தபோபலத்தையுடைய ஒருகணிகைசித்திரக்காரரெழுதும் திவ்வியமானசித்திரமானது உயிர்பெற்றிருப்பதுபோல அழகிற்சிறந்தவள்-எ-று. ௨௪

மேவுபொன்மனை முன்றில்வாய்வெள்ளியின்றாய்
வாவுமாப்படை வேந்தர்தமைந்தருமதிநூற்
காவன்மந்திரக் கிழவர்தங்கான்முளையவருந்
தூவுநாணிதியெட்டியர்குமாரருந்தொகுவார்

இ-பு யாவரும்விரும்பத்தக்க பொன்மயமான அவள்வீட்டின்முன்றிலிலிடத்து வெளியில்லாமல்தாவிச் செல்லுங் குதிரைப்படை முதலாகிய படைகளையுடைய ராசகுமாரர்களும் மந்திராலோசனைக்குரிய சாஸ்திரங்களைகற்றுணர்ந்த மந்திரிகளுடைய புத்திரர்களும்மிகுந்த திரவியங்கள்கொடுக்கத்தக்க வைசியப்புத்திரர்களும் கூட்டமாகச் சேர்திருப்பார்கள்-எ-று

நீணிதிப்பெரு வண்மையிற்பெண்மையினிலமேற்
காணலாவதோர் திருமகளிவளெனக்கவினு
மாணிழைக்கொரு கங்குலின்மருவுமாரளித்தா
லாணிதீர்ந்தபொன் னூயிரக்கழஞ்செனவறைவார்

இ-பு மிகுதியாகியதிரவியமுள்ள வளப்பத்தினாலும் பெண்தன்மையினாலும் பூலோகத்திலெல்லாருமபார்க்கும்படி வந்திருக்குந் திருமகளேயிவளென்றுசொல்லத்தக்க சௌந்தரியமுள்ள அந்தக்கணிகைமாத்துக்கு ஒருராத்திரிவருகின்றவர்கள்கொடுக்கும் உரையாணிவைத்துமாற்றுப் பார்க்கவேண்டுவதல்லாத உயர்ந்தபொன்தொகை ஆயிரங்கழஞ்சென்றுசொல்லுவார்கள்—எ-று ; ஒருகழஞ்சு-பத்துபணவிடை ௨௫

நாளுமன்னவ ணறுமலர்விதிமுறைதூவி
வேளைவென்றகண் விமலனைவழிபடும்வேட
மாளுமன்பரை யரனெனவருளொடுபணியுங்
கோளெறிந்தெதிர் வறியவரிரவலர்கொடுக்கும்

இ-பு அத்தன்மையுடையவள் நாள்தோறும்வாசனைதங்கிய மலர்களால் ஆகமவிதிப்படி அருச்சித்து மன்மதனைவென்ற நெற்றிக்கண்ணையுடைய பரமசிவனை ஆராதனைசெய்யவும் திருவேடமுடைய அன்பர்களைக்கண்டுசிவமெனஉள்ளமுருகி வந்தனைசெய்வாள் இதுவுமன்றிக்குற்றம்நீங்கிய தரித்திரர்கள்யாசகர்வந்தால் இவர்களுக்குத்திரவியங்கொடுப்பாள்-எ-று. ௨௭

அறிவுகொண்டுயர் பொதுமகண்டனவிலரங்கிற்
பொறிகொள்சேவலும் வானரக்குழவியும்பொருந்தத்
தறியினிறபிணித்தரணக்கமணிபுனைதாமஞ்
செறிவுறுத்தவை யிரண்டுக்குமெழில்பெறச்சேர்த்தி

இ-பு மெய்யறிவுஉடையவளாயுயர்ந்த அந்தக் கணிகையானவள் நடனஞ்செய்யும் நாடகசாலையில்புள்ளிகளைபொருந்திய சேவலும் வானரக்குட்டியும்பொருந்தத்தூணிற்கட்டி உருத்திராட்சமணிகள்கோத்தமாலையை அவ்விரண்டுக்கும் அழகுபெறத்தரித்து-எ-று ௨௮

வேறு..

வானரமுடன்பழகி வாரணநடித்தல்
கானமர்கருங்குழலி தோழியரொடுங்கண்
டானனம்வியர்ப்பநகை செய்துவிளையாடித்
தானினதமர்ந்துபல நாளுமளிசாலாள்

இ-பு வானரக்குட்டியுடனேபழகிக் கோழிநடிப்பதைவாசனைதங்கிய கரியகுழலாகத்தையுடையவள் தோழிகளுடன்பார்த்துமுகம்வேர்க்கும்படிநகை செய்து விளையாடியினிதாக அமர்ந்து நாள்தோறும் அதுகளிடத்தில்தயை வைத்திருந்தாள்-எ-று ௨௯

இன்னணநிகழ்ந்திட விருந்தவண்மனைக்கண்
மின்னுசடிலப்பசர் வேடநனிமேவிப்
பொன்னினுயர்பூதியொடுமக்கமணிபூணா
மன்னினன்மணிககடக முன்கைவணிகேசன்

இ-பு இவ்வாறுநடக்கும்படியிருந்தவள்வீட்டினிடத்தில் பிரகாசியாநின்றசடாமகுடத்தையுடையமுனிவர்வேடங்குறைவில்லாமற்பொருந்திப்பொன்னிலுஞ்சிறந்தவிபூதியும் ருத்திராட்சமுந்தரித்துக்கொண்டு ரத்தினகடகம்பொருந்திய முன்னங்கைகளையுடைய வைசியத்தலைவனாகிய ஒருவன்வந்தான்-எ-று. ௩௰

கண்டனளெழுந்தனள் கலாமதிமுடித்தோன்
றொண்டனிவனென் றுமுறையோடுதொழுதெந்தாய்
மண்டலமதிக்கவட ரிட்டுமணிதுற்றிக்
கொண்டகடகத்தின்விலைகூறுணரவென்றுள்

இ-பு மானந்தையென்பவள்கண்டெழுந்து இளந்திங்கள் அணிந்தசாம்பசிவமூர்த்தியினுடைய அடியாரிவரென்று முறைமையுடன்பணிந்து என்னிறைவனே இவ்வுலகத்தையெல்லாம் விலையாகமதிக்கும்படிபொன்தகடிட்டு மணிபதித்து அணிந்துகொண்டிருக்கும்ரத்தினகடகத்தின்விலையாதோ எனக்குத்தெரியச்சொல்லென்றாள். ௩௧

சந்திரனெனத்திகழ் தனிக்குடைநிழற்கீழ்
வந்தமன்னர்முன்கையின் மணிக்கடகமியாவு
மிந்தவயிரக்கடக மொப்பதலவென்றுக்
குந்தநகைவல்லிகவர் வேட்கையொடுகூற

இ-பு சந்திரனைப்போல விளங்குகின்றஒப்பற்ற குடையின்கீழ் வருகின்றமன்னவர்முன்கையில் அணிந்திருக்கும் ரத்தினகடகங்களெல்லாம் இந்த வயிரமணிக்கடகத்தை ஒப்பாகாதென்று இறகின்குருத்துப்போன்ற கையையுடையாளவாங்கிக்கொள்ளும் விருப்பத்துடன்சொல்ல-எ-று. (௩௨)

வல்லியுரைசெய்தது மனத்துணர்குறிப்பு
நல்லவனுணர்ந்துநகை யாடிமடநல்லா
யெல்லொளிமணிக்கடக மின்னவிலையென்னச்
சொல்லுவனதற்குநிதி யீதறுணிவாயோ

இ-பு அதற்குஅவள்சொல்லியதும் மனதில் எண்ணியகுறிப்பும் வந்த வைசியன் அறிந்துகொண்டுநகைசெய்துபெண்ணே சூரியனைப்போலப்பிரகாசிக்கும் இந்தரத்தினகடகம் இன்னவிலையென்றுசொல்லுகிறேன்நீ அதற்குப்பொருள்கொடுக்கத்துணியமாட்டாயோ—எ-று ௩௩

என்றவனுரைத்தலு மிலங்கிழையியம்புங்
குன்றனையதோள்வணிக கொங்கைவிலைகூறும்
புன்றொழிலினர்கள்பொருள் கொண்டுபொருணல்கி
னன்றவர்கள்பெண்மையவர் நன்னலமுமன்றே

இ-பு இவ்வாறுவைசியன்சொல்ல மாநங்கைசொல்லுகிறாள் மலைபோன்றபுசங்களையுடைய வணிகேசனே தனங்களை விலைக்குவிற்கும்புன்றொழிலையுடையவர்கள் ஒருபொருளைவாங்கிக்கொண்டு அதற்குவிலையாகத்திரவியங்கொடுத்தால் அந்தப்பெண்களுடையபெண்மையும் இன்பமும் நன்றேயாகும்—எ-று. ௩௪

வாழ்பொதுநலக்கணிகைமாதர்நெடுமாயன்
வீழுறுகவுத்துவமும் விற்குநரெதிர்ந்தாற்
றாழ்கலவியிற்றழுவி யேகவர்வதல்லாற்
சூழ்நிதிவிலைக்குதவ றொல்லுலகிலுண்டோ

இ-பு வாழ்கின்றயாவர்க்கும்பொதுவாகியஇன்பத்தையுடைய கணிகைமாதர்கள் மாயன்விரும்புகின்ற கவுத்துவமணியே யானாலும் விற்பவர்கள் கொண்டுவந்தால் தங்கியபுணர்ச்சியினால் தழுவிவாங்கிக்கொள்ளுவதல்லது திரவியம விலைகொடுப்பது பழமையாகிய இவ்வுலகத்திலுண்டோ இல்லை-எ-று ௩௫

அன்பினொடுசங்கண மென்கைதனிலிட்டால்
முன்பதின்மூன்றுநா ளுமுல்லைமடவாளி
னின்பமுறமெல்லணையில் யானுனைவனென்று
மின்பொருவுநுண்ணிடை விளங்கிழையியம்ப

இ-பு இறைவனே அன்புடன் இந்தக்கடகத்தை யென்கையிலிட்டால் மூன்றுநாள்வரைக்கு முனக்குரியமுல்லைமாலையணிந்த மனைவிபோல இன்பம் உண்டாகச்சயனத்தில் உன்னைநான் உணைவேனென்று மின்போலத் தெரிந்துந்தெரியாமலுமிருக்கும் நுண்ணியஇடையையுடைய கணிகை சொல்ல-எ-று. ௫௬

நன்குரைசெய்தாய் மணிசெய்நற்கடகமீவே
னென்குலமடந்தை யினிசைந்தினமூன்றும்
புன்கணிலையிற்பிறர்கள் போகநுகரேனென்
றின்கனிமொழிக்கணிகை குளிர்தியென்றான்

இ-பு கணிகைமாதே நன்றாகச்சொல்லினை இந்தக்கடகத்தை உன்னயிறகொடுக்கிறேன்கொடுத்தால் எனக்குரியமனைவிபோ லிருப்பதாக நீசொன்ன மூன்றுநாளுமசொன்னமொழிதவறாமற்பிறரொருவர் போகத்தைஅனுபவிக்கிறதில்லையென்று ஒருசொல்வார்த்தைசொல்லென்றான்-எ-று. ௫௭

வேறு

புனிதவாணிகன் கூறியமொழிக்கவள்பொருந்தி
மனிதரேயன்றி வாசவன்றனிவண்வரினும்
முனிவதன்றியே யணைகலேன்மூன்றுநாள்காறும்
பனிகொள்வேணியெம் பரன்றிருவாணையென்றிசைத்தாள்

இ-பு நின்மலனாகிய அந்தவர்த்தகன்சொல்லியவார்த்தைக்கு அவள் சம்மதித்து மனிதர்களையல்லாமல் தேவேந்திரன் இவ்விடத்தில்வந்தாலும் இந்தமூன்றுநாள்வரையில் நீக்கிவிடுவேனே யல்லாமல் நான்புணரேன் குளிர்ச்சிதங்கிய சடைமுடியையுடைய சிவனது ஆணையின்படியென்றுசொன்னாள்-எ-று. ௫௮

என்னுமானந்தை தனக்கவனிருள்கெடவிமைத்த
மின்னுமாமணிக் கடகத்தைவிருப்பொடுநல்கிப்
பின்னுமீதொருமா ணிக்கலிங்கநீபேணி
யன்னமேபுரந்தெனக் குமீட்டளித்தியோவென்றான்

இ-பு என்றுசொல்லிய மானங்கையென்பவளுக்குவணிகன் இருள் நீங்கத்தக்கதாகப்பிரகாசிக்கும் இந்தக்கடகத்தைவிருப்பமுடன் கொடுத்துமறுபடி ஒருமாணிக்கலிங்கத்தைக்காட்டி அன்னம்போல்பவளேயிதை

ப்பத்திரமாகவைத்திருந்து மறுபடியெனக்குக்கொடுப்பையா வென்றான்-எ-று, ௩௯

அணங்குநீர்மையள் னநேசெய்வனென்றதனை
வணங்கிவாங்கித்தன் னாடகவரங்கினில்வைத்தே
யிணங்குமாலைவந்திறுத்தலுங்கணவன்மார்பிறுகச்
சுணங்குநவாய்ந்தெழுவன முலைச்சுவடுறத்தோய்ந்தாள்

இ-பு தெய்வப்பெண்ணையொத்த தன்மையையுடைய மாணங்கையென்பவள் அப்படியேசெய்கிறனென்று சொல்லிவணக்கஞ்செய்து அந்த லிங்கத்தை வாங்கிக்கொண்டு தன்னுடையநாடகசாலையினிடத்தில் வைத்து மாலைப்பொழுது வந்தவளவில் தன்கணவனாகியவணிகன்மார்பில்தேமலைப் பொருந்தி வளர்ந்திருக்கும் அழகியதன்தனங்களின் தழும்புபொருந்தியழுந்தப் புணர்ந்தாள்-எ-று. ௪௰

காமவேளுநல் லிரதியுமென்னவேகலந்து
தூமமல்கியசேக் கையிறையுயில்கொளநடுநா
ளியாமமெய்திய வேலையிலெரியழல்கதுவித்
தாமநான்றபொன் னரங்கினைமுழுதகுவான்சணமந்தே

இ-பு மன்மதனும்ரதியும்போலக் கலந்துவாசனைப்புகை கலந்தசயனத்தில் நித்திரைசெய்யும் அர்த்தராத்திரியானவேளையில்ரத்தினமாலைகள் கட்டியபொன்னுலாவியநாடகசாலை வேகும்படிதியானதுபற்றிக்கொண்டு-எ-று. ௪௧

மஞ்சுபோற்றவழ் புகையொடுபுலிங்கங்கண்மலியச்
செஞ்சிகைக்கணக்க தழெரிபறறுபுசெலலத்
அஞ்சுமேல்வையி லிருவருந்துணைவெனவிழியா
வஞ்சியோடின்ன முஞ்சேவலுமென்ன

இ-பு அவர்கள்நித்திரைசெய்யும்போது மேகம்போலத் தவழ்கின்ற புகையுடன் தீப்பொறிகள்நெருங்கத் தகதகாகச்சிவந்தசிகைகளை விட்டெழுகின்ற அக்கினியானது அதிவேகமாகப்பற்றிக்கொண்டு வீடுமுழுவதும் எரிக்கவிருவருந்திடுக்கிட்டுநித்திரைநீங்கிப்பெட்டையன்னமும் ஆணன்னமும் ஓடுவதுபோலப்பயந்து ஓடினார்கள்-எ-று. ௪௨

ஓடும்வேலையினெண் டொடிபொருக்கெனத்திரும்பி
யாடுநாடகவரங்கி னிலரன்மணையணிந்த
கோடுவாழ்சிறு குரங்கொடுசெஞ்சிரைக்கோழி
நீடுவாளவை கண்டுறுபிணியினைநெகிழ்த்தாள்

இ-பு அவ்வாறுஓடும்போது மாணங்கையென்பவள் விரைவில்திரும்பி நிர்த்தனஞ்செய்யும் நாடகசாலையில்ருத்திராட்சந் தரிக்கப்பட்டகுரங்கு

க்குட்டியினையும் சிவந்தஉச்சிக்கொண்டையையுடைய கோழியினையுங்கேடிக்கண்டு கட்டியிருந்தகயிற்றை அவிழ்த்துவிட்டாள்-எ-று கோடுவாழ்மாக்கொம்புகளிற் சஞ்சரிக்குங் குரங்கு ௪௩

பிணிநெகிழ்த்தலுங் குரங்குமச்சேவலும்பெயர்ந்து
கணவெறிக்குழாங்க ளுறுமெல்லையைக்கடந்த
வணிகனல்கிய வலிரொளிமாணிகலிங்க
முணருமுன்னமே நீறெழவெந்தொழிந்ததுவே

இ-பு- கட்டவிழ்த்து விட்டமாத்திரத்திற்குரங்குங் கோழியும்பற்றிக்கொண்டெரியுங் கூட்டமாகியதீயிருக்குமிடத்தைவிட்டு அப்புறம்போய்விட்டதுகள் அந்தவர்த்தகன்கொடுத்தகமாணிக்கலிங்கமானது மானந்தைக்கு ஞாபகம்வருவதற்குமுன் வெந்துநீறாய்விட்டது.எ-று. ௪௪

தூரவேகின்றனனது கண்டதொல்வணிக
ஞரிகாண்டியோ நான்றருசிவலிங்கமதன்
மூரிவெங்கனன் முருகிடச்சாம்பராய்முடியத்
தீருமின்றுடன் வாழ்வெனத்துயரொடுசெப்ப

இ-பு தூரமாகப்போய்நின்றவர்த்தகன்மாணிக்கலிங்கம்வெந்துபோவதைப்பார்த்துப்பெண்ணே நான்உன்கையிற்கொடுத்தசிவலிங்கப்பெருமான் மலமுள்ளதாகியதீயானது பற்றுமுதலால்வெந்து சாம்பலாய் விட்டதைக் கண்டனையோ ஆதலால் என்வாழ்நாளின்றேமுடிந்துவிடுமென்று துயரத்துடன்சொன்னான்-எ-று. ௪௫

இறைவளைக்கையா ளிணைமுலைக்குவட்டிடையேற்றி
மறுகிநம்பனேசங் கரவென்றுவாய்விட்டுக்
கறைதரித்தவேற் கண்ணினீர்கலுழியாயொழுக
வறிவழிந்தவள் ரற்றலுமவ்வணிகனுமறைவான்

இ-பு அதைக்கேட்ட மானந்தையானவள் வளையலணிந்தகைகளால் இரண்டுதனத்தின்மேலும் அடித்துக்கொண்டுதுயரமுற்று நம்பனேசங்கரனேயென்று வாய்திறந்துஉரம்படியத் தக்கவேல்போன்றகண்களில் ஆறுபோலநீர்பெருகும்படி அழுது அறிவழிந்து சோர்ந்துவிட்டாள் அதைக்கண்டவணிகன் சொல்லுகிறான்-எ-று ௪௬

நரந்தவார்குழற் புணர்முலைநறுமலர்க்கொம்பே
யிரங்கலெம்மனோ ரித்துயர்வரினுயிர்க்கிரங்கா
ராங்கிலேல்சிவ லிங்கம்வெந்தடலையாய்விடுமேற்
புரந்தராதியர் விலக்கினிமழலிடைப்புகுவேன்

இ-பு மயிர்ச்சாந்தணிந்தநீண்டஅளகத்தையும்நெருங்கிய தனங்களையுமுடையநறியபூங்கொம்புபோல்பவளேநீதுயரப்படவேண்டாம்எம்போ

லியருக்கு இவ்விததுன்பம்நேரிட்டால் உயிரைவிட்டுவிடுவார்களே [illegible] மல் அதையெப்படிவிடுகிறதென்று இரங்கார்கள்நாடகசாலையில் [illegible] ளசிவலிங்கமென்கிற் சாம்பலாய்விடுமானால் தேவேந்திரன்முதலா[illegible]வா களவந்து விலக்கினாலுந் தீயில் விழுந்துவிடுவேன்-எ-று. ௪௭

மற்றுநீயொன்று நினைகலையணங்கேயுடைமடியப்
பற்றுமிகதனை யடுக்கியேபடுகணக்கவளர்க்கக்
கற்றையங்குழன் மடந்தைநீயணியெனக்குறைச்
சிற்றிடைக்கொடி யுருமுவீழரவெனத்திகையா

இ-பு நீவேறொன்றும்நினைக்காதே தீயில்விழுந்து நானிறப்பதற்கு உலர்ந்தவிறகுகளையடுக்கி எரியத்தீமைமூட்டும்படி நெருங்கிய அளகத்தையுடையவளே நீ உத்தரவுசெய்யென்று வணிகன்சொல்லச்சிறிய இடையையுடையவளாயக் கொடிபோன்றமாணங்கைதிகைத்து-எ-று ௪௮

வேண்டுநீணிதி யளிக்குவனவேதியர்க்காற்றிப்
பூண்டமாவிரதங்களையும்வழுவறப்போற்றி
யாண்டைப்பெரு வணிகநீயழல்புகும்வண்ண
மீண்டுநீநேர்க்குற வாராயிற்றுநீயென்றாள்

இ-பு யாதொன்றுக்கும் அஞ்சாதநிலைமையையுடைய வணிகேசனே வேண்டியதிரவியங்கள்கொடுக்கிறேன்பிராமணர்களுக்குக்கொடுத்துச்செய்யத்தக்கவிரதங்களையும்பழுதறச்செய்து இப்போதுநீதீயில்விழும்படிநேரிட்டகுற்றம் நீங்கத்தக்கதாகப் பெரியோர்களைக்கொண்டு பிராயச்சித்தஞ்செய்யென்றாள்-எ-று- ௪௯

நிலைபொறுக்கலாச்செம் பொனுனிறைகுடிப்பிறந்தேன்
கலம்பொறுக்கலாது கப்பிறுய்வறியர்போற்கருதிக்
குலம்பொறுக்கலாவிழிந்த சொற்கூறுதறவிர்ந்து
தலம்பொறுக்கலாக்கநெறிவளர்த்திடச்சமைவாய்

இ-பு பூமியுந்தாங்கமாட்டாத மிகுந்தபொன்னையுடையகுடியிற் பிறந்தேன் ஆபரணங்களைத் தாங்கமாட்டாத நுண்ணிய இடையையுடை[illegible]ளே நீஎன்னைவறுமையாளர்போலநினைந்து எங்கள்குலம் பொறுக்க[illegible] இழிவானவார்த்தை சொல்லுவதைவிட்டு இவ்வுலகத்தார்பார்த்துச்சகிக்[illegible]க்கூடாததான வேகமுள்ளதீமூட்டுவாயாகவென்று வணிகன்சொன்[illegible] -எ-று. ௫௦

என்றுசீறியசுடுசொலால் வணிகர்கோனிசைப்பக்
குன்றுபோலுயர் கொங்கையாண்மறுப்பதுகொளாது
பொன்றுவானென்று பொருக்கெனச்சிலதுணைக்கூவித்
துன்றுமாரழலுவர் படுத்தியற்றுமினென்றாள்

இ-பு இவ்வாறுகோபித்துச்சுடுசொல்லினுல் வணிகேசவன்சொல்லவே பொன்மலைபோல்வளர்ந்த தனத்தையுடையமானந்தையானவள் தான்தடுப்பதையொத்துக்கொள்ளாமல்இறந்துபோவானென்றுநிச்சயித்துகொண்டு ஏவலாளிகளை அழைத்து விறகுகளிட்டுவிரைவாகத் தீமூட்டுங்களென்றுள் — எ - று ௬௧

சிலதர்மானந்தை பணியினைத்தலைகொடுசென்றுங்
வலகிலாத்லுவரடுக்கினா ரழல்கொளுவி
யிலகுபேரழற்சிகை யெழவிழுதுபெய்குழிசி
பலவும்வீசினரொழுந்தது கொழுங்கனற்படலம்

இ-பு அந்தஏவலாளிகள் மானந்தைகட்டளையிட்டவார்த்தையைச் சிரசிலேற்றுக்கொண்டுபோய் அளவில்லாத விறகுகள் அடுக்கிததீமூட்டித் தீச்சிகையேலோங்கும்படி குடங்குடமாகநெய்யை ஊற்றினார்கள் அப்படிஊற்றின அளவில் கொடியதீயானது(கற்றைகற்றையாகச்சிகைவிட்டுக் கொண்டுமேலோங்கிவளர்ந்தது-எ-று. ௬௨

கண்டதாபதவணிகர் கோன்கடிபுனன்மூழ்கி
மண்டுதீயினைமும் முறைவலஞ்செய்துவணங்கித்
துண்டவான்பிறை மௌலியான்றிருவடிதொழுதே
யண்டகூடமாட்டாவொலியெழவனற்குளித்தான்

இ-பு அதைக்கண்டவணிகருள்ளிவன் வாசனைதங்கியநீரில்ஸ்நானஞ்செய்துகொழுந்துவிட்டெரியுந்தீயைமூன்றுபிரதட்சிணஞ்செய்துவணங்கிஇளம்பிறையணிந்தருளிய சடாமகுடத்தையுடைய சிவபெருமான்திருவடிகளைதொழுது அண்டகூடவரையில் ஓசையெழும்படி அந்தத்தீயில்மூழ்கினுன்-எ-று ௬௩

வேறு

இந்தவாறுகண்டுதுன்ப மெய்தினின்றவேழையும்
பந்தமாய்கேளிர்தம் முகம்பரிந்துபார்த்திவண்
மூந்துமங்கியிற்பட முடிந்தநாயகன்முன்னமே
தந்தகங்கணமிதற் கியைந்தவாறுசாற்றுகேன்

இ-பு அந்தவணிகேசன் தீயில்முழுகினதைக்கண்டு துயரங்கொண்டுநின்றமானந்தையானவள் தனக்குப்பந்தமாயிருக்கிறசுற்றத்தார்முகங்களைப் பார்த்துச்சுற்றத்தவர்களே கேளுங்கள் இப்பொழுது இந்தத்தீயில்விழுந்து இறந்துபோனவணிகேசன்கொடுத்தது இந்தக் கங்கணம் இதைக்குறித்துநடந்த செய்திசொல்லுகிறேன்-எ-று. ௬௪

இக்கடகநல்விலைக்கு மூன்றுநாளியைந்துநின்
புக்கின்மேவுகற்பின்மாதுபோலவாழ்வனென்றியான்

றொக்கநாளிலர்ருயிர் துறந்துநாய்கன்மாய்ந்ததா
லொககயானுமாரமுற் குளிபபதன்றியுய்கலேன்

இ-பு இந்தக்கடகம்பெறுமானவிலைக்காக மூன்றுநாள் உனமனையில்வாழும்மனைவிபோலஉன்னுடன்நான் வாழுகிறேனென்று சம்மதித்துக்கொண்டேன் அந்தமூன்றுநாளுக்குள் வணிகேசன்உயிர் துறந்து இறந்ததினாலேநானும் அவனுடன் இந்தத்தீயில்விழுந்து இறப்பதல்லது இனியுயிருடன்வாழேன்-எ-று. ௯௯

அன்னலிங்கமென்கையிலளித்தபோதுமற்றவன்
சொன்னதுண்டெனாவியாய்த் துணிந்துபோற்றிவையென
வென்னைபாவியேன்பிழைத்த வாறிலிங்கம்வெந்ததாற
றன்னைநேரிலாதசைவ நாயகன்சாதனமேயினான்

இ-பு அந்தச்சிவலிங்கத்தை வணிகேசன்என்கையிற்கொடுத்தபோது இது என்உயிர்போலிருப்பது ஆகையால் பத்திரமாகவையென்று சொன்னதுண்டு அப்படியிருக்கப்பாவியாகிய நான்மதிமோசம்போனேனே இது என்னகாரணம சிவலிங்கம்வெந்துபோய்விட்டபடியால் தனக்கொப்பில்லாத சைவமயப்பத்திமையுள்ள அவ்வணிகேசன் இறந்துபோனான்-எ-று

என்னிமித்தமாகவந் தகித்துணையுமாதலால்
வன்னியிற்குளிப்பதன்றி வாய்மைபொய்த்துவாழ்வனோ
முன்னுரைத்தவாகமம புராணம்வேதமுதலவாய்ச்
சொன்னசொன்னயாவையுந்தொகுத்தவுண்மையல்லவோ

இ-பு இத்தனைகாரியமும்என்னிமித்தம் நேரிட்டதாகையால்தீயில்விழுவதல்லதுசொன்னசொல்தவறிஉயிர்வாழ்கிலேன் சொன்னசொல்தவறலாகாதென்றுநம்முடைய ஆண்டவனால்சொல்லப்பட்ட ஆகமங்கள்புராணங்கள்வேதங்கள்முதலாகிய எல்லாவற்றிலும் விதித்திருக்கிற உண்மையல்லவோ-எ-று. ௱௭

வேலைவேலையுள்ளடங்கி மீதுயாந்துநிற்பதுங்
காலைமாலைபானுவெண் கலாமதியுதிப்பது
ஞாலமாதிபூதமைந்து நணணியென்றுநிற்பது
மாலகாலமுண்டவீச னுண்மையன்றியாகுமோ

இ-பு சமுத்திரமானதுகரைக்குள்அடங்கி மேலுயர்ந்துநிற்பதும் உதயகாலத்திலும் மாலைகாலத்திலும்முறையாகச்சூரியன்உதிப்பதும் சந்திரன் உதிப்பதும் பிருதிவிமுதலாகியபஞ்சபூதங்கள் எப்போதுமிருப்பதும் ஆலகாலம்உண்டபரமசிவனுடைய ஆக்கினையன்றி உண்டாகாதலால்-எ-று

வாய்மைமதப்பினார்களிந்த மாநிலத்திலீனராய்க
தீய்மையுற்றுமேலுளோர் பழிக்கவேதிரிந்துபின
றாய்மையற்றகும்பியுட் டுளிந்தழுங்குவாரொனு
வாய்மனுப்பகர்ந்தவேத சமைமுற்றுமுறையுமே

இ-பு சொல்லியவார்த்தை தப்பியவர்கள் இவ்வுலகத்தில் ஈனர்களாய்ப் பாவத்தை அடைந்து பெரியோர்கள் பழிக்கும்படி திரிந்து பின்பு தீமைபொருந்திய நரகத்தில்விழுந்து வருந்துவார்களென்று வாய்மையுற்ற மந்திரங்களைச்சொல்லுகின்ற வேதமுழுதுஞ்சொல்லுகின்றன—எ-று. ௩௪

ஆதலாலெனைக்குறித் தழுங்குமாறடாதென
மாதராடெருட்டியிட்டு மாநிதிகளையெலாம்
வேதவேதியர்க்குமா விரதியர்க்கும்வறிஞராய்ப்
போதுநர்களுமகமகிழ்ந்து போதுமென்னவல்கியே

இ-பு ஆகையால்என்னைக்குறித்துநீங்கள்வருத்தப்படுவது தகாதென்று மாதர்களைத்தன்சுற்றத்தார்தெளியும்படிசொல்லத் தான்சம்பாதித்ததிரவியங்களையெல்லாம் வேதமோதியபிராமணர்களுக்குப்பெரிதாகியவிரதங்களை அனுஷ்டிக்கும்தபசிகளுக்கும் ஏழைகளாய்வருகின்றவர்களுக்கும் போதுமென்கிறமட்டில் மனமகிழ்ச்சியுடன்கொடுத்தது-எ-று ௩௫

மோனமாகிநீரின்மூழ்கி முப்புரத்தைவென்றசீர்
ஞானநாதனடிவணங்கி நல்லழற்பிழம்புறுந்
தானமேவலங்கொடெய்தி வீழுமெல்லைதன்னிலே
வானிலாமுடித்தவேணி வள்ளல்வந்துதோன்றினன்

இ-பு இவ்வாறுதானம்பண்ணிவிட்டபின்பு மௌனவிரதங்கொண்டு ஒருவருடனும் பேசாமல்நீரில்ஸ்நானஞ்செய்து திரிபுரதகனஞ்செய்த மெஞ்ஞானசொரூபியாகிய பரமசிவனுடைய திருவடிகளைவணங்கிநல்ல தீப்பிழம்புபொருந்திய இடத்தைப் பிரதட்சிணஞ்செய்து அக்கினிகுண்டத்தில்விழும்போது இளந்திங்கள் அணிந்த சடைமுடியையுடைய கயிலாசபதியானவர் தரிசனமானார்—எ-று. ௩௬

கொன்றைதுன்றுவேணியுங் குளிர்ந்தவைந்துவதனமுங்
கன்றனிலகண்டமுங் கரசரோருகங்களு
மின்றிரிந்தமேருவாய் விளங்கும்தாருமுந்தியுந்
துன்றுதாளுமன்புகண்டுதோகைவீழ்ந்திறைஞ்சினன்

இ-பு கொன்றைமாலையணிந்த சடாமகுடமும்குளிர்ச்சியுள்ள ஐந்துதிருமுகங்களும் கறுத்தகாளகண்டமும் செந்தாமரைமலர்போன்றதிரு அத்தங்களும் ஒளிவிளங்கும் பொன்மலைபோலாய்விளங்குந் திருட்டுபுசங்களு

ம்திருவுந்தியும்பொருந்தியதிருவடிகளுந்தரிசனமாகக்கண்டுமானன்னதையெ
ன்பவள் பூமியில்விழுந்துபணிந்தாள்-எ-று ௬௨

மங்கைநீகனற்குள்வீழ்த லொழிதிநின்மனதகினித்
றக்குமுண்மையுணருவான் சமைந்தபொன் செய்கடகமோ
டிங்குவந்துமளவளா பெரியகசண்வீழ்ந்தவணிகன்யானு
கக்குல்வாய்த்துணிந்துநின்ற கருமநன்றுநன்றரோ

இ-பு அவ்வாறுசேவித்துக்கொண்டவளைப்பார்த்து அடியவளே நீ தீக்
குள்விழுவதைநீங்கு உண்மனதிற்பொருந்திய மெய்யன்பினை யிவ்வுலகத்
தாருக்குத்தெரிவிக்கும்பொருட்டுப்பொன்னாற்செய்யப்பட்ட கடகத்தினு
டன் இவ்விடத்துக்குவந்துஉன்னுடன் அளவளாவித் தீயில்விழுந்தவணிகன்
நாமேஇந்தராத்திரியில் நீதீயில்விழும்படிநிச்சயித்தகாரியம் மிகவும்நன்று
நன்று-எ-று ௬௩

பொதுமடந்தைமார்கட்டு பொருளிளுசைநீங்கியே
மதியிலங்குநுதலினின்னில் வாய்மைபேணவல்லரோ
வதிசயம்புவிககணீது புதிதுகண்டறிந்தனங
கதிதெரிந்துபொறுத்ததில் விழைகவேதுகழறுவாய்

இ - பு பிறைபோல்வளையாகியநெற்றியையுடையவளே பொதுமகளி
ராயிருப்பவர்கள் பொருளாசையைவிட்டு உன்னைப்போலச்சத்தியத்தை
க்காப்பாற்றுவார்களோ இவ்வுலகத்தில்இது அதிசயமானகாரியம்நவமாகக்
கண்டறிந்தோம் பதவிகளுள்நீ அடையவேண்டியபதவியெதுவோ உனக்கு
விருப்பமுள்ளதைச் சொல்லுவாயாக-எ-று ௬௪

வேறு

என்றுபரமனியம்புமதுகேட்டுக்
குன்றுமரனுங் குழைந்துருகக்கோற்றொடியா
ளின்றுதொழுது நிமலாநினதடியே
னென்றுமறியேனுரைப்பதுளங்கொள்ளேன

இ-பு இவ்வண்ணம்பரமசிவன அருளிச்செய்ததிருவாக்கினைக்கேட்டும
லைகளும்மரங்களும் நினறுருகும்படிமானந்தையெனபவள்எழுந்துநினறு
தொழுது நிருமலனேஉனனடியவளாகிய நான ஒனறுமறியாதவள் இன
னதுசொல்லவேண்டுமெனறுந்தெரியாதவள்-எ-று. ௬௫

தேவரேயாதி திரிபுவனத்துள்ளோர்க்
கேவரோவாழும் பதமுமினிவேண்டேன்
மூவரோயாகித் தொழிற்கும்
காவலேயாகிக் கடந்துநினறகாரணனே

இ-பு தேவர்கள்முதல்திரிலோகத்தி லிருப்பவர்களில்எவர்கள்வாழும பதவியும்இனிவேண்டேன் திரிமூர்த்திகளாகியும் முக்குணங்களாகியும முத்தொழிற்குக் காவலாகியும்இவைகளை யெல்லாங்கடந்து காரணனாயிருக்கும் ஆண்டவனே-எ-று ௬௬

அன்புற்றெனது கிளைஞரனைவோருந்
துன்பக்கடலுட் டுளையாதெனைப்போல
வின்பச்சிவபதத்தை யெய்தியினிதாக
வன்புற்றனதடிக்கீழ் வாழவருளென்றாள்

இ-பு அன்புள்ளஎன்சுற்றத்தார் எல்லாருந்துக்கசாகரத்தில்முழுகாமல் அடியேனைப்போலப் பேரின்பமுள்ளசிவலோகத்திற்சேர்ந்து இன்பமுடன் எக்காலமும்ஒரேதன்மையாக வாழும்படிகிருபை செய்யவேண்டுமென்றாள்-எ-று, ௬௭

கோட்டுவிடையமர்ந்த கோமான்குயின்மொழியாள்
கேட்டவரமனைத்து மீந்தோமெனக்கிளத்தி
யீட்டுபெருங்கிளைஞ ரெல்லோரொடுமிவள்போய்
வீட்டுநெறிப்பேரின்ப மேவப்பணித்தகன்றான்

இ-பு கொம்பினையுடையரிஷபவாகனத்தை விரும்பியபரமசிவன்மாணங்கைகேட்ட வரமெலாங்கொடுத்தோமென்று அருளிச்செய்து சுற்றத்தாருடன் பேரின்பவீட்டிற்போய்ச்சேருமபடி அருளிச்செய்துகயிலையங்கிரிக்கு எழுந்தருளினார்-எ-று. ௬௮

ஆடரங்கைத்தீமுருக்கும் வேலையணங்கனையாள்
கூடுபிணிநெகிழ்த்த வானரமுங்கோழியும்போய்
நீடுபலகாலநில வயத்தேயிருந்து
வீடுகுரங்குகண்டாய் வேந்தேநின்கான்முளையே

இ-பு- நாடகசாலையைத்தீபற்றி யெரிக்குங்காலத்தில்தெய்வப்பெண்ணையொத்த மாணங்கையானவள் கட்டவிழ்க்கவிட்டகுரங்குங்கோழியும் போய் நெடுங்காலம் இவ்வுலகத்திலிருந்து இறந்துபோனகுரங்குதான உன் புத்திரன்-எ-று. ௬௯

சோரிபொடித்தனைய சூட்டெழில்கொள்வாரங்காண்
சீரியசொற்றேரு மமைச்சன்சிறுவனிவர்
பாரிலவதரித்தும் பண்டுடையவாதனைகாண்
பேரியவிக்கமணி பூதிபெற்றணிந்தார்

இ-பு உதிரம்பொடித்ததையொத்த உச்சிக்கொண்டையை யுடைய கோழிதான்சிறப்புள்ள சாஸ்திரங்களைஉணர்ந்தமந்திரிகுமாரன் இவர்களிரு

வரும்பூலோகத்திற்பிறந்தும் பூர்வாசனையினால்பெரிதானமுறைமையுடன் ருத்திராட்சமுமவிபூதியும் விரும்பியணிந்தார்கள்-எ-று. ௭௰

முன்னைபிறந்தபிறப் பின்முதல்வன்மணி
தன்னையணிந்ததபோ பலததின்றன்மையான்
மன்னர்தொழுமன்ன வுனக்குமதலையுமாய்க்
கன்னிமதியமைச்சன் சான்முளையுமாயினரே

இ-பு முன்னிங்கியபிறவியில்பரமசிவனுடைய மணியாகியருத்திராட்சரத்தைத்தரித்த தபோபலத்தினால்அரசர்களெல்லாம்வணங்கத்தக்க அரசனாகிய வுன்புத்திரனும்அழிவில்லாத உணர்ச்சியையுடைய மந்திரிகுமாரனுமானார்கள்-எ-று. ௭௧

காளையிளைஞரிரு வோருங்கண்ணுதலோன்
றாளைநெடுநாட்டணவாதருச்சித்து
வாளையுகளும் வளநாடினிதாண்டு
வேளையெரித்தோனருளால் வீட்டின்பமெய்துவரால்,

இ-பு இந்தஇரண்டு புத்திரர்களும்பரமசிவனுடைய திருவடிகளை இடைவிடாமல் நெடுநாள்பூசித்து வாளைமீன்கள் தாவிக்கொண்டிருக்கும்படியான நீர்வளமுள்ள இந்தத்தேசத்தை யின்பமுடன் ஆண்டு காமதகனராகிய பரமசிவனுடையதிருவருளினால் மோட்சம்அடைவார்கள்-எ-று- ௭௨

ஈங்கிவர்கள்முன்னை யியல்புமியன்றதுவு
மாங்கதனினுய பயனுலடைந்ததுவந்
தீங்கறநாங்கூறினேந் தேர்வேந்தேநின்மனத்தி
லோங்குவிழைவால்வினவ லுண்டேலுரையென்றான்

இ-பு இவ்விருவருடைய முற்பிறப்பின்றன்மையையும் அப்போது நடந்ததையும் அதனால்அடையவேண்டிய பயனையிப்போது அடைந்ததையும் குற்றமறநாமுனக்குச்சொன்னோம் தேரையுடையஅரசனே உன்மனதில்மிகுந்தவிருப்பத்தினால் இன்னமேதாவது கேட்கவேண்டியதிருந்தால சொல்லென்று, பராசரமுனிவர்சொன்னார்-எ-று. ௭௩

இருபதாவது

உருத்திராட்சமகிமையுரைத்த அத்தியாயம்.

முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௧௧௰௨,



உ

சிவமயம்.

# இருபத்தொன்றாவது,

## சீருருத்திரமகிமையுரைத்த அத்தியாயம்.



என்னமனிசூத னினிதியம்பிடாதவத்தீர்
மன்னர்மன்னன்மீட்டு மங்கமாதவனைத்தாள்போற்றிப்
பன்னிவினவுவது கேட்டுப்பராசரனார்
பின்னுமுரைத்தகதை கேண்மினெனப்பேசினான்

இ-பு இவ்வாறுசூதமுனிவர்சொல்லி நைமிசாரணிய முனிவர்களே அவ்வரசனானவன் பராசருடையபாதங்களிற்பணிந்து துதித்துவினவுதலைகேட்டுமேலும் அவர்சொல்லியசிவசரித்திரத்தைக் கேளுங்களென்று சொன்னார்-எ-று, க

வேறு-

ஓங்கியபேருவகையி னாலுடனெழுந்துமன்னவர்கோன்
றேங்கமழுநறுந்தெரியன் முடிதாழச்சென்றிறைஞ்சிப்
பூங்கமலத்தயனைய புகழ்முனியேநின்னருளாற்
றாங்கரியமனமாயை தணிந்தறிவின்றலைநின்றேன்

இ-பு மிகுந்த சந்தோஷத்தையுடைய அவ்வரசன்பராசர முனிவருடைய பாதங்களில்தன்மகுடம்படும்படிபணிந்து பிர்ம்மதேவனையொத்த புகழுள்ளமுனிவரே தேவரீருடையகிருபையினால் தாங்குதற்கரிய மனமாயைநீங்கி அறிவினிடத்தில்நின்றேன்-எ-று. வாசனைகமழும்பூமாலையணிந்தமகுடம் உ

மைந்தன்வரலாறனைத்துங் கேட்டுமனமகிழ்ந்தேன்
கந்தனையவிளங் காளையினிக்காசினியை
யெந்தவகைபுரப்பானவாழ் நாண்மற்றெந்துணையுண்
டந்தமுறைதானுமடி யேற்கருள்கென்றான்

இ-பு சுவாமிகளேஎன்புத்திரனுடைய வரலாறெல்லாங்கேட்டு மனமகிழ்ந்தேன் சுப்பிரமணியக்கடவுளையொத்த இவ்வாலிபன் இனிஎவ்விதமாக உலகத்தைஆளுவான் ஆயிசுஎவ்வளவிருக்கின்றது அம்முறையையும் அருளவேண்டுமென்றான்-எ-று. ௩

செம்பொன்முடிக்குரிசில் கேட்டியதுசெப்பினும்
கம்பமுறநெஞ்சங் கலங்கித்துயருழப்ப
நம்பர்முதலோரு மென்றுலுனகவெய்தும்
வெம்புகொடுந்துயரம் யாரேவிலக்கிற்பார்

இ-பு பொன்னாற்செய்யப்பட்ட மகுடந்தரித்தஅரசனே சொல்லுகிறேன்கேள் என்னவெனில் அனகச்சொன்னால் தேவர்முதலானவர்களுக்கு சிக்கமுண்டாக மனங்கலங்கித்துயரம் அடைவார்களென்றால் உனக்குநேரிடும் கொடியதுயரத்தை யார்விலக்குவார்கள்-எ-று, ௬

எவ்விடருஞ்சாரா விறைவனருள்பெற்றமையாற்
செவ்வடிவேல்வேந்தேயான் செப்புகேனின்புதல்வ
னவ்வியமொன்றில்லாதா னிரண்டாண்டின்றடைந்தான்
கவ்வையுறமின்றுமுதலேழாநாட்கடந்தால்

இ-பு பரமசிவனுடையதிருவருள் கிடைத்திருப்பதினால் யாதொரு துன்பமும்நேரிடாது வேலேந்திய அரசனே யான்சொல்லுகிறேன்உன்புத்திரன் பாபமென்பதொன்றுமில்லாதவன் இப்போதுபன்னிரண்டுவயதுள்ளவனுயினுன் துன்பம்அடையாதேஇன்றுமுதல்ஏழுநாள்கடந்தால் எ-று

சாவதுவேதிண்ண மெனமுனிவன் சாற்றுதலு
மேவுபடச்சாயுமிக லரிமானேறுபோற்
காவலன்மேதினிமேல் வீழ்ந்துகடைக்கண்முத்தந்
தூவநிலையில்லாத துயர்க்கடலுண்மூழ்கினான்

இ-பு இறப்பதுநிச்சயமென்று முனிவன்சொல்லலும் அம்புபட்ட மாத்திரத்தில்விழுக்குவிடுஞ் சிங்கம்போல அரசன்பூமியில்விழுந்து கடைக்கண்ணீர்துளியைச்சிந்தும்படி நிலைபடாத்துயரக்கடலில் ஆழ்ந்தான்-எ-று

தாங்கிமுனிவ னெடுத்துத்தராபதியை
வீங்குதுயர்மாற்றி விழிநீரறநீவி
யோங்குபொலனகரதநுற் றருந்தெண்ணீரை
வாங்கிமுகங்கழீஇ வந்ததுயர்நீக்கினான்

இ-பு துக்கசாகரத்தில்முழுகிய அரசனைப்பராசரமுனிவர் தாங்கியெடுத்து துயரம்நீக்கிக்கண்ணீரைத்துடைத்து மாற்றுயர்ந்தபொன்கரகத்தில் நிறைந்த தெளிவுள்ளநீரைக்கையில வார்த்துக்கொண்டு அவ்வரசன்முகத்தைக்கழுவி நேரிட்டதுயரச்சோபத்தை நீக்கினார்-எ-று, ௭

வேறு.

ஊழ்வினையுருத்தகாலத் துறுவத்தின்றநற்றுய்
வீழ்முழங்கரதபாது மூண்டபின்வெய்யஞ்சா
மாழ்கடற்பிறந்தநஞ்சு மூண்டபினமிர்தமெனறுல
வாழியமாந்தரெல்லா யிருக்கினைவயத்தர்மன்னு

இ-பு அரசனே ஊழ்வினை சம்பவித்தகாலத்தில் மிகுந்ததவத்தினால் பெற்றதாயின் முலையினின்றுசுரந்தபாலும் உண்டபின்கொடியநஞ்சுபோலாகும் நல்வினையுற்றகாலத்தில் ஆழ்ந்தகடலில் உண்டாகியவிஷமும்உண்டபின் தேவாமிர்தம்போலாகும் என்றால்மனிதர்களெல்லாம்இருவினைவசப்பட்டவர்களே-எ-று,வீழ்பால் விரும்பப்பட்டபால் அ

இன்பம்வந்துற்றகாலை யிருங்களியெய்தரு னுந்
துன்பம்வந்துற்றகாலைத் துயருழந்தழுதரு னு
மன்பதைபுரக்கும்வேந்தே யறிவிலார்மாட்சிநல்லோர்
துன்பமுமின்பந்தானுந்தொல்வினைத்தொடர்ச்சியென்பார்

இ-பு மனிதனைக்காக்கும் அரசனே இன்பம்வந்துபொருந்தினகாலத்தில் மிகுந்தசந்தோஷத்தை அடைவதும் துன்பம்வந்துபொருந்தினபோது துயரப்பட்டு அழுவதும் அறிவில்லார்செய்கை அறிவுள்ளவர்கள் சுகதுக்கங்கள்பழவினைதொடர்ச்சியென்பார்கள்-எ-று ௬

ஆதலால்வருந்தல்கேட்டி யருபியாயமலனாகிச்
சோதியாய்நின்றவீசன் சுவேச்சையாங்குணங்கண்மூன்று
ளோதுராசத்திலாதிவிரிஞ்சனை யுதிப்பித்தன்றே
வேதநூலனைத்துமந்த விரிஞ்சனுக்கமைத்துப்பின்னும்

இ-பு ஆகையினால் அரசனே நீவருந்தாதேநான்சொல்வதைக்கேள் அருபியும்நிர்மலனும் சோதியுமாய்நின்றபரமசிவன் தன்னுடைய சுவேச்சையாகும் முக்குணங்களுக்குளொன்றாகிய ராசதகுணத்தில்பிரமதேவனைச் சிருஷ்டித்து வேதசாஸ்திரங்களையெல்லாம் அந்தப்பிரமதேவனுக்கு அப்பொழுதே அருளிச்செய்துபின்னும்—எ-று ௰

வேறு,

மாசிலாஞானமா யணுக்கள்வாழ்வதாய்க்
காசிலாவுபநிடதத்தின்கண்ணதாய்ப்
பாசமாய்த்திடுபசு பதியைப்பற்றிடு
மாசில்சீருருத்திர வத்தியாயமும்

இ-பு குற்றமில்லாதஞானமாகியும் உயிர்கள்வாழ்வுபெறத்தக்கதாகியும் குற்றமில்லாத உபநிடதத்தினிடத்ததாகியும் ஆணவமலத்தைக் கொடுத்தருளாநின்ற பசுபதியைப்பற்றியபழுதில்லாத சீருருத்திர அத்தியாயமும் எ-று உபநிடதங்கள்-௯௨ ௰௧

அருளினனகத்தினை யறிந்தநான்முகன்
றெருளுறவுலகமீரேழுஞ்செய்தபி
னிருளறுத்துக்க ருய்யவெண்ணியே
பொருடருவேதங்கள் புகலுங்காலையில்

இ-பு அருளிச்செய்தார் அவைகளைமனதுக்குள்ளிருந்தபிரம்மதேவன் தெளிவுபொருந்தப் பதினாலுலோகமுஞ்சிருஷ்டித்தபின்பு இவ்வுலகத்திலிருப்பவர்கள் அஞ்ஞானத்தைநீக்கிக்கடைத்தேறவெண்ணிப்பொருள்தங்கிய வேதங்களைச்சொல்லும்போது-எ-று ௰௨

நாற்றிசைமுகத்தினு நான்குவேதமுந்
தோற்றுநாட்டென்றிசை முகத்திறறோற்றிய
வாற்றசாறபித்திய மதனினுப்பணை
யேற்றசீருருத்திரமெழுந்துதோன்றிற்றால்

இ-பு நான்குதிசைமுகங்களினும்நான்குவேதங்களும்உண்டானநாளில் தென்றிசைநோக்கியமுகத்தில் தோன்றிய மகிமையிருந்ததைத் திரியவேதத்தின்மத்தியில்மேன்மையுள்ள ஸ்ரீருத்திரமந்திரம்உண்டாயித்து-எ-று, தத்திரியென்னும் பட்சியுண்டு மகிழ்ந்தமையால் தைத்திரிய மென்றாயது

அத்தகைமந்திர மரீசியாதியாம்
வித்தகமுனிவரர் விரும்பிக்கற்றுட
னுத்தமவுலகிடை முனிவர்க்கோதிடத்
தத்துவமறையவர் தாமுங்கற்றனர்

இ-பு பெருமைபொருந்திய அந்தமந்திரத்தைமரீசிமுனிவர்முதலாகிய ஞானமுள்ளமுனிவர்கள்விரும்பி உணர்ந்துஉடனே இவ்வுலகத்திலிருக்கும்உத்தமமுனிவர்களுக்கு உபதேசஞ்செய்யத்தத்துவமுணர்ந்த அம்முனிவர்களும்தெரிந்துகொண்டார்கள்-எ-று ௧௪

ஆர்வருபாவமா மழனற்கோடையாற்
பார்மிசைமானிடப் பசும்புல்வாடுத
றீர்தருபிரணவ மின்னுச்சேர்ந்துபெய்
கார்மழையொத்திக கடவுண்மந்திரம்

இ-பு நிறைந்தபாவமாகிய வெதுப்புகின்ற கொடையால் இவ்வுலகத்திலிருக்கும் மனிதர்களாகிய பசியபுற்கள்வாடுதல் நீங்கும்படி பிரணவமாகியமின்னலைச்சேர்ந்து பொழிகின்றமேகத்தையொத்தது தெய்வீகம்பொருந்திய இம்மந்திரம்-எ-று ௰௫

மற்றொருதவங்களேன் மந்திரங்களேன்
சிற்றியல்விரதமேன வேள்விச்செய்கையேன
சுற்றியமலங்களைத் துடைத்துமுத்தியைப்
பெற்றிடவளிப்பதோ பிரமமீதரோ

இ-பு இம்மந்திரமிருக்க வேறொருதவங்களேன்மந்திரங்களேன் சொற்பப்பயனைத்தருகின்ற விரதங்களேன்யாகத்தொழிலேன் பிறவி தோறும்

தொடர்ந்துவருகிற மும்மலங்களைநீக்கி மோட்சத்தைப்பெறும்படிக்கும்பரமசிவம்இதுவேயாம்-எ-று. ௧௬

பின்னருநான்முகப் பிதாமகன்பொறை
மன்னியதேவர்க்ண் மக்கள்வல்விலங்
கன்னியவடிவுள வனந்தயோனியும்
பன்னருஞ்சிறப்பினாற் படைத்துமுற்றியே

இ-பு பிர்ம்மதேவன்முன்சிருஷ்டித்ததுமல்லாமல்பின்பும் சாந்தகுணமுள்ளதேவர்கள் மனிதர்கள்வலியமிருகங்கள்இவைகளேயன்றி யின்னமும் பலபலவிதமாகிய அனந்தம்யோனிபேதங்களும்சொல்லுதற்கரிய சிறப்புடன்சிருஷ்டித்து-எ-று ௧௭

புண்ணியபாவமும் பொருவின்மையு
மண்ணியதீமையு மகிழ்வுந்துன்பமு
மெண்ணரியநினைப்பொடு மறப்புமியாவையு
நண்ணியவுணர்வொடு வகுத்துநல்கியே

இ-பு புண்ணியபாவங்களும் ஒப்பில்லாதநன்மையும் இவ்வுலகத்தில் நேரிடுந் தீமையும் சுகதுக்கங்களும் எண்ணுதற்கரியநினைப்பு மறைப்புகளும் பொருந்திய உணர்ச்சியுடன்வகுத்துச்சிருஷ்டித்து-எ-று ௧௮

துயக்கமுநாகமுந் துவன்றிக்காக்கெனப்
பிறைக்குலநான்கெனப் பிறழ்வெண்கோட்டிடைக்
கறைக்குட்டணிந்தமாற் களிற்றுவேந்தையு
மறத்தொழிற்கூற்றையும் பணித்துமன்னனே

இ-பு அரசனே நான்குபிறைகள்போலப்பிரகாசிக்கும்வெண்மைநிறமுள்ளதந்தங்களிடத்தில்பகைவருடைய இரத்தமுங்குடலும்நிறையத்தக்க பெரியஐராவதமென்னும் யானையையுடைய இந்திரனைநோக்கிநீ சுவர்க்கலோகத்தைக்காத்துக்கொண்டிருவென்றும் கோபமுண்டாகும் தொழிலையுடைய யமனைநோக்கிநீ நரகத்தைக்காத்துக்கொண்டிருவென்றுங் கட்டளையிட்டுப் பின்பு-எ-று. ௰௯

துடிமுதல்காலங்க டோற்றுந்தன்மையுங்
கடிதினில்வருஞ்சுடர்க் கதிருந்திங்களு
மிடையுளகோண்மு தங்கிரகம்யாவையு
மடையுறுபூதங்களைந்துமாக்கினின்

இ-பு க்ஷணமுதல்காலங்களஉண்டாகுந் தன்மையையும்மகாமேருவைவளைவாகச்சுற்றிவரும் சூரியனையும்சந்திரனையும் அவ்விடத்திலிருக்குங்கோள்முதலாகிய கிரகங்களெல்லாவற்றையும் ஆகாயமுதலாகப் பொருந்தியபஞ்சபூதங்களையுஞ்சிருஷ்டித்தான்-எ-று. ௨௰

ஆர்கியசராசரமனைத்துமவவிதி
நீக்கியபகுதியினெருங்கியெங்கணும்
போக்கறநிமிர்தலுஞ்சால்பொழுதிறகூற்றுவன்
காக்குமந்நரகமுக டழையக்கற்பிப்பான்

இ-பு இவ்வாறு அந்தப்பிரமன் உண்டாக்கிய சராசரங்களெல்லாம்பேதமில்லாமல்நெருங்கியெவ்விடத்தும்இறத்தலின்றி அதிகரித்துவரும்போது யமன்காக்கின்ற அந்நரகங்கள்தனையழையும்படி கற்பிக்கின்றான்-எ-று உக

கூறியபாவத்தின் கூற்றவாகிய
சீறியகாமமேமுதல்தீமைகாள்
வீறுயர்கதையினுண் விளித்துநீவிர்போய்
மாறுசெய்துலகிடை மருவியெங்குமே

இ-பு சொல்லுகின்றபாவத்தின் பிரிவாகிய சீறுகின்றகாமமுதலானபாவங்களைப்பெருமைமிகுந்த யமன் அழைத்துநீங்கள்போய் மாறுபாடுசெய்து உலகமெங்கும்பொருந்தி—எ-று. உஉ

தருமமுநீதியுந்தயாவும்வாய்மையு
மருவியதவங்களும் பிறவுமாற்றிநுங்
கருமமாந்தீத்தொழில்கணக்கிலாதன
புரிதிர்நிரயினைப் புரத்திற்யோயென்றான்

இ-பு தருமத்தையும்நீதியையும்தயையுஞ் சத்தியத்தையும் பொருந்திய தவங்களையும்மற்றதுகளையுமாற்றிஉங்கள்தொழில்களாகிய பாவத்தொழில்களை அனந்தமாகச்செய்துகொடியநரகத்தைக் காக்கக்கடவீரக ளென்றான், எ-று. உங

அங்கதுகேட்டலு மகிழ்கிற்றென்றுபோய்த்
தங்கியவுலகிடை வந்துசார்தலும்
பொங்குசிருருத்திர மெலருமேபுகன்
றெங்கணுநிறைதலாற் றுண்ணென்றேங்கியே

இ-பு அந்தவார்த்தையைக்கேட்டமாத்திரத்தில எங்களுக்கு நன்மையானகாரியமென்றுகாமமுதலிய பாவங்கள் சென்றுபொருந்திய உலகத்தில் வந்து சேர்ந்தவளவில்மகத்துவமுள்ள சிருருத்திர மந்திரத்தையெல்லாருஞ்சொல்லிஎவ்விடத்தும்நிறைந்திருப்பதினால்நடுக்கங்கொண்டுஏங்கி-எ-று

மீண்டனவோடின வெருவிக்காலன்மு
னீண்டினவாய்புலர்ந்திளைத்துநின்றன
வாண்டகைகேட்டிநின் னணையாற்றிரு
வேண்டியவிருநில வளாகமேவினேம்

இ-ம் பயந்துதிரும்பியோடி யமனிடத்திற்சேர்ந்து வாயுலர்ந்து இளைத்துநின்று ஐயனே கேட்பாயாக உன்னட்கிளையால் செல்வம்வேண்டியபெரிய உலகத்தினிடத்திற்பொருந்தினோம்-எ-று ௨௫

கவ்வைமாநதிக்கரைக்கடவுளாலயந்
செவ்வியமொழிமறை யாளர்சோலைவிட
மெவ்விடமெவ்விட மென்றுகூறுவோம்
பல்வயின்றிரைப்பது போலப்பாரெலாம்

இ-ம் ஓசையையுடையபெருமைபொருந்திய நதிக்கரைத் தேவாலயம் நல்லசோலை பிரம்மாலயம் எந்தெந்தவிடமென்று பிரித்துச்சொல்லுவோம் பூலோகமெங்குஞ் சமுத்திரங்கோஷிப்பதுபோல்-எ-று, ௨௬

வல்லசிருருத்திர மந்திரந்தனை
யெல்லையில்யாவரு மினிதினோதிட
நல்லழற்பிறப்பென நாமவர்க்காய்தலா
லொல்லையில்வொருவிதின் னுழையொதுங்கினோம்

இ-ம் முக்திதரவல்லசிருருத்திர மந்திரத்தை அளவில்லாமலெல்லாரும் ஓதுகின்றார்கள் அதுமிகுந்ததீக்கூட்டம்போல நாமவர்களுக்காயின்றதினால் பயந்துவிரைவாக உன்னிடத்தில் வந்துசேர்ந்தோம்-எ-று ௨௭

வேறு,

ஏழுகோடிமந்திர மெடுத்தவரியம்பினுந்
தாழ்விலாதமந்திரங் கடம்மையொல்லைநீக்குவேஞ்
சூழ்சடைப்பரமனைந்து தொல்லெழுத்தையொன்றியே
வாழுமந்திரத்திலோ ரெழுத்தினுக்குமாழ்குவாம்

இ-ம் சத்தகோடிமகாமந்திரங்களை செயலர்களெடுத்துச்சொன்னாலும் தாழ்ச்சியில்லாதஅந்தமந்திரங்களை விரைவினில் நீக்கிவிடுவோம் சூழ்ந்தசடையையுடைய பரமசிவனது பஞ்சாட்சரத்தைப்பொருந்திவாழுஞ் சிருருத்திரமந்திரத்திலிருக்கும்ஒருஅட்சரத்துக்குபயங்கொளவருந்துவேம்-எ-று

பெருமைசேயணித்தகன்று நரகராசிபேணலே
மருமையென்றிறத்தடாத் திரும்பியாழறிந்திடென்
றொருமையிற்கொளத்தலாடு முதலியெனவெல்லாவியெழுந்
தருமராசன்விதியிருந்த சபைபுகுந்துபணியவே

இ-ம் இறைவனே நீகட்டளையிட்டபடியினி நரகத்தினைக்காக்கமாட்டோம் கோபதருமையெங்களாலாகாது நரகம்பழாயிருக்கின்றது அதனை நீயறியென்று சொல்லியவளவில் அதைக்கேட்ட தருமராசன்சமுத்திரம்போல ஓசையுண்டாகத்தக்கதாக ஆர்ப்பரித்துக்கொண்டு பிரம்மதேவனிருந்த சபையிற்போய்ப் பணிந்து-எ-று, ௨௯

செம்பொன்வெற்பதொன்றுநாலு சிகரமோடிருந்தென
வம்புயாசனத்திலிருந்த வண்ணல்வாய்மலர்ந்திறந்
தெம்பதத்தடைந்தவாறென் மறலியென்றியம்பவே
வெம்புநெஞ்சனெடிதுயிர்த்து வெகுளியோடுமுரைசெய்தான்

இ-பு ஒருபொன்மலையானது நாலுசிகரத்துடனிருந்ததுபோலக் கமலாசனத்திலிருந்த பிர்ம்மதேவன் திருவாய்மலர்ந்து சருமராசனேநீநம்மிடத்திற்குவந்தகாரணமென்ன வென்றுசொல்லும்பமன் வெதும்புமனத்தனாய்ப்பெருமூச்சுவிட்டுக்கோபத்துடன் சொல்லுகின்றான்-எ-று, ௫௧

அய்யநீபணிந்தவண்ண மரியவேழுநான்கெனும்
வெய்யகோடிகும்பியும் விளங்கியேதழைக்கயான்
செய்யலாவதேதினிச் சிறந்தசீருருத்திரம்
வையயாவுமோதலால் மாநிலத்துளோரெலாம்

இ-பு சிறப்புப்பொருந்திய சீருருத்திரத்தைப்பூலோகத்தி லிருப்பவர்களெல்லாரும்செபித்தலால் ஐயனேநீகட்டளையிட்டபிரகாரம் இருபத்தெட்டுநரகங்களுமவிளங்கித்தழைக்கத்தக்கதாகஅடியேன்செய்யலாவதென்னிருக்கிறது-எ-று ௫௧

நாகநாடுநண்ணிலாக ணாரணன்றனித்துவாழ்
போகநாடுநண்ணிலார்கள் புண்டரீகநின்றிரு
யோகநாடுநண்ணிலாரு லோகபாலர்நாடுறு
ரோகமாயசிவபதத்தி னெல்லையாருநண்ணினார்

இ-பு சுவர்க்கலோகத்தில் பொருந்துகின்றார்களல்லர் விஷணுதனித்துவாழ்கின்றபோகநாடுபொருந்துகின்றார்களல்லர் தேவருடையநாட்டிலும்பொருந்துகின்றார்களல்லர் லோகபாலர்நாட்டிலும் பொருந்துகின்றார்களல்லர் ஏகனாகிய பரமசிவனாட்டில் எல்லாருமபொருந்துகின்றார்கள்-எ-று, ௫௨

புண்டரீகவண்ணலே புராரிவாழ்பதத்தினி
லெண்டிசாமுகத்துளோருமெய்தலான்மற்றேவரே
கொண்டதீமைநரகம்வந்து குறுகுவார்கள்குறுகுமா
றண்டநாதபுரினியல்ல தாள்தலேனென்னரசரோ

இ-பு தாமரையில்வீற்றிருக்குமகடவுளேபரமசிவனுடையபதவியில் அஷ்டதிக்குகளுக்குளிருப்பவருளும்பொருந்துதலால் மற்றையார்வந்து நரகத்திற்பொருந்துவார்கள் தேவகாதனேஅப்படியன்றி நரகத்தில்வந்துபொருந்தும்படிசெய இல்லாவிட்டால்என் அதிகாரத்தைவிட்டுவிடுகிறேன்-எ-று, ௫௩

வேறு.

என்றுகூறி மறலியிறைஞ்சலுந்
தன்றுபங்கயநான்முகன்சூழ்ச்சியா
னன்றுசெய்பவர் தக்கட்குநன்னெறி
யன்றியேதவ றுற்றுவதேதென

இ-பு இயமனிவ்வாறு சொல்லிவணங்குதலும் தாமரையிற்பொருந்தியபிர்மமதேவன்உணர்ச்சியினால் நன்மைசெய்கின்றவர்களுக்குநன்மார்க்கம் வருவதன்றிப் பொல்லாங்குவருவுதேது-எ-று ௩௪

ஞாலநாயகன் பின்னருநாடியே
காலனெஞ்சங் கலங்கியுரைத்தது
மூலமோடு நரகமுடிந்தது
மேலநீக்குதற் கினைவையாமென்றே

இ-பு எமன்மனங்கலங்கிச சொன்னதையும் அடியோடே நரகமுடிந்ததையும் பிர்மமதேவன்யோசித்தூஇதுகளைநீக்குதற்கு இவைகளுளாகுமென்று திர்மானித்து-எ-று- ௩௫

கோதுசெய்யுமஞ் ஞானத்தின்கூறதாய்
வாதஞ்செய்ய வளாவிருப்பின்மையுஞ்
சூதுசெய்திடுந் துன்மதியும்புவிக்
கேதஞ்செய்திட வேகுமினேகியே

இ-ப குற்றததைச்செய்கின்ற அஞ்ஞானத்தின் பிரிவாய் வாதுசெய்யவளர்கின்ற விருப்பமில்லாமையுஞ்சூதுசெய்கின்ற துர்ப்புதநியையும்பார்த்து நீங்கள்பூலோகத்தில்துன்பம்செய்யும்படி சொல்லுங்கள் அவ்வாறுசென்று-எ-று. ௩௬

மாசகற்றுசீ ருத்திரயானிட
ராசைபற்றி யனைவருமோதுதல்
காசினிக்குண் மூழுதுங்கடிந்ததுந்
தேசறுததசெயலை நடத்துவான்

இ-பு பாவங்களை நீக்கத்தக்கசீருருத்திரத்தில் விருப்பங்கொண்டு பூலோகத்திலிருக்கும்மனிதர்கள் எல்லாருமஓதுலைநீக்கிஉங்களுடையகொடிய செய்கையைநடத்த-எ-றும் ௩௭

எய்மென்று பிதாமகனேவலு
நொய்தினெயதி நுணங்கியகேள்வியாற்
செய்தவம்புரி சிந்தையினண்ணியே
கைதவங்கொடு நெஞ்சைக்கலங்கின

இ-பு செல்லுங்களென்று பிர்ம்மதேவன்வினவளவில் அவைகள்பூலோகத்தில்விரைவுடனவந்துமிகுதியான சாஸ்திரவிசாரணையினால் நல்லதவஞ்செய்கின்ற மனதிற்பொருந்தி வஞ்சகத்தைக்கொண்டு அந்தமனதைக்கலக்கினான்-எ-று, ௫௮

மடியினால்விருப் பின்மைமலியவே
வடிவுளோர்கள்சீ ருத்திரப்பற்றுவிட்
டடைவுநீத்தொழுக்கல்லனசெய்தலிற்
கொடியநிர கக்குடியேறிற்றே

இ-பு சோம்பலினால்விருப்பமில்லாமை உண்டாகவிவ்வுலகத்திலிருப்பவர்கள் சீருருத்திரமெனுதலைவிட்டுக் கிரமந்தப்பிப்பாவங்களைச்செய்தலினால் கொடியநகரத்தில் குடியேறியது-எ-று ௫௯

பிறைவெயிற்று மறலிபெயர்ந்துதா
னுறைபதித்தலை பெய்தியுவப்புடன்
குறைவறக்களி கூர்ந்திருந்தானினி
யிறைவநின்மகற் கெய்துவசொல்லுகேன்

இ-பு பிறைபோல்வளைவும் வெண்மைநிறமுமுள்ள பற்களையுடைய யமதர்மராஜனானவன் தானிருக்கும்வைவச்சுத பட்டணத்திற்போய்ச்சந்தோஷத்துடன்குறைவற்ற களிப்புடனிருந்தான் அரசனே இனியுன்புத்திரனுக்கு நடப்பதைச்சொல்லுகின்றேன்-எ-று ௬௰

இடரொழிக்கவு மின்னுயிர்நல்கவு
மிடையகாலனை நீக்கவும்வேண்டுமேற்
படைமழுக்கைப் பரமன்சீருத்திரத்
தொடையன்மார்பவி யற்றுதல்சூழ்ச்சியால்

இ-பு துன்பத்தைநீக்கவும் இனிதாகியவுயிரைக் கொடுக்கவும் வருகின்றயமனை நீக்கவும்வேண்டுமானால் மழுவாயுதமேந்திய திருக்கரத்தையுடையபரமசிவனது சீருருத்திரத்தை மாலையணிந்தமார்பனை சொல்லவேண்டும்-எ-று, ௬௧

யாவரோனு மினியசீருத்திர
நாவினோதி நளிர்மதிசேகரத்
தேவையாட்டுதெண் ணீராத்தஞ்சென்னியிற்
றூவினாமனை துடைப்பரோ

இ-பு எவர்களேயானாலும் இனியதாகியசீருருத்திரமந்திரம் நாவினாலோதிப்பரமசிவனுக்கு அபிஷேகம்செய்கின்ற தெளிவுள்ள தீர்த்தத்தைத்தங்கள் சிரசிலேதெளித்துக்கொண்டால்விதிக்கும் யமதண்டனை நீக்குவார்கள்-எ-று. ௬௨

தாங்குசீருத்திர சமகஞ்சொலித்
தேங்குமஞ்சன மாண்டியசீரியோ
ராங்கணேபதி னுயிரமாண்டுபோர்
வாங்குவிற்கையாய் வாழ்வொடுவைகுவார்.

(இ-ள்.) போரில்வளைக்கும் வில்லேந்திய கையையுடையவனே எல்லாரையும் ஆதரிக்குப்படியான சீருருத்திர சமகஞ்சொல்லிப் பரமசிவனுக்குத் திருமஞ்சனஞ்செய்யும் சீரியையுடையவர்கள் அப்பொழுதே பதினுயிரம்வருஷம் சம்பத்துடன்வாழ்வார்கள்-எ-று. (௪௩)

பத்தியோடுசீ ருத்திரம்பாருளோர்
சித்தம்வைத்துந் தினந்தோறுமோதினு
லத்தனின்புற்ற வர்க்கருள்செய்திடு
முத்தியீது மொழியவும்வேண்டுமோ,

(இ-ள்,) இவ்வுலகத்தி லிருப்பவர்கள் பத்தியுடனே சீருருத்திரம் நாள்தோறுமனமொருமித்து ஓதுவார்களேயானுல் பரமசிவன்கிருபைகூர்ந்து மோக்ஷங்கொடுத்தருள்வார் இதனைச்சொல்லவும் வேண்டுமோ-எ-று. (௪௪)

ஆதலானின்மத லைக்குமன்னதிப்
போதியற்றப் பொருவரும்புண்ணிய
மாதவத்தின் மறையவர்க்கூவென்றான்
றூதுமன்னன் விட்டானவர்துன்னினுர்.

(இ-ள்.) ஆகையாலிப்போது உன்புத்திரனுக்குச் சீருருத்திரமந்திரம்சொல்லிய தீர்த்தஸ்நாநஞ் செய்விக்கிறதற்கு ஒப்பில்லாதபுண்ணியமுள்ளதபசிகளை அழைப்பியென்று பராசரமுனிவர்சொன்னுர்அதைக்கேட்ட அரசன் தூதர்களையனுப்ப அவர்கள்போய்ச் சொன்னஅளவில் முனிவர்களெல்லாரும் வந்தார்கள்-எ-று, (௪௫)

அடைந்தவாயிர மந்தணருந்தொழிற்
சடங்குநீதிப்ப ராசரன்சாற்றிடக்
குடங்களாயிரங் கொண்டதெண்ணீர்தொடா
விடங்கொளந்தைசீ ருத்திரமெண்ணினுர்.

(இ-ள்.) பராசரமுனிவர் சடங்குவிதிசொல்லவந்த ஆயிரமுனிவர்களும் ஆயிரங்கும்பங்களிற் பூரித்திருக்கும் நீரைத்தொட்டு விஷமுண்டபரமசிவனது சீருருத்திரம்சொன்னுர்கள்-எ-று. (௪௬)

இந்தவண்ணமே பூரத்தினசெய்தலு
மந்தணுளரோ ராயிரங்கும்பமுங்
கந்தனன்னவேற் காளையையாட்டினுர்
மைந்தன்மண்ணிடை வீழ்ந்துமயங்கினுன்.

(இ-ள்) இவ்வாறுஏழுநாள்வந்தபோது ஆயிரமுனிவர்களும் தங்கள்கையிலிருக்குங் கும்பத்தீர்த்தத்தினால் சுப்பிரமணியக்கடவுளையொத்த அந்தராசபுத்திரனுக்கு ஸ்நானஞ்செய்வித்தார்கள் உடனே அந்தப் புத்திரன்மயங்கிப் பூமியில்விழுந்தான்-எ-று. (௬௭)

கண்டுமன்னவன் கையறவெய்தலுந்
தண்டுகுண்டிகை தாங்கியதாபதர்
விண்டவார்பிறை வேணியன்மந்திரங்
கொண்டுபூதிவெண் காப்புக்குறித்திட்டார்.

இ-ள். தன்புத்திரன் மயங்கிவிழுந்ததை அவ்வரசன்பார்த்துத் துயரங்கொண்டான் அப்பொழுது தண்டுகமண்டலமேந்தியமுனிவர்கள் பிறையணிந்த சடையையுடையபரமசிவனது மந்திரமாகிய சீருருத்திரஞ்சொல்லி விபூதியுந்தரித்தார்கள்-எ-று. (௬௮)

அறங்கொள்வேதிய ராசிபகர்ந்திட
மறங்கொள்வேந்தன் மனமகிழ்வோங்கிட
வுறங்கினுன்றுயி நீர்ந்துணருற்றெனத்
திறங்கொண்மைந்த னெழுந்துதிசெப்புவான்.

(இ-ள்.) தருமநெறியைக்கொண்டிருக்கிற முனிவர்கள் ஆசீர்வசனஞ்சொல்லும் வீரம்பொருந்தியராசன் மனதில்மகிழ்ச்சி யதிகரிக்கத் தக்கதாக நித்திரைசெய்தவன் அதுநீங்கியெழுந்ததுபோலப் புத்திரனெழுந்து இந்தவார்த்தை சொல்லுகிறான்-எ-று. (௬௯)

வேறு,

இத்தலையினிகழ்ந்தபொரு ளெந்தைகேளிளம்பிறைபோல் வெள்ளெயிற்றனெரியுங்கண்ணன் மைமேதொகுமாமலையனைய வுருவன்மிக்கமழைமுகிலினிடிமுழக்க மனையசொல்லன்,கைத்தலத்திலொருகதையுங் கயிறுமேந்திக் கனன்றெனையேபிடித்தடர்க்குங் காலைதோன்றி, யத்தலையிலேவிடுவித் தவனைப்பற்றியடர்ந்தகன்று ரவரொவரோவறிகிலேனே.

(இ-ள்.) என்னையனே, இவ்விடத்தில்நடந்த சேதியைக்கேள் இளம்பிறையொத்த வெண்மையாகிய பற்களையுடையவனும் கருமைநிறைந்தங்கியமலையையொத்த வடிவமுடையவனும் மேகமுழக்கம்போன்றசொல்லையுடையவனுமாகிய ஒருவன்கையினிடத்திலொரு தண்டாயுதமும் பாசக்கயிறுமேந்திக்கொண்டு அதிககோபமுள்ளவனாய் என்னைப்பிடித்துஅடிக்குங்காலத்தில் அவிடத்தில்சிலர்வந்து அவனைப்பிடித்துக்கட்டிக்கொண்டுபோனார்கள் அவர்களெவர்களோ நான்அறியேன்-எ-று.()

என்றுகனிக்குமரனிஃதியம்பக்கேட்டவிகல்வேந்த னுவகையினலெழுந்துபுல்லி, நின்றமறைவேதியற்கு முகமன்கூறிநிதிமாறி யனைவருக்

கும்வெருப்பநல்கிப், பொன்றுமகவுயிரளித்ததுங்கட்கின்னேபுரிவதொ ருகைம்மாறுகாணேனென்னு. வன்றவரோடிருந்துசுவை யடிசினமாந் தியரியணைமேலதிசயத்தோ டமர்ந்தகாலை.

இ-ள்.) இவ்வாறு ஒப்பற்ற தன்புத்திரன்சொல்லக்கேட்டுப் பல முள்ளஅரசன் சந்தோஷத்தையுடையவனாகிப் புத்திரனையணைத்துக் கொண்டு அவிடத்திலிருந்தமுனிவர்களுக்குஉபசாரவார்த்தைசொல்லி திரவியமாகியமழையைவெறுக்கும்படி யாவருக்குங்கொடுத்து இறந்த என்மகனுக்கு உயிர்கொடுத்தஉங்களுக்கு இப்போதுசெய்யும் பிரதியு பகாரம்ஒன்றும் நான்காணேனென்றுசொல்லி அவர்களுடனிருந்து போசனஞ்செய்து சிங்காசனத்தில்அதிசயத்துடனிருந்தபோது எ-று.

தேன்மாரிதுளிப்பனபோன் மகதிவீணைத்திவ்வுறுதந் திரியின்வழித் தாகத்தோன்றும், வான்வயிற்றென்வெளியைச் செவியிலேற்றுமறை முனிநாரதனவையின் வந்துதோன்றக், கான்மாலையிலிற்றுறையெழு ழுதுமார்பன் கதுமெனச்சென்றிறைஞ்சியிரு சழலும்போற்றித், தான் வாழுமரியணையின்மருங்குவேறோர் தமனியப்பீடிகைமுனிவன்றனக் குமீந்தான்.

(இ-ள்.) மகதியாழினைக்கையினால் மீட்டத்தக்கதான தந்திரியின் வழியாக ஆகாயவழியிது வென்னும்படி தோற்றுகின்றநாதத்தை யாவர் காதுகளிலும் தேன்மழை துளிப்பதுபோலச்சொரியும் நாரதமுனிவர் அந்தசபையில்வந்தவுடன் அவ்வரசன் விரைவிலெழுந்துபோய் வண ங்கியிருபாதங்களையும் வணங்கித்துதித்துத் தானிருக்கும் சிங்காசனத் தின் அருகில் அம்முனிவருக்கும்வேறொருஆசனங்கொடுத்தான்-எ-று.

மணித்தவிசின்வைசியஞானிசூற மன்னன்மகிழ்ந்தருந்தவத்தோய் மல ரின்மேலான், கணித்தவுலகேரேழுகொடியினெய்திக் காணவல்லாயிறு ம்பூதுகண்டதுண்டேற், பணித்திடெனவினவுதலுமகிழ்ந்துகண்ட பரி சனைத்துமப்படியே பகர்வானென்சிற், குணித்துமிகவதிசயித்து வேந் தேயுன்றன் குமரனியல்கேட்டியெனக்கூறலுற்றான்.

(இ-ள்.) அந்தரத்தினாசனத்திலிருந்த நாரதமுனிவர் ஆசீர்வசன ஞ்சொல்ல மன்னவன்மகிழ்ந்து அரியதவத்தையுடையவரேபிர்ம்மதே வன்சிருஷ்டித்த பதினாலும்லோகமும் கொடிப்பொழுதிற்சென்று காண த்தக்கவராதலால் ஏதாவது அதிசயம்உண்டாயிருந்தால் சொல்லுமெ ன்று வினவினவளவில் மகிழ்ச்சிகொண்டு தாம்கண்டதொன்றும்வழு வாமல் சொல்லநினைத்து மிகவும் அதிசயத்தையுடையவராய்அரசனே உன்புத்திரனுடைய சங்கதியைக்கேளென்று சொல்லுகின்றார்-எ-று.

விசும்புநெறியான்சகிரும் வேலைகண்டேன்விடுகயிறு மடுதண்டுக்க ரதிலேலங்கிப்புகும்புயல்போற்கரியபிற மறலியுன்றன்பாலனிவன் றனை

ப்பறிக்கொடுபோங்காலே, யசும்பமுதுபொழிமதிச்செஞ்சடையோனே வடல்வீரன்கணத்தினொடு மடைந்துகூற்றைத், தசும்பொழுகப்பாச த்தாற்பிணித்துவீக்கித் தருக்கினொடுமைந்தனையும் விலக்கிமீட்டான்.

(இ-ள்) ஆகாயமார்க்கத்தில் நான்போம்போது வீசுகின்ற பாசக் கயிறும் அடிக்குந்தண்டாயுதமுங் கையிலேந்திக்கொண்டு நீருண்ட மேகம்போலக் கருமைநிறமுள்ள காலனானவன் இந்த உன்புத்திரனைப் பிடித்துக்கொண்டு போகுங்காலத்தில் அமுதத்துளிபொழிகின்றபிறை மதியணிந்த சடாமகுடத்தையுடையபரமசிவன் அனுப்பவெற்றிபொரு ந்திய வீரபத்திரன் கணங்களுடன்வந்துகூற்றுவனை உதிரம் ஒழுகும்ப டிபாசத்தினாற்கட்டியிறுக்கி இவனை மீட்டுவிட்டான்-எ-று. (௫௪)

பிணியினொடுகூற்றுவனைக்கொண்டுவீரன் பெயருநெறியிடைத்தரு மராசனெய்தி, யணியுமணிமுடிகழலிற் றீண்டவீழ்ந்தெம் மையனே தக்கன்மகமழித்தகோவே, பணிசெயுநின்னடியருக்குமடியனாகப் பற்றா தசிறியனைநீபற்றற்குள்ளந், துணியுமதற்கிவனிழைத்தவாறேதென்னத் தோலாதபடைவீரன்சொல்வதானான்.

(இ-ள் அதன்பின்புவீரபத்திரர் கட்டினகட்டுடன் காலனைக்கொ ண்டுபோமிடத்தில் யமதருமராசன்வந்து தன்னுடையரத்தினக்கிரீடம் அவர்பாதத்தில் படும்படிபணிந்து எங்களையனே தக்கன்யாகத்தை அ ழித்தஇறைவனே தொண்டுசெய்கின்றநின்னடியருக்கும் அடியனாகும் படி தகுதியில்லாதஇவனை நீ பித்துக்கொண்டுபோகத் திருவுளங்கொ ள்வதற்கு இவன்செய்தகுற்றம் யாதோவென்னத் தோற்புஅடையாத வீரபத்திரர் சொல்லுகின்றார்-எ-று, (௫௫)

வணங்குவரிசிலைத்தடக்கைப் பத்திரசேனன்மாமதலை சீருத்திரவண் மையாலே, யிணங்குபதினாயிரம்பாண் டிருப்பான்றன்னை யீராறுண்ட கவையிலேயிறுதிசூழ்ந்து, நிணங்கொணெடுந்தடிப்பிலவாய்க் காலதூ தர்நெருந்துநரை யறமுறுக்கிச்சிறுவனான குணங்குறையிலடியவனைப் புரத்தியென்றகூற்றுதைத்தோன் பணிதலைமேற்கொண்டுவந்தோம்.

(இ-ள்) வளைக்கும் நீண்டவில்லையுடைய பத்திரசேனராசன்புத் திரன் சீருருத்திரமந்திரமகிமையால் பதினாயிரம்வருஷம் உயிருடனி ருப்பவனாயிருக்கப் பன்னிரண்டுவயதில் அவனுக்குமுடிவுக்குறி நிண ம்பொருந்திய பெரியதண்டமும் பிலம்போன்றவாயுமுள்ள காலதூதர் கிட்டிப்பிடித்தார்களாதலால் நீபோயவர்களைத்தண்டித்து நற்குணங்க ளில்குறைவில்லாத ராசகுமாரனைக்காத்தியென்றருளிய காலசங்காரமூர் த்தி யேவலைப்பெற்றுக்கொண்டுவந்தோம்-எ-று, (௫௬)

இம்மதலைசிவன்றொண்டனாகும்வாழ்நா ளீரையாயிரமுடையோனி வனுக்கிந்த, வெம்மையிடர்விளைவித்தகூற்றைக்கட்டி விமலன்முனங் கொடுபோவோமென்னலோடு, மம்மவெனமதிமயங்கித்தருமராச னறி ரண்டாண்டேயிவனுக்காயுவென்னச், செம்மையுடனுரைத்திடலும் வீரன்கேட்டுச் சித்திரகுத்திரன்கணக்கிற் றெளியாயென்றான்.

(இ-ள்) இந்தப்புத்திரன் சிவனடிமையாவன் இவன் பதினாயிரம் வருஷம் ஆயுசுடனிருப்பவன்; இத்தகைமையுடையவனுக்குக் கொடுந் துயரம்விளைத்தகாலனைக் கட்டிக்கொண்டு பரமசிவன் சந்நிதிக்குக்கொ ண்டுபோவோமென்று சொன்னவளவில் தருமராசன்மதிமயங்கி இவ னுக்குப்பன்னிரண்டுவயதுதானென்று நிச்சயமாகச்சொல்லியவளவில் வீரபத்திரர்கேட்டுச் சித்திரகுத்தன் கணக்கைப்பார்த்து நீ தெளி ந்துகொள்ளென்றார்-எ-று, அம்ம-அசைச்சொல். (௫எ)

வரவழைத்துத்தருக்கனுண்மைக்கணக்கன்றன்னைவதனம்பார்த்திந்த விளமதலைக்காயுந், திரவளவையுரையெனலுமவனுந்தேர்ந்து செப்புவா னீராறுண்டளவேநிண்ணம், பரவருசீருருத்திரத்தின்பலத்தினாலே பக ர்பதினாயிரம்பருவம் பாரில்வாழப், புரவலனேபின்னெழுதிக்கிடத் தல் கண்டே னெனப்புகலவவனுமஞ்சிப்புகலலுற்றான்.

(இ-ள்.) அந்தவார்த்தையைக்கேட்ட தருமராசன்சித்திரகுத்தனை வரவழைத்து அவன்முகம்பார்த்து இந்தவாலிபனுக்குள்ள ஆயசுமுடி வைப்பார்த்துச்சொல்லென்றான் சித்திரகுத்தன் கணக்கைப்பார்த்துப் பன்னிரண்டுவயதென்பது நிச்சயமேஆனால் சீருருத்திரமந்திரபலத்தி னால் பதினாயிரம்வருஷம் பூமியில்வாழும்படி பின்னாலேயெழுதியிருப் பதை யிப்போதுபார்த்தேனென்றுசொல்ல யமன்பயந்துசொல்லுகின் றான்-எ-று. (௫அ)

புன்மையினான்மடமையினாலடியார்செய்த புன்றொழிலையேபொறு த்தல்புலவோர்செய்யுந், தன்மையெனப்புகழ்ந்துநமனிரந்துகூறத் தனி வீரன்பிணித்தகொடுங்கூற்றைவிட்டுந், தொன்மையதாம்சிவலோகம டைந்தான்வாசந், தொடைத்தநமன்றன்பதியிற்புகுந்தானிந்த நன்மை யதிசயத்தகைமைபுகலவேண்டிநாமுனதுநகரடைந்தோநாமவேலோய்.

(இ-ள்) புல்லறிவினாலுந் தெரியாமையினாலும் அடியார்கள்செ ய்தகுற்றங்களைப் பொறுத்துக்காப்பது பெரியோர்கள்செய்கையென்று நமன்வீரபத்திரரைப்புகழ்ந்து இரந்துசொல்ல அவர்காலனைக்கட்டிய கட்டினையவிழ்த்துப் பழமையாகியசிவலோகமடைந்தார் வாசனையுள்ள மாலையணிந்த தருமராசன் தன்னுலகம்போய்ச்சேர்ந்தான் இந்தநல்ல அதிசயத்தைச் சொல்லவேண்டி அரசனே நாமுன் நகரத்திற்குவந் தோம்-எ-று. (௫கூ)

வேறு,

என்றுநாரதமுனிவரணியம்பலு மெறுழ்வலிக்குவவுத்தோள்
குன்றுபோல்வளர்ந்தோங்கிடவுவகை யங்குரைகடலிடைமூழ்கி
நன்றுநன்றெனவருந்தவர்முதலிய நான்மறையவர்ப்போக்கித்
துன்றுதாரவன்மைந்தனோடரனடி தொழுதுவீற்றிருந்தானே,

(இ-ள்.) இவ்வாறுநாரதமுனிவர் சொன்னமாத்திரத்தில் பலமுள்ளதாய்க் குவிந்திருக்கும்புயங்கள் மலைபோல்வளர்ந்தோங்கிப் பூரிக்கத்தக்கதாகச் சந்தோஷமாகிய சமுத்திரத்தில்மூழ்கி இதுமிகவும்நல்லகாரியம நல்லகாரியமென்றுசொல்லி முனிவர்கள்முதலாகியபிராமணர்களை அனுப்பிவிட்டுப் பூமாலையணிந்தராசன் தன்புத்திரனுந்தானுமாசப் பரமசிவன்திருவடிகளைத்தொழுது வாழ்ந்திருந்தான்-எ-று. (௬௰)

இந்தமந்திரத்தகுதியுமோதினோர்க் கிறைவனருள்கூரு
மந்தவண்ணமுங்காலனைக்கடிந்தது மரும்பெற்றிருமைந்த
னந்தநீர்ந்ததுமாயுளைப்பெற்றது நவின்றமாக்கதைதன்னைச்
சிந்தைசெய்குநர்படிக்குநர் சிவபதமடைவாரே.

(இ-ள்,) இந்தமந்திரப்பெருமையும் இதைச்சொல்லுகின்றவர்களுக்குப் பரமசிவன் கிருபைசெய்யுமுறையும் காலனைக்கடந்ததும் பெறுதற்கரிய ராசகுமாரனிறத்தல்நீங்கினதும் பதினாயிரம்வருஷம் இருக்கும் ஆயுள்பெற்றதும்சொல்லுகின்ற இந்த மகத்துவமுள்ளசரித்திரத்தைச்சிந்திப்பவர்களும் படிப்பவர்களும் கேட்பவர்களும் சிவபதமடைவார்கள்-எ-று. (௬௧)

இன்னதன்மையதிக்கதையெனமுளை யிளமதிச்செழுங்கண்ணி
மின்னுசெஞ்சடையமலனைநிமலனை விமலனையடிபேணி
நன்னலந்தருமிருந்தவக்கிழமைசா னவையிலார்களிகூரச்
சொன்னநான்மறைவியாதனதருள்பெறு சூதமாமுனிசொன்னான்.

(இ-ள்) இந்தச்சரித்திரமித்தன்மையுடையதென்று இளம்பிறைமதியைமாலைபோலணிந்திருக்குஞ் செஞ்சடையையுடையஅமலர் நிமலர்விமலர்என்னும் பலதிருநாமமுள்ளபரமசிவனுடைய திருவடிகளைத்தொழுது நல்லமோக்ஷந்தருவதற்கேதுவாகிய தவநெறியுள்ள நைமிசாரணியமுனிவர்கள் ஆனந்தம்அடையும்படி சூதமுனிவர்சொன்னார் அவரோவே தங்களைவகுத்துக்கூறிய வியாசமுனிவருடையசீஷர்-எ-று.

இருபத்தொன்றாவது

சீருருத்திரமகிமையுரைத்த அத்தியாயம்

முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௲௨௱௰௪.





சிவமயம்.

இருபத்திரண்டாவது

## வஞ்சுளை முத்திபெற்ற அத்தியாயம்.

மீட்டுமற்றோர்கதை சூதன்விளம்புந்
தீட்டலாதமறை யோர்திறல்வேந்த
நீட்டுசீர்வணிக ரென்றிவர்மூவர்
நாட்டுவேதநெறி நன்னிலைநின்றோர்.

(இ-ள்) சூதமுனிவர்வேறுமொருசரித்திரஞ்சொல்லுகின்றார்பரிசுத்தர்களாகிய பிராமணர்கள் வெற்றியுள்ளக்ஷத்திரியர்கள் கீர்த்திதேடும் வைசியர்களாகிய இம்மூவரும் விதிவிலக்குகள்சொல்லும் வேதத்தின் மார்க்கத்திலிருப்பவர்கள்-எ-று. (க)

அந்தநூலினதி காரமிலாராய்
வந்தபின்னவரு மாநிலமீதிற்
சந்தமில்லிழி குலத்தினர்தாமுஞ்
சிந்தைநன்கொரு வுமீதமொழியாரும்.

(இ-ள்,) அவ்வேதங்களோதும் அதிகாரமில்லாதவர்களாய் வந்த சூத்திரரும் பெரியஇந்தவுலகத்திலிருக்கும் மாட்சியில்லாத இழிகுலத்தாரும் மனதில் கற்பினிலையில்லாத மாதர்களும்-எ-று. (உ)

முற்றுநன்னதிகண் மூழ்கினரேனு
நற்றவம்புரித லுடிலரேனு
முற்றபேரற முவந்திலரேனும்
பற்றிலானடி பணிந்திலரேனும்.

(இ-ள்.) நல்லநதிகளிலெல்லா மூழ்காதவர்களாயிருந்தாலும் நல்ல தவஞ்செய்யவேண்டுமென்று நினையாதவர்களாயிருந்தாலும் பொருந்தியதருமங்கள் செய்யாதவர்களாயிருந்தாலும் விருப்பு வெறுப்புஇயல்பாகவேயில்லாத பரமசிவனுடையதிருவடிகளைப் பணியாதவர்களாயிருந்தாலும்-எ-று. (௩)

ஓதுதற்குமரிதா புணர்கல்லாப்
பாதகத்தொழில்கள் பண்ணினரேனுஞ்
சோதிநற்பிறை முடித்திடுதொல்லோன்
காதையிற்படு கருத்தினராஞல்.

(இ-ள்) சொல்வதற்குமரியதாய் மனதில்நினைக்கவுங்கூடாத பாவங்களைச்செய்கின்றவர்களேயானாலும் பிரகாசமுள்ளபிறையணிந்தஆதி

காரணமாகிய பரமசிவனுடையசரித்திரத்தில் சிந்தைவைப்பவர்களா னல்-எ-று. (௪)

பாவமென்றமொழி பற்றமாய்க்குத்
தேவரும்பரவி வந்தனைசெய்யக்
கோவையங்குமுத வாயுமைகொண்கன்
மேவரும்பதவி மேவியிருப்பார்.

(இ-ள்.) பாவமென்கிறசொல்லின் பற்றைக்கெடுத்துத்தேவர்களு ம்துதித்துத்தொழும்படி கோவ்வைப்பழமொதத செவ்வாயினையுடைய உமையவள்கணவனாகிய பரமசிவன்வீற்றிருக்கும் சிவபதவியில்பொரு ந்தியிருப்பார்கள்-எ-று. (௫)

கரந்தைவார்சடையர் காதையைநாளு
மிருந்துகேட்க வியலாதவர்தாமு
மரந்தைநீங்கி யரைநாழிகையேனுந்
தெரிந்துகேட்கி னுறுதீவினைமாய்ப்பார்.

(இ-ள்.) கரைந்தைப்பத்திரமணிந்த நீண்டசடையையுடைய பர மசிவன்கதையை ஒருநாள் முழுவதுமிருந்துகேட்கக்கூடாமையாயிருப் பவர்கள் தங்களுக்கிருக்கும் வருத்தத்தைவிட்டு அரைநாழிகையாவது ஞாபகத்துடன் கேட்பார்களானல் செனனங்கள்தோறும் பொருந்திய தீவினையைக் கெடுப்பார்கள்-எ-று. (௬)

வேறு.

கலிபுகத்துநற் கன்மமியற்றுதன்
மலிபுராணநூல் கேட்பதுமாட்சியா
லலையுநெஞ்ச மலைவற்றுமெய்ந்நெறி
நிலைபெறுஞ்சிவ யோகத்துநிற்குமே.

(இ-ள்.) கலியுகத்தில் நற்கருமங்கள்செய்குதலும் நிறைந்துள்ளபு ராணங்களைக்கேட்பதுமாகிய பெருமையால்சஞ்சலப்படுகிறமனம்அலை வற்று நல்லநெறியில்நிலைதநிருக்கத்தக்க சிவயோகத்தில்நிற்கும்-எ-று-

வஞ்சகக்கரு நெஞ்சமுமாசிலா
வஞ்செழுத்தை யடையவரந்தைபோம்
விஞ்சுதீவினை வேரறும்வேரறத்
துஞ்சிலாத்துரி யத்திற்சுகிக்குமே.

(இ-ள். வஞ்சகமுள்ளதா யிருண்டிருக்கிறமனமும் குற்றமில்லா த பஞ்சாக்ஷரத்தைப்பொருந்துமாகில் துன்பம்நீங்கும் அதிகரிக்குந் தீவினைக்குக்காரணமாகிய ஆணவமலம்நீங்கும் அதுநீங்கினல் மாயாத துரியாவத்தையில் சுகித்துக்கொண்டிருக்கும்-எ-று. (அ)

உம்பராரமு துண்டவர்தங்கட்கு
நம்புகாய நரைதிரைமாற்றுமா
லெம்பிரான்கதை யின்னமுதுண்டவர்
வெம்புகாய வினைமுற்றுமாற்றுமே.

(இ-ள்.) தேவர்களுக்குக் கிடைப்பதற்கரிய அமுர்தம்உண்டவர்களுக்குத் தங்களுடையதென்று நம்பிக்கொண்டிருக்கிறசரீரத்தின்நரையையுந் திரையையுமாற்றிவிடும் நம்மிறைவன் சரித்திரமாகிய அமுர்தமுண்டவர்களுக்கு வருத்தத்துக்கேதுவாகிய சரீரத்தின் வினையையெல்லாம்நீங்கும்-எ-று. (கூ)

ஆன்றகாதையின் மேல்விருப்பற்றவர்
தோன்றுமுற்கதை பொய்யென்றுசொல்பவர்
மூன்றுகோடி நரகத்தின்மூழ்கியே
நான்றநாவுடை நாய்ப்பிறப்பெய்துவார்.

இ-ள். மகிமைதங்கிய சிவகதையில் விருப்பமில்லாதவர்களும்முன்னடந்திருக்கும் சிவகதை பொய்யென்று சொல்லுகிறவர்களும் மூன்றுகோடிநரகத்தில் அழுந்திப் பின்பு தொங்கியநாவுடைய நாயாகப்பிறப்பார்கள்-எ-று. (௰)

எக்குலத்தவ னுயினுமீர்ஞ்சடை
முக்கணன்கதை யோதுமுதல்வனை
மக்களுள்ளிவ னும்மகனென்பவர்
கக்குவாய்ப்புழுக் கான்றிடுநோய்கொள்வார்

இ-ள். எந்தக்குலத்திற்பிறந்தவனே யானாலும் குளிர்ச்சிதங்கியசடையையுடைய பரமசிவனது சரித்திரத்தைச்சொல்லுகின்ற முதல்வனை மனிதர்களுக்குள் இவனுமொருமனிதனென்று எண்ணிச் சொல்லுகின்றவர்கள் கக்கும்வாய்புழுக்களைக் கக்கும்படியான வியாதியை யடைவார்கள்-எ-று. (௰க)

ஓங்குசீர்த்திருக் காதையுரைக்குநர்
தாங்குபீடிகை யின்றித்தரையிரா
ராங்கண்யாரையு மஞ்சலிசெய்திடார்
தீங்கினேருரை சிற்றவைசேர்ந்திடார்

இ-ள், மேலானமகிமையுஞ் சிறப்புமுள்ள சிவசரித்திரஞ் சொல்லுகின்றவர்கள் தாங்குகிற ஆசனமில்லாமல் தரையிலிரார்கள் அவிடத்திலிருக்கும் யாரையும்வந்தியார்கள் தீயவர்களிருக்கிற புல்லியசபையிற்சேரார்கள்-எ-று. (௰உ)

சிறியர்தீக்களி செய்யுமிடத்தினு
மறிவிலாளர் சூதாடுமரங்கினு

முறலில்வஞ்சிய ருண்டாட்டிடத்தினும்
பொறியிலாளர் பொருந்துமிடத்தினும்.

இ-ள். அற்பமாகப் பாவத்துக்கேதுவாகிய சிறப்புகள் செய்யுமிடத்திலும் அறிவில்லாதவர்கள் சூதாடும் அரங்கத்திலும் தத்தங்கணவர்களுடன் மாதர்கள்விளையாடிக்கொண் டிருக்குமிடத்திலும் அங்கப்பழுதானவர்களிருக்குமிடத்திலும்-எ-று. (௰௩)

கம்பமால்கரி நல்கினுங்கண்ணக
ணிம்பர்நாடு முழுவதுமீயினுஞ்
செம்பொன்மாரி பொழியினுஞ்செஞ்சடை
நம்பன்காதை நயந்துக்கிற்றிடார்.

இ-ள். அசைதலை யியல்பாகவுடைய பெரியயானை கொடுத்தாலும் இடமகன்ற இவ்வுலகத்தில் நாடுகொடுத்தாலும் பொன்மாரி வருஷித்தாலும் செஞ்சடையையுடைய பரமசிவனது சரித்திரத்தை விரும்பிச்சொல்வார்கள்-எ-று. (௰௪)

மூவராதி முழுதுலகத்துள
தேவர்வாழுஞ் சினகரமுன்னருந்
தூவுதண்ணற வுண்டுசுரும்பிமிர்
பூவர்சோலைப் புனிதவிடத்தினும்,

இ-ள். திரிமூர்த்திகள் முதலான எல்லா வுலகங்களிலு மிருக்கிற தேவர்கள்வீற்றிருக்கும் ஆலயங்களின்முன்னும் பெருகாநின்றகுளிர்ச்சிதங்கியதேனையுண்டு வண்டுகளிசைபாடிக்கொண்டிருக்கத்தக்க மலர்களையுடைய சோலையாகிய புனிதமுள்ளவிடத்திலும்-எ-று. (௰௫)

தீதிலாத செழுநதிதீரத்துங்
கோதிலார்கள் குழீயவிடத்தினும்
வேதவேதியர் வேள்வித்தலையினு
மாதிமாத வரம்மனைமுற்றத்தும்.

இ-ள். தீமையில்லாத செழுமையுள்ள நதிதீரத்திலும் குற்றமில்லாதவர்களாகிய நல்லவர்கள்கூடிய இடத்திலும் பிராமணர்கள் செய்யும் யாகசாலையினிடத்திலு மாதியாகிய முனிவர்களுடைய ஆசிரமத்தினிடத்திலும்-எ-று, (௰௬)

மற்றும்வேறுள புண்ணியமல்குசீ
ருற்றதெவ்விட மவ்விடத்தோதுவர்
பற்றிநாளும் பரமன்றிருக்கதை
முற்றுமோதி முழுதுணர்கேள்வியார்.

இ-ள். இவ்விடங்களிலுமல்லாமல் இன்னுமிருக்கிற புண்ணியம் பொருந்திய சிரிணையுடையது எவ்விடமோ அவ்விடத்திலும்வேதாகம

சாஸ்திரபுராணங்கள்முழுவதையு மோதியுணர்ந்தபெரியோர்கள்,அன்புடன் சிவகதையை நாள்தோறுஞ்சொல்வார்கள்-எ-று. (௰எ)

நாயகன்கதை நாடொறுங்கேட்குநர்
தூயநீரினிற் றோய்ந்துவெண்ணீறணிந்
தேயநித்தக் கருமமியற்றிப்பின்
காயவைம்புல னுங்கருத்தோன்றியே.

இ-ள். பரமசிவனுடைய சரித்திரத்தையே தினந்தோறுங்கேட்பவர்கள் பரிசுத்தமுள்ளதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து விபூதியணிந்துகொண்டு தங்கள்வருணாச்சிரமத்துக்குரிய நித்திய கர்மானுஷ்டானங்களைமுடித்துக்கொண்டு சரீரத்தைப்பொருந்திய ஐம்புலன்களும் கருத்தும் ஒருவழிபட்டு-எ-று. (௰அ)

வல்லதேசிக னுக்குமணித்தவி
சொல்லைநல்கி யுறுபொருளீந்துநன்
கல்லவாணிகி ளத்தலடங்கிவன்
புல்லரானவ ரைப்புறம்போக்கியே.

இ-ள். சிவகதைசொல்லவல்ல ஆசாரியனுக்கு விரைவாகரத்தினாசனங்கொடுத்து மிகுந்தபொருளுங்கொடுத்து நல்லதல்லாததாகியவார்த்தைபேசுதலைவிட்டு மிகவும் புன்மையானவர்களைப் புறத்தில்போக்கிவிட்டும்-எ-று. (௰௯)

பத்தியோடல்கு பாவகத்தோடுறு
வொத்தநற்றவி சேறலொழித்து நூல்
வித்தகற்குக்கீழ் மென்றவிசொன்றியே
சித்தம்வேறறக் கேட்பதுசெவ்விதால்.

இ-ள். பக்தியுடனும் ஒடுக்கமுள்ளபாவகத்துடனும் பொருந்திச் சிவகதைசொல்லுகின்றவ ராசனத்துக்குச்சரியானநல்லஆசனத்திலிருப்பதையொழித்தவராசனத்துக்குத் தாழ்ந்தஆசனத்தி லிருந்துகொண்டு மனம்வேறோரிடத்திற் செல்லாதவண்ணமாகக் கேட்குதல் நன்மையாம்-எ-று; (உ௰)

அன்றிக்கேட்கு மிடத்தழுக்காற்றினாற்
கன்றிவேறோர் பொருளினைக்கற்பிப்பா
ரொன்றலாத துரைத்தெதிர்வாதிப்பாற்
பன்றியாயிந்தப் பாரிலுதிப்பரே

இ-ள். இவ்வாறன்றிக் கேட்குமிடத்தில் பொறாமையினால் மனம் வெதும்பித் தங்கள்கற்பனையால் வேறொருபொருளைச் சொல்லுகின்றவர்களும் பலபலவாறாகச்சொல்லி யெதிரில்வாதுசெய்கின்றவர்களும் இவ்வுலகத்தில் பன்றியாய்ப்பிறப்பார்கள்-எ-று. (உ௧

அன்பினிற்கதை கேட்பதலாற்பிறர்
வன்பினெய்தி மனம்வைத் துக்கேட்பவர்
துன்பமெய்து சுடலையிலோங்கிய
வின்பமில்களி யெட்டியதாகுவார்

இ-ள். அன்புடன் சிவகதையைக்கேட்பதைவிட்டுப்பிறருடையவ ன்மையினில் மனம்வைத்து அவர்கள்சொல்லும் வேறொன்றைக் கேட் பவர்கள் துன்பம்பொருந்திய சுடலையில் ஓங்கிய மதுரமில்லாத பழத் தையுடைய எட்டிமரமாவர்-எ-று (உஉ)

கூறுமாக்கதை கூட்டுமுனப்பனே
வேறுதங்கருமத் துவிரைந்துபோஞ்
சீறுசிந்தையர் செல்வத்தைத்துய்க்குங்கா
லீறுசெல்லா திடையிலிழப்பரோ

இ-ள், சிவகதையைஆரம்பித்து முடிப்பதற்குமுன் மத்தியில் வே றுகியதங்கள்காரியத்தைக்குறித்துவிரைந்துபோய்விடுகின்றமூர்க்கமன முள்ளவர்கள் நல்வினையினால் செல்வத்தைஅனுபவிக்குங்காலத்தில்தங் கள்ஆயுள்வரையில் அனுபவியாமல் மத்தியில்இழந்துவிடுவார்கள்-எ-று

மஞ்சமேறியும் வெள்ளிலைமாந்தியு
நஞ்சமுண்டவர் நற்கதைகேட்குந
ரஞ்சியோவென் றரற்றிக்கழுநுனைத்
தஞ்சமாகக் கிடந்துதவிப்பரோ

இ-ள். மஞ்சத்தின்மேலேறி யிருந்துகொண்டும் தாம்பூலம் போ ட்டுக்கொண்டும் விஷபானஞ்செய்தருளிய பரமேசுவரனுடையசரித்தி ரத்தைக்கேட்பவர்கள் பயந்து ஓவென்றழுதுகொண்டு கழுமரத்தினு னியே தஞ்சமாக அதிலிருந்து தவிப்பார்கள்-எ-று. (உச)

கயிலையண்ணல் கதையைநிகழ்த்துழித்
துயில்புரிந்திடுந் தொல்வினைப்பாதகர்
வெயில்கரந்திடு வெங்கொடிக்கஞ்சியே
யயின்முட்காட்டுறை கூகையதாகுவார்

இ-ள் கயிலாசபதியின்சரித்திரத்தைச் சொல்லுமிடத்தில் நித்தி ரைசெய்கின்ற பழையவினையையுடைய பாவிகள் தன்னைக் கொல்லுகி ன்ற கொடியகாக்கைகளுக்குப்பயந்து பகலிலொளித்துக்கொண்டு இரு ண்டிருக்குங்காட்டில் வாயஞ்செய்கிற கோட்டானுவார்கள்-எ-று, (

படர்ந்தவேணிப் பரமன்றிருக்கதை
கிடந்தசேக்கையிற் கேட்குமறிவிலோர்
நிடைந்தமால்வரை யுச்சிவிடர்புகுந்
துடைந்தமாசண மாகிப்பிறப்பரோ.

இ-ள், விரிந்தசடையையுடைய பரமேசுவரனது சிறப்புள்ள சரித்திரத்தைப் படித்திருந்த பாயலிலிருந்தபடியேகேட்கும் அறிவினர்கள்நெருங்கிய பெரியமலையின் உச்சியிலிருக்குங்கல்வெடிப்புச்சந்துகளில் புகுந்துகொண்டிருக்கும் பாம்பாய்ப்பிறப்பார்கள்-எ-று, (உசு)

ஈசன்காதைசொல் வானன்றிபின்னுமோர்
தேசிகன்பிற னுண்டென்றுசெப்புமோ
காசுதீர்க்குங் கதைவிளக்கங்கொடு
மாசின்மாக்கண் மனவிருணீக்கலால்

இ-ள், சிவகதைசொல்லுகின்றவைகளையன்றி வேறேயொரு ஆசிரியனுமுண்டென்று வேதாகமங்கள்சொல்லுமோ (ஏனெனில்) குற்றங்களைத் தீர்க்கத்தக்க சிவசரித்திரமாகிய தீபத்தைக்கொண்டுபெழுதில்லாதமனிதர்கள் தங்களுடையமனவிருளை நீக்குதலினால்-எ-று, (உஎ)

ஆதலால்கதை கேட்குமவையினைப்
போதலென்றிய புண்ணியமாந்தர்கள்
பாதகந்தவிர்க்கும் பயபத்தியாய்
நாதனல்லவை யென்றெண்ணிநண்ணுவார்

இ-ள், ஆகையால் சிவகதைகேட்குஞ்சபையை ஞானம்பொருந்திய புண்ணியவான்கள் பாவத்தைநீக்கும்படியான பயபத்தியுடன்பரமேசுவரனுடைய சந்நிதியென்றுகருதி மேற்சொல்லியகுற்றம் யாதொன்றுமில்லாமலிருந்து கேட்பார்கள்-எ-று, (உஅ)

வே று,

இத்தகையகதையான்முன் னியன்றகதையொன் றுரைப்பாந்
தத்துதிரைமணிகொழிக்குந் தடங்கடற்செந்தமிழ்நாட்டின்
மைத்தொகுபூம்பொழி லுடுத்த வாட்களமர்முதுநகரில்
வித்தகராயினிதுறையும் வேதியர்களனைவோரும்

இ-ள், சிவகதையானது இத்தன்மையுள்ளகதையாகும்இனிமுன்னடந்ததொரு சிவகதைசொல்லுகிறோம் தாவிமேலெழுகின்றஅலைகள் முத்துகளைக்கொழிக்கும் பெரியசமுத்திரத்தையுடைய தமிழ்நாடாகிய பாண்டிநாட்டில் மேகங்கள்சேரும்படி பூஞ்சோலைசூழ்ந்த வாட்களமென்னும் பழையநகரத்தில் ஞானவான்களா யினிதுடன்வாழும் பிராமணர்களெல்லாரும்-எ-று, (உகூ)

தீப்பேணுந்தொழிறிறம்பிப் படைதரித்தசெய்கையராய்
நாப்பேணுமந்திரமு நற்றொழிலுநனிமறந்து
பூப்பேணியான்கழலி லருச்சிக்கும்புந்தியின்றி
மீப்பேணுங்கடவுளர்த முப்போதைக்கடனும்விட்டார்,

இ-ள் நித்தியாகுதிசெய்யுந் தொழிலைமாறி ஆசாரமேம்தியகைகையை யுடையவர்களாய் முனிஞனுச்சரிக்கும் மந்திரத்தையும் நற்கருமங்களை யு மிகவுமறந்து மலர்களெடுத்து அன்புடன் பரமேஸ்வரனுடையதிரு வடிகளிலருச்சிக்கவேண்டுமென்கிற விவேகமுமில்லாமல் வானுலகில் வாழுங் கடவுளர்களை வந்திக்கத்தக்கதான திரிகாலச்செய்தொழிலையுமம றந்துவிட்டார்கள் எ-று, (௩௰)

ஆரணமுந்தனிபோதா ரந்தணருங்கடாக்கரும
காரணமாநீசர்தொழில் கடைப்பிடித்தமறையோருள்
வாரணிநற்கும்பமுலை வஞ்சுளைதன்மணக்கொழுநன்
ஞாரணிக்குள்விதுரனெனப் பெயருடையோனொருவன்

இ-ள், வேதங்களையு மோதாதவர்களாய்ப் பிராமணர்களுக் குரிய தல்லாத செய்கைக்குக்காரணமாகிய நீசர்தொழிலை அனுசரித்திருக்கு ம் பியாமணர்களில் கச்சணிந்த தனங்களையுடைய வஞ்சுளை என்பவள் கணவனாகிய இவ்வுலகத்தில் விதுரனென்றுசொல்லும் பெயரையுடை யவனொருவன் எ-று, (௩௧)

பண்பில்லாநெறிபூண்டோன் படிற்றொழுங்கின்றலைநின்றோ
னண்பினாற்பொதுமகளி ரிளமுலையினலந்துய்த்து
வெண்பலாலரவுமிழ்ந்தவிடந் தலைக்கொண்டெனக்காமுற்
றொண்புனூர்தடமார்பன் றன்மனையையொழிந்திட்டான்,

இ-ள், நன்மையில்லாத ஒழுக்கத்தையுடையவனும் மேலுக்குப்பி ராமணவேஷமும் உள்ளே நீசத்தொழிலுமாகிய செய்கையி லிருப்பவ னும் ஒளிபொருந்திய பொன்பாலையணிந்த மார்பையுடையவனுமாகிய அந்தவிதுரனென்பவன் நேசத்துடன் பொதுமகளிருடைய இளமைத ங்கிய தனங்களைப்புணரும் கல்வியின்பம்அனுபவித்துக்கொண்டு பாம் பானது வெண்மைசிறந்தங்கிய பற்களினூற் கக்கியவிஷம் தலைக்கேறிய துபோலக் காமந்தலைக்கேறக்கொண்டு தன்மனைவியினிடத்தி லனுபவி க்குங் கல்வியின்பத்தை யொழிந்துவிட்டான்-எ-று, (௩௨)

துணைபிரிந்தமடவன்றிற் பேடைபோற்றுயருழந்து
கணமலிந்தகங்குறொறும் காமரசத்தாலலைந்து
பிணைநெடுங்கண்டுயின்மறப்ப விரகத்தாற்பெரிதுணங்கி
மணமலிந்தகுருளோதி வஞ்சுளையுமிதுசெய்தாள்

இ-ள், வாசனைபொருந்தியதாய்ச் சுருண்ட அளகத்தையுடைய வ ஞ்சுளையானவள் ஆணன்றிலைப் பிரிந்த பெட்டையன்றிலைப்போல்துய ரங்கொண்டு பேய்கள்சஞ்சரிக்கும் இராக்காலந்தோறும்காமபாணத்தி னூல்அலைந்து மானபார்வைபோனற பார்வைநித்திரையைநீக்கவிரகத்தி னூல்மிகவுமவருந்திஇவ்வாறுசெய்யதொடங்கினுள்எ-றுஎவ்வாறெனில்

காதலான்றனொருவிக் கற்புநிறைவரம்புமிகந்
தேதிலானிழிகுலத்தோ னொருவனென்றிற்றேனைசயாற்
றூதுலாமலரணையிற் றனிக்காமவிடர்ப்தவிர்வான்
மாதராடண்வாது மருவுநாடனிலொருநாள்

இ-ள், காமவிரகத்தினால் தர்ம்மவழியைநீங்கிக் கற்புநிலையாகியவ ரம்பினையுங்கடந்து வஞ்சுளையானவள் அன்னியனாகிய ஒரு இழிகுலத் தனுடைய அழகுள்ளதோளைப் புணரும் விருப்பத்தினால் மகரந்தம் நி றைந்த மலரணையில் தனக்குள்ள காமவிடாய்தவிரும்பொருட்டுஒருநா ளாவதுதவிராமல் புணர்ந்துகொண்டிருக்குநாளி லொருநாள்-எ-று,

பழியுரை தன்செவிவெதுப்பப் பைந்தொடிதன்கற்போர்வான்
பொழிமழைப்பினையாமந் தமியனாய்ப்புகுந்திடலுங்
கழையிளந்தோள்வஞ்சுளையுங் காளையொருவனுமணைவாய்
விழைவுடன்மென்பூவணைமேல் மெய்குழைய நல்லனுகர்ந்தார்,

இ-ள், இவள்நடக்குங்காரியம் ஊரறிந்து பேசிக்கொள்ளும் பழ மொழி தன்காதுகளைச்சுடுதலினால் விதுரனென்பவன் வஞ்சுளையின்க ற்புநிலையையறிய மழைபொழிந்துகொண்டிருக்கும் அர்த்தராத்திரியி ல் தன்மனைக்குச்சென்றபோது இளமையான பசிய மூங்கிலையொத்த தோள்களையுடையஅவளும் ஒருவாலிபனுமாக வீட்டுக்குள் விருப்பமு டன்பூவணைமேல்மெய்குழையப் புணர்ந்துகொண்டிருந்தார்கள்-எ-று,

கண்டனன்றண்ணெனுநெஞ்சன்கதழ்ரிபோனெடுஞ்சீற்றங்
கொண்டடையப்படிற்றொழுக்கன் வெருவிமனங்குலைந்தகன்றன்
வண்டுமுரல்குழல்பற்றி வஞ்சுளையைமனங்கலங்கத்
தண்டமிழைக்குவனென்னாத் தாட்டுணையாற்றுகைத்திட்டான்

இ-ள் இவ்வாறிருப்பதைக்கண்டு திடுக்கிட்டமனமுள்ளவனாய்ப் பற் றியெரியுந் தீப்போல மிகுந்தகோபங்கொண்டுவருவதை அந்தச்சோர ன்பார்த்துப்பயந்து ஓடிப்போனான் வண்டுகளிசைபாடிக்கொண் டிருக் கும்படியான அளகத்தைப்பி டித்துக்கொண்டு வஞ்சுளை மனங்கலங்கும் படி தண்டிக்கிறேனென்று தன்கால்களால்மிதித்தான்-எ-று, (௩௯)

கனகுழையுமிகமறுகிக் கணவநீயென்னுரையுஞ்
சினங்குறைந்துகேட்டதற்பின் செகுத்திடுதியெனவிரப்ப
மனங்குறைந்துபுடையானாய் மலர்க்குழல்விட்டனையென்னுந்
தனங்களிற்கண்ணீரொழுகத் தளிரியலுமிழற்றுவாள்

இ-ள், ரத்தினங்கள்பதித்திருப்பதனால் பளுவான குழையணிந்த காதுகளையுடையவளாகிய வஞ்சுளையானவள் மிகுதியாக மனம்வருந்தி க்கணவனைகோபந்தணிந்து என்வார்த்தையையுங்கேட்டுபிற்பாடுகொ

ன்றுபோடென்றுசொல்ல மனமிரங்கி அடிக்காமல் அளகத்தைவிட்டுநீ சொல்வதைச்சொல்லென்ற வளவில்தன்னுடையதனங்களின்மேல்கண் ணீர்சிதறும்படி அழுதுகொண்டு துளிர்போன்றதன்மையுள்ளவள்சொ ல்லுகின்றாள்-எ-று, (௩எ)

வன்கணலறனெருவிப் பொதுமாதர்வசமாகி
யென்கணர்வமுமின்றி யின்றளவுமிகந்தனைநா
லுன்கணலருணேக்கம் பெறுதுருகியுடல்மெலிந்து
புன்கணல்வேனிலான் கணைக்கிலக்காய்ப்புழுங்கினனே,

இ-ள், இரக்கமில்லாமையினல் தாம்நெறியைமாறிப் பொதுமாதர் வசமாகி என்னிடத்திலாசையுமில்லாமலின்றளவும்நீங்கிவிட்டாய்நான் உன்கிருபாநோக்கம்பெறமல் நெடுநாளாக மனமுருகி யுடல்மெலிந்து துயரங்கொண்டு மன்மதபாணங்களுக்கு இலக்காகவருந்தினேன்எ-று

நல்லிளமைசெவ்விநல நாளும்வறிதேகழியக்
கொல்லுலேயினங்கியெனக் காமக்கனல்கொளுத்த
வல்லியம்போற்றென்றல் வரவாணிலவுந்தெண்கடலு
மல்லல்செயக்கங்குறெறு மாற்றுதேனயினனே

இ-ள், நல்ல இளமைப்பருவமும் அழகும்பெண்ணலனும் நாள்தோ றும் வீணகிவிடும்படி கருமானுலேக்களத்திலுண்டாகுந் தீபோலக் கா மாக்கினிகொளுத்தவும்புலிபோலத்தென்றல்வந்துவீசவும்ஒளிபொருந் திய சந்திரனுந் தெளிவுள்ள சமுத்திரம் துன்பஞ்செய்யவும் இராத்தி ரிகாலந்தோறுஞ் சகிக்கமாட்டாதவளானேன்-எ-று, (௩௬)

காவலநீமேவுவையென் றிந்நெடுநாட்காத்திருந்தே
னவல்பெருகத்தமியே னற்றேனய்த்தவறிழைத்தேன்
பூவர்குழன்மாதருக்குங் காளையர்க்கும்பொதுவன்றோ
மேவரியபெருங்காம மெனவிம்மிவிளம்பினள்

(இ-ள்) என்னைப்பாதுகாக்கத்தக்க கணவனேயித்தனைநாள்வரைக் கும் வருவையென்று கற்புநிலையைக் காத்துக்கொண்டிருந்தேன்நீவரா மையினல் காமம் அதிகரிக்கத்தனியாயிருக்கும் நான் சகிக்கமாட்டாம ல்குற்றஞ்செய்தேன் காமமானது மாதருக்கும்ஆடவர்களுக்கும்பொது வல்லவாவென்று அழுதுகொண்டு சொன்னள்-எ-று, (சூ௰)

இறங்கினன்றன்பாற்றவமொன்றெண்ணினன்சேட்டிளங்கொடிநீ
மரங்களொடுகெற்குழைய மாழ்கியரற்றுதல்வேண்டா
தாங்கனெடுங்கடலனைய காமநோய்தடுப்பவரார்
சுருங்கவினியொருசூழ்ச்சி சொல்லுசிறேன்றுணிகென்ன

(இ-ள்.) அவளிவ்வாறு சொல்லியதைக்கேட்டுத் தன்னிடத்திற்கு ற்றமிருக்கின்றதென்றெண்ணி யிரங்கிஇளங்கொடிபோன்றவளே,மரங் களு மலைகளுங் குழையும்படி நீஅழுதுசோரவேண்டுவதில்லை அலைக ளையுடைய சமுத்திரம்போலப் பெரிதாகியகாமநோயைநீக்கத்தக்கவர்க ளொருவருமில்லை இப்போதுனக்கொருஉபாயஞ் சுருக்கமாகச்சொல்லு கிறேன் அந்தப்படிசெய்யென்று-எ-று, (சக)

வேறு,

அந்தணரேயாக விழிகுலத்தோர்தாமாக
வந்தவரையெல்லாம் வரையாதுமேவியவர்
தந்தபொருண்முற்று மெனக்களித்துன்முகமறச்
சிந்தைமயறீர்வளவுஞ் சேர்குவாயெனப்பணித்தான்

(இ-ள்) பிராமணர்களேயானாலும் அவர்களுக்குத்தாழ்ந்தவருணத்தார்களேயானாலும் வந்தவர்களையெல்லாம் நீக்கிவிடாமல் புணர்ந்து அவர்கள் கொடுத்தபொருள்களையெல்லாம் எனக்குக்கொடுத்து உன்காமவிடாய்தீரும்படி மனதிலுண்டாயிருக்கு மையல் தீருகிறவரைக்கும் சேர்ந்துகொண்டிருவென்றுசொன்னான்-எ-று. (சஉ)

நாறுமலர்க்கோதாய்நீ நல்கும்பொருள்கொடுத்து
வீறுபெறுங்கொங்கை விலைமகளிர்தோள்விரும்பி
யூறியவெங்காம மொழியநலத்துய்ப்பனெனக்
கூறியதுகேட்டதற்குக் கொற்றொடியுந்தானிசைந்தே

(இ-ள்) பரிமளிக்கும்பூமாலையணிந்த அளகத்தையுடையவளே,நீர்கொடுக்கும்பொருளையெல்லாம் பூரித்திருக்கும்பெரியதனங்களையுடையவிலைமாதர்களுக்குக்கொடுத்து அவர்களைப்புணர்ந்து எனக்குண்டாகியகாமம்ஒழியும்படி யின்பம்அனுபவிக்கிறேனென்று சொல்லியதைக்கேட்டுஅதற்கு அவளுஞ்சம்மதித்தாள்-எ-று, (சங)

அன்னதுவேசெய்வ னடியனேனென்றிறைஞ்சி
மின்னிடையான்சால மகிழ்ந்துவெளிப்படையாய்த்
துன்னினர்தம்மையெல்லாந் தோடோய்ந்தவரளித்த
பொன்னையெல்லாங்கேள்வனுக்கே யீய்ந்தாள்பொலங்கொடியே

(இ-ள்,) அடியேன் அப்படியேசெய்கிறேனென்று கணவனைவணங்கிமின்போன்ற இடையையுடைய வஞ்சுளை மிகவும் வெளிப்படையாகவந்தவர்களையெல்லாம் புணர்ந்து அவர்கள்கொடுத்தபொருளையெல்லாந்தன்கணவனுக்குக்கொடுத்தாள்-எ-று. (சச)

ஆங்கவனுஞ்செம்பொ னளப்பிலகொண்டஃதே
பூங்கணிகைமாதர் புகழுனிவழங்கித்
தீங்கனிவாயின்னமுத முண்டுசிலநாள்கழிய
வீங்கியமூப்பெய்தி வினைதூரப்பத்துஞ்சினன்

(இ-ள்.) அந்தவிரதனென்பவன் தன்மனைவிகொடுக்கிற பொருளை யெல்லாம் அப்போதைக்கப்போதே அழகுள்ள வேசையர்கள் புகழும் படி அதிகமாகக்கொடுத்து மதுரமுள்ளபழம்போல இனிப்புள்ள அவர்களுடைய அதரபானமுண்டு சிலநாள்நீங்கினபின் மிகுந்தமூப்படைந்திறந்தான்எ-று. (சரு)

தன்கணவன்பொன்றத் தளிரியலுங்கைம்மையுற்று
மின்குலவுபொற்கலனு நீத்துமிகமூப்பெய்திப்
புன்கணுறுகாலைப் புராரிசிவநிதிக்கு
நன்குணர்வோரெல்லோருங் கோகன்னநண்ணினர்

(இ-ள்.) தன்கணவனிறந்துபோகவே வஞ்சுளையானவள் கைம்பெண்ணாகிப் பிரகாசிக்கும் மங்கிலியத்துடன் பொன்னாபரணங்களும்நீக்கிவிட்டு மிகுந்தமூப்படைந்து துன்பப்பட்டுக்கொண்டிருக்குங்காலத்தில் பரமசிவனுக்குரிய தினமாகியசிவராத்திரிதரிசனத்துக்குப் பத்திமான்களெல்லாம் கோகன்னத்துக்குப்போனார்கள்-எ-று. (சசு)

அற்றைப்பொழுதி லணியிழந்தவஞ்சுளையுஞ்
சுற்றத்தொடும்போய்த் தொன்னகரின்பாலடைந்து
கொற்றக்கொலைமழுவோன் கோடிதீர்த்தம்படிந்து
கற்றைச்சடையான் றிருவடியைக்கைதொழுதாள்

(இ-ள்.) கைம்பெண்ணாயிருக்கும் வஞ்சுளையும் சிவராத்திரி தினத்தில் அவிடத்துக்குப்போகின்ற சுற்றத்தாருடன் தானும்போய்ப் பழமையாகிய கோகனஞ்சேர்ந்து வெற்றிபொருந்திய கொலைமழுவேந்திய பரமசிவனுடைய கோடிதீர்த்தத்தில்முழுகிக் கற்றையாகிய சடையையுடைய பரமசிவன்திருவடியைத்தொழுதாள்-எ-று. (சஎ)

மீட்டுந்திருக்கோயில் சூழ்வருங்கால்வேறொருசார்
தீட்டுஞ்சிவதருமம் யாவுதொருதேசிகன்று
னேட்டின்புறத்தினியா லுணர்ந்துவாசிப்பக்
கேட்டனுசியின்னல் கிளரநடுங்கினாள்

(இ-ள்.) மறுபடி ஆலயத்தைப்பிரதட்சிணஞ்செய்யும்போது அங்கொருபக்கத்தில் எழுதிவாசிக்கும்படியானசிவதருமமெல்லாம் ஒருதே

சிகன் புத்தகம்வைத்துக்கொண்டு வாசித்துப்பொருள்சொல்லக்கேட்டுப்பயந்துநின்று துன்பமுண்டாக நடுங்கிநின்றாள்-எ-று. (௪௮)

அக்காதைகேட்டு மிறுதிக்கணந்தனன்முன்
புக்காடொழுதாள் புராணபுராதனனே
யிக்காதைசொல்பொருளி னெண்ணரியபாவங்களை
தொக்கார்படுவதெல்லாஞ் சொன்னையவற்றுள்ளே

(இ-ள்) அந்தச்சரித்திரத்தைக் கேட்டுமுடிவில் தேசிகரிடத்தில் போய் அவர்பாதந்தொழுது அய்யா புராணிகரோ? இந்தச் சரித்திரத்தில்சொல்லுகின்றபொருளினல் அளவிறந்தபாவஞ்செய்கின்றவர்கள்படும்பாடெல்லாம்சொன்னீர் அவைகளுக்குள்எ-று, (௪௯)

காமவசத்தாற் கணவற்பிழைத்தசெழுந்
தாமமுலையார் தமையொறுக்குந்தண்டத்தான்
வாமநிதம்ப முருகவழன்மடுத்துச்
சேமமுசலஞ் செலுத்துவானென்றுரைத்தாய்

(இ-ள்) காமவசத்தினல் கொண்டவனைவிட்டுச்சோரம்போனமாதரையெல்லாம் தண்டிக்கும்கூற்றுவன்செழுமையுள்ளமாலையணிந்தமுலையையுடைய அவர்களழகியநிதம்பத்தில் தீயில்காய்ந்த முசலமென்னும்இருப்புலக்கையைச் செலுத்துவானென்றுசொன்னீர்-எ-று. (௫0)

கற்புநிலைகடந்த காமக்கயத்தியரை
நற்பகத்திற்றூண்டிலிட்டு நான்றலையமேற்றூக்கிப்
பற்பலகூறாக மழுவாய்ப்படத்துணித்து
வற்புறுத்திக்காய்ந்த மணல்சொரிந்துதீய்ப்பரென்றாய்

(இ-ள். கற்புநிலைதவறிய காமிகளாகிய கீழ்மைத்தனமுள்ள மாதர்களின் குறியினிடத்தில் தூண்டில்மாண்டித் தொங்கியலையும்படி மேலேதூக்கிப் பலபலதுண்டாகும்படி கோடாலியினல்வெட்டித் துணித்துஉறுதிப்படுத்திக் காய்ந்தமணலைச்சொரிந்து தீய்ப்பார்களென்றுசொன்னீர்-எ-று. (௫௧)

காப்புக்கடைகழித்த காமக்கிழத்தியைச்
சேப்பவலைகாய்ந்த திரளிருப்புநீள்கழுவிற்
பூப்பொருவுமல்கு லழலப்பொதுத்தேற்றிக்
கோப்பர்நெடுங்கால மெனவெடுத்துக்கூறினய்

(இ-ள்.) காவலிடத்தைக்கடந்த காமிகளாகிய கீழ்மைத்தனமுள்ள மாதரைச் சிவக்கும்படி தீயில்காய்ந்த திரண்டதாகிய நீண்டகழுவில்பூ வைப்போல மிருதுவாகிய அல்குல் வெதுப்பத்தக்கதாகக் குத்தியேற்றி நெடுங்காலம் வைப்பார்களென்றுசொன்னீர்-எ-று. (௫௨)

நம்புகொழுநர் நிலையொருவநங்கையர்தஞ்
செம்பொனகலல்குலின்வாய்ச் செம்புருக்கிவிட்டதனுற்
பம்புபுழுங்கலிப்ப நாய்தசையைப்பற்றியுண
வெம்புபறவை விருந்துபரவோய்வதொன்ருய்

(இ-ள்.) நம்பிய கணவரிடத்திலிருக்கும்நிலைமாறியமாதர்களுடைய செம்பொன்னிறமுள்ள அல்குலில்செம்பினையருக்கிவிடுவதினால்நிறை வாகப் புழுக்களுண்டாகவும் நாயானதுதசையைப்பிடுங்கி யுண்ணவும் கொடியபருந்துமுதலியபட்சிகள்விருந்துண்ணவும் அம்மாதர்கள்சோர் வார்களென்றீர்-எ-று. (௫௩)

கொண்டோற்பிழைத்த கொடிங்கயற்கண்மங்கையரைக்
கண்டோர்மனநடுங்கக் காரிருப்புந்தீயகலில்
விண்டேயுடலம் வெடிக்கவறுப்பரெனத்
தண்டேய்கரத்துத் தவமுனியேசாற்றினுய்

(இ-ள்) ஒருகையில்தண்டம்ஏந்திய தவமுனிவரே கொண்டவனை விட்டு மற்றொருவனைப்புணர்ந்த செழுமையான சேற்கண்டை யொத் தகண்களையுடையமாதர்களைப் பார்த்தவர்கள் மனமும்நடுங்கும்படி தீயி ற்காய்ந்த கருமையுள்ள இரும்புத்தகழியிலிட்டு உடல்வெடிக்கும்படிவ றுப்பார்களென்றுசொன்னீர்-எ-று, (௫௪)

நாயடினேனின்னவெலாங் கேட்டுநடுநடுங்கித்
தூயமுனிவரனே துன்பக்கடல்வீழ்ந்தேன்
காயும்விடமனைய காமந்தலைக்கொள்ளச்
சேயபருவததே கற்பின்றிறம்பிழைத்தேன்

(இ ள்) பரிசுத்தராகியமுனிவரே கொல்லும்விடத்தையொத்தகா மந்தலைக்கொள்ள இளமைப்பருவத்தில் கற்புநிலைகெட்டிருந்தேன் ஆக லால் நாயனையேனிவைகளையெல்லாங்கேட்டு நடுநடுங்கித் துக்கசாகர த்தில்முழுகினேன்-எ-று. (௫௫)

குலமகளிர்க்கேலாத கொள்கையைமேற்கொண்டே
நிலைமையில்லாத்தீப்பெண்டீர் நிற்குநிலைநின்றேன்
கலனிழந்துமுப்பெய்து காறுமியான்செய்த
பலவினையின்ப தகத்தைப் பாரிலெவர்செய்தார்

(இ-ள்,)குலமாதர்களுக்குத்தகாதசெய்கையைமேற்கொண்டுகற்பு நிலையில்லாதகொடியமாதர்களிருக்கும்நிலைமையிலிருக்கிறேன்மங்கலநா ணிழந்து மூப்புவருமட்டு நான்செய்தபாவம் உலகத்தில் ஒருவருஞ்செ ய்திரார்கள்-எ-று. (ருசுு)

ஆதலாலீண்டெனக்குச் சாக்காடுமெண்ணியது
தீதிலாவேதியநீ செப்பியகாதைப்படியே
கோதினலாயபுழுக் கும்பியிடைவீழ்வதுமெய்
யீதினுலுள்ளமுடைந் தெண்ணுத்தெண்ணுகின்றேன்.

(இ-ள்.) ஆகையினு லிப்போது எனக்குச் சாக்காடுஞ்சமீபித்திரு க்கின்றதுதீமையில்லாத முனிவரே நீர்சொல்லிய சிவகதையின்படி நா ன்செய்தபாவத்தினுல் புழுக்கள் நிறைந்தநரகத்தில் விழுவது மெய்யே இதனுல்மனம் உடைந்து எண்ணுததும் எண்ணுகின்றேன்-எ-று.

காய்ந்துநமன்றூதர் கனன்றுருத்துத்தண்டிக்கி
லாய்ந்ததவமில்லேனையஞ் சலேநீயென்றுற்றி
வாய்ந்தநிரயத்தழலில் வாடாதனுயடியே
னேய்ந்தழுதுமாழ்காம லார்வந்துதவுவார்

(இ-ள்) காலதூதர்கள்கோபித்துத்தண்டித்தால் அப்போது நல்ல புண்ணியஞ்செய்யாத என்னைநீபயப்படாதேயென்று ஆற்றிப்பொருந்தி ய நரகாக்கினியில் வருந்தாமலும் நாயடியேன் அழுது தளர்ந்துசோரா மலும்யார்வந்து உதவிசெய்வார்கள்-எ-று. (ருஅ)

என்றுபலபலவும் பன்னியிடருழந்து
நின்றுமறைமுதல்வ நீயேபுரந்நியெனச்
சென்றுநடுநடுங்கச் சேவடியில்வீழ்ந்திறைஞ்சிக்
கன்றுமனத்தாள் கலுழ்ந்துரைப்பவேதியனும்

(இ-ள். இவ்வாறு பலபலமொழிகள்சொல்லித் துயர்வகாண்டவ ளெதிரில் நின்று முனிவரே அடியேனைத்தேவரீரெ காப்பாற்று மென்று நடுநடுங்கிச் சமீபத்திற்போய் அவர்பாதத்தில் விழுந்து பணிந்து வெம் புகின்றமனதைபடையவளாய் அழுதுசொல்ல அம்முனிவர்-எ-று.

வீழ்ந்தவடன்கைப்பற்றி மெல்லவெடுத்தாயிழையே
யாழ்ந்தபெரும்பாதகத்தி னச்சமகன்றிடுவாய்
சூழ்ந்துபுரிநினக்கே பின்னிரக்கந்தோன்றுதலா
லூழ்ந்தமலமொளமே தீவினைவிட்டோடுங்காண்

(இ-ள்) பணிந்தவள் கையைப்பற்றி மெல்லஎடுத்து மாதே நீமிகு தியாகச்செய்த பாபத்துக்குப் பயப்படும் பயத்தைநீக்கிவிடு ஆதியில்பா வங்களைச்செய்த உனக்கே யிப்போது பயம் உண்டா யிருப்பதினால்பத ந்தப்பிய பூப்போலஉன்பாவமெல்லாம்உன்னைவிட்டோடிப்போம-எ-று

காரிகைநின்மூப்பாற்ற வம்புரியக்காலமிலை
மாரியெனத்தானம் வழங்கப்பொருளின்றாற்
சீரியதாய்ப்பாவம கற்றச்சிவகதையாம்
பேரியலொன்றுண்டதல்சீர் பேசக்கேட்டப்பிடியாய்

(இ-ள்.) மாதே நின்னுடைய மூப்பினால் தவஞ்செய்வதற்குக்கால மில்லைமேலும் மழைபொழிவதுபோலத் தானங்கொடுப்பதற்குப் பொ ருளுமில்லை யாதலால் மகத்துவமுள்ளதாயுன்பாவத்தைநீக்கச்சிவகதை யாகிய புராணமுண்டு அதன் பெருமையைச் சொல்லக்கேட்டு (உன்ம னதில் உறுதியாக வைத்துக்கொள்-எ று, (௬௧)

யானெனதென்றெண்ணி யிருவினையுமீட்டுவது
மானதமேயன்றி மடவரலேமற்றில்லை
யானமனமாயை யிருளுக்குமஞ்ஞான
வீனமுறுபாவ விருளுக்கும்வெய்யவனாய்

(இ-ள்.) என்னுடைய பொருளென்றும்யான்செய்தேனென்றுமெ ண்ணிநல்வினை தீவினைகளைத்தேடிக்கொள்ளுவதுமனதின்செயலேயன் றி வேறொன்றுமில்லை அதற்கேதுவாகிய ஆணவமல மாயையென்கிற இருளுக்கும் அஞ்ஞானமாகிய கீழ்மையுற்றபாவமென்னுமிருளுக்கும் அந்தச்சிவகதை சூரியன்போலாகும்-எ,று, (௬௨)

கொய்யுளைமாவேள்வி யொருகோடிசெய்தினு
மையனதுகதையருள் பெறும்பேறீந்திடுமோ
பையுளெலாந்தீர்க்கும் பரன்காதைத்தெள்ளமுதை
யுய்யவினிதாயருந்தி யும்பர்வீடெய்துதியால்

(இ-ள்) கொய்யும்படியானகழுத்துமயிரினையுடையஅசுவமேதயா கம் ஒருகோடிசெய்தாலும் அவைகளில்சிவசரித்திரம் அருளிச்செய்ய ப்பெறும் பேறுகளைக்கொடுக்குமோ துன்பங்களையெல்லாம்நீக்கத்தக்க சிவகதையாகியதெளிவுள்ளஅமிர்தத்தை நீ உய்யும்படியினிதாகஉண்டு மேலானமோக்ஷத்தை அடைவாயாக-எ-று. (௬௩)

முற்றோருகையோடு விரதந்தவமுயலப்
பெற்றோர்மனவிருளை நீக்கப்பெறலின்றாற்

சற்றேறுதக்கேட்டவருஞ் சாரூபமாவரெனக்
கற்றோர்புகழ்கதையாற் காலங்கழிப்பாயே

(இ-ள்) நிறைந்த சந்தோஷத்துடன் விரதங்கள் தவங்கள்செய்யப் பெற்றவர்கள் மனவிருளை நீக்குந்தன்மைபெறுதலில்லைசிவகதையில்கொஞ்சங்கேட்டவர்களும் சாரூபம் பெறுவார்களென்று கற்றவர்கள்சொல்லத்தக்க சிவகதையால்உன்காலத்தைக்கழிப்பாயாக-எ-று, (௬௪)

உண்டுதலைநாளிற் சாமளமென்றோதுபெயர்
கொண்டபெரும்பாவியவன் வாணாள்குறுகியநா
ளண்டர்பிரானுமம் புகன்றழியாவீடடைந்தான்
பண்டுபழங்காதைதனிற் கேட்டிலையோபைந்தொடியே

(இ-ள்.) சாமளனென்று சொல்லும் பெயர்பெற்றபெரிய பாதகன் முன்னொருவனுண்டு அவன் மரணகலாத்தில்தேவர்பிரானாகியபரமேசுவரனுடைய திருநாமங்களைச்சொல்லி அழியாத மோக்ஷத்தை அடைந்தான் மாதே பழையபுராணசரித்திரத்தில் நீமுன்கேட்டதில்லையோ.

ஆங்கவனைப்போலுனக்குஞ் சாக்காடணித்தான
தோங்குசிவநாம நாவினாலுச்சரித்துப்
பாங்குபெருகாதைதனைக் கேட்கிற்பழவினையாந்
தீங்ககலுநீயுஞ் சிவபதத்திற்சேர்வாயே

(இ-ள்.) அவனுக்கு வந்ததுபோல உனக்குமரணகாலம்வந்திருக்கின்றது மேன்மைதங்கிய சிவநாமங்களைநாவினாலுச்சரித்து நன்மைபெற்றசிவகதையைக்கேட்பாயாகில் உன்பாவங்கள் நீங்கும் நீயும் சிவபதஞ்சேர்குவாய்-எ-று. (௬௫)

பொய்யென்றுகொள்ளா தரன்கதையிற்புந்திவைப்பார்
மெய்யென்றவனாமங் கேட்டுவியந்துரைப்பார்
வையம்புகழச்சிவ பதத்தில்வாழ்ந்திருப்ப
ராயன்திருவாணை சத்தியமீதாமென்றான்

(இ-ள்.) பொய்யென்றெண்ணாமல் சிவகதையை மனதில்நம்புகின்றவர்களும் மெய்யாகவே மோக்ஷந் தரத்தக்கதென்றுசிவநாமங்களைக்காதினால்கேட்டு மகிழ்ச்சியுடன் வாயினாற்சொல்லுகின்றவர்களும் இவ்வுலகத்தார் புகழும்படி சிவபதத்தில் வாழ்வார்கள் அவனாணை யிதுமெய்யென்றுசொன்னார்-எ-று. (௬௭)

என்னமறையோ னியம்புமதுகேட்டுருகிக்
கன்னன்மொழிவஞ்சுளையுங் காவிவிழிநீர்ததும்ப

வன்னவழியேன்நின் னடியனெனின்னருளால்
மன்னுபிறவியெனு மாக்கடலைநீந்தியே

(இ-ள்) இவ்வாறுமுனிவர்சொல்லியதைக்கேட்டுக்கரும்பைப்போல மதுரிக்குஞ் சொல்லினையுடையவஞ்சுளையானவள்நீலோற்பலம்போன்ற தன்கண்களில் நீர்ததும்பநின்று சுவாமிகளைதேவர்கிருபையினால் அடியேன் சிவகதைகேட்டும் சிவநாமங்களைச்சொல்லியும் என்னுடைய அளவற்றசெனனசாகரத்தைநீந்தி-எ-று. (சுஅ)

சென்றேசிவபதத்திற் சேர்ந்திருக்குமாறுகுணக்
குன்றேதிருவுளத்தி லெண்ணிக்குறைமுடிய
வின்றேவிளங்குமிர வுத்திரியுமுற்றுவிற்று
நன்றேதருகாதை நாளுநவிலென்றாள்

(இ-ள்,) சிவபதத்திற்சென்றுசேர்ந்திருக்குப்படிமலைபோலஅசையாநிலைமைபெற்ற குணமுள்ளசுவாமி தேவரீர் திருவுளத்திற்கருதியென்குறைதீரஇப்போதே தீக்ஷைசெய்துநன்மைதருஞ்சிவகதையைநாள்தோறுஞ்சொல்லி யருளுமென்றாள்-எ-று, (சுகூ)

மாதவனுமன்பின் மனம்பொருந்திவன்கரத்தாற்
பூதிதனைவாங்கிப் புனிதமுறமெய்பூசிக்
காசினதுமூலத்திற் கண்ணுதன்மூலங்கொடுத்துத்
தீதில்கதையோதியவள் சிந்தைதெளிவித்தானே

(இ ள்,) அந்தரிஷியானவர் அன்பில் மனம் வைத்துத் தம்முடையதிருத்தரத்தினால்விபூதியெடுத்துப் பரிசுத்தமாகும்படிஅவள்சரீரமுழுவதிலும் பூசிக்காதுக்குள் பஞ்சாக்ஷர மூலத்தை யுபதேசித்துக் குற்றமில்லாதசிவகதைசொல்லி அவள்மனந் தெளியச்செய்தார்-எ-று,

சைவநெறிபூண்டதவக் கொடியுமக்கதையின்
மெய்யுணர்வின்சிந்தை யவர்நாடோறுமீதூர
மையமருங்கண்டன் றிருத்தாள்வழிபடலா
லைவகையுமைவிடத் தேகாதடக்கினாள்

(இ-ள்,) சைவநெறிபொருந்திய தவமுள்ளவஞ்சுளையானவள்அந்தச்சிவகதையில் உண்மை யறிவுடன் மனத்திலுண்டான ஆசை நாளுக்குநாள்அதிகரிக்கக்கொண்டு காளகண்டத்தையுடையபரமசிவன்திருவடிகளை ஆராதிப்பதினால் பஞ்சேந்திரியங்களை அவைகளுக்குரிய விஷயங்களில்செல்லாதவண்ணம் அடக்கினாள். (எக)

(இ-ள்) பிரமதேவனுக்குப் படைப்புத்தொழில் அருள்செய்தவனே சரணம் கயிலாசநாதனே சரணஞ்சரணம் கிரியபல ஆகமங்களை அருளியநாதனே சரணம் மாயவனும்காணவொண்ணாதவனே சரணஞ்சரணம் தேவர்களுடன் போர்செய்துகொண்டிருந்த முப்புரங்களும் வினைவில்லிபொருந்துமாறு வெண்ணகைத்தீயினால் போர்செய்த புராந்தகனே சரணம் அடியேனை யாட்கொண்ட அமலனே கயிலைவனே சரணம்சரணம்

வேறு.

என்றுபலபல்வு மேத்தியிலங்கிழையா
டொண்டுபடுசைவத் துறையின்முறைபேணி
நின்றுசிவகதையா நிகரில்லாத்தெள்ளமுத
மொன்றுடச்செவியா லுண்டுசிலநாட்கழித்தாள்

(இ-ள்) வஞ்சுளையானவ ளிவ்வாறு பலவகையாகத் தோத்திரஞ்செய்து பழமையாகிய சைவநெறியில்நின்று சிவகதையாகிய நிகரில்லாததெளிவுள்ள அமிர்தத்தை மனம் ஒருவழிபடச்செவியாலுண்டு பலநாள்கழித்தாள். எ-று. (எ௬)

ஊழின்முறையா லுறுதவத்தாள்பொன்றதலுந்
தாழுஞ்சடையான் றருகணங்கள்வந்தெய்தி
வீழுங்கனகவி மானமிசையேற்றி
வாழுஞ்சிவபதத்தில் வஞ்சுளையைக்கொண்டடைந்தார்

(இ-ள்) உடல்விட்டுநீக்கும் ஊழ்வந்தடுத்துக்கொள்ளவே தவநெறியுள்ள வஞ்சுளையானவள் மரணமடைந்தபோது தாழ்ந்தசடையுள்ள பரமசிவன் கட்டளையிட்டருளச் சிவகணங்கள் வந்து விரும்பத்தக்க சுவர்ணரத்தினவிமானத்திலேற்றி அழியாமல்வாழ்ந்துகொண்டிருக்கத்தக்கசிவலோகத்திற் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள்-எ-று, (எஎ)

மூன்றுசுடரு பழுக்கமுறுதிரொளியா
லான்றசிவலோகத் தவிர்கனகமண்டபத்தி
லோன்றயனைமால்விண்ணோ ரிருபாலுநின்றேத்த
வூன்றுமணிக்கோல்பிடித்து நந்திபொருபாலுலவ

(இ-ள்) சூரியன்-சந்திரன்-அக்கினி-என்னு முச்சுடர்களும் மிகுந்தஒளியினால் மழுங்கும்படி விளங்கும் சிவலோகத்திருக்கும் பொன்மண்டபத்தில் பிரமனும்-மாயவனும்-விண்ணவர்களும் இருபக்கத்திலும் நின்று துதிக்கவும ஊன்றும் வெள்ளிப்பிரம்புபிடித்த வண்ணமாக நந்திதேவர் ஒருபுறத்திலுலாவுக-எ-று. (எஅ)

தக்கன்றலையரிந்த வீரனொருசாரனுகத்
தொக்கவணநாதரெல்லா மெம்மருங்குஞ்சூழ்போத
முக்கணுறுமைந்து முகமுன்னோனினிதமர்ந்த
மிக்கதிருச்சபையின் மெல்லியலைத்தான்விடுத்தார்.

(இ-ள்) தக்கனுடைய தலையையரிந்த வீரபத்திரர் ஒருபுறத்தில் வ திருக்கவும் மிகுந்தகணநாதர்கள் எந்தப்பக்கத்திலுஞ்சூழ்ந்திருக்கவு திரிநேத்திரங்களைபொருந்திய ஐந்துதிருமுகங்களையுடைய பரமசிவ னிதாகவீற்றிருக்கும் திருச்சபையில் வஞ்சுளையைக் கொண்டுபோய் ட்டார்கள்-எ-று. (எ)

அன்னவளுநேசனடித்தாமரைபரவி
யென்னதவப்பயனிச் செய்தியதென்றேம்பலற்றுக்
கன்னன்மெழிமாதுமையைக் கண்ணுதலையுங்கண்டு
துன்னியவானந்த வாரிச்சுழிப்பட்டாள்.

(இ-ள்) அந்தவஞ்சுளையானவள் பரமேசுவரனுடைய திருவடித்தா மலர்களைத்துதித்து எத்தன்மையானதவப்பயன் நம்மையிவ்விடத் ற்கொண்டுவந்ததென்று சந்தோஷமடைந்து கரும்பின்மதுரம்போன் மொழியையுடைய பார்வதிதேவியாரையும் பரமேசுரனையும் பலதர பார்த்து நீங்காதஆநந்தவெள்ளச்சுழியிலகப்பட்டுக்கொண்டாள்-எ-று.

காவலவுணர் கட்டருத்தகண்ணுதலோன்
பாவைமதிமுகத்தை யன்பினொடுபார்த்தருளிப்
பூவையிமயப் பொலங்கொடிக்குநாடோறு
மேவல்புரிதியெனப் பணித்தானின்னுரையால்.

(இ-ள்) காவலையுடையஅவுணர்கள் முப்புரத்தைக்கட்டழித்த பரமசி வன்வஞ்சுளையின்சந்திரன்போன்றமுகத்தைக் கிருபையுடன்பார்த்த ளிமலையன்புத்திரியாகியஉமாதேவிக்கு தினந்தோறும்பணிவிடைசெ துகொண்டிருவென்று இன்சொல்லாற் கட்டளையிட்டருளினர்.எ-று.

ஆரணங்குபோல்வா ளரன்பணிப்பவெற்புதவுங்
காரணிக்கங்கேவல் புரிந்தொழுகுங்காலத்தில்
நாரணனுநான்முகனு மேத்துநவையில்லாப்
பூரணியேகேட்டியெனப் போற்றிப்பணிந்துரைத்தாள்

(இ-ள்) தெய்வப்பெண்ணையொத்த வஞ்சுளையானவள் பரமசிவன்க டளையிட்டருளியபடிபர்வதராசன்பெற்றஎல்லாவுலகங்களுக்குங்கார மாகியபரமேஸ்வரிக்குப்பணிவிடைசெய்துகொண்டிருக்குங்காலத்தில்

முன்னேவினையாற்கணவன் போய்முட்கானகத்திற்
பொன்னேயனையாய திரிதற்கோவென்னைப்புகன்றாள்

(இ-ள்)இவ்வாறு சொல்வதற்கு முன்வஞ்சுளையானவள் பார்வதி தொழுது பொன்போலயாவருக்குங் கிடைப்பதற்கரிய தாயே உ ருளால் அடியேனிவ்வாறிருப்ப முன்னம் எனையாண்ட கணவன் கலையுடைய வனத்தில்திரிவது தகுதியோவென்றுசொன்னாள்-எ-று ன்றோ இரக்கச்சொல் (...)

கல்லார்மணிப்பூணுமையாள் கருணைசெழுமநோக்கி
பொல்லாத்துயராழுழலு மொழிவாய்பொழிவாயென்றே
நல்லாயுனதுகணவன் ஞானமலகையுருவம்
பொல்லாவினையுங்கழித்துப புகுதப்புரப்பன்காண்டி

(இ-ள்)ரத்தினாபரணங்களணிந்துகொண்டிருக்கும் பார்வதி தேவியார் வஞ்சுளையைக் கிருபைபொருந்தப்பார்த்து உன்கணவன் இப் நடைந்திருக்கிற பேயுருவமும் பொல்லாத பாவங்களையும்போக்கி விடத்திற்குவரவென்றால் ரட்சிக்கப்படுவான் ஆகையால்நீ துயரத்தை யெல்லாம் நீங்கென்றுசொல்லி-எ-று. (...)

வாசக்கமழுங்குழலாய் மகிணன்பானீபோவென்
றிசன்றேபின்னு மியநேர்வினைகழல
ஞசொன்றில்லாவிஞ்சை யறிதும்புருவையழைபா
நீசென்றிவளோடந்த நெடுங்கானகத்தைச்சேர்ந்தே

(இ-ள்)வாசனைகமழ்ந்துகொண்டிருக்கும் அளகத்தை யுடைய உன்கணவனிடத்துக்கு நீபோவென்றருளிச்செய்து பின்னும்பார்வதி தேவியார்இசையின்கிரமத்தையறிந்தவீணைக்குரியனாகிய குற்ற கலையுணர்ந்த தும்புருவென்றுமுனிவரையழைத்து நீயிவளுடன்செ அந்தப்பெரியகாட்டிற்சேர்ந்து-எ-று (...)

சந்தமறையின்றலைவ னிசையையிசையாற்சாற்றி
யிந்தமடவாள்கணவ னிருங்கானகத்திற்போயப்
பந்தவினையாலுழலும் பாவவுருவநீங்கி
நங்களுலகிற்கொடுவா வென்றாணங்கைநவின்றாள்.

(இ-ள்)பரமசிவனுடையபுகழை யிசையினாற்பாடி இவள் கணவன் அந்தப்பெரியகாட்டிற்போய்ப் பந்தப்பட்டமுன்வினையினாலுழலு வுருபத்தைநீக்கி நம்முடையஉலகத்திற்கொண்டுவாவென்று பார்வதி தேவியார்சொல்லியருளினார்-எ-று (...)

நன்னிலத்தி லாண்முறுவ னானைகைகவின்றபணியை
முன்னித்தலைமேற்கொண் டேமுகமன் கூறியிறைஞ்சி
மின்னிற்றிகழுமணித்தாய் விமானமீதிலேறிப்
பொன்னிற்பொலியுமேனிப் பூவையொடும்போனான்

(இ-ள்) நல்லமுத்துகளையொத்த தந்தங்களையுடையபார்வதி தேவியாரிட்டகட்டளையை (நமக்கிந்தப்பாக்கியங் கிடைத்ததென்கிறதாகத்) தன் மனதிற்கருதிச் சிரசாவகித்துக்கொண்டு உபசாரவார்த்தைகள் சொல்லிப்பணிந்து மின்னலைப்போற் பிரகாசிக்கின்ற ரத்தினங்கள் பொருந்திய விமானத்தில் வஞ்சுளையென்பவளை யேற்றித்தானு மேறிக்கொண்டு தும்புருமுனிவர்போனார்-எ-று-பொன்னிற்பொலியுமேனிப் பூவையென்பது பொன்போல விளங்குந்திவ்விய தேகம்பெற்ற நாகணவாய்ப்பறவைபோல் வசனிப்பவள், (கூ௰)

சிந்தைக்கிணைபாய்ப்படரும் விமானஞ்செலுத்திச்சென்றான்
விந்தத்தடவிக்கிடையடைந் தானடைந்தவேலைப்
பந்தப்படுத்தீவினையிற் பேயாய்ப்படர்நஞ்சுருவோ
னிந்துப்பிளவின் றுணைபோலிணை கொண்டிலகுமெயிற்றோன்

(இ-ள்) மனோவேகம்போற்செல்லும் விமானத்தைச் செலுத்திக்கொண்டுபோய் விந்தாடவியினிடையில் அடைந்தார் அடைந்தவளவில் பந்தமாகிய பாவத்தினால் பேயாய்த்திரிந்துகொண்டிருக்கிற விஷம்போன்றகொடியதாகிய உருவத்தையும் இருபிறைபோன்ற இரண்டுகோரதந்தங்களையுமுடையவனாய்-எ-று. (கூக)

தீயைப்பொருவுங்கண்ணன் சினங்கொண்டுசீறியழுவன்
வாயைப்பிளப்பனகைப்பன் மலையைக்கடந்துமறிவன்
வேயைக்கரும்பிற்கரிப்பன் விழுவனெழுவன்றனது
காயத்திடையேபுடைப்பன் கதறிக்கறங்கிற்சுழல்வன்

(இ-ள்) தீயையொத்தசிவந்தகண்களையுடையவனும் தனக்குத்தானே கோபங்கொண்டு சீறி அழுகின்றவனும் வாயை ஆவென்று திறப்பவனும் நகைப்பவனும் மலையைத்தாண்டி விழுகின்றவனும் மூங்கில்களைக் கரும்புபோற்கடிப்பவனும் விழுந்துவிழுந்து எழுகின்றவனும் தன்சரீரத்தையடித்துக்கொள்கின்றவனும் கதறிக்கொண்டு காற்றாடிப்போற் சுழல்கின்றவனுமா யிருக்கின்றான்-எ-று. (கூ௨)

அன்னோன்றன்னைநோக்கி யிங்கேதோவிதென்றான்
முன்னான்முயன்றவினை யான்முடிந்தவினைகளெல்லாம்

பொன்னே காண்டியென்னப் புகன்றுபாசம்வீசிப்
பின்னுலவனைப்பிணித்துப் பேய்வல்லுருவந்தீர்ப்பான்

(இ-ள்) இவ்வாறிருப்பவனைப்பார்த்து அய்யய்யோ இவன் முன் செய்தபாவத்தினால் நேரிட்டசெய்கையை யெல்லாம்வருந்துவேனே யென்றுசொல்லிய பாசத்தைவீசிப் பின்னுகக்கட்டி வலியபேயுருவந்தீ

வலத்திற்பேர்யாழ்வாங்கி வலித்துநரம்பைவீக்கிப்
புலத்தோடமைந்ததவத்தோர் புகழ்முறும்புருமாமுனிவன்
குலத்தோடிறப்பும்பிறப்பு மில்லாக்குழகன்புகழைத்
தலத்தோர்வானோர்வியப்பச் சதியிற்பாடாநின்றான்

(இ-ள்) வலப்புறத்தில் பெரியயாழையெடுத்து நரம்பினை வலித்துக்கட்டி ஞானத்துடன்பொருந்திய தபசிலாகிய புகழ்பெற்றதும்புருமுனிவர் குலமும் பிறப்புமிறப்புமில்லாத பரமேஸ்வரனுடையபுகழைப்பூலோகத்தாரும் தேவலோகத்தாரும் அதிசயிக்கும் தாளக்கிரமத்துடன்பாடி நின்றார்-எ-று. (கoo)

வேறு.

நஞ்சமிருக்குமணிமிடற்றோய் நெடுமால்சார்த்துநயனமலர்க்
கஞ்சமிருக்கும்பதயுகத்தோ யடியாரிதயக்கடிக்கமலத்
தஞ்சமிருக்குமொருபுறத்தோ யமுதமதிருணலர்கிரணப்
புஞ்சமிருக்குந்திருச்சடையோய் கயிலைவாழும்புகழோனே.

(இ-ள்) விஷம்பொருந்தியிருக்குங் கண்டமூர்த்தியே மாயவன்சா த்தியகண்ணாகிய தாமரைமலரிருக்கும் பதயுகள மூர்த்தியே அடியார்களிதயதாமரையில் வீற்றிருக்கின்ற அன்னம்போன்ற பார்வதிதேவியார் அமர்ந்திருக்கும் இடப்பாகத்தையுடையகடவுளே அமுதம்வி ந்துள்ளபிறையினாலு விளங்குங்கிரணக் கூட்டமிருக்குஞ் செஞ்சடையையுடையநாதனே கயிலாசகிரியில் வீற்றிருக்கும்புகழோனே-எ-று.

மூரியிருக்குந்துவசத்தோய் முனிபாதன்பார்க்கருளாருண்
மாரியிருக்கும்விழிகடையோய் மதுவாறொழுகுமலரிதழி
வேரியிருக்குஞ்சடைமுடியோய் வெகுண்டமறலியுரங்குதித்த
சோரியிருக்குந்துணைகழலோய் கயிலைவாழுந்தொல்லோனே

(இ-ள்) ரிஷபம்பொருந்திய கொடியுள்ளவனே முனியாயல் அடியார்க்கருள்செய்யும்பொருட்டு அருள்மழைநிறைந்திருக்குங்கடைக்கண்ணோனே தேன் ஆறுபோலப்பெருகும் கொன்றைமலரின்வாசனை தங்கிய

வடமொழியே — கோபங்கொண்டெங்க ளமையுனைத்தக்காலத்தில் அவ்வமாயிலிருந்துண்டாகிய உதிரமிருக்கும் வீரகண்டையவர்க்குத் திருவருளையுடையவனே கயிலாசகிரியில் வீற்றிருக்கும்புராதனனே-எ-று-குணா-லுவே.

வேதமிருக்குங்கபாலத்தோய் விழைமுயிடையாமகளிர்வ
ரீதமிருக்குஞ்சாயகத்தோய் விலவான்பயந்தவேரிழைதன்
பாதமுடையபுரிச்சடையோய் பங்கேருகருநிகரகரண
நாதமிருக்கும்பரிபுரத்தோய் கயிலைவாழுநம்பனே

(இ-ள்) வேதங்கள் பொருந்திய கபாலத்தையுடையவனே ஆய்ச்சியரிருக்கும் வெண்ணையுண்டமயலாகிய அம்புடையவனே மலையரசன் புத்திரியாகிய பார்வதியார் திருவடித்தலைபதிருமதயானவனே பத்திரமங்களையுடைய வேதவீபாகரணநாதம் விளங்குமாளசிலம்பணிந்தவனே கயிலாயகிரியில்வாழும் நம்பனே-எ-று. (௬௭)

சோதிகுலமொருசுடரோ தேவர்தொழுமுழுமுதலே
தாயாயுலகமுழுதீன்று புரந்துதுடைக்குந்தகவோனே
யாயாமறையோனுரைத்தருணின் சரிதைகேட்டமடவார்க்காப்
பேயாம்விந்தத்தடைந்தேனைப் புரவாதிருந்தாற்பிழையுண்டோ

(இ-ள்) குறைப்படமலேசான்றுமொருதன்மையாயிருக்கும் ஒப்பற்ற சோதிசொரூபமே தேவர்கள்துதிக்கும் பரிபூரணகாரணனே தாயாகியுலகமுழுவதையுந் தந்துரட்சித்துச் சங்கரிக்குந்தகுதியையுடையவனே ஒருபிராமணன் தன்வாக்கினாற்சொல்லிய உன்சரித்திரத்தைக்கேட்ட இம்மாதின்பொருட்டு விந்தாடவியிற் பேயாய்த்திரியுமென்னை ரட்சியமலிருந்தாலுனக்குக் குற்றஞ்சம்பவிக்குமோ-எ-று. (௬௮)

என்றுங்கிளையானேத்துதலு மீசன்புகழான்மனநெகிழ்ந்து
நின்றானுள்ளந்தெருணாக்க நீக்கந்தெளிவதெனத்தெளிந்து
முன்றான்புரிந்ததீவினைகண் முழுதுநினைந்துமிகவெருவித்
தன்றாழ்வுனையாழ்ந்தும்புருவுங் கேட்கவிதனைச்சாற்றினான்

(இ-ள்) இவ்வாறுபாடியவைதினால் துதிசெய்தகளவில்பாமாசியன்புகழினால்மனம்நெகிழ்ந்து நின்றவனுள்ளமானது தேற்றாங்கொட்டையையுரைத்தமாத்திரத்தில் நீர்தெளிவதுபோலத்தெளிந்துமுன் தான்செய்தபாவங்களையெல்லாம்நினைந்து மிகுதியாகப்பயந்து யாழ்வசிக்குந்தும்பு[illegible]ன் [illegible] தமுள்ள சொல்லைக்கேட்கச்சொல்லுகின்றான்-எ-று ( )

னெதிர்ந்ததிறக்தானு முரவோனிசைகேட்டதனுலு
கிழைத்தபாவமெல்லா மகற்றித்துயரக்கடல்கடந்தே
னிமையாமுக்கட்கொழுங்கனியை யிமயமயிலோடேத்துகின்றேன்
லுயர்ந்ததோயெனவுனாதீதுக் கயிலைநாதற்பாடினன்

பு உம்மைநான்தரிசித்த தன்மையினுலும் பரமசிவனுடைய
கேட்டதினுலுமமிகுதியாகநான்செய்த பாவமெல்லாம்நீங்கித் து
யுங் கடந்தேன் இமையாதமுக்கணுடைய செழுமையுள்ளகனி
சிவனையும்உமாதேவியையும் துதிசெய்கின்றேன் நோன்பினுலு
றனிவரோயென்றுசொல்லிக் கயிலாயநாதனைப்பாடினன்-எ. று.

சிவந்தசெழும்பாகே தேனேபாலேதெள்ளமுதே
கரும்பேயைந்துமுகக் கனியேவேதமுழுமுதலே
தமம்பசர்காதை கேட்டவெனதுவிளங்கிழைக்காத்
ழல்வென்றனைப்புரவாதிருந்தாலுனக்குத்துகளுண்டோ

-பு செக்கச்சிவந்ததாய்ச்செழுமையுள்ளவெல்லப்பாகேதேனே
ளிவுள்ள அமுதமே முக்கண்களுள்ளகரும்பே ஐந்துதிருமுக
கனியேவேதத்தின்முழுமுதலே மிகுந்தசிவதரும சரித்திரத்
என்மனைவியின்பொருட்டுத் துக்கத்திலுழலுகின்றவென்னை
தால் உனக்குக்குற்றமுண்டோ, எ-று.

ல்லிபடர்ந்தேறும் பவளக்குன்றேபழமறையி
சைவேரொட்டியென்று மூலயாச்சர்கையொருத்தருமே
மறையோனின்கதைய விளம்பக்கேட்டமெல்லியற்காக்
சயலகையானேனை யாளாதொழிந்தாற்குறையுண்டோ

-பு பசைக்கொடிபடர்ந்தேறும்பவளமலையேபழமையாகிய
ச்சியில் வேர்விட்டு எககாலமுங்கொடாத சாகைகளையுடைய
நவே ஞானவணுகியபிராமணன்சொல்லிய உன்சரித்திரத்தை
ன்மனைவியின்பொருட்டு அறிவில்இளைத்தபேயாயிருந்தஎன்னை
ளாவிட்டாலுனக்குக் குற்றமுண்டோ-எ-று,

மேனமாலயனு மடியுமுடியுமடியிணையு
யறிதற்கரிதாய் பொருளேமூவர்முழுமுதலே

பன்னுமனுநயோனின்சரிதம் பகரக்கேட்டபார்ப்பனிக்கா
மன்னுமல்லைகையானேனை யாளாதொழிந்தால்வசையுண்டோ

இ-பு பிரமன்அன்னமாகித் திருமுடியைத் தேடியும் விஷ்ணுபன்றியாகித்திருவடிகளைத் தேடியுங்காணுதற்கரியதாயிருந்தபொருளே மூப்பில்லாத முழுமுதலேவேதங்களோதி யுணர்ந்தபிராமணன்சொல்லிய உன் சரித்திரத்தைச் சொல்லக்கேட்ட பிராமணத்திககாகப் பொருந்தியபேயாகிய என்னையாளாதிருந்தால் உனக்குவசையுண்டோ-எ-று. ௩௩

என்றுன்மகிழ்ந்தானதிசயித்தா னின்புற்றங்கமயிர்சிலிர்ப்ப
நின்றன்மலர்க்கணுநந்த நீராலகலதிளைத்தயர்ந்தான்
கன்றுவெனவுளஞ்சிறந்தான் களித்தான்பாடியாடினுன்
பொன்றுவாழ்வுவந்தளித்தா னெங்கோனென்னைப்புலம்பினுன்

இ-பு என்றுதுதிசெய்து மகிழ்ச்சியும்ஆச்சரியமுங்கொண்டு இன்பமுற்று ரோமங்கள்சிலிர்ப்பநின்று தாமரைமலர்போன்றகண்களில்ஆனந்தவெள்ளம் பெருகப்பாவசத்தனுகிக் கன்றினையுடையபசுவைப்போல உள்ளங் கசிந்துகளித்தவனுகிப்பாடியாடினுன் கெடாதநித்தியவாழ்வை யெய்மினறவன் கிருபைசெய்தானென்று புலம்பினுன்-எ-று, ௩௪

இந்தப்படியோரேழுதின மிறைவன்றிருத்தாள்புகழ்ந்தேத்தி
முந்தையலகையுருநீங்கி முயலாதமரருருக்கொண்டு
புந்திமகிழ்ந்துசித்திநிலை பொருந்திவிமானம்புகுந்தேறிச்
சந்தமுலையாளடிபரவச் சிவனூர்பதத்தைச்சார்ந்தானே

இ-பு இவ்வாறுஏழுநாள் பரமேசுவரனுடைய திருவடிகளைப்புகழ்ந்து துதிசெய்துமுன்னிருந்தபேயுருவம்நீங்கி ஒருமுயற்சியுமில்லாமல் தேவருருவம்பெற்று மனமகிழ்ந்துசித்திநிலை பொருந்திவிமானத்திலேறித் தம்மனைவி யடிபரவச் சிவபதத்தைச்சார்ந்தான்-எ-று. ௩௫

சென்றாமீளாப்பெருபதத்தைச் சேர்ந்தசிவனுமிடப்பாகத்
தொன்றுநின்றபெண்ணங்கு முவப்பக்கணங்கள்பணிகேட்ப
மின்றும்உயிரக்குயின்றசெம்பொன் விமானம்விளங்கவீற்றிருந்து
குன்றுநிலைநசியபோகந் துய்த்தூத்தணவாதிருந்தானே

இ-பு இவ்வாறுசென்றவர்கள் மீளாதபெரும்பதவியைச்சேர்ந்து பரமசிவனும்இடப்பாகத்திலிருக்கும் பார்வதிதேவியாருஞ் சந்தோஷிக்கவும் சிவகணங்கள் ஏவல்செய்யவும் ஒளிதங்கியவயிரங்கள்பதிக்கப்பட்ட செம்பொன்விமானத்தில் விளங்கும்படி வீற்றிருந்து அழியாத சிவபோகத்தையநுபவித்துக்கொண்டுநீங்காமலிருந்தார்கள்—எ-று. ௯௯

வேறு

ஆதலாற்பரமன்சரிதமேகேட்க வழிவிலாப்பெரும்பதம்வேட்டோ
ரீதலால்வேறுபெருந்தவமுண்டோ வியம்புதற்கிம்பரிலென்றுச்
சூதமாமுனிவன்வியந்தினிதுரைத்தான் சுருதிமாமுனிவரர்கேட்டுக்
காதலாலரிகியரகரவென்றுகை கரங்கடஞ்சென்னியிற்குவித்தார்

இ-பு ஆகையால்அழிவில்லாதபெரும்பதவியைவிரும்பினவர்கள் பரமசிவன்சரிதத்தையேகேட்கக்கடவர்கள் இவ்வுலகத்தில் இதையன்றிச்சொல்லுதற்கு வேறுதவமுண்டோவென்று சூதமுனிவர் சந்தோஷத்துடனே சொன்னார் வேதமுணர்ந்த நைமிசாரணிய வாசிகளாகிய முனிவர்கள்கேட்டு அன்பினால்மனமுருகி அரகரவென்றுசொல்லித்தங்கள் கைகளைச்சிரசின்மேல்குவித்துவைத்துக்கொண்டு தொழுதார்கள்—எ-று ௱

தேவர்தம்பெருமான் சிறந்தவஞ்செழுத்தின்
சீர்புகழ் மாக்கதைமுதலாப்
பாவமின்றகற்றும் புராணநூல்கேட்போர்
பாலன்பெறன் மொழிகதையீறு
மேவரப்புகன்ற சிவகதைமுழுதும
விழைவுடன்கேட்கு நரவர்தாம்
யாவர்மற்றேனுமாலயன்முதலோ
ரெய்தருஞ் சிவபதமடைவார்

இ-பு தேவர்பெருமானாகியபரமசிவனுடைய சிறந்த பஞ்சாக்ஷரத்தின்மகிமையைப்புகழாநின்ற சரிதமுதலாகச் சிவபுராணங்களைக்கேட்பவர்கள் பலன்பெறுதலைச் சொல்லுகின்றசரித்திரம் அந்தமாக விருப்பமுறச்சொல்லிய சிவசரித்திரமுழுதுங்கேட்பவர்கள் எவர்களேயானாலும் அயன்மாதிகளடைவதற்கரிய சிவபதம்அடைவார்கள்-எ-று ௱௧

ஞாலமோங்குக நான்மறைநீடுக
சீலமன்னவர் செங்கோல்விளங்குக

காலமாமழை மன்னுக்காதலாற்
சீலவீச னடியார்தழைக்கவே

இ-பு. இவ்வுலகம்வாழக்கடவது நான்குவேதங்களும் வாழக்[illegible] நீதிவழுவாதமன்னவர் செங்கோல்வாழக்கடவது, காலந்தப்பாமல் [illegible] பெய்யக்கடவது,அன்புடன்சிவனடியார்கள்மேன்மேலும்வாழக்கடவ[illegible] எ-று.

இருபத்திரண்டாவது

வஞ்சுளேமுத்திபெற்றஅத்தியாயம்

முற்றிற்று

ஆகதிருவிருத்தம் கங்எஉகங

# பிரமோத்தரகாண்டம்

முற்றுப் பெற்றது.

